

# துளசிதாஸரின்

# ராமசரிதமானஸம்

அல்லது

# மானஸ ராமாயணம்

## கிஷ்கிந்தா, சுந்தர காண்டங்கள்

S. ஜகந்நாராயணன்

கோஸ்வாமி துளசிதாஸரின்

# ராமசரித மானஸம்

அல்லது

# மானஸ ராமாயணம்

மொழி பெயர்ப்பும், கருத்துக்களுடனும்,
மனோபாவத்துடனும்

## கிஷ்கிந்தா, சுந்தர காண்டங்கள்

[படங்களுடன்]

பிரசுரகர்த்தர் :
S. ஜெகந்நாராயணன்
25, லேடி ஹார்டிஞ் ரோடு,
புது டில்லி-1

*First Edition—May, 1971*

மத்திய அரசாங்கத்தாரால் பொருளுதவி செய்யப்பட்டது

விலை ரூ.

காபிகள் கிடைக்குமிடம்:

மதராஸ்: S. ஜெகந்நாராயணன்,
C–588, ASHOK NAGAR, MADRAS–33

புது டில்லி:
S. ஜெகந்நாராயணன்,
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி–1

Kabeer Printing Works, Madras (1379)

# ஸமர்ப்பணம்

நாராயணம் நமஸ்கிருத்ய நரம் சைவ நரோத்தமம்
தேவீம் ஸரஸ்வதீம் வியாஸம் ததோ ஜயமுதீரயேத்

ராமசரித மானஸம் எனப்படும் துளசிதாஸரின் மானஸ ராமாயணத்தின் நான்கு, ஐந்து சோபானங்களாகிற கிஷ்கிந்தா சுந்தர காண்டங்களின் மொழிபெயர்ப்பை (கருத்துக்களுடன்) இப்புத்தகத்தில் ஸமர்ப்பித்துள்ளேன். கிஷ்கிந்தா காண்டத்தில் ஸ்ரீமத் ராமாயணத்தின் முக்கிய கதாபாத்திரமாகிற ஆஞ்சநேயரின் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடன் முதல் சந்திப்பு யேற்படுகிறது. அதிலிருந்து கதை துவக்கமாகி, சுந்தரகாண்டத்தில் சீதையைத் தேடி மீட்கப்போகும் ஸ்ரீராமன் லக்ஷ்மணனுடனும் வானரங்களுடனும் கடலின்மீது அணைகட்டி, லங்கைக்குப் புறப்பட்டுப்போகும் சீர்மை கொண்டுள்ள புனிதமான சரித்திரம் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்புத்தகத்தில் துளசிதாஸரின் ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பர்களால் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த மொழிபெயர்ப்பில் போடப்பட்டிருக்கும் பிராக்கட்டுகளிலுள்ள வசனங்களும், தியானமும் எனது கருத்துக்களையும் மனோபாவத்தையும் விமர்சனம் செய்கின்றன.

கிஷ்கிந்தா காண்டத்தில் ராமன் தனது மனக்கோயிலில் ஆட்சி செய்யும் சீதையைத் தேடும்சமயம், அவளை, பகவானைப்போல பிராட்டிக்குமுள்ள ஸர்வ ஸ்வதந்தரத்தையும், ஸர்வ சேஷித்வத்தையும் நினைவுபடுத்திக்கொண்டு, பராசக்தியாகிற அவளுடைய கிருபையை நாடியதாக ஸ்வீகரித்து, அந்த ராமசீதா தம்பதிகளைத் தேடும் முயற்சிகளில் எனது தாபங்களையும், கருத்துக்களையும் விஷயமாகக்கொண்டு, தியானத்தையும், மனோபாவத்தையும் கருத்துக்களையும் விளக்கியிருக்கிறேன். அதேமாதிரி, சுந்தரகாண்டத்திலும், உத்தமராஜ தம்பதிகளும், லோகஹிதத்திற்காக அவதரித்த சீதாராம தம்பதிகளின் கல்யாண குணச் சிறப்புக்களை விஷயமாகக் கொண்டு தியானத்தையும், மனோபாவத்தையும், கருத்துக்களுடனும், இதர ராமாயணங்களை ஒட்டியும், சரணாகத சாஸ்திரத்தின் இதர பிரமாணங்களையும் தழுவி, எனது சிற்றறிவிற்கேற்ப எழுதியுள்ளேன். வாசக தோஷங்கள் பல விருப்பினும் என்னை மனநிறைவுடன் மன்னிக்கும்படி தாழ்மையுடன் பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

இப்புத்தகத்தை மேல்பார்த்து, இலக்கியப் பிழைகளைத் திருத்திக் கொடுத்துதவிய எனது நண்பரும், புது டில்லி தயால் சிங் காலேஜின்

தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் R. பார்த்தசாரதி அவர்களுக்கு நான் மிக்கக் கடமைப்பட்டுள்ளேன். அதேபோல மத்திய அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட மேற்பார்வையாளரும், ஆக்ரா பல்கழகம் ஹிந்தி, தமிழ் பேராசிரியர் ஸ்ரீமான் Dr. A. N. ராஜகோபாலன் அவர்களுக்கும், அவர் களுடைய சிறந்த மனப்பான்மையினுல் யேற்பட்ட புத்தி ஆலோசனே களுக்கும், கருத்துக்களுக்கும், நான் மிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இப்புத்தகம் வெளிவருவதற்கு மத்திய அரசாங்கத்தினர், சிக்ஷா நிலயம் (Ministry of Education) எனக்குப் பண உதவி செய் துள்ளார்கள். அவர்களுக்கும் நான் நன்றி செலுத்த கடமைப்பட்டவ ஞகவிருக்கிறேன். முக்கியமாக எனது நண்பர்களான ஸ்ரீமான் B. N. பட்நாகர் அவர்களுக்கும், ஸ்ரீமான் D. N. சாக்ஸீஞ அவர் களுக்கும் மற்றுமுள்ள நண்பர்களுக்கும் நான் மிக்க நன்றியைச் செலுத்துகிறேன்.

ராமசரித மானஸமென்கிற மானஸ ராமாயணத்தின் ஏழு காண்டங் களேயும் சரிவர நான் எழுதி முடிப்பதற்கு உதவியவர் எனது மனேவி திருமதி ராஜலக்ஷ்மி ஜெகந்நாராயணன் அவர்கள். அவர்கள் மன அன்பினுல், எழுதுவதற்குப் போதுமான அவகாஸம் கொடுத்து, எனது முயற்சியில் தேக உழைப்புடன் பூர்ணமாக ஈடுபட்டு, எனக்கு மிக்க உதவி செய்துள்ளனர். அவர்கள் சமீபத்தில் காலமானபோதிலும், அவர்களுடைய நல்நினேவாகவும், சீதாராமார்ப்பணமாகச் செய் திருக்கும் இந்த சிறிய நூலே டில்லி நகரிலுள்ள தமிழர்களும், மற்றைய பிரதேசங்களிலுமுள்ள எங்களது தமிழ் அன்பர்களும் மனநிறைவுடன் வரவேற்று என்னே ஆசீர்வதிக்கக் கோறுகிறேன். வாசக தோஷங்கள் பலவிருப்பினும் என்னே மன்னிக்கும்படி தாழ்மையுடன் நான் அடிக்கடி அவர்களே பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

இந்த புத்தகத்தை அச்சிட்டு எனக்குக் குறித்த காலத்தில் பிரதிகளே அளித்த M/s கபீர் ப்ரிண்டர்ஸ், திருவல்லிக்கேணி, மதராஸ் அவர் களுக்கு நான் மிக்க நன்றி செலுத்துகிறேன். இப்புத்தகத்தில் காணப் படும் படங்களே எனக்கு இலவசமாகக் கொடுத்து உதவியவர்கள் டில்லியிலிருக்கும் ஸ்ரீமத் ராமசரித மானஸ் சதுஸ்ஸதி—அதாவது கோஸ்வாமி ஸ்ரீ துளசிதாஸரின் நான்காவது நூற்ருண்டு நினேவுச் செயலாளர்களின் கேந்திரம். அதன் காரியதரிசியாகவிருக்கும் ரத்னுகர் பாண்டே அவர்களுக்கும் நான் மிக்க நன்றி செலுத்துகிறேன்.

சாதாரண வருஷம்,
ஆனி மீ 14ம் உ,
ஞாயிற்றுக்கிழமை,
28th June, 1970.

சீனிவாஸ ஜெகந்நாராயணன்,
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி–1.

ஶ்ரீராமச்சந்திரன் சீதையுடன் ராஜ சிம்மாஸனத்தில் ஏறி உட்கார ஸகலரும் ஜய மங்கள கோஷங்கள் செய்தனர். முதன் முதலாக வஸிஷ்டர் ராஜதிலகத்தை அவர்களுக்கு அணிவித்தார். அவருக்குப் பின்பு ஸகல பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் வஸிஷ்டரின் ஆக்ஞைப்படி ராஜ திலகத்தை அணிவித்தார்கள். ஸகல மாதாக்களும் சீதா ராம தம்பதிகளுக்கு மங்கள ஆரத்திகளை எடுத்தார்கள்.

# துளசிதாஸரின் ஸ்துதிகள்

## கிஷ்கிந்தா காண்டம்

(1)

குந்தேந்தீவர சுந்தராவதிபலோ விக்ஞான தாமாவுபௌ
சோபாட்யோ வரதன்விநோ ஸ்ருதிநுதௌ கோவிப்ர வ்ருந்தப்ரியோ
மாயா மானுஷரூபிணோ ரகுவரோ ஸத்தர்மவர்மோ ஹிதோ
ஸீதான் வேஷணதத்பரோ பதிகதோ பக்திப்ரதோ தோஹிந:

(2)

பிரும்மாம் போதி ஸமுத்பவம் கலிமலப்ரத் வம்சனம் சாவ்யயம்
ஸ்ரீமச்சம்புமுகேந்து சுந்தரவரே ஸம்ஸோபிதம் ஸர்வதா
ஸம்ஸாராமய பேஷஜம் சுககரம் ஸ்ரீஜானகீ ஜீவனம்
தன்யாஸ்தே க்ருதின: பிபந்தி ஸததம் ஸ்ரீராமநாமாம்ருதம்

(3)

முக்திஜன்ம மஹிஜானி க்யானகானி அகஹானிகர
ஜஹம்பஸ் சம்பு பவானீஸோ காசீஸேஹ அகஸ்ந

(4)

ஜரத்ஸகல சுரவ்ருந்த விஷமகரல ஜேஹிம் பான்கியே
தேஹிநபஜஸி மன்மந்த கோக்குபாள சங்கரஸரிஸ

### வாலியின் ஸ்துதி

(1)

ஜன்மஜன்ம முனிஜத்னு கராஹி அந்தராமகஹி ஆவத்நாஹி
ஜாஸீநாமபல சங்கரகாசீ தேதஸப்ஹி ஸமகதி அவிநாசி

(2)

மமலோசன கோசர ஸோஇஆவா பஹுரிகிப்ரபு அஸ்பனிஹிபனுவா.

(3)

ஸோநயன கோசர ஜாஸுகுண நிதநேதி கஹிஸ்ருதிகாவஹி
ஜிதிபவனமன்கோ நிரஸ் கரிமுனித்யான கப்ஹீம்க்பாவஹி
மோஹிஜாநி அதிஅபிமான பஸ்ப்ரபு கஹேராகு ஸரீரஹீ
அஸ்கவனஸட்ஹடி காடிஸுரதரு பாரிகரிஹி பபூரஹி

(4)

அப்நாத் கரிகருணு விலோகஹு¬தேஹு¬ ஜோவர மாகஊம்
ஜேஹிம் ஜோனிஜான் மௌம்கர்ம பஸ்தஹம் ராமபத அனுராகஉம்
யஹ்தனய மமஸம பினயபல கல்யாண ப்ரதப்ரபுலீஜியே
கஹிபாம்ஹ சுரநரநாஹ் ஆபன்தாஸ் அங்கத கீஜியே

## சுந்தரகாண்டத்தில் ஸ்துதிகள்

(1)

சாந்தம் சாஸ்வதமப்ர மேயமனகம் நிர்வாண சாந்திப்ரதம்
ப்ருஹ்மா சம்புபணீந்தர ஸேவ்யமநிசம் வேதாந்த வேத்யம்விபும்
ராமாக்யம் ஜகதீஸ்வரம் ஸு¬ரகுரும் மாயாமனுஷ்யம் ஹரிம்
வந்தேஹம் கருணுகரம் ரகுவரம் பூபால சூடாமணிம்

(2)

நான்யாஸ்பருஹா ரகுபதே ஹ்ருதயே அஸ்மதீயே
ஸத்யம் வதாமிச பவானகிலாந்த ராத்மா
பக்திம் ப்ரயச்ச ரகுபுங்கவ நிர்பராம்மே
காமாதி தோஷரஹிதம் குரு மானஸம்ச

(3)

அதுளித பலதாமம் ஹேம சைலாபதேஹம்
தனுஜவன க்ருஸானும் க்ஞானிநாமக்ரகண்யம்
ஸகலகுண நிதானம் வானராணுமதீஸம்
ரகுபதி ப்ரியபக்தம் வாதஜாதகம் நமாமி

# பொருளடக்கம்

# கோஸ்வாமி துளசிதாஸரால் இயற்றப்பட்ட
# ராமசரித மானஸம் அல்லது
# மானஸ ராமாயணம் என்கிற ராமதர்சனம்



## கிஷ்கிந்தா காண்டம்

[தியானம்

வாராய், வாராய் என்பிரபோ ஆஞ்சநேயா வாராய். ரகு வீரனுடைய ராமபாணத்தைப்போல அதிவேகத்துடன் என்னிடம் வாராய். நாரதருடைய அருள்வாக்கைப் போல என்னிடம் வாராய். ராமானுஜனுடைய அஷ்டாக்ஷர வித்யையைப் போல வாராய்.

பத்ம ஆவரணங்களில் மறைந்திருக்கும் ரஹஸ்யபிந்துவே, என்னிடம் வாராய். அன்று பராங்குச நாயகிக்கு உன் திருப் பாதமலர் கீழ் பேராதே யான் வந்து அடையும்படி தாராதாய், உன்னை யென்னுள் வைப்பிலென்று மாராதாய், எனக்கென்று எமக்காலே என்று நம்மாழ்வார் சொல்லியதுபோல, "ராம லக்ஷ்மணர்கள் என் ஆத்ம தெய்வங்கள்; மாதா பிதா போன்றவர்கள். அவர்கள் உன்னைத் தேடுகிறார்களே, நீ எங்கு போய் ஒளிந்துகொண்டாய்?" அன்று சங்கரர் தேடிச்சென்ற உமையைப் போல ஓடி ஒளிந்துகொண்டாயா? அன்று நாரதரும் மாதலியும் சேர்ந்து தேடும் ஸுமுகனைப்போல எங்கு போய் ஒளிந்து கொண்டாய் அம்மா? அம்மா சீதே, நீ என் தாய், எனது க்ஷேமத்தை கவனிக்கும் தாய். உனக்கு பல கஷ்டங்கள் நேர்ந்த போதிலும் பொறுமையினால் அவைகளை நீ வென்றாய். அம்மா, அலர்மேல் மங்கையின் மலர் மார்பினில் உறைந்திருக்கும் தேனே, நீ ஸகல பூதங்களிலும் காணப்படுகிறாய். உனக்கு தோஷங்கள் கிடையாது. காலத்தினால் ஜீர்ணமாக்கப்படும் ஸர்வ பூதங்களும் உன்னிடம் தானே லயிக்கின்றன. ஆனால் உன்னை அறிவது தான் மகா கடினமாகவிருக்கிறது. நீயே உன்னை அன்று ஜனகருக்குக் காட்டித் தந்தாயே, அதுபோல பரமாத்மாவாகிய நீ என்னிடமும் தயைகொண்டு, உன்னைக் காட்டித் தரமாட்டாயா? என்றால் உன்னைக் கண்டுபிடிக்க முடியவில்லையே. ஆத்மாவிற்கு அக்ஷரமென்றும், க்ஷரமென்றும் இரு விதங்கள் ஏற்படுகின்றன.

---

குறிப்பு :—இந்த புஸ்தகத்தில் துளசிதாஸரின் ராமசரிதமானஸ ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பரில் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிராக்கட் செய்திருக்கிற தியானமும் மொழி பெயர்ப்பில் பிராக்கட்டுகளில் போடப்பட்டிருக்கும் வசனங்களும் என் மனோபாவத்தையும் துளசிதாஸரின் கருத்துக்களையும் விமர்சனம் செய்கின்றன. (மொத்தம் 19¼ ஸ்லோகங்கள்)—ஆசிரியர்.

காலத்திஞல் நசிக்கிற ஜடமான க்ஷரமானது ஸகல பூதங்களிலு மிருக்கிறது. சைதன்யமான அக்ஷரமானது அழிவற்ற ஸ்வயம் பிரகாசமாக ஸ்வரூபத்திலிருக்கிறது. ஸோம சூர்ய அக்னி பக்ஷிணி, என் காமேஸ்வரி, சீதாதேவி, நப்பின்னேயே எனது ராம நாமமே, தேவ தேவியே, நாராயண மஹிஷி, மஹாலக்ஷ்மி அம்மா, நீதான் உனது விசாலமான கண்களால் என்னைப் பார்க்கவேண்டும். காமாக்ஷி, மீனுக்ஷி என்று துதிக்கும் என்னை, ஹே பத்மாக்ஷி, கருணுகடாக்ஷி, உன் அடியன், வெங்கடேச பாதங்களை நினைவுகொண்ட பரமனடியன் என்று ஸ்வீகரிக்க வேண்டும். அக்ஷரமானதும், சலனமற்றதாயும், ஹம்ஸமாகவும், பரவசமில்லாததாயும் உன் தத்வத்தை அறிந்தவர்கள் சொல்லு கிருர்கள். பிறவியில்லாததும், அஞதியாகிறதும், அக்ஷரமென் றும், சரீரத்தின் நாசம், குறைவு வருதல், மாறுதல் யாவுமின்றி விகாரமற்ற பிரும்ம ரூபியாகிற ஈஸ்வரியென்றும், ரஹஸ்ய கூடஸ்தமான பிரும்மவித்தியை என்றும், அவர்கள் நினைக் கிருர்கள். ஜீவஞகச் சொல்லப்படுகிறவனுக்கு ஹம்ஸம், சரீரத் தின் நாசம், குறைவுபடுதல், மாறுதல், புதிய சரீரங்களை அடை தல் ஆகியவைகளுடன் கூடிய ஹம்ஸத்தன்மையென்று சொல்லு கிருர்கள். இப்பேற்பட்ட ஹம்ஸமாகச் சொல்லப்படும் ஜீவன் ஈஸ்வரியான அக்ஷரம் என்று சொல்லப்படும் பிரும்ம ரூபத்தை அடையும்போது அக்ஷரம்தான். இவ்விதம் இரண்டு தத்வங்க ளாகிற ஜீவாத்மா, பரமாத்மா என்பதை நான் அறிந்து ஜனன மரணங்களை விலக்கிக் கொள்ளுகிறேன். தாயே கிருபை செய்.]

## துளசிதாஸரின் ராமசரிதமானஸம்—
## கிஷ்கிந்தா காண்டம்—4வது சோபானம் ஆரம்பம்

குந்தபுஷ்பம் நீலோத்பலம் ஆகிய புஷ்பங்களுக்குச் சம மானதும் அழகான சிகப்பு ஸ்யாமளவர்ண சரீரங்கள் கொண்ட சுந்தராங்கதர்களே, அத்யந்த பலவான்களாகிற நரநாராயண ரிஷிகளே, க்ஷரம் அக்ஷரம் என்கிற வித்யையை உடைய விஞ் ஞான சீலர்களே, (கல்யாண சமயத்தில் காக்ஷியளித்த பார்வதி சுந்தரேஸ்வரர்களைப் போலவிருக்கும்) என் அழகு தெய்வங்களே, (அர்ஜுனனுக்கு ஹ்ருஷிகேசராகவும் எனக்கு கோதண்டபாணி யாகவும்) சீதைக்கு சார்ங்கதன்வாவாகவும், காக்ஷி அளித்த மஹா நாராயணு, வேதங்களை அடிப்படையாக வைத்து உம்மை கோவிந்தாவென்று துதிக்கும் நாரத முனிவருக்கு காக்ஷி அளித்த

மஹானுபாவா, (இந்திரனுக்கு கோவர்த்தனகிரியைத் தூக்கி, பசுக்களை ரக்ஷித்த) பசுபதியே, (வேதவியாஸர், விஸ்வாமித்ரர், வஷிஷ்டாதி) ரிஷிகளுக்கு விப்ரபிரியனாக காக்ஷி அளித்த ராமா, மாயையாகிற உம்முடைய இச்சா லீலா பிரகரணத்தினால் சீதை எங்கே, என் நாயகி எங்கே, (பராங்குச நாயகி எங்கே, லலிதா தேவி எங்கே, ராதை எங்கே, என் கருணை எங்கே, எனது ஹம்ஸம் எங்கே,) என்று சாதாரண மனிதனைப்போலத் தேடும் மஹாலக்ஷ்மியின் ஹ்ருதயவாஸா, (அகலகில்லேன் என்று அலர் மேல் மங்கை வலமார்பினில் உறைந்திருக்கும் மார்பா,) நீ எந்த தர்மத்தை அனுஷ்டித்தாயோ, அந்த தர்மத்திற்கும் உனக்கும் நான் நமஸ்கரிக்கிறேன். ஹே ராமா, உனக்கு அனுகூலமான வளும், (எனக்குத்) தாயாகவும் தெய்வமாகவுமிருக்கும் (எனது காமேஸ்வரியை, ஸித்தேஸ்வரியை,) சீதையை, என் ப்ரேமை பந்துவை, ஹே ரகுவரா, கிருபாஸிந்தோ, எங்கு தேடிச் சென்றாய்? ராமா, [பக்தஸிந்தோ, மாயாமோஹம் என்கிற சமுத் திரத்திலிருந்து என்னை உத்தாரணம் செய்யவந்த (கிருஷ்ண) பிரபோ,] ஸாதுக்களின் ஸம்ரக்ஷணம் என்கிற கவசம் பூண்டு, தம்பியான ராமானுஜனுடன் கூட நடந்து செல்கிறாயே, உங்கள் இருவர்களையும் காமம் என்கிற வழியில் ஆராதிக்கும் என்னை கடாக்ஷிக்கமாட்டீர்களா? (நீங்கள் இவ்விதம் தேடிக்கொண்டு போகும் சமயம், ஹே ராமா, உன் மனதில் இருந்த எண்ணம் தான் எதுவோ? "நான் ஈரேழு லோகங்களைப் படைத்தவன். இந்த ராவணன் சீதையுடன் சென்றுபோன விடத்தை நான் தேடிப்போய் கண்டுபிடிப்பேன்." என்று நினைத்தாயோ, இல்லை. என் நெஞ்சுடர் சோதியே, உன் பொன்னடி காண்பேன்; என்னைவிட்டு உன்மன இச்சையால் ஸர்வ ஸ்வதந்தரம் கொண்டு போனாயோ! ஹே சீதே, நீயாக என்னிடம் வந்து பிரகடனம் செய்து கொள்ளமாட்டாயா? உனக்கும் எனக்கும் ஆஸ்ரிதர்களைக் காப்பாற்றுவது என்கிற தர்மம் பொதுவல்லவோ? அதனால் நீ என்னுடன் ஸஹதர்மிணி என்று அழைக்கப்படுகிறாய். சீதே, உன்னால் அடையப்பெற்ற எவனாவது விடப்பட்டிருக்கிறானா? நாங்கள் கேட்டதுமில்லை; இனிமேலும் கேட்கப்போவதுமில்லை.")

கோதண்டராமா, சீதை என்கிற தாயை இவ்விதம் தேடிச் சென்ற பிரபோ, ஹேசீதாபதி, (எனக்கு தகப்பன்போலவிருக்கும்) ரகுகுலபூஷணா, ராமா, ஸ்ரீலக்ஷ்மணா உங்கள் இருவர்களின் திருஷ்டிபதத்தில் பக்திசெய்யும் எனக்கு, (நாரத மஹாமுனிவரால் கடாக்ஷிக்கப்பெற்ற எனக்கு,) உங்கள் தரிசனம் பக்தியுடன் ஸதா

ஸம்பவிக்கட்டும். (தியாகராஜர் போன்ற மஹான்களுக்கும் துளசி தாஸர் போன்ற ஜிக்ஞாஸுகளுக்கும் கிடைத்த பாக்கியம் எனக்கு கிட்டட்டும். ஸ்வாமி, என்மீது தயை செய்ய வேண்டும்.) (1)

பிரும்மாவினுல் சதாகானம் செய்யப்பட்ட வேதங்களும், (சதாசிவன், அகஸ்திய நாரத ஆஞ்சநேயாதிகள் மிக்க சிரமத்துடன் நாதோபாஸனே என்னும்) யோகத்தால் க்ஷிராப்தியின் நுரையிலிருந்து கடைந்து எடுத்து மஹாசுக்ருத உள்ளம் கொண்டு பிறர்களுக்கு நன்மையைப் பயக்கவும், ஸகல கலிகல் மஷங்களேக் கண்டு பயப்படுவர்களுக்கு ஸர்வத்திரத்தையும் நாசம் செய்வதற்காகவும், மகிமை வாய்ந்த ராம நாமத்தைக் கண்டுபிடித்தார்கள். நவனீதத்தைப்போல திறமையுள்ளதும், அனுதியும் அவ்யயமும் என் பிரபு உமாமஹேஸ்வரர்களின் பத்ம முகங்களாகிற சந்திரர்களுக்கு ஸதா ஒளியைக் கடாக்ஷிப்பதும் சோபனமாக்குவதும், சகல சம்சாரதாபங்களேப் போக்குவதற்காகவும், ராமதாரகம் மிருத சஞ்சீவினி என்கிற ஔஷதியைப் போலவிருக்கிறது. அந்த ராமதாரகம் எனக்கும் என்னேப்போலவிருக்கும் ஆத்மா ராமர்களுக்கும் சுகத்தை வாரிக் கொடுப்பதாகவிருக்கிறது அன்றே? (என் தாய் ஜனக குமாரி ராமபட்டமஹிஷி, (தேவமாதர்களின் சிறையை விடுவிக்க அபார கருணையினுல் தன்னே வலுவில் சிறைப்படுத்திக்கொண்ட ஜகன்மாதா, அலர் மேல்மங்கை, ரெங்கநாயகி, பெருந்தேவி) தினந்தோறும் அப்பேற்பட்ட மகிமையுள்ள ராமதாரகத்தை ஜபித்து, ராக்ஷஸிகளின் இன்னல்களே சகித்துக்கொண்டு, ராமநாமம் பொறித்த அங்குலியத்தைக் கொணர்ந்துவரும் ராமதூதனுகிற ஆஞ்சநேய ஸ்வாமியை எதிர்பார்த்த வண்ணமாக விருந்தாள்.) அந்த ஜானகி தேவிக்கு ஜீவன ஆதாரமாக ராமநாமம் விளங்கியது. அது அவளுக்கு அம்ருதம்போல ருசியுள்ளதாக விருந்தது. (ஸகல சராசரங்களேயும் ரக்ஷிக்கிற நாராயணனுடைய ரஸ்மி பாவன: அதாவது எல்லா வஸ்துக்களேயும் பிரகாசிக்கச் செய்ய தன்மையுள்ளதாக விருந்தது.) அப்பேற்பட்ட மஹோன்னதமான ஸ்ரீராம நாமத்தை மஹான்கள் அம்ருத ரஸத்தை குடிப்பது போல குடித்து இன்புறுகிருர்கள், அப்பேற்பட்ட மஹானுபாவர்கள் அனேவருக்கும் நான் நமஸ்காரங்களேச் செய்கிறேன். அவர்களே தன்யர்கள் என்று உத்கோக்ஷிக்கிறேன். (அவர்களே நோக்கி, "தயாளுக்களே, நீங்கள் என்னிடம் கிருபையுடன் அனுக்ரஹம் செலுத்தவேண்டும்," என்று வினயபூர்வமாக, மஹாவிஸ்வாசத்துடன் பிரார்த்திக்கிறேன்.) (2)

[தியானம்

அம்மா ஜானகி, பிராணவல்லபே, நீ எங்குபோய் ஒளிந்துகொண்டிருக்கிருய்? என்னை விட்டுப்போக நினைத்தாயே, உனது சங்கல்பம்தான் என்ன? உன்னை லக்ஷ்மி என்று கூறுகிருர்களே? உன்னை ராமானுஜர் ஸ்வாபி மதநித்ய நிரவத்ய அனுரூப ஸ்வரூபாதிகளை உள்ளவள் என்று சொல்லுகிருரே. அம்மா சீதே, நீ யாராக விருக்கிருய்? என்று முக்தாத்மாவைக் கேட்டால், "நான் உன் முலைபிரியமாட்டாத புத்ரனுக விருக்கிறேன்", என்கிருன். உன் முகத்தைப் பார்க்கும் "யதபாங்க ஸம்ஸ்ரயம்", என்று ஆளவந்தார் சொல்லிய படியும்; யஸ்யாவீக்ஷ்ய முகம்", என்று கூரத்தாழ்வான் சொல்லியபடியும்; "யத்ப்ருவிப்ரம மேதத;" என்று பட்டர் சாதித்தபடியும், அம்மா, நீ என் மாதாமாத்திரமில்லை; ஸர்வ லோக ஜனரக்ஷகியாகவுமிருக்கிருய்." பகவானுடைய நாராயண தத்வத்தைப் பூர்த்தி பண்ணும் ஸர்வஸம்பத் பரிபூர்ணி நீயல்லவோ? அம்மா, உன் திருநாமமாகிற மஹாலக்ஷ்மி என்கிற நாமம் "லக்ஷ" என்கிற தாதுவினின்று நிஷ்பந்தமானது. என் பிரியே, ஹரிவல்லபே; ஸர்வலோக யோக க்ஷேமா, "லக்ஷ" என்கிற தாதுவுக்கு தர்சனம் (நோக்குதல்), "அங்கதம்," (அடையாளமிடுதல்) என்கிற இருபொருள்கள் தாது பாடத்தில் கூறப்பட்டிருக்கின்றன. ஸித்தேஸ்வரி, திரிபுவனேஸ்வரி, நீ என்னை நோக்குதலால் என் ரக்ஷணத்தை ஜகன் மாதாவாகிய நீ பெறுகிருய். என் ராஜ்ய லக்ஷ்மியே, பரிபூர்ண லக்ஷ்மி, உன்னுடைய பத்மமாகிற உள்ளத்திலும், திருமுகத்திலும் படரும் சந்தோஷத்தால் ஆதித்யனுகிற என்னை, பரமாத்மாவை, எனது அந்தர்யாமியை, மலரவைக் கிருய். பிரியே, பிரிய ஸௌதாமினி, "நீவார சூகவத்தன்வி" யாகிற நீல மேகம்போலத் தோன்றும் என் அங்கத் திரு மேனியை பிரகாசிக்க வைக்கும் மின்னலைப் போல, நீயல்லவோ நடுவில் விளங்குகிருய். ரெங்கநாயகி, நான் மாத்திரமல்ல, இந்திராதி தேவர்கள் தேஜஸ்ஸுள்ள உனது பாதமலர்களை திருமாலுக்குத் தித்திக்கும் தேன் என்று நினைத்து வண்டு ரூபமாக உன்னை அடைகிருர்கள்; நம் இருவரையும் சுற்று கிருர்கள். இப்பொழுது நீ எந்த மகரந்தரஸத்தில் ஒளிந்து கொண்டிருக்கிருய்? நாரதரால் தொடரப்பட்ட நான் நெய்யில் விருப்பத்துடன், கழுதைப் பாலை கடைய விரும்புவேனு? பிராணவல்லபே, வேதங்களை உணர்ந்து, வேத்யத்தையும்

அவேத்யத்தையும் அறியாத மூடர் போல விருப்பேனு? காமாக்ஷி, வைஷ்ணவி, மரணங்கள் ஏற்படாதபடி இந்த வேத்யா வேத்யங்களை அறிந்து, மனத்தை நிலைக்கச் செய்து, இந்த ஜனன மரணங்கள் நித்யம் என்று நினைத்து உன்னை வந்து அடைவேன். ஹே பரமேஸ்வரி, சீதே, ராமனை வஞ்சித்து தனியாக விட்டுப்போய் உனது சகாக்களான தேவமாதர்களை விடுவிக்கச் சென்ருயோ; என் செல்வியே, தயாபரி, மோக்ஷ காமேஸ்வரி, வேதத்தில் சொல்லப்படும் தர்மங்களையும் விட்டு விட்டு அழிவில்லாததும் மோக்ஷம் என்று சொல்லப்படுவதும் இந்த சரீரத்தில் க்ஷரம் என்று சொல்லப்படும் ஜீவாத்மாவாகிற இருபத்தைந்தாம் தத்வம் ஒவ்வொரு நாளும் இடைவிடாமல் வேத்யா வேத்யங்களை ஊடுருவிப் பார்த்துக்கொண்டு கேவலனுகி, இருபத்தாருவது தத்வமாகிற பரமாத்மா என்கிற அக்ஷரத்தை, பிரும்மமுமாகிற ஈஸ்வரர் ஈஸ்வரி என்று சொல்லப்படுவதும், உன்னை பார்க்கிருன் அன்ருே? ஸந்தோஹ கைங்கர்ய காருண்ய ஆனந்தவர்த்தினி, இந்த ஈஸ்வரரோ சாஸ்வதமான அவ்யக்தன், தனிப்பட்டவனுகவுமிருக்கிருன். ஜீவாத்மாவானவன் தான் வேறு என்றும், ஈஸ்வரனிடத்தில் பாரதந்திரயமுள்ள வனுக, உனது கிருபையினுல் அம்மா அறிகிருன். பராத்பரி, ஸாதுக்கள் அந்த ஜீவஸ்வரூபத்திலிருக்கிற அந்த ஈசரை ஒருவன் என்றும், நாராயணர் என்றும் பார்க்கிருர்கள். காரணன் என்றும், ஈசற்கும் நான்முகனுக்கும் தெய்வம் நீ, கற்பவை நீ, கற்றவை நீ யென்றும் எல்லாம் லக்ஷ்மி நாராயணன் என்றும் ஸதாசார்யரால் அனுக்ரஹிக்கப்பட்ட "நான்" என்கிற இருபத்தைந்தாம் தத்வமாகிற ஜீவன், ஸ்வரூப ஞான மடைந்து அறிகிறவனுகிறேன். அப்பொழுது அவன் பிரகிருதியை அறிகிருன். ஆனுல் அந்த பிருதிவியோ அவனை அறிகிறதில்லை. ஸாங்கியர்கள் ஞானவடிவான ஜீவனை பிரதானம் என்று சொல்லுகிருர்கள். இவன் பரமாத்மாவைப் பார்த்துக் கொண்டு, பிரகிருதியைப் பாராதவனுகவிருந்து கொண்டிருக்கிருன். தனிப்பட்டவனுன பரமாத்மா ஸர்வ ஸ்வதந்தரனுக, தன்னையும், இருபத்தைந்தாவது தத்வமான ஜீவனையும், இருபத்துநான்காவது தத்வமாகிற பிரகிருதியையும் பார்த்துக் கொண்டிருக்கிருன். இந்த பரமாத்மாவைப்பார்த்துக் கொண்டிருக்கும் ஜீவாத்மா, "எனக்குமேல் ஒருவருமில்லை," என்கிற அபிமானத்திலிருந்து விடுபட்டவனுக, இருபத்து நான்காவது தத்வமாகிற பிரகிருதியையும் பார்க்காமல், ஆனுல்

அந்த பிரகிருதியிலேயே யிருந்து கொண்டு, பிரும்ம பாவத்தை அடையும் போது, அம்மா, மஹாலக்ஷ்மி, உனது தயையினுல் ஸம்சாரத்தினின்று விலகி, பிரும்மபாவத்தை அடைந்து, " நான் வேறு, இந்த பிரகிருதிவேறு," என்று நினைக்கிருன். தேவி, இது உன் தயையினுல் ஏற்படுகிறது. அவ்விதம் உன்னுல் மார்க்கத்தைக் காண்பிக்கப்பட்டவனுய், "லக்ஷ்மி" என்கிற தாதுவுக்கு பாஸனம் (விளங்கச் செய்தல்) "லக்ஷ்மீ லக்ஷணுத் பாஸனுத்" என்று பதஞ்சலி மஹாபாஷ்யத்தில் அருளியபடி, பரதேவதே, "ப்ரபாஸாம் பாஸ்கரேண, ப்ரபாயதா" என்கிற படிக்கும், "தமேவபாந்தமனுபாதிஸர்வம் தஸ்ய பாஸாஸர்வ மிதம் விபாதி," என்று வேதம் சொல்லுகிறபடிக்கும் பாநமும் பாஸனமும், திருவுக்கும் திருமாலுக்கும் பாஸ்பரம் ஒத்திருக்கும் என்கிற பிரகாரம், ஜீவாத்மாவாகிற நான் இருபத்தாருவது தத்வமாகிய பரமாத்மாவைப் பார்க்கிறேன். ஈஸ்வரி நீ வேறு, ஜீவாத்மாகிய நான் வேறு, நான் உனக்கு அடங்கினவன், உனது தயையை எதிர்பார்க்கிறவன்; ஆகையால் அம்மா, ஜனகபுத்திரியே, சீதே, எனது க்லேசங்களைப் போக்குபவளே, ஜனன மரண பயங்களை நினைத்து, உன்னைப்பற்றி கொண்டு, சுத்தர்களும், ஸாங்கியர்களும், யோகிகளும் " அச்சுதன் மனைவி, என் ஜகன்மாதா" வென்று தஞ்சமாக அடைகிருர்களோ, அதுபோல நானும் உன்னை தஞ்சம் என்று அடைகிறேன். தேவி, உனது சகியாகிற திரிஜடை காண்பித்த வழியில் ராக்ஷஸிகள் சென்ருர்களே, அதைப்போல அம்மா நாராயணி, களங்கமில்லாதவளே, ஜடமான பிரகிருதியை அறிகிற ஜீவனுகிற நான் வித்வானுகி ஞானரூபத்துடனும் பக்தி பிரபத்தி யோகத்துடனும் உன்னுடைய பரத்வ சௌசீல்யாதி மாத்ரு ஸ்நேகத்துடனும், ஆழ்வார்களால் காட்டப்பட்ட வேதாந்த திருஷ்டாந்தங்களைக் கொண்டு ஸ்வரூப ஞானமுடைய பரதந்திரனுய், கேவலனுய், உனது தயையே அனுஸந்தித்து இருப்பவனுக, உன்னை சரணமடைகிறேன். அம்மா, என்னை ரக்ஷி. ஆதித்யரே, பத்மா, எனக்கு தயைசெய்யுங்கள்.]

எந்த விடத்தில் என் குருநாதர்களான உமாமஹேஸ்வரர்கள் வசிக்கின்ருர்களோ, நர்த்தனம் செய்கின்ருர்களோ, அந்த விடம் தான் காசியாகிற முக்திபூமி. அந்த இடம் தான் ஞானிகள் வசிக்குமிடம். அதுதான் பாபங்களும் பற்றுதல்களும் சம்சார தாபங்களும் நசிக்கிற இடம். அந்த இடம்தான் ஈஸ்வரபக்தியை

வளர்க்குமிடம். இப்பேற்பட்ட உத்தம ஆசார்யர்களை சேவை செய்து, மங்களங்களை நாம் ஏன் பெறக்கூடாது? (3)

(ஆலஹாலவிஷமாகிற சம்சாரதாபத்தைக் கண்டு, நாம் அனைவரும் பயப்படுகிறோம்.) அன்று பாற்கடலைக் கடையும் போது, ஆலகால விஷத்தைக்கண்டு அமிருதத்தைச் சாப்பிட விரும்பிய தேவர்கள் நடுநடுங்கினர்கள். அந்த சமயம் என் பிரபு பகவான் சங்கரர், (நாராயண ப்ரீதிக்காக,) அந்த விஷத்தை (வெண்ணெயை முழுங்குவது போல,) சாப்பிட்டுவிட்டு சகலருக்கும் அபயத்தை அளித்தார். (அப்பேற்பட்ட உதாரமனமுள்ள உமாசங்கரர் நம்மை எப்போது காப்பாற்றட்டும். அந்த நீல லோஹிதர், (லோக கல்யாணர்த்தம் விஷ்ணுவின் ஆக்ஞையினல் சாப்பிட்டுவிட்டு) என் போன்ற அடியார்களுக்கு ஸதா பலத்தையும் அபயத்தையும் கொடுக்கட்டும்.) ஹே மந்த புத்தியுள்ள மனமே, அவிவேகத்தை அடையாதே, (நாரதவியாஸர் ஸனத் குமாராதிகளால் காட்டப்பட்ட வழிகளில் போய்,) மஹாமஹத்வம் வாய்ந்த உமாதேவியையும் பரமேஸ்வரரையும் ஏன் அஹங்காரத்தால் பூஜிக்காமல் காலத்தைக் கழிக்க விரும்புகிறாய்? (இந்த சம்சாரதாபங்களைப் போக்கும் மஹா ஞானியும், மார்க்கண்டேயரை மஹாமாயையிலிருந்து விடுவித்து நாராயண பக்தியை அவருக்கு வரமாக அளித்த மஹாபிரபு,) மஹாகிருபாளுவன்றோ அந்த அகோரமூர்த்தி (அவரையும் உமையையும்விட உனக்கு யார் நாராயணரின் ஸ்வரூபத்தை பூர்ணமாக அறியக்கூடும்? ஸங்கர்ஷணரே, என்னை எப்பொழுதும் நீர்தான் காப்பாற்ற வேண்டும்.) (4)

என்பிரபு ரகுராய் சீதையைத் தேடுவதற்காக லக்ஷ்மணனுடன் மேலே சென்று கொண்டிருந்தார். அவர் ரிஷ்யமுக பர்வதத்தின் சமீபம் வந்து சேர்ந்தார். அந்த பர்வதத்தில் சுக்ரீவன் தன் மந்திரிமார்களுடன் வசித்துவந்தான். அவன் அதுளித பலத்துடன் தோன்றிய ராம லக்ஷ்மணர்களைக் கண்டான். (5)

வாலியினுல் உபத்ரவம் செய்யப்பட்டு, அடித்துத் துரத்தப் பட்ட சுக்ரீவன் அத்யந்தப்ரீதியை அடைந்தான். "ஹனுமான் ஓடிவா சீக்கிரம், இந்த இரு ராஜகுமாரர்களைப்பார். இருவர்களும் நிகரற்ற அழகுடனும் யௌவனர்களாகவும், பலத்தின் பொக்கிஷமாகவு மிருக்கிறுர்கள். நீ பிரும்மாசாரி ரூபம் எடுத்துக் கொண்டு, அவர்களைக் கண்டு பேசிவா. அவர்களுடைய மனத்தி லிருக்கும் எண்ணங்களை அறிந்துகொண்டு, யதார்த்தமாய்



ஹனுமான் விப்ரரூப மெடுத்து, ராமனையும் லக்ஷ்மணனையும் நமஸ்கரித்தார். "ஹே வீரர்களே, ஸ்யாமள நிறம் கொண்ட தாங்களும், இளம் சிகப்பு நிறம் கொண்ட இவரும் யார்? உங்களைப் பார்த்தால் க்ஷத்திரியர்களாகத் தோன்றுகிறது. வனத்தில் எதையோ தேடிக் கொண்டு போகிறவர்களாகத் தென்படுகிறீர்கள்."

புரிந்துகொண்டு அங்கிருந்துகொண்டே எனக்கு ஸங்கேதம் செய்.'' (6)

''அவர்கள் என் பிராதாவான வாலியினுல் அனுப்பப் பட்டவர்களாகில், நான் உடனடியே இந்த பர்வதத்தை விட்டு ஓடிப்போய்விடுகிறேன்,'' என்று சொன்னுன். அந்த வார்த்தைகளைக் கேட்ட என்பிரபு, (பரமதயாளு சதாசிவன், சிவசக்தியின் ஐக்யஸ்வரூபம்,) ஹனுமான்ஜி பிராம்மண ரூபம் தரித்துக் கொண்டு, அவர்களை சந்திக்கச் சென்றுர். அவர்களைக் கண்டு, தலையால் வணங்கி, ராம லக்ஷ்மண சஹோதரர்களுடன் ஸம்பாஷிக்க ஆரம்பித்தார். (7)

[தியானம்

''வாராய் என்பிள்ளாய்,'' என்று சீதாராம மூர்த்திகளால் அன்போடு அழைக்கப்படும் ஆஞ்சநேய ஸ்வாமியே, உமது தாயாகிய சீதையினுல் நீர் கிளைகளின் நடுவில் மறைந்துகொண்டு காணப்படும்போது, அவளுக்கு உம்முடைய ஸ்வரூபம் எவ்விதம் தோன்றியது? வெள்ளை வஸ்திரம் தரித்தவரும் கருத்த மேகத்தில் மின்னலைப் போன்ற கிருஷ்ணபிங்கள கூட்டத்தின் தேஜோராசி போன்றவராகவும் தியாகராஜ துளசிதாஸர், என்போன்ற பக்தர்களுக்கு பர்ஜன்யராகவும், சீதாராமனிடம் மிக்க வணக்கமுள்ள ஸத்புத்ரனைப் போன்றவராகவும், பிரியவாதியும், ஸத்யமாக விருப்பவரும், எனக்கு ராமானுஜரைப் போல சீதாராம சரணங்களை அடிக்கடி காண்பிக்கிறவராகவுமிருந்தீர். துளசிதாஸருக்கு சித்திரகூடத்தில் ராம சீதா லக்ஷ்மண திவ்யமங்கள விக்ரஹங்களை மரத்தில் மறைந்து நின்று காண்பித்துவிட்டு தானும் இன்புற்றவர் நீர் அன்றோ? மஹாத்மாவும், ஊர்த்வரேதஸ்ஸும், உமாசங்கரகிருபையின் வடிவமுள்ளவரும் அசோக மரத்தின் பூங்கொத்து போன்ற காந்தியினுல் எல்லா பக்தர்களுடைய ஜன்ம ஜன்மாந்திர சோகங்களை நாசம் செய்யும் ராமதாரக ரூபமாக வல்லவோ அவர் விளங்குகிறுர். அப்பேற்பட்ட ஆஞ்சநேய பகவானை, எனது ஸதாசாரியரை, பாவராக ஸ்வர தாளத்துடன் கூடிய சிறந்த ஸாஹித்யம் போலவும், ராமகிருபையாகிற மஹாபிரஸாதத்தை அளிக்கும் வள்ளலாகவும் நான் பார்க்கிறேன். அன்று நப்பின்னை கொங்கைமேல் படுத்து உறங்கும் மலர் மார்பன், யசோதை நந்தகோபான் ஆகியவர்களின் நடுவிலமர்ந்து கொண்டு இருப்பதுபோல, சீதாராம தம்பதிகளின் நடுவே, எனக்கு காக்ஷி அளிக்கிறதுபோல நான் அவரை பார்க்கிறேன்.]

(ராமா சீதா, ஆஞ்சநேயா, யாக்ஞ்ய வல்கியரிடம் உபதேசம் பெற்ற ஜனக மஹாராஜர், பிராக்ருதமான தர்ம அதர்மங்களை நிந்தித்து, நித்யனும் கேவலனுமாக விருக்கிற தன்னை இடம் காலம் பொருள் ஆகியவைகளால் அளவிட முடியாத ஆனந்தம் என்று கருதி, தர்மாதர்மங்கள், புண்யபாவங்கள், ஸத்யாஸத் யங்கள், ஜனனமரணங்கள் ஆகியவற்றை பிராகிருதமாக நினைத்து, அந்த சீதாராம பிரும்மத்தை உபாஸித்து, அவர் களையே அடைந்தார். அதுபோல் அல்லவா, ஸ்வாமி ஆஞ்ச நேயர், (ஸதாசார்யரே, சங்கரரே, ராமானுஜரே,) அவ்யக்தம் என்கிற பரமாத்மா கொடுக்கிறான், அவ்யக்தனுகிய ஜீவாத்மா வாங்குகிறான், என்று சொல்லுமாப்போல, அங்குலீயத்தைக் கொடுத்து, சூடாமணியை கிரஹித்தார். தானும், கொடுக்கிற ராமனிடம் வாங்கித் திருப்பிக்கொடுக்கிற சீதையினிடமும், கொடுத்து மீண்டும் வாங்கி, இரண்டையும் கிரஹித்துக் கொண்ட மாருதியாகிற ஆஞ்சநேயர், எனது ஞானபிரபோதகன், ஞானதிவாகரன், தன்னையும் தன் ஆத்மாவையும் சீதாராமர் களிடம் அர்ப்பித்துக் கொண்டானல்லவா? ராமானுஜனுகிற லக்ஷ்மணனைப் போல தன்னையும் சீதாராம கைங்கரியத்தில் அர்ப்பித்துக் கொண்டவனல்லவா? கொடுக்கப்படுவது, அடையப் படுவது, கொடுக்கப்பட்டதை ஸம்மதத்துடன் யேற்பது ஆகிற ஞானதான விஷயங்கள், ஆசாரியன், பிராட்டி பகவானுகிற ஸம்ரக்ஷகர்கள், சேதனன் ஆகிய மூன்றும் அவ்யக்தமல்லவா? ஸதாசாரியன் கிருபையின்றி அந்த சேதனன் எவ்விதம் பகவத் கிருபையை அடைய முடியும்? இந்த சேதனன் ஆசார்யனிட மிருந்து பக்வத்ஸ்வரூப ஞானத்தை முதலில் அடைகிறான். பிறகு தன்னுடைய ஸ்வரூப ஞானத்தையும் அறிந்து, அவைகளை ஆசார்யனிடமிருந்து கிரஹித்து அல்லவோ தன்னையும் ஆசார்ய ஸம்பந்தமுள்ளவனுக ஆக்கிக்கொள்கிறான். அந்த ஆசார்யஸம்பந்தத்தால் அவ்யக்தமான தனது ஜீவாத்மாவையும் பரமாத்மாவினிடம் சேர்பிக்கிறான். ஆத்மா ஒருவனே என்று சொல்லப்படும் ஜீவாத்மா ஸமூஹங்களையும் சரீரமாகக்கொண்ட ஈஸ்வரர் நாராயணன் சரீர சரீர ஸம்பந்தத்தால், தன்னையும் இந்த ஆத்ம ஸமூகங்களையும் ஸத்அஸத் ரூபமான பிரபஞ்ச மனைத்தையும் தானே நேரில் பார்க்கிறவராக விருக்கிருர். அந்த பரமாத்மாவுக்கு, லக்ஷ்மி ஸம்பனருக்கு, ஸ்ரீதேவி அசாதாரண பொக்கிஷம் அன்ருே? ஸ்ரீயப்பதியாகிற பகவான் எப்பொழுதும் பிரியாத பிராட்டியுடன் தயையுடன் கூடியவராக, ஜீவாத்மாக்

களையும் அவனுடைய சரீரமாகிற பிரபஞ்சத்தையும் பிருகிருதியாகிற இருபத்து நான்காவது தத்வத்தையும், பார்த்துக்கொண்டு ஸம்ரக்ஷிக்கிருர். கவியாகிற நாராயணரை அடுத்துத்தான் ஜீவாத்மாவான சேதனன் அபிமானம் அஹங்காரத்தை துறந்து, ஆசார்ய ஸம்பந்தம், பிராட்டியின் கருணை ஆகிற தனங்களால் பகவத்பிராப்தியை அடைகிருன். ஆசார்ய கைங்கர்யத்தால் பகவத்பிராப்தியை நிலைநிற்கச் செய்கிருன். ஆகையால் சேதனனும் ஆசாரியரும், பிராட்டி பெருமாளும், எப்பொழுதும் உள்ளதும் பிரியாததும் அண்டி இணைந்து வளரும் ஸ்நேகமுள்ளதும் பிரிக்கவெண்ணுத ஸ்நேகத்தால், ஸஹஜ புத்ரவாதஸல்யத்தால், யாவரையும் ஸர்வலோகங்களையும் ஆனந்தம் செய்கிருன். தானும் ஆனந்தமடைகிருன். அப்பேற்பட்ட ஞானதத்வம், பக்தி, ஸதாசார்யத்வம், புத்திரவாத்ஸல்யத்வம், ஆனந்த நிலைமை, லோக கல்யாணர்த்தம் வாழ்வது ராமநாம பிரபாவத்தையும் ராமபக்தர்களையும் காப்பாற்றுவது ஆகிய காரியங்களில் ஆஞ்சநேயர், மாருதி, ராம சஞ்சீவியாக விளங்குகிருர். அவர் சிரஞ்சீவியாக விருந்து என்னையும், தியாகராஜ துளசி தாஸரையும், ராமானுஜர் ராமநாராயண பக்தர்களைக் காப்பாற்றுவது போல ஸதா காப்பாற்றி குளிரப்படுத்த வேண்டும் என்று தாஸ உள்ளத்துடன் பிரார்த்திக்கிறேன்.)

"ஸவாமி, மஹாவீரர்களான நரநாராயணர்களே, அழகில் (நாஸத்யன் தஸ்ரன் போன்ற) அஸ்வினி குமாரர்கள் போலவிருப்பவர்களே, தாங்கள் யார்? கருமேகம் போல நிறமுடைய தாங்கள் யார்? அதில் பொலிந்திருக்கும் (லக்ஷ்மி தத்வமாகிற) மின்னல் போல நிறமுள்ள தாங்கள் யார்? ஆயுதங்களைத் தரித்த க்ஷத்திரிய வீரர்களைப் போலவும் ராஜகுமாரர்களாகவும் ஜடாதரர்களாகவும் வனத்தில் சஞ்சரிக்கிறீர்களே, உங்களுடைய பாதங்கள் மெல்லிய மலரானான பூமியின்மேல் ஸ்பர்சம் பட்டதும், சிவந்துபோய் விடுமே, அப்பேற்பட்ட மென்மையுள்ள மலர்பாதங்கள் கடினமான மலைப்பிரதேசங்களில் ஸ்பரிசம் செய்வதை பொறுக்கமாட்டாதவையன்றே? (தாங்கள் அரண்மனையின் சுகபோகங்கள் அனைத்தையும் அனுபவிக்கத் தகுந்த ராஜகுமாரர்களாகவிருந்தும்) வனத்தில் அலைகிறவர்களாக, தேய்ந்த கோமாளமான சரணங்களை உடையவர்களாய் சஞ்சரிக்கிறவர்களாகவும், (கொதிக்கும் ஸம்சார தாபத்தில் தவிக்கும் ஜீவனைப் போலவும்,) எதையோ சிரமப்பட்டு தேடிக்கொண்டு அலைந்து போகிறீர்களோ? தாங்கள் எதை என்ன காரணத்தினுல் தேடி

அலேகிறீர்கள் ? உங்களுக்கு சம்மதமிருப்பின், ஸ்வாமி, எனக்கு தயவுசெய்து சொல்லவேண்டும்.'' (8)

''ஸ்வாமி, தங்களுடைய சரீரம் அதிமிருதுவாகவும் (தாமரைப் பூவைவிட மிருதுவானதாகவு) மிருக்கிறது. நீங்கள் சஞ்சலபுத்தியுள்ள என் மனத்தை அபஹரிக்கும் ரூபசௌந்தரியம் பெற்றிருக்கிறீர்கள். என்ன அழகு, என்ன லாவண்யம்; ஸ்வாமி, என் மனம் என்னிடம் நிலேஇல்லேயே; நான் என்ன செய்வேன் ? (அவ்விதமான நிரதிசய லாவண்யம் கொண்ட தங்களே நான் திருமேனி கண்டேன், பொன்மேனி கண்டேன், இன்றே கழல் கண்டேன், ஏழுபிறப்பும் யானறுத்தேன் அடி வண்ணம் தாமரையன்றுலகம் தாயோன், என்கிறபடி) உங் களுடைய மிருதுவான திருமேனி, எவ்விதம் சகிக்க முடியாத வானத்தின் மாருதங்களேயும், வெப்பமாயிருக்கும் சுடுகாற்றுக் களேயும் சுமக்குகின்றனவோ ? ஸ்வாமி, தாங்கள் தேவபுருஷர் களா, அஸ்வினி குமாரர்களா ? பிரும்மாவா, விஷ்ணுவா, மஹேஸ்வரரா ? இந்த மூன்று தெய்வங்களாகிற மும்மூர்த்தி களுக்கு மேற்பட்டவனும், (பாலகனுய் ஆலிலேமேல் பைய அமர்ந் தவனும் அன்று இவ்வுலகம் அளந்தவனும், காணக்காணெனை விரும்பும் கண்கள் இறையாய் நிலனுகி யெண்டிசையும் தானுய், மறையாய் மறைபொருளாய் கோவலனுய், பொலித்திருண்ட கார்வானில் மின்னேபோல் தோன்றி மலிந்து திருவிருந்த மார்பன், எழில்கொண்டு நீர்மேகம் போல மன்னன் நெடுமால் நிறம்போல, ஐயப்படாதே, மறுநின்ற தண்டுழாய் மார்பன், மண்ணுண்டும் பேய்ச்சி முலேயுண்டு மாற்ருதாய், அன்று ஆய்ச்சி கண்ணிக் கயிற்றினுல் கட்டத்தான் கட்டுண்டிருந்தான், இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகருக்கும் தெய்வம், எம்பெரு மான் உன்னேக் காரணன் நீ கற்றவை, கற்பவை நீ, நற்கிரிசை நீ நாரணன் நீ நன்கறிந்தேன் நான், என்கிருப்போல) ஆதிமூல மாகிற நாராயணரா, லக்ஷ்மிபதியான நாராயணரா; தாங்கள் ? ஸ்வாமி உம்முடன் கூடவிருக்கும் இவர் நரர் என்கிற ஸநாதன ரிஷியா ? தயவு செய்து சொல்லுங்கள். (9)

பிரபு ராமனேப் பார்த்து, ஆஞ்சநேயர் சொல்லுகிருர். ''ஜகத்தை ஸ்ருஷ்டித்த (பிதாமஹரும் தேவாஸுர குருவும், தேவ தேவரும், ஸர்வபூதங்களால் நமஸ்கரிக்கப்பட்ட '' தம் '' என்கிற நாராயணு, அசிந்தகீயரும், அநிர்தேஸ்யவபுவாகவும், ஸர்வ ப்ராணரும்,) அயோநிஜருமான பகவான் ஜகந்நாதர் இந்த உலகத்தில் அர்ச்சாவதாரம் செய்து பாப அநிஷ்டங்களில் மூழ்கிக்

கிடக்கும் இந்த பூமியையும், அதில் அடங்கிய ஸகல சேதனு சேதனர்களை சம்சாரதாபங்களிலிருந்து விடுவிப்பதற்காக ஆவிர் பவித்த ஆதிவராஹ நாராயணரா தாங்கள்? அல்லது கோவிந்த மூர்த்தியா? (கோக்களைக் காக்கும் வ்ரதமுடைய கோவிதாம் பதியா? இம்மையிலுள்ள கர்மங்களின் பலன்களைத்தரும் கோப்தாவா? வேதங்களாலும் வாக்குக்களாலும் எல்லாவற்றை யும் நடத்துகிற கோப்தாவா?) ஸ்வாமி, தாங்கள் அகில புவன பதிகள்போலத் தோன்றுகிறீர்கள். (மானிடவேஷம் தரித்து அவதார ரூபம்கொண்டு இந்த பூமண்டலத்தில் பலவித படைப்பு ஆசரணைகளினுல் ஏற்படும் வியவஸ்தைகளை (மரியாதா அவஸ்தை என்கிற வரையறை உண்டுபண்ணக்கூடிய) காரண புருஷர்களா? தயவுசெய்து உங்கள் ஆக்ஞையை சிரம்மேல் தாங்கும் என்னிடம் சொல்லுங்கள் ஸ்வாமிகளே'' என்று மாருதி கேட்டார்.) (10)

கோஸலதேச அரசரான தசரத புத்ரன் ஸ்ரீராமன் பதில் சொல்ல ஆரம்பித்தார். '' நான் கோஸலராஜா தசரதரின் புத்ரன். இவன் என் தம்பி, நாங்கள் பித்ருவசன பரிபாலனத்திற்காக வனம் வந்திருக்கிறோம், என் பெயர் ராமன்; இவன் பெயர் லக்ஷ்மணன், எங்களிடம் சுகுமாரியான ஒரு ஸ்திரியிருந்தாள். அவள் பெயர் வைதேஹி.'' (11)

'' வைதேஹி என் தர்ம பத்தினி. ராக்ஷஸனுல் கொண்டு போகப்பட்டாள். விப்ரரூபம் கொண்ட பிராம்மணு, நாங்கள் அவளைத் தேடிக்கொண்டு செல்கிறோம். எங்கள் விருத்தாந்தங் கள் உன்னுல் முழுவதும் கேட்கப்பட்டன. இப்பொழுது உன் னுடைய நிஜ விருத்தாந்தங்களைச் சொல்.'' (12)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி சஹித நாராயணு, உன் திருவடி களே சரணம். மஹாலக்ஷ்மி, சீதே, நீ என்னிடம் வாராய் அம்மா. அன்று மஹானுபாவனுகிற தியாகராஜர் ராமனைப் பார்த்து '' ராமா, உனக்கு ஸமானமாவர் யாரிருப்பர்? ஹே ரகு வம்ச உத்தாரதா, மாம்பூபோலவிருக்கும் அதிமிருது கோமள அனங்ககுஸுமமாகிற சீதையிருக்கிறுளே, அவள் உன் ஒளி; உன் பங்கயக் கண்கள்'' என்றுர். ஆஞ்சநேயரால் அன்று அசோக வனத்தில் '' இயம் கனக வர்ணுங்கி ராமஸ்ய மஹிஷிப்ரியா,'' '' பர்த்தா நாமபரம் நார்யா பூஷணும் பூஷணதபி, தர்மக்ஞஸ்ய கிருதக்ஞஸ்ய ராமஸ்ய விதிதாத்மனः'' என்கிற ராமனுக்கு

துல்யமான சீல நடத்தை விருந்தபோதிலும், சீதை மஹா கருணையை ராமனைவிட அதிகமாக அணிந்துகொண்டு விளங்கு வதால் அஸிதேக்ஷணு, விசாலாக்ஷி, மீனுக்ஷி, காமாக்ஷி என்று சொல்லப்படுகிருளே, ஹேராஜசீதே, என் ஹ்ருதிஸ்திதே, ஹ்ருதிவேத்யே, நீ எங்குபோய் ஒளிந்துகொண்டாய் அம்மா? பூர்ணசந்திரன்போல முகமண்டலத்தை உடையவளும், கற்பகாம்பிகைபோல விளங்குபவளும், சாருஸ்மிதே, சாருததி சாருநேத்ரே, விலாஸினி, என் மனத்தை அபஹரிக்கும் ராஜ ராஜேஸ்வரி, ராஜலக்ஷ்மி, என் மேருபர்வதமே, பயந்தஸ்வபாவ முள்ள பீரு, வேதாத்மாவான கருடன், அஹங்காரம் பக்தி விரு செய்யப்படும் கர்மஞான ஸ்வரூபமாயுள்ள பாம்பை அபஹரிப் பதுபோல, பக்தனுகிற என்னை அபஹரித்துக்கொண்டு, எங்கு போய் ஒளிந்துகொண்டாய்? சீதையின் ஹ்ருதயத்தில் கிளிக்கூட் டில் அடைக்கப்பட்டிருப்பதுபோல ராமா, நீ அடைக்கப்பட்டிருக் கிருய் என்று தியாகராஜர் போன்றவர்கள் கேலி செய்கிருர்களே, உன் காதுகளில் அந்த கேலிப்பேச்சுக்கள் கேட்கவில்லையா? உன் பேச்சுக்களும், பலுக்குகளும், மிடுக்குகளும், உமாதேவி சங்கர ரிடம் கூடினுல் எவ்விதம் இருக்கும்? நீயே யோசித்துப்பார். அதுமாதிரி, என்னைப்போன்ற உன் சிஷ்யனுக்கு, வேதங்களா லும் தவங்களாலும் யாகங்களாலும் அவ்யக்த ஸ்தானமாகிற உன் பிரியத்தை அடையமுடியாது. பிரபன்ன யோகத்தாலும், ராமசீதா கிருபையாகிற ஸதாசார்ய ஸம்பத்தாலும் ஆழ்வாராதி கள் காட்டிய நின்ற நிலையாலும், ஸ்ரீதேவி என்று புகழப்படும் மஹாலக்ஷ்மியே, உன்னை அடைய விரும்பும் எனக்கு கிருபை செய்யமாட்டாயா? சுலபமாக உன்னை ஆஸ்ரயிப்பதால் மாதாவாகிற நீ ச்ரியதே என்றும், நாராயணனுடைய பிரியை யானபடியால் ச்ரயதே என்றும், பயத்துடன் வரும் என்னை, அம்மா, உன் புத்ரனை, சிருஞ்ஜோதி என்கிற நாமதேயத்தினுல் உன் நாயகர் சொல்லிய வார்த்தைகள் வாஸ்தவமாக எனக்கு ஹிதமாக விருந்தபோதிலும் நான் பல காரணங்களால் உதாஸீன மாயிருந்து, மஹா அபராதங்களைச் செய்தும் அஸஹ்ய அப சாரங்களுடனிருந்தும் உன் அன்பினுல் அவைகளை மறந்து, என்னை பரிபாலித்து, என் வசனங்களைக் கேட்டு, நீயல்லவோ பெருமாளிடம் சேர்க்கிருய்; ச்ராவயதி "இவனைப் பாருங்கள், இவன் உம் புத்ரனல்லவா" என்று உமை அன்று சுக்ராசாரி யாரை சுட்டிச் சொல்லி சங்கரருடைய கோபத்திலிருந்து தப்ப வைத்து ஸம்ரக்ஷித்ததுபோல, என் பாதகங்களையும் அஸஹ்ய

அபசாரங்களையும், ராமாநுஜனை அடுத்திருப்பதாலும், அனாதியாக தொடர்ந்து உள்ளதும், பிரிக்க ஒண்ணாத உமக்கும் இவனுக்கும் உள்ள ஸ்நேஹ ஸஹஜ ஸம்பந்தத்தை அறிவுறுத்தி உணரச்செய்து, இவனுக்கு அருள்பண்ணுவீராக என்று பெருமாளைக் கேட்கும்படிவைக்கும் அஸிதேக்ஷணா, பத்மபலபத்ராக்ஷி, என் வினை விலக்கி அன்புதனால் என்னை இம்மை சேர்த்தருளும் திருவே, அன்று அரவிந்தலோசனனைக் கண்ட சிறு பாலனாகிற நம்மாழ்வார் உன் திவ்ய சௌந்தர்ய அழகுகளையும், சௌசீல்ய வாத்ஸல்யாதி சௌலப்ய பரத்வ விபவங்களையும் நினைப்பவராக ஆறு மாதம் பேச்சின்றி மூச்சின்றி உன் நினைவாய் இருந்தாரே, அந்த மகனிடம் காட்டிய அன்பை எனக்கு நீ காண்பிக்க மாட்டாயா ? சீதே, கிருஷ்ண பகவானால் சொல்லப்பட்ட கீதையையும் நீ பேசுகிற மிருது பாஷணங்களையும் ஒப்பிட்டுப் பார்த்து தியாகராஜர்போன்ற வாக்கேயக்காரர்கள், உமாமஹேஸ்வரர் போன்ற நாததனுமணிகள் எவ்விதம் உன் புகழைப்பாடி ஆனந்தமடைந்து சங்கீதமாகிற நாதவித்யையினால், சப்தபிரும்மத்தால், உன்னை அனுமானிக்கிறார்களே, அப்பேற்பட்ட என் சீதே, நீ எங்கிருக்கிறாய் ? "சீதாபதி சரணாப்ஜங்களுக்கு எதுவும் ஈடல்ல ;" என்று உத்கோஷிக்கும் துளசிதாஸர் போன்ற முனிமானஸஸரோவரில் உல்லாஸமாக ஊர்ந்துவரும் அன்னப் பேடையே, சீதாராமர்களைத் தவிர ஆனந்தம் ஒன்றுமில்லை என்று வ்ரத தீக்ஷையுடன் இருக்கிறாரே, இந்த ஆஞ்சநேயர், வாதாத்மஜர், ஸர்வகந்தசுகந்த வாஹனர். அவர் ஸ்ரீராமனிடம் வந்து சேர்ந்து, பின்புதானே ராமனுக்கும் எனக்கும் உன்னைக் காட்டிக் கொடுக்கப் போகிறார். அம்மா, ரெங்கநாயகி, உன் புருஷகார பிரபாவத்தினால் அன்று ராமானுஜர் ரங்கபதியின் பதாப்ஜங்களை அடைந்தார். என்னையும் அந்த மஹாகிருபாளு அடையவைக்கிறார். அப்பேற்பட்ட சீதாராமா, நாராயண மஹாலக்ஷ்மி, உங்கள் பாதங்களை ஆஞ்சநேயர் ராமாநுஜர் ஆஸ்ரயித்தபடி, நான் எனது க்ஷேத்ரக்ஞரை அறிந்து உண்மையான ஸ்வரூப ஞானத்தினால் மோக்ஷ ஆனந்தமாகிற உன் அர்ச்சாவதாரத்தின் திருவடிகளை இங்கேயும் அங்கேயும் அடைந்து, நம்மாழ்வார் மதுரகவி ஆழ்வார்போல, தீர்த்த வடியவர் தம்மைத் திருத்திப் பணி கொள்ளவல்ல ஆர்த்தபுகழ் அச்சுதனை என் அமரர்பிரானை என் அருவினை நீர் செய்பவனை, தியாகராஜாதிகள் ராமானுஜாதிகள், ஆஞ்சநேயாதிகள் காட்டிய, தீட்டிய, வழியில், நாதயோக

பக்தி பிரபன்ன வழியில் நான் சரணம் அடைகிறேன். ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமதே நாராயணாய நம:]

(அத்யந்த தாகவிடாயினால் நெஞ்சு உலர்ந்து வரண்டு போன நாவிற்கும், அதிவெப்ப மிகுதியால் உதரம் வெடித்துப் போன பூதளத்திற்கும், ஸதா ஆசார்ய ஸம்பந்தம் பகவத் பிராப்தி என்கிற தாபங்களினால் அன்று நஞ்சீயர் சொன்னது போல "ஆர்த்தி நிறைந்த சேதனன் எவ்விதம் கஷ்டப்படுவானோ அப்பேற்பட்டவர்களுக்கு தண்ணீருக்குப் பதிலாக அம்ருதமும், பகவானுடைய அவதாரமும், ஸதாசார்ய கடாக்ஷஸம்பந்தமும் எவ்விதம் ஒருங்கே ஸம்பவிக்குமோ," அதுபோல அல்லவா என் பிரபு உமாசங்கரரின் தீர்த்த வடிவான) ஆஞ்சநேயர் அன்று தாக விடாய் கொண்ட சேதனனைப்போல, ராமனுடைய அம்ருத வசனங்களைக் கேட்டார். (அன்று சுகர் வியாஸரை பிரதக்ஷணம் செய்து பூஜித்ததுமாதிரி, விஸ்வாவஸு யாக்ஞ்யவல்கியரை கிருதக்ஞையுடன் பிரதக்ஷணம் செய்து பூஜித்து சந்தோஷமடையச் செய்தபடி, என் பிரபு ராமானுஜர் பங்குனி உத்திர உத்ஸவத்தில் பிராட்டியின் புருஷகாரபலத்தினால் ரெங்கநாதரை சரணமடைந்து ஆனந்தித்ததுபோல அல்லவா,) அந்த ராம வசனங்களைக் கேட்ட ஹனுமார் இன்ப ஆனந்தமடைந்து அனுபவித்தார். (அப்பேற்பட்ட ஆஞ்சநேயருக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். என்னையும் ஆட்கொள்ளவேண்டும் என்று தீனனாக விண்ணப்பித்துக்கொள்கிறேன். எனக்கும் சீதாராம அம்ருதம் வேண்டும். லக்ஷ்மி நாராயணா, உங்களுடைய சரணாரவிந்தங்களின் அம்ருதத்தை கொடுக்கும்படி பிரார்த்திக்கிறேன். அந்த ஹனுமார் எவ்வளவு காலம் காத்திருந்தார். அப்பா, ஸ்மரிக்க முடியவில்லை. எவ்வளவு விக்னங்கள், நினைக்கவே மனம் அஞ்சுகிறது. ஆஞ்சநேயர் தனக்குள் சொல்லிக் கொண்டார். "ஹேமனஸே," பிரும்மாவின் வசனங்களை நினைத்துக்கொண்டார். "ஆஞ்சநேயா, உன் மனஸே அந்த மஹா புருஷரை காட்டிக்கொடுக்கும். அவருடைய சாமுத்ரீக லக்ஷணங்களால், குணவிபவங்களால், அந்த மஹானுபாவரே உனக்கு தன்னைக் காட்டித்தருவார். அவைகள் உன் மனத்திற்கு தெரிவித்துவிடும்; மனஸே, சீதையை ஸதா நினைத்துக்கொண்டிருக்கும் மனஸே, நீ கிருதார்த்தம் செய்தாய். திருஷ்டாதிருஷ்டமான ராமசீதா சரணங்களை அடைந்தாய்," என்று ஆஞ்சநேயர் எண்ணி ஆனந்தம் அடைந்தார்.) பகவானுடைய ஸ்ரீமுகத்தால் "நான் ராமன், இவன் லக்ஷ்மணன்" என்று

அறியும்படி செய்யப்பட்டேன். (எனக்கு வரம் கொடுத்த ரிஷிகளுக்கும், வாயு பகவானுக்கும், அஞ்சனு தேவிக்கும், பிரபிதா மஹருக்கும், இந்திராதி தேவர்களுக்கும் கிருதக்ஞை செலுத்துகிறேன். அன்று தண்டி உமாமஹேஸ்வரரைக் கண்டதுபோலவும், இன்று எனக்கு பெருமாள் ராமானுஜனுடன் ஸ்வயமாக என்னைத் தேடிக்கொண்டு வருகிறவர்களைப்போல என் திருவடி பதத்தில் ஆவிர்பவித்திருக்கிருர், அன்று துருவனுக்கு நாராயணர் ஸம்பவித்ததுபோல இன்று அவர் என் முன் ஸம்பவித்திருக்கிருர். நான் என்ன பாக்யம் செய்தேன். என் பிரபு மஹா கிருபாளு. ஒரு தடவை நமஸ்காரம் செய்தால் "போதும்" என்று வரதமுத்ரையைக் கொண்ட சீதாராமா! அனவரதமும் அவர்களின் பாத ஸ்பரிசத்தை, பாத கைங்கர்யத்தை, பாத ஆனந்தத்தை, எனக்குக் கொடுப்பாரா? எனக்கு சஞ்சீவினியாகிற ராமநாமத்தை உபாயமாகவும் உபேயமாகவும் அளிப்பாரா? அவருடைய கிருபை, திருவுள்ளம், பிராட்டியின் அனுக்ரஹம், ராமானுஜரின் கடாக்ஷம் எவ்விதம் இருக்குமோ தெரியவில்லை," என்று தனக்குள் ஆஞ்சநேயர் ஆலோசித்தவராக,) கிருத அஞ்சலியுடன், (அன்று தர்மபுத்திரர் கிருஷ்ணரை அஞ்சலி செய்து பக்திபிரபன்னயோகத்தால் சரணமடைந்து, நமஸ்கரித்து, பிரதக்ஷணம் செய்தாரே அதுபோல என் பிரபு, என் மார்க்கதரிசி, ராமாமிருதத்தைக் கொணர்ந்த பதகேஸ்வரரான கருடனைப்போல, என் ஆசைகளையும் பந்தங்களையும் அறுத்து சுகஸ்பர்சத்திஞல், நாராயண திருவடிகளை அடையவிப்பவர்போல,) ஆஞ்சநேயர், மாருதி, (அஞ்சனுபுத்ரன், ஸர்வகந்த சுகந்தவாஹனரான வாயு பகவானின் புத்ரன்,) ஹனுமான், அந்த ராம லக்ஷ்மணர்களை சாஷ்டாங்கமாக பூமியில் விழுந்து ஸாங்கோபாங்கமாய் நமஸ்கரித்து, சுக்ருத பிரணமம் செய்து, (மனத்திஞல் திரௌபதி, கஜேந்திரன் நினைத்தது போலவும்; காயத்திஞல் தர்மபுத்ரர் போலவும்; வாக்கிஞல் பீஷ்மர், ராமானுஜர், நம்மாழ்வார்கள் போலவும்; பிரேமையிஞல் உமா சங்கரர் போலவும்;) ஸர்வ பாவத்துடன் கிருதாஞ்சலியாக மதுமதுர பாஷ்பங்களைப் பரிபூர்ணலோசனங்களால் உதிர்த்துக்கொண்டு, மஹாகிருதக்ஞையுடன் வார்த்தைகளை விண்ணப்பித்தார். (தன் பிரபுவை, மனத்தில் ஏற்பட்ட அடையாளங்களால் கண்டுகொண்ட ஹனுமார் அவர்களுடைய பாத சரணங்களைப் பிடித்துக் கொண்டு, சரணமடைந்தார். சிவன் பார்வதிக்குச் சொல்கிருர், "உமா, அந்த மஹா

1379—2

பாக்கியவானுடைய சுக ஆனந்தங்களை யாரால் வர்ணிக்க முடியும்? என்ஞல் ஸ்மரித்த உடனே, இன்புறுகிறேனே. "ஆனந்த கந்தமூர்த்தி என் பிரபு சீதாராமன்," என்று சொல்லும் போது (நம்மாழ்வார் போல) சம்பு புளகாங்கிதம் அடைந்தார். பேச்சுவரவில்லை, (அரவிந்தலோசனருடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் நிரவதிசய அழகுகளைக் கொண்ட சீதையை ராமன் அனுபவிப்பது போல, ராமன் சேதனனை அனுக்ரஹிப்பது போல,) நினைத்து, பார்த்து ஆனந்த அனுபவத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார். ("என் ரமாரமணு," என்று சொல்ல ஆரம்பித்தார்.) (13)

கொஞ்சம் கொஞ்சமாய் தைர்யத்திஞல் தன்னை அடக்கிக் கொண்டு, ஆஞ்சநேயர் ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தார்:— "ஸ்வாமி, தங்களுடைய திருநாமதேயத்தைக் கேட்டவுடனே, என் மனம் சந்தோஷத்தால் துள்ளுகிறது. (என் நிலை கேசவன் நாராயணன் மாதவனை நினைக்கிறது.") (மீண்டும் கைகூப்பிக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார்,) "பிரபோ, நான் தங்களை யார் என்று கேட்டேனே, அது நியாயமோ அநியாயமோ, (என்பதற்கு என்மனம் தங்களை சுடர்கொடியின் கேள்வன், சுடராழியானே சாரிங்கதன்வா, இடர்கடியும் மாதா பிதாவாக வைத்தேன் எனதுள்ளே யாதாகில் யாதேயினி என்கிருப்போல,) என் பிறவி ஸம்பந்தத்தையும் தங்களுடைய ஸம்பந்தத்தையும் அறிந்த நான் தாங்கள் தப்ஸவி வேஷம் தரித்து, என்னுடைய சபலமான வானரபுத்தியைக் கலக்கிவிட்டீர்களே. என் மனம் ஒரு விதமாக நிலைத்து நிற்காமல் (அன்று துளசிதாஸருக்கு தடுமாற்றம் செய்தது போல), என்னையும் கலக்கிவிட்டீர். பிரபோ, பரந்தாமா, (குன்றுகுடையாய் எடுத்த கோவலஞரே) தாங்கள் சாதாரண மனிதன் போல தங்களுடைய (பரவ்யூஹவிபவ அந்தர்யாமி) ஸ்திதியை நினைவுபடுத்திக் கொள்ளாமல் என்னை யார் என்று கேட்கிறீர்களே? இது நியாயமா பிரபு.? (14)

"நான் தான் தங்கள் மாயைக்கு அடிமைப்பட்டவன். இதஞல் தங்களை யார் என்று என் மனம் சொல்லியும், அறுதியிட்டும், சந்தேகப்பட்டுக் கொண்டு கேட்டுவிட்டேன். என் ஸ்வாமியா, (என்புகர்லகு தாமரையின் பூவா,) என்று அறுதியிடக் கேட்டேன்." (15)

"ஸ்வாமி, நான் தான் மந்தபுத்தி படைத்தவன். ஜாதியில் வானரம். சபலபுத்தியுள்ளவன். இதைத் தவிர தங்கள் ஜகன் மோஹன அழகில் ஈடுபட்டு நிலையின்றி நெஞ்சு அவிழ்ந்தேன்.

அது மாத்திரமா ஸ்வாமி, என் ஸ்வரூப ஞானத்தையும் உணராமல், அகங்காரமமகாரங்களினுல் (ரிஷிகளேயும் முனிவர் களேயும் அலஷ்யம் செய்து, பெறும் சாபத்தையும்) அக்ஞானத் தையும் அடைந்து உள்ளிலும் வெளியிலும் தடித்துப்போன விபரீத புத்தி தடுமாற்றத்தையும் அடைந்தேன். ஆனுல் இப் போதோ, தீனபந்து, (கிருத்தவாஸரே தாமேதம் ஸ்ரீமுகத்தின்) வழியாக, (உலகங்களனேத்தும் அளந்தவன் உளன், உரைக் கின்றேன் நான் ;) என் பெயர் ராமன், இவன் பெயர் லஷ்மணன், என்று வலுவில் தேடி வந்து என்னே ஆட்கொள்ளவந்த மூர்த்தியே, உமக்குத் தெரியாதா, அடியேன் எனக்கு நின்னின்றி மற்றது ஒன்றுமில்லே ; (என் உயிர்க்கோர் சொல் தங்கள் நாமம் தானே, நன்றி யாகுந்துணே தாங்களே தானே, ஸர்வவிசாரதரே, என்னே உம் புத்ரன் என்று அறிவீரே,) என்னே மறந்திருக்க முடியாதே ஸ்வாமி.'' (16)

''ஆம், எனக்கு காலத்தின் கொடுமையினுல், விதியின் கடுமையினுல் பல அவகுணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இருந்த போதிலும், ஸ்வாமி, நான் உமக்கு சேவகம் செய்யப் பிறந்திருக்கும் புத்ரன் அல்லவா? என் பிரபுவாகிற நீர் எனக்கு எஜமானரல்லவா. (இந்த சம்பந்தம் ஒழிக்கமுடியாத சம்பந்த மல்லவோ,) இதில் ஆச்சர்யம் ஒன்றும் ஏற்படவேண்டாம். நாதரே, ஜீவன் தங்கள் மாயையினுல் மோஹிக்கப்படுகிருன். ஸ்வாமி, உம்முடைய கிருபையினுல் ஸ்வரூப ஞானமடைந்து (ஜனனத்தையும் மரணத்தையும் துர்க்கமாகிற கோட்டைகள் என்று அறிந்துகொண்டு, இந்த பௌதிகமான சரீரத்தை நித்ய மாகவிருக்கும் கோட்டை என்று நினேக்காமல்,) ஸதா உங்களுடைய கிருபையை ஆஸ்ரயித்தவனுகி, (மகத்தும் சுத்த மும் மங்களமும் நித்ய ஆனந்தமாகிற) மோக்ஷ ஆனந்தத்தை (இங்கேயே தருவதும் நிர்மலமும் பரிசுத்தமானதுமான) தங்க ளுடைய மூர்த்தியை உபாஸித்தும் அல்லவோ அனுதியும் அழிவற்றதும் சுபமும் சோகமற்றவனுகவிருப்பேன். இதில் என்னுல் ஆவது ஒன்றுமில்லேயே.'' (17)

''இதற்குமேல் ஒன்றையும், பிரபு, நான் தங்களிடம் ஸமர்ப்பிக்க விரும்புகிறேன். அதை தங்கள்முன்பு ஸத்யமிட்டு அறுதியுடன் கோஷிக்கிறேன். ரகுவீர், உம்மை பஜிப்பதோ, உம்மை அடைவதற்கு யோகஸாதனங்களேச் செய்வதோ எனக்கு ஒன்றும் தெரியாது. எங்கேயாவது ஸ்வாமி, சேவகன் தன் எஜமானனே நம்பிவாழ்பவன் கவலேப்படுவானு? அதுமாதிரி

தாயை நம்பிவாழும் சிசு கவலைப்படுமோ? இவர்கள் எவ்விதம் கவலையின்றி இருக்கிறுர்களோ, அதுபோல என்னை தாங்கள் ரக்ஷித்து பாலனம் செய்வது எனக்கு ஸர்வ ரக்ஷகத்தையும் கொடுப்பது, பிரணதார்த்திஹரராகிய தாங்களேதான். உமது திருவடிகளை சரணம் அடைந்து உம்மையே அண்டி நான் வாழ்வேன். (அதுவே என் ஜீவனம், அதுவே என் பிராணன். அதுவே எனது நிலைத்தபதம், அதுவே என்ஆகாரம். இதில் நான் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை.) (பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரிய பாரதம் கைச்செய்து, ஐவர்க்கு திறங்கள் காட்டியிட்டுச் செய்துபோன மாயங்களும், திறந்தனூடு புக்கெனதாவியை நின்று நின்றிருக்கயுண்கின்ற, இச்சிறந்த வான்சுடரே, உன்னை யென்று கொல்சேர்வதுமே என்கிருப் போலே.) (18)

என் பிரபு தீனதயாளு, (என்போன்றவர்களுக்கு மார்க்கதரிசி ஹனுமான் மிக்க கவலையுடன் பெருமாள் என் பரநியாஸத்தை ஸ்வீகரிக்கவேண்டுமே என்கிற விசாரத்துடன்,) பிரபு ராமச்சந்திர னுடைய சரணங்களில் சரணமடைந்தார். கீழேவிழுந்தார். சுக்ருதபிரணுமம் செய்தார். அவ்விதம் சொல்லும்போது தன்னுடைய நிஜமான வானரரூபத்தை பிரகடனப்படுத்திக் கொண்டார். அப்போது ரகுபதி அவரை வாரி அணைத்தார். (திருமகள் முலைத்தடம் பெறும்) தன் விசாலமான வக்ஷஸ்தலத் திஞல் அவரை இறுககட்டி அணைத்துக்கொண்டார். தன்னுடைய பரிபூரண லோசனங்களிலிருந்து (பர்ஜன்யராக) அம்ருத வர்ஷத்தை வர்ஷித்தவராக (கண்கொளாவகை என் சிந்தையுள் நைகின்ருயே என்று சொல்லும்படி) என் பிரபு ஸ்ரீராமன் கரிய மாணிக்கம் என் கண்களுக்கு அருளாய் திருவுருவாய் நின்ருரே. (அப்பேறப்பட்ட ராம ஆஞ்சநேய லக்ஷ்மணர்களுக்கு நம்மாழ்வார் அடிபணிந்த நான் ஆயிரம் சரணங்கள் செய்கிறேன், அடிக்கடி செய்கிறேன்.) (19)

[தியானம்

ஆஞ்சநேயரே, உம்மை ஸத்ஸம்பிரதாய மரபில் குரு சிஷ்ய பாவமாகிறதும், சாஹித்ய பாவராக ஸ்வரூபத்துடன் கூடிய நாதஸ்வரூபமாகவும், நாதயோகமே பிரும்மத்தை உபதேசித் தருளியதாகவும்; உன் தாயாகிற சீதையிருக்கிருளே அவளே சோபிதமான ஸப்தஸ்வரங்களாக, அவைகளின் தேவதையாக விருப்பவளாகவும், ராமனே அந்த ஸத்சம்பிரதாயநாத உபா ஸனைக்கு காயத்திரி மஹாமந்திரத்தைப் போல பிரகாசிக்கிறதாக

வும் சொல்லுகிருர்கள். அப்பேற்பட்ட காயத்திரி தேவதையான சீதை, நாதரூப சுந்தரி, நீ எங்கு ஒளிந்துகொண்டிருக்கிருய்? ஆஞ்சநேயரே, அன்று அர்ஜுனனுக்கு கீதையை ராமானுஜனை கிருஷ்ணன் தேர்தட்டின் மேல் உபதேசித்தபோது, "நீர் கொடியாக தேர்மேல் அமர்ந்து, கீதையின் ஒவ்வொரு ஸ்லோகத்தைக் கேட்டு மெய்மறந்து, அதன் அர்த்தங்களை சாஹித்யமாவும், ராகபாவமாகவும், சாஸ்திரீய ஸம்பிரதாய சங்கீதபாவமாகவும் சீதாராமனை உபாஸித்தீர்." பகவான் அந்த அர்ஜுனனுக்குச் சக்ரதாரியான கிருஷ்ணனுகவும், இந்த ஆஞ்சநேயருக்குத் தனுஷ்பாணியான கோதண்டராமனுகவும் தனுஷ்கோடியில் காக்ஷி அளித்தார். இந்தத் தியாகராஜருக்கு, ராமா, நீ சங்கீத ஞானமாகவும், பக்தியாகவும் தோன்றினுய், ராமா, நீ எனக்கு எவ்விதம் தோன்றப்போகிருய்? ஸத்ஸம்பிரதாய ஆசாரியருக்கு சிஷ்யபாவம் கொண்ட ராமானுஜதாஸனுகிற எனக்கு பிரபன்ன யோகமாகவும் சங்கீத அனுபவமாகவும் அல்லவா நீங்கள் இரண்டு பேர்களும் காக்ஷி அளிக்கிறீர்கள்! தாயாகிய சீதை, என் மஹாலக்ஷ்மி, ராமானுஜர் வேதாந்ததேசிகர் சுட்டிக்காட்டி "இவள்தான் தாயார். இவள் முன்புதான் விண்ணப்பம் செய்யவேண்டும்" என்றும்; "இவர்தான் பகவான், இவர்தான் ஸர்வலோக சரண்யர், இவரிடம்தான் நாம் சரணம் அடையவேண்டும்" என்று சொல்வதுபோல தோன்றுகிறீர்கள்; இவர் நம்மை கை கொடுத்து காப்பதற்கு ஏற்ப, "ப்ரணீபாத ப்ரஸன்னுஹி மைத்லி ஜனகாத்மஜா அலமேஷா பரித்ராதும்," என்கிறபடி, இவர்கள் பரிக்ரஹர், நிக்ரஹர், வ்யக்ரஹர், ஜனுர்த்தனர் என்கிற பெயர்களுக்கு ஏற்ப, விரோதிகளைப் பீடிப்பதில் தடுப்பவர் யாவருமில்லாத அப்ரதிரதர், என் இடஞ்சல்களாகிய பாபத்தை நீக்கி, பிரபன்ன யோகத்தால் மஹாவிஸ்வாசத்தை என்போன்ற சேதனன் அடையச் செய்வதுபோல, தர்மநிலையில் உள்ள சீதா தேவியாகிற உன்னை; என் தாயை, "கருணும் லோகமாதரம்," என்று சொல்லி நிலைநின்று, பத்மப்ரியையின் பதியான ராகவா, உன்னை ஆஞ்சநேயர் ராமானுஜன் வழியாக சரணம் அடைகிறேன். அன்று திரிபுராரியின் மஹத்வத்தை திரிபுரம் எரித்த சமயத்தில் பிரும்மா உணர்ந்ததுபோல, இன்று ஆஞ்சநேயரே, ராமானுஜரே, உங்கள் பிரபாவத்தை நான் காண்கிறேன். நீங்கள் ஸ்ரேஷ்டர்கள், உமாபதியான சங்கரரின் ஸ்வரூபரே, சங்கர்ஷணரே, அநிருத்தரே, அப்ரதிரதரே, பிரத்யும்னரே, அமிதவிக்ரமரே, நாராயணரே, சீதையின் பதியாகிற ராமரே,

நீர்தான் சரணம். உங்களை வேதாந்ததேசிகர் தியாகராஜர் வழியில் சாஹித்யமாகவும் சாஸ்திரீய சங்கீதமாகவும், ஸத்பக்தியுடன் உபாஸிக்கிறேன். கீதையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட ஆஞ்சநேய மஹானுபாவா, கீதையை ஸங்கீதமாகச் செய்த ஆஞ்சநேயா, தியாகராஜா, நீங்கள் ராமனையும் சீதையையும் எனக்கு காட்டிக்கொடுக்கமாட்டீர்களா !]

அந்த ஹனுமத்பிரபாவம், அதை நித்யமாக பிரகாசிக்கச் செய்த ராமன் மாருதியை மீண்டும் நோக்கிச் சொன்னர், "புத்ர, கவலைப்படாதே, என்வார்த்தையைக் கேள். உன் மனத்தில் கலக்கம் ஏற்படுத்திக்கொள்ளாதே. நீ எனக்கு லக்ஷ்மனனுக்கு சமமாக இந்த அவதாரத்தில் மஹாபிரியன். எல்லோரும் என்னை பாரபக்ஷமில்லாத ஸமதரிசி யென்றும் சொல்லுகிருர்கள். ஆனல் உனக்கு நான் ஒன்று சொல்லுகிறேன். என்னைத் தவிர அனன்ய கதி உள்ள பக்தனை நான் எப்போதும் வெகுவாக மதிக்கிறேன்." (20)

"எவன் தெரியுமா அனன்ய பக்தியுடன் விளங்கும் என் பிரியன் ? ஏன் அவன் இவ்விதம் பகுமானிக்கப்படுகிருன்,? என்று கேட்பாயாகில் அதன் காரணத்தையும் சொல்லுகிறேன் கேள். எவனொருவனுடைய புத்திதடுமாட்டம் அடையாமல் (அருந்ததி வஸிஷ்டரை அண்டியிருப்பது போல) ஸ்திரமாக என்மீதுவிருக்கிறதோ ; (எவ்விதம் நாரத ஆஞ்சநேயாதிகளிடம் பிரபன்ன நாதயோகம் ஸ்திரமாக நிலைத்து நிற்கின்றதோ ;) அதுபோல நீ, "நான் ராமசேவவன் ; சேதனு சேதனங்களாகிற இந்த சம்சாரம் முழுவதும் பகவத் ஸ்வரூபத்துடன், என் ரூபமாக, விளங்குகிறது என்று நினைக்கிருய் ; (என்னை அடைந்த பக்தர்களிடமும் கலியினுல் ஆக்ரமிக்கப்பட்ட ஸம்சாரத்திலும் நீ கருணையுடன் எல்லோரிடமும் இருக்கின்ருய் ஆகையால் ஆஞ்சநேயா, நீ வானரனுகவிருந்தபோதிலும் என் ஸ்வரூபமேதான். அதனுல் நான் உன்னை நிராகரித்துவிட முடியாது.") (21)

"பவனஸூதனே, வாதாத்மஜா, மனத்தில் சந்தோஷம் அடை." என்று பகவானுல் ஸ்வீகரிக்கப்பட்ட ஆஞ்சநேயர் (பிரபன்ன சங்கீதசாஸ்திரத்தில் தியாகராஜர் போன்ற மஹான்களால் ஆராதிக்கப்படுகிறவர்,) மனத்தில் சந்தோஷமடைந்தார். அதேசமயத்தில் துக்கம் அவரைவிட்டு விலகியது. சம்ரக்ஷண பொறுப்பு பகவான் ராமச்சந்திரனிடம், என் சீதாகாந்தனிடம் விழுந்தது. ராமசரணங்களில் விழும் ஆஞ்சநேயர், (என்னுடைய

ஸதாசார்யர், என் தாபங்களுக்கு சந்திரன், ஈசானன், சூரியன், வருணன், இந்திரன், பிரஜாபதி வாயு, அஸ்வினிகுமாரர்கள், மின்னல் என்கிற அமானவன், காலன் மிருத்யு, அந்தகன், யமன்போல விருப்பவன்) மீண்டும் பிரபுவினிடம் விண்ணப்பிக்கிருர் ; ''ஸ்வாமி, இந்த பர்வதத்தில் சுக்ரீவராஜர் வசிக்கிருரே, அவரும் உம்முடைய தாஸன். (22)

[தியானம்

ஹே நாராயணு, மஹாலக்ஷ்மி சரணௌ சரணம் பிரபத்யே, ஸ்ரீமதே நாராயணுய நம:, அம்மா சீதே, நீ ருக்மிணி அவதாரத்தின்போது வலிய உன்பதியாகிற த்வாரகாநாதருக்கு என்ன லிகிதம் எழுதினுய்? தன்னுடைய விவாககாலத்தில் '' குலம், ரூபம் சீலம் வயது, வித்யை, பொருள் அழகு இவைகளில் தனக்கு சமமாகயிருப்பவரும், பூலோகத்தில் உள்ள யாவருக்கும் மனத்தில் சந்தோஷம் கொடுப்பவருமாகிய தங்களை யார்தான் புருஷனுக வரிக்கமாட்டாள் ?'' என்று சொன்னுயே அதுபோல் உன்னை வலியவந்து இந்த அவதாரத்தில் சிவதனுஷ்ஷை (தக்ஷ யக்ஞத்தில் சிவனுல் உபயோகப்படுத்தப்பட்ட சிவதனுஷ்ஷை) ஒடித்து, உன்னை பரமார்த்தம் என்று மிதிலைக்கு விஸ்வாமித்திரரால் அழைத்துச் செல்லப்பட்டு இதே லக்ஷ்மணனுடன் கூட வந்தேனே ? அன்றும் இன்றும் வேதமாயை போன்றவளும் வீர மோஹினியும் அழகான ஸுமத்யமா என்கிற பெயருக்கு ஏற்ப இடையும், குண்டலமண்டித வதனமும், நல்ல யௌவன வயதுள்ள தருணியும், ரத்தினமேகலாபரணம் பூண்ட நிதம்பம் உடையளும், குலுங்குகிற ஸ்தனங்களும், சூர்ணகுந்தங்களால் கலங்கின நேத்ரமும், அடிக்கடி என்னைப் பார்ப்பதற்கு, என் இங்கிதத்தை தெரிந்துகொள்ளுவதற்கு, அழகான அலைகள்போல கருமயிர் கேசங்களை காதின் ஓரத்தில் விழும் மயிர்கேசங்களை மெல்லிய இடதுகை விரல்களால் கோதிக்கொண்டு நாணத்துடன் உன்னுடைய பத்மபல பத்ராக்ஷங்களால் என்னைப் பார்த்தாயே அந்த சீதை, நீ எங்கே ஒளிந்துகொண்டிருக்கிருய் ? கொவ்வைக் கனிபோலத் திகழும் அதரத்தோடு கூடிய மந்தஹாஸமுடைய சீதை எங்கே? சிவந்த முல்லைமலர் போன்ற ஸுதந்த வரிசையுடன் விளங்கும் என் சீதை எங்கே? கலகலவென்று ஒலியிடும் நூபுரமணிந்த பாதங்களால் தாமரை மலர்போன்ற பாதங்களால் மானஸஸரோவரில் உல்லாஸமாக விளையாடும் ஹம்ஸப் பேடு போல நடக்கும் என் சீதை எங்கே ?]

(அப்பா ஆஞ்சநேயரே, உம்முடைய பிரபாவம் மிகச் சிறந்தது. ராமானுஜர், நம்மாழ்வார், குஹ, தேவநாத, திரமிட, டங்க, போதாயன மஹானுபாவர்களாலும் பாராசர்யாதி நாரதாதி மஹிரிஷிகளாலும் காண்பிக்கப்பட்ட ஸதாசார்ய ஸம்பத்துடன் தத்வம் ஹிதம் புருஷார்த்தம் ஆகிற வைஷ்ணவசித்தாந்தத்தை நிர்வாஹிக்கும் ஸாதன நியாஸ வித்யை, உபாஸனம், அனுஷ்டானம் இவைகளால், பசுமனுஷ்யர்கள் பக்ஷி இன்னும் அநேக வைஷ்ணவ சம்பந்தமுள்ள பிறவிகள் அனைவரும் உஜ்ஜீவிக்கப்படுகிறுர்கள். அப்பேற்பட்டவர்கள் ஸகல கல்யாண குணங்களின் சேர்க்கை ராசியாகிற லக்ஷ்மி நாராயணன், உயர்வற வுயர் நலம் உடையவன் யவனவன் உயர்வறமதி நலம் அருளினன் யவனவன் அயர் வறுமமரர்கள் அதிபதியவனவன் ஆகிற ரமாபதி, சீதாபதி, ருக்மிணிபதி என்று சொல்லப் படுகிறுன்! இந்த அகில ஜகத்ஸ்வரூபமாக விருக்கிற சகல சேதனு சேதன சிருஷ்டிகளின் ஆத்ம உஜ்ஜீவன நிமித்தம் மேலே சொல்லப்பட்ட ஆசாரியர் தங்களால் அருளப்பட்ட சேமுஷி பக்தி ரூபத்தினுல் பிரபன்ன யோகத்தால் அந்த ஆதிநாராயண தம்பதிகளை அடைவதற்கு வழிகாட்டிய மஹாநுபாவர்களாக விருந்தார்கள் அல்லவா? இந்த பூர்வாசாரியர்கள் தங்கள் ஸ்ரேயசினில் ஸர்வ காருண்யமான நித்திய தம்பதிகளை, ஸம்சாரிகளான நமக்காக அந்த தம்பதிகள் துயர் அடைகிறுர்கள், அவர்கள் துயர் அறுக்கவேண்டும் என்று கருணை வசமடைந்து சேதனர்களை உஜ்ஜீவிக்கச் செய்கிறுர்கள். அப்பேற்பட்ட பூர்வாசார்யர்களின் ஸம்பந்தத்தால் அல்லவோ, ஸாக்ஷாத் பரம்பரை, சங்கிலித் தொடர்போல விருக்கும் அசாதாரண ஸம்பந்தத்தால் இந்த ஜீவாத்மாக்கள் பரம புருஷார்த்த லாபத்தை அடைகிறுர்கள். அவர்கள் வித்வான் களாகி, அம்ருதமாகி, பகவானே ஸாதனம், பகவானே பலன் என்கிற ஸ்ரீமத் நாராயண சரணங்களைப் பற்றினவர்களாக, கைங்கர்யம், மோக்ஷ ஆனந்தம், முதலிய சுகங்களை அனுபவித்து ஆசார்ய கிருபையினுல் பக்தி ரஸத்தைக் குடித்துக்கொண் டிருக்கிறுர்கள். அதுபோல பரம காருணியகரான ஆஞ்சநேயரே, உம்முடன் ஸம்பந்தம் கொண்ட ஸதாசார்யர்கள் எங்களைப் போன்ற ஸகலசம்சாரிகளுக்கும் உம்மால் அனுக்ரஹிக்கப் பட்டவர்களாகி, சீதாராமரஸம் என்கிற பரம புருஷார்த்தத்தை அனுக்ரஹிக்கிறுர்கள். நீர் நல்ல எண்ணம் கொண்டீராகில், எங்களுடைய சிரமங்கள் காலவிளம்பமின்றி வீண்போகாதவை

களாக ஆகிவிடுகின்றன. அப்பேறப்பட்ட ஆஞ்சநேயர் ராமானுஜாதிகளுக்கு நான் அடிக்கடி துளசிதாஸர், வால்மீகி, கம்பன், தியாகராஜர் என் பூர்வாசார்யர்கள் ஆகியவர்களை முன் புறமாக வைத்து ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். நாரதரே, பாராசர்ய பகவானே, நம்மாழ்வாரே, உமாசங்கரரே, எனக்கு அனுகிரஹம் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். நீங்கள் என்னை ராமதாஸனுக்கு தாஸன் என்றும், ராமானுஜ னுக்கு அடியாரின் அடியார் என்றும் பறைசாற்றவேண்டும்.)

"நாதரே, அந்த சுக்ரீவனுடன் தாங்கள் மித்ரத்வம் செய்து கொள்ளவேண்டும். அவனும் என்னைப் போல தீனஸ்திதியில் இருக்கிறான். எப்பொழுது தங்களுடைய உதவி கிடைக்கும் என்று ஏங்கிக்கொண்டிருக்கிறேன். ஸ்வாமி, அவனும் உமக்கு தாஸன். அவனையும் அனுகிரஹித்து அவனுடைய பாபபயங் களையும் போக்கி, அனுகிரஹம் செய்யும். அவன் தங்கள் பத்னி ரத்னமாகிற சீதையைத் தேடுவதில் முயற்சி செய்வான். அவனிடமிருக்கும் கோடிக்கணக்கான வானரங்களை அந்த வேலையில் நியமிப்பான்." (23)

இந்த விதமாக ஹனுமான் சகல விருத்தாந்தங்களையும் ராம லக்ஷ்மண சகோதரர்களுக்கு நிவேதனம் செய்து, அவர்கள் இருவர்களையும் தம் தோள்களின் மேல் ஏற்றி; (ராமலக்ஷ்மண பீடங்களாகிற தோள்களை கருடத்வஜனாகிற நாராயணன் வேத மயமான கருடன் மேல் ஏறிச் செல்வதுபோல) ராமலக்ஷ்மண சஹோதரர்கள் (அனுஷ்டானமயமாகிய) ஆஞ்சநேயர் மீது ஏறிச் சென்றனர். எப்போது சுக்ரீவன் ராமசந்திரனைக் கண்டானே, அந்த நிமிஷத்திலேயே தன்னை அதிசய ஜன்மம் எடுத்தவனாக தன்னை நினைத்துக்கொண்டான். (ஸ்ரீமத் சீதாராம சரணௌ சரணம் பிரபத்யே, ஸ்ரீமதே சீதா ராமாய நமः) (24)

ஆஞ்சநேயரால் வழி காட்டப்பட்ட சுக்ரீவன் ஸ்ரீ சீதாராம சரணங்களை நினைப்பவராக, ஸ்ரீமத் ராம சரணங்களில் சரணமாக அடைந்தான். அவரை விழுந்து நமஸ்கரித்தான். (அதனால் ஸ்ரீமத் ராமாய நமः என்கிறபடி ஸ்ரீ பலமாகிற ராஜ்யத்தையும், மனைவியையும், மானத்தையும், ராம பக்தி ராமகைங்கரியம் சீதாராம லக்ஷ்மண சரணங்களில் பிரேமை பக்தி ஆனந்தம் எல்லாவற்றையும் அடைந்தான்.) (ஆஹா, புத்தியினும் அனுஷ் டானத்திலும் மனத்திலேயும் மஹாத்மாவான ஆஞ்சநேயரால் ஸ்தாபிக்கப்பட்ட ராமதாஸர்களில், பரம்பரை பரம்பரையாக வரும் சங்கிலித் தொடர்போல வரும் ராமபக்தர்களில் சுக்ரீவன்

அக்ரகண்யராக விளங்கினுன்.) ("மாருதி, உன்னை ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். ஸ்ரீ சீதாராமலக்ஷ்மண பரத சத்ருக்கன மாருதிதர்சனம் எனக்கு எப்போது கிடைக்கும்? உம்முடைய தரிசனம் மீண்டும் எனக்கு எப்போது கிடைக்கும்?") அப்போது தலையினுல் வணங்கும் சுக்ரீவனை ராமலக்ஷ்மண சஹோதரர்கள் வாரி அணைத்து இறுகத்தழுவிக் கொண்டார்கள். சுக்ரீவனுடைய மனத்தில் ஒரே எண்ணம்தான் இருந்தது. "ஹே விதாதா, இப்பேற்பட்ட மஹானுபவர்கள் என்னிடம் பிரியமாக விருப்பார்களா? என்னையும் இவர்கள் அனுகிரஹிப்பார்களா?" (25)

அப்போது ஹனுமான்ஜி இருதரப்பின் விருத்தாந்தங்களை பரஸ்பரம் சொல்லி அக்னியை வளர்த்து, அக்னிசாக்ஷியாக பரஸ்பரம் ராம சுக்ரீவ ஸ்நேகத்தை திருடமாக இருவர்களும் அனுபவிக்கவேண்டும் என்று பிரதிக்ஞாபூர்வமாக நிறைவேற்றி வைத்தார். (கிருபாளு, புத்திமதாம் வரிஷ்டர் சஞ்சல புத்தியுள்ள சுக்ரீவனுக்கு வழிகாட்டியாக விருந்து அவனுடைய பாபபயங்களைப் போக்கின உதாரகுணமுள்ள ஹனுமாருடைய கிருபை எனக்கு எப்போது கிடைக்கும்?)

ஆம். ராமனும் சுக்ரீவனும் அனுதி காலமாக தொடர்ந்து வந்த ஸ்நேகம் ஸம்பந்தம் போல, (அப்போதைக்கப்போது வளர்க்கப்பெற்ற ஸதாசார்ய சம்பத்தினுல்,) சுக்ரீவன் பயம் நீங்கினவனுக ஆனுன். ராமனுடையதும் லக்ஷ்மணனுடையதுமாகிற ஸஹஜஸ்நேகத்தை அடைந்தவனுக, இருவர்களின் உள்ளத்திலும் அவன் வசிக்க ஆரம்பித்துவிட்டான். தன் மனதில் ஒன்றையும் ஒளிக்காமல், தன் ஆத்மகதையை அவன் அவரிடம் சொன்னுன். லக்ஷ்மணனும் ராமனுடைய பூர்வ விருத்தாந்தங்களையும் சுக்ரீவனுக்குச் சொன்னுன். அதைக் கேட்ட சுக்ரீவன் கண்களில் நீர் மல்கி, சொல்ல ஆரம்பித்தான். "ராமசந்திரபிரபு, கவலைப்படாதீர். மிதிலேசகுமாரியாகிற மைதிலி கட்டாயம் அகப்படுவாள். நாதரே கவலையை விடும்." (27)

"ஒரு சமயம் நான் மந்திரிகளுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஆகாய மார்க்கத்தில் ராக்ஷஸ வசமடைந்த ஒரு ஸ்திரி மிகுந்த விலலாபத்துடன் அழுது கொண்டு தன்னை விடுவிக்க அசக்தியாய் கதறிக் கொண்டிருந்தாள்." (28)

"ராம" "ராம" "ராம" என்று கூவி அழைத்துக் கொண்டிருந்தாள். நாங்கள் அவளுடைய அவஸ்தையைக்

கண்டோம். அப்போது அவள் எங்கள் மீது தான் அணிந்து கொண்டிருந்த வஸ்திரத்தின் பகுதி ஒன்றைக் கிழித்து விட்டெறிந்தாள். ராமன் ''அதைக்காண்பி'' என்று சொன்னதும், உடனேயே சுக்ரீவன் அதைக் கொணர்ந்து காண்பித்தான். அந்த வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு தன் ஹிருதயத்தில் அதை அணைத்துக் கொண்டு, சீதையைப் பற்றி ராமர் சிந்திக்கலானுர். (29)

[தியானம்

நாராயணு, மஹா லக்ஷ்மி ஸமேத நாராயணு, ஸமஸ்த பரிவாராய ஶ்ரீமதே நாராயணுய நமஃ, ஸமஸ்தபரிவாய ஶ்ரீமதே ராமாய நமஃ! நாராயணு, சீதாராமா, உன்னேயே நான் நம்பினேன். நிஜமாக நம்பினேன். லக்ஷ்மி, நீ காமஜனகி இல்லேயா? மரித்துப்போன அனங்கனுக்கு உயிர் கொடுத்தாயே. கமனீயவதனியே, மானினி, என் கிருஹேஸ்வரியே, ஶ்ரீ வேங்கடேசதயிதே என்று சொல்லப்படுகிறவளே, மத்தகஜம் போல நடப்பவளே, கஜேந்திரனுக்கு மோக்ஷம் கொடுத்த கமலேயே, நீ காருண்ய ஜலதி அல்லவா? என் பக்தியாகிற காமம் முழுவதிலும் நீதானே, அம்மா, ஸாரம். உன்னேத்தானே அம்மா, ஸாமாதி வேத ஸாரம் என்று தியாகராஜர் சொன்னுர். உன்னே ஸந்ததமும் புத்திமான்கள் ராஜிதமுக்தாஹாரமாகிற உன் திருவடிகளே பூஜை செய்து அர்ச்சிக்கிருர்கள். ஹே சீதே, மன்மதனேப் படைத்த ருக்மிணியே, நீ இல்லாமல் ராமனே, கிருஷ்ணனே, நாராயணனே, தன்னே சூன்யமாகக் கருதுகிருர்கள். என்னுல் உபயோகம் ஒன்றுமில்லே என்று நினேத்து சரீரத்தை விட்டுவிடுகிறேன் என்று சொல்லுகிருர்கள். அம்மா ஜானகி, ருக்மினி, லக்ஷ்மி நீதானே சொன்னுய் ''பகவானுடைய பாதாரவிந்தங்களிலுள்ள மகரந்த வாஸனேயை முகராதவன் பிழைத்திருக்கும் போதே பிணத்திற்கு ஒப்பானதாகி விடுகிருன்.'' தன் சரீரத்தில் மோகம் கொண்டு அதையே மேலானதென்று நம்பி வாழ்கிறவன் ஏமாந்து போகிருன். தாமரைக் கண்ணனே, பகவானுடைய தாமரைப் பதங்களே அடைய விரும்பிய பிருது, பரதன் நஹுஷன் பிள்ளேயாகிற யயாதி, கயன் முதலிய ராஜரிஷிகள் தங்களுடைய ஏகாத்பத்யமான ராஜ்யத்தை விட்டு, வனமே கதியாகக் கொண்டு, பகவத் பாதங்களில் பற்றின பிறகு அவர்கள் வருந்தினவர்களாகத் தோன்றவில்லே. அப்பேற்பட்ட காமனே உண்டுபண்ணிய அம்பிகே நீ எங்கு ஒளிந்துகொண்டிருக்கிருய்?]

(ஆஞ்சநேயா, நாரதரே, ராமானுஜா, தியாகராஜா, துளசிதாஸரே நீங்கள் எல்லோரும் தயாளுகள். உங்களை நாதர்களாக அடைந்த மனிதர்கள் அநாதர்களாகப் போய்விடுகிருர்களா? இல்லவே இல்லை. உங்களை எல்லோரையும் நான் கைப்பிடித்தேன். நான் வந்து புகும்போது வானில் எல்லா தெய்வங்களும் காண, அந்திமஸ் ஸ்ம்ருதி செய்த என்னை எங்களை, நாராயணு, ராமா, சீதாராமா, லக்ஷ்மி நாராயணு, ஆழியங்கையனே வாராய், என்று சொன்னதும், அழைக்கிருனே, அதுவேபோதும். நித்யமும் அச்யுத பதங்களை நினைப்பவர்களுக்கு இந்த சரீரம் திருண மாத்திரம் அல்லவோ. என் குரு ராமானுஜன் ஆஞ்சநேயர் ஆகியவர்கள் உதவிக்கு இருக்கும்போது, எங்கள் குரு தயைகஸிந்து வாகவிருக்கும்போது ஸர்வலோக ஹிதைக்ஷிணியாக விருக்கும் போது, நமக்கு ஏன் பயம்? ஸ்ரீமந், ஸ்ரீரங்கஸ்ரியா, பத்மநாபரே, உம்முடைய பாதங்களையே நம்பி வாழும் பக்தர்களின் யோகக்ஷேமத்தை "நான் வகிக்கிறேன்" என்று அர்ஜுனனுக்கு வாக்குக் கொடுத்தீரே அப்போது ஏன் பயம்? பட்டருக்கு ஈரவாடையில் தத்தம் செய்தீரே. மதுராபுரி வாஸா, சுக்ரீவன் விபீஷணன் ஆகிற ராஜாக்களால் வந்திதா ஸ்ரீ ராமா, துளசிதாஸ பூஜாநாயகா, தீனபந்து, தியாகராஜ மானஸ ஸரோஜா, ஸ்ரீ ராமா, ஸ்ரீ நாராயணு, ராமானுஜ ஆஞ்சநேய தயா பாத்திரமாகிய என்னிடம் ராஜகரனிடம், உன் பாதங்களை லக்ஷ்மி தேவியாகிற சீதா பிராட்டியின் கருணையால் கொடுக்கமாட்டாயா?)

சுக்ரீவன் சொல்லுகிருன்: "ரகுவீரா கேளு. துக்கத்தை விடு, பயத்தையும் விடு. தைர்யமடை. தெளிந்த மனமுள்ளவனும் எல்லா பிராணிகளிடத்திலும் ஸமதிருஷ்டியை உடைய நீர் விசனப்பட வேண்டியதில்லை; (ஸ்வரூபத்தாலும், ஸ்வபாவத்தாலும் தத்வஞானத்திலும், நீர் சிறந்தவராக விளங்குகிறீர்.) நான் தங்களுக்கு என்ஞல் முடிந்த சேவை செய்கிறேன். எந்த உபாயத்திஞல் உம்முடைய ஜானகி உம்மை மீண்டும் அடைவாளோ அதைநாம் பிரயத்னம் செய்வோம். கவலையை விடும்." (30)

என் பிரபு, கிருபையின் நிதி, பொறுமையின் எல்லை என்று சொல்லப்படும் முனிராஜவேஷதர ராமன், (எவருடைய அருளால் ஸர்வ கர்மபந்த நிவிருத்தியும் சாஸ்வதமான ஸ்தானத்தை அடைய விரும்புப்வர்கள் அச்யுத ராமபாதங்களை அடைந்து அனுபவிக்கிருர்களோ,) அந்த ஹ்ருதய கமலவாசியான ராமன்,

அமிதபலமுடையவர்; (தன்னை ஆஸ்ரயித்தவருக்கு அடங்கி யிருப்பவராகவும் அவர்கள் நினைக்கும்படி எளிமைக்கு உட்பட் டிருக்கும் ஸம்மிதர், எல்லாக் கர்மஞான பக்திபிரபன்ன மார்க்கங்களுக்கும் புத்ரமாத்ரு பிதா, பாகவத ஆசார்யசிஷ்ய, பத்னி பதி ஸம்பந்தங்கள் சேவகஎஜமான ஸம்பந்தங்கள் ஆகிய யாவும் முடிவு பெறும்படி நிலைத்துநிற்கும் ஸம்ஸ்தானர்,) சுக்ரீவ னுடைய உதவியை ஸ்வீகரித்தார். என்ன பாக்கியம் பெற்றான். (தினராஜ பங்க்தி ரதராஜ தனயனுகிற) ராமன் அப்பேற்பட்ட சுக்ரீவனை அடைவதற்கு; தனக்குள் கவலைதீர்ந்தவராக, அவர் பேசலானார் :—"சுக்ரீவா, நீ இப்பொழுது உன் வருத்தத்திற்கு காரணத்தைச் சொல். நீ ஏன் வனத்தை அடைந்திருக்கிறாய்? (எனக்கும் மிகவும் நீ இஷ்டனாக ஆகிவிட்டபடியால் உனக்கு நான் ஹிதத்தைச் செய்ய வேண்டும். என்னிடம் மனம் வைத்து, என்னையே பக்தியுடன் ஆராதிப்பவன் எவனையும் நான் கைவிட்டதில்லை. உனக்கு பிரதிக்ஞை செய்கிறேன். பலன், கர்மம், கர்த்ருத்வம் முதலியவைகளை பரிதியாகம் செய்தவனும், என்னையே சரணமாகக் கொண்டவனாகவுமிருக்கிற உனக்கு நான் உன் பாப பயங்களைப் போக்கி சோகத்திலிருந்து விடுவிப்பேன் என்று பிரபு ஸ்ரீமுகம் அருளினார். "சுக்ரீவா, எவர்கள் என்னை பக்தியுடன் பஜிக்கிறார்களோ, வேறு ஒன்றை யும் கருதாமல், அதிக துராசாரமுள்ளவனானாலும், என்னையே பஜிப்பவன், நிச்சய புத்தியுள்ளவனானபடியால் ஸாதுவென்றே எண்ணத்தக்கவன். இங்கு காணப்படுவதெல்லாம் அந்த பரமாத்மாவாகிற நாராயணருடைய மஹாத்மியமே. அந்த புருஷன், புண்டரீகாக்ஷன், இந்த ஸமஸ்த சம்சாரத்தைக் காட்டி லும் ஜ்யாயான் அதிகமானவர். இந்த விஸ்வபூதங்கள் எல்லாம் நாராயணருடைய ஒரு பாதம் கால்பங்கு. இவருடைய மூன்று பாதங்கள் அம்ருதமாய், அழிவற்றதாய், பரமபதத்தில் இருக் கிறது. அப்பேற்பட்ட நாராயணரின் அம்சமான நான் ஸாதுக்களை ரக்ஷணம் செய்வதற்காகவும், தர்மத்தை ரக்ஷிப்பதற் காகவும், துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காகவும் இப்பொழுது அவதரித்திருக்கிறேன். உன் துயர்களை இனி விட்டுவிடு," என்று பகவான் சுக்ரீவனுடைய ஸம்ரக்ஷணார்த்தம் தனது அவதார ரஹஸ்யத்தையும் மிக்க கிருபையுடன் பிரகடனப் படுத்தினார்.) (ஹே மனஸே, சீதாராமனிடமும், லக்ஷ்மி நாராயணரிடமும் பக்தியைச் செலுத்து. அவர்களுடைய நாம ஜபங்களை பாராயணம் செய். பிரேமையுடன் பூஜி, என்று

அடிக்கடி சொல்லுகிறேன். நீ கேட்கமாட்டாயா? எங்கேயாவது காமினிவேஷம் போட்டுக் கொண்ட ஸ்திரீ ஸாத்வியாகிற பதிவிரதையின் மஹிமைகளை அறிவாளா? எங்கேயாவது பசுத்தோலைப் போர்த்திக்கொண்ட புலியினிடமிருந்து குழந்தைக்கு பசும்பால் கிடைக்குமா? நான் நாமருசி செய்யாமல் பிறருக்கு போதனை செய்யலாமா? ராமா சீதாராமா, லக்ஷ்மி நாராயணா, இது உனக்கு நியாயமா? தியாகராஜ துளசிதாஸரே, சரணம் சரணம்.) (31)

சுக்ரீவன் பதில் சொல்ல ஆரம்பித்தான் "பிரபு, வாலியும் நானும் ஸஹோதரர்கள். எங்கள் இருவர்களுக்கும் பரஸ்பர ப்ரீதி அதிகமாயிருந்தது. மாயாவி என்கிற மயனுடைய பிள்ளை ஒரு சமயம் எங்கள் வாசஸ்தலமாகிற கிஷ்கிந்தைக்கு வந்தான்." (32)

"நடுநிசியில் அவன் கோட்டையின் வாயிலில் நின்று கொண்டு, எங்களை சண்டைக்கு அழைத்தான். வாலிக்கு இது பொறுக்கவில்லை. உடனே அவனுடன் யுத்தம் செய்யப் புறப்பட்டுவிட்டான் வாலி. வாலி வருவதைக் கண்ட மாயாவி பயத்தினால் ஓடினான். வாலியும் பின்தொடர்ந்து ஓடினான். நானும் என் தமையனுடன்கூட ஓடிச் சென்றேன்." (33)

"மாயாவி ஒரு மலையின் குஹையின் உள்ளே ஓடினான். அப்பொழுது வாலி என்னை அழைத்துச் சொன்னான். "நீ பதினைந்து தினங்கள் எனக்காக காத்திரு. நான் அதற்குள் திரும்பிவராவிடில், இறந்துவிட்டதாக நினைத்துக்கொள்" என்று சொன்னான். (34)

"கராரி, கரனைக் கொன்ற கோதண்டராமா, நான் வாலிக்காக ஒருமாதம் குஹையின் வாயிலில் காத்திருந்தேன். அந்த குஹையின் வழியாக ரத்த வெள்ளம் ஓடிவந்துகொண்டிருந்தது. அப்போது நான் எண்ணிட்டேன். என் பிராதா வாலி மடிந்துவிட்டான் என்று நினைத்தேன். இனி இந்த மாயாவி நம்மையும் ஓடிவந்து கொன்றுவிடுவான் என்று பயந்து குஹையின் வாசலை ஒரு சிலையினால் அடைத்துவிட்டு நான் கிஷ்கிந்தைக்கு திரும்பினேன்." (35)

[தியானம்

ஹே நாராயணா மஹாலக்ஷ்மி பிரிய, ராமா சீதா, சரணம் சரணம். பகவான் நினைக்கிறார் "என் லக்ஷ்மி பிராம்மண பிரியை. பிராம்மணனை தன் விவாஹத்திற்காக ருக்மிணி விவாஹத்தின்போது அவள் என்னிடம் தூது அனுப்பினாள்.

அதேமாதிரி, இடையில் அதிக அழுக்குப்படிந்த கந்தையை உடுத்திக்கொண்டிருப்பவரும், நரம்புகளெல்லாம் தெரியும்படி இணைத்து அழுக்குப்படிந்த கந்தையை உடுத்திக்கொண்டிருப்பவருமான குசேலரை, என் ருக்மிணி, அப்போது பீஷ்மராஜனின் புத்ரியாகிய ருக்மிணி பிராட்டி, சாமரம் விசிறி இவைகளால் உபசரித்து, அரண்மனையிலுள்ள ஸ்திரீகள் எல்லோரும் வியக்கும்படி உபசரித்தாளே; மனத்தில் கபடமில்லாதவளும், பகவானுக்கு மனோனுகூலையாகவும், உடல்பொருள் ஆகியவைகளை நாயகருக்காக அர்ப்பணம் செய்து, ஆனந்த ஸ்வரூபியாகிற என்னுடன் வசித்தாளே அவள்; இப்போது நல்ல ஆகாராதிகளையும் கிரஹத்தில் உத்தமமான பானங்களையும், (அன்று குசேலருக்கு நான் அளித்தது மாதிரி,) எனது நாயகியாகிற சீதை தியாஜ்யம் செய்து விட்டு என்னுடன் வனம் செல்ல மனமுவந்தாளே, அந்த சீதை எங்கே ஒளிந்து கொண்டிருக்கிருள்? அவளை விட்டு எனக்கு ஆகாரமும் நித்திரையும், உடம்பில் கொசுவும் எறும்பு முதலியவைகள் ஊறினாலும்கூட தெரியவில்லை. உதாஸீனனாக வாழும் எனக்கு சீதை தன்னைத் தானே பிரகடனப்படுத்திக் கொள்ளமாட்டாளா?"]

(ஆஞ்சநேயரே, சுக்ரீவரே, குசேலரே, சபரியே, கிருஷ்ணவதாரத்தில் ஸுபத்ரையாகப் பிறந்த உத்தமியே, பரமாத்மாவே, இவ்வுலகிலும் பரவுலகிலும் எல்லா ஸம்பத்துக்களையும் அடையக்கூடிய தங்களுடைய ஸந்தோஷத்துக்கு மஹாலக்ஷ்மியானவள் எவ்வளவு உடந்தையாகவிருந்தாள். அந்த பகவானும் குசேலரிடம் குரு பக்தியைப்பற்றிச் சொல்லும்போது சொன்னர். "குருவின் பணிவிடையால் எனக்கு எவ்வளவு ப்ரீதி உண்டாகுமோ, அவ்வளவு ப்ரீதி யாகத்தினாலாவது பிரும்மசாரி தர்மத்தினாலாவது தபஸ்ஸினாலாவது சாந்தியினாலாவது உண்டாகமாட்டாது. மனதில் கபட எண்ணமில்லாமல் குருவுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்த கிருஷ்ணு, ராமா, வஸிஷ்ட விஸ்வாமித்திர பிரியா, உங்களுடைய வேதங்கள் என்னும் எண்ணம் இவ்வுலகிலும் மேலுலகிலும் ஸாரம் குறையாமல் இருக்கட்டும் என்று குருகுலவாஸம் செய்தீர். குருவாகிற ஸாந்தீபினி மஹரிஷியினால் அனுகிரஹிக்கப்பட்ட கிருஷ்ண குசேலரே, ஸத்தியகாமரே, எல்லா நன்மைகளையும் அளிக்கத் தக்க ஸாதனமாகிய வேதபிரம்மமே, பரமாத்மாவாகிய தங்களின் சரீரம் என்னைப்போல குருபக்தியில்லாதவர்களுக்கு குரு பக்தியின் பெருமையை சிக்ஷிக்கிறதல்லவா? ஆஞ்சநேயரே,

ராமானுஜரே, உம்முடைய ஸம்பந்தம் பெற்ற எனக்கு சீதை லக்ஷ்மி பிராட்டியின் அனுக்ரஹத்தால் என் குரு என்னிடம் ப்ரீதி அடையட்டும். அன்று கிருஷ்ணன், மாயா ஸந்நியாசியாகிற அர்ஜுனனுக்கு உத்தம குருபக்தி செய்தவன் என்கிற வியாஜத்தினுல் ஸுபத்ரையை கொடுத்தார். பலராமரின் கோபத்திற்கும் பயப்படாமல் எவ்வளவு சிரமப்பட்டு, கொடுத்தார். அதுபோல ராமா, நீ சபரிக்கும் மோக்ஷத்தை அளித்தாயே. அதேமாதிரி உன் தோழனுன சுக்ரீவனுக்கு, ஆஞ்சநேயரை குருவாகக் கொண்ட சுக்ரீவனுக்கு, வாலியை வதம் செய்து கிஷ்கிந்தா ராஜ்யத்தைக் கொடுத்தாய். அர்ஜுனனும் குசேலரும் சுக்ரீவனும் சபரியும் குருபக்தியின் விசேஷத்தால் அல்லவா பகவத்கடாக்ஷத்தைப் பெற்றுர்கள். எனக்கும், சீதாராமா, லக்ஷ்மி நாராயணு, ராமானுஜ குருவின் வர பிரஸாதத்தை அருளவேண்டும்.)

"மந்திரிகள் பார்த்தார்கள். வாலி சூன்யமாக நான் திரும்பி வருவதைப் பார்த்ததும் அரசனில்லாதபடியால் எனக்கு ராஜ்யாபிஷேகம் செய்தார்கள். வாலியோ அந்த மாயாவியைக் கொன்றுவிட்டு, கிஷ்கிந்தைக்குத் திரும்பினுன். ஆனுல் அவன் மனம் மாறிவிட்டது. என்னிடம் விரோதம் கொண்டான். லோபத்தினுல் நான் ராஜ்யத்தை அடைய நினைத்து, குஹை த்வாரத்தை சிலையினுல் மூடிவிட்டதாக தப்பெண்ணம்கொண்டு, என்னை விரோதித்தான்." (36)

"சத்ருவாக நினைத்து, என்பிராதா என்னை அடித்து ராஜ்யத்திலிருந்து துரத்திவிட்டான். அது மாத்திரமில்லை, ஸ்வாமி, என்னுடைய பத்னியைக்கூட அவன் ஸ்வீகரித்துக் கொண்டான். அன்று முதல் மானம் இழந்தவனுக நான் தீனஸ்திதியை அடைந்து, வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறேன். ரகுவீரா, கிருபாளு, தீனபந்து, (பக்தவத்ஸலா, குருபிரியா,) அவனிடம் பயந்த நான் உயிரை ரக்ஷிப்பதற்கு உலகமெல்லாம் அலைந்து திரிந்தேன்." (37)

"இந்த ரிஷ்யமுக பர்வதத்திற்கு வாலி சாபத்தின் பயத்தால் வருகிறதில்லை. மாயாவியின் சகோதரனுகிற துந்துபி என்கிற ராக்ஷஸனை முன்பு வாலி கொல்லும்போது, அவனுடைய உடலை எட்டு மைல்கள்வரை தூக்கி எறிந்தான். அப்பொழுது சில ரத்த துளிகள் மதங்கரின் ஆஸ்ரமத்திற்கு பக்கத்தில் விழுந்தன. அதைக்கண்ட மஹரிஷி "இந்த பர்வதத்திற்கு வாலி வந்தானுகில் அவன் மண்டை வெடித்துவிடும்" என்று சபித்திருந்தார்.

அதனுல் பயமடைந்த வாலி இங்கு வருவதில்லே. இருந்தாலும், அவனிடம் எனக்கு பயம் அதிகமாகவிருக்கிறது,'' என்று சுக்ரீவன் சொன்னுர். அதைக்கேட்டார் பிரபு. தீனதயாளு, தன் சேவகன் இவ்விதம் கஷ்டப்படுவதைப் பார்த்து, அவருடைய இரு தோள்களும் விசாலமான புஜங்களும் துடி துடித்தன. (38)

பிரபு சொன்னுர் ''சுக்ரீவா, கவலேப்படாதே. (அன்று சுபத்திரையின் விவாஹம் துர்யோதனனுக்கு நிச்சயிக்கப்பட்டிருக்கிறது என்று கேட்டவுடன், மஹாதீனனுக அர்ஜுனன் இருந்தபோது, கிருஷ்ணன் எவ்விதம் ஸன்னியாஸி வேஷம் கொண்ட அர்ஜுனனேத் தேற்றினுரோ, அதுபோல பிரபு சுக்ரீவனேத் தேற்றினுர்.) ''கேள், ஒரு பாணத்தினு் வாலியை நான் கொன்றுவிடுகிறேன். அவன் பிரும்மா, ருத்ரன் ஆகியவர்களே சரணமடைந்திருந்த போதிலும், நான் அவனுடைய பிராணனேக் காப்பற்றமாட்டேன்'' என்று பிரதிக்ஞை செய்தார். (39)

''எவர்கள் மித்ரர்களின் துக்கத்தை சக்தியிருந்தும் போக்குகிருர்கள் இல்லேயோ, அவர்கள் மஹாபாதகங்கள் செய்தவர்கள். அவர்களேப் பார்ப்பதே மஹாபாதகம். ஒரு மனிதன் ஹிமயம் போன்ற தன் துக்கங்களே தூசிமாதிரி நிஃனத்து பகவத்கிருபையை வேண்டி நிஃனக்கவேண்டும். ஆனுல் மித்ாருடைய தூசிபோன்ற துக்கங்களே மேருபர்வதம் போல கனமானதாக நிஃனத்து, இதுதான் நிஜ துக்கம் என்று அனுபவிக்கவேண்டும்.'' (40)

''எவனுக்கு ஸ்வபாவமாகவே இந்தமாதிரி புத்தி ஏற்படாமல் இருக்கிறதோ, அவன் மித்ரத்வத்தையும் வீணுக அடைகிருன். அவன் நிஜமான மித்ரன் அல்ல. அவன் பண்ணுகிற ஸ்நேகமும் லாபத்தைக் கொடுக்காது. அதுமாத்திரமல்ல, நன்றிகெட்ட மித்ரன் கெட்டவழியில் இறங்கும்போது, நல்ல மனதுள்ள மித்ரன் அவன் தோஷத்தைப் பாராமல் அவனே திருத்திப் பணிகொள்வான். அவனே தர்ம வழியில் நிலேநிறுத்தி அவனுடைய கெட்ட குணங்களே மறைத்து, அவனுடைய உத்தம குணங்களே பிரகடனப்படுத்துவான்.'' (41)

''அப்பேற்பட்ட ஸத் மித்ரன் தானும் கொடுப்பான். பிரதி உபகாரத்தையும் ஸ்வீகரிப்பான். அவர்களுக்கு ஸஹஜ ஸ்நேகம் இருப்பதால் கொடுப்பது, பிரதிகிரஹம் செய்வதில் லவலேசமும், லஜ்ஜையோ, ஸங்கோசமோ கிடையாது. அவர்கள் பரஸ்பரம் தங்கள் பலத்தினுல். ஒருவருக்கொருவர்

ஹிதம் செய்துகொள்ளுவார்கள். ஆபத்துக் காலங்களில் அவர்கள் நூறு மடங்குகள் அதிக ஸ்நேக விஸ்வாஸத்தைக் காட்டுவார்கள். இப்பேற்பட்ட மஹாகுணங்கள் பொருந்தியது ஸாதுக்களின் ஸ்நேகம் என்று வேதங்கள் கோஷிக்கின்றன.'' (42)

''எவர்கள் பகட்டினாலும் டம்பத்தாலும் கபட எண்ண முள்ளவர்களாகி, வேஷம் தரித்துகொண்டு ஒருவன் முன்பு வார்த்தைகளால் இனிப்பாக பேசுகிறார்களோ, அவன் முதுகில் துர்வசனங்களைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்களோ, அப்பேற் பட்ட மித்ரர்கள் நம்பத்தக்கவர்களல்ல. கேள். என் பிரிய தம்பியான சுக்ரீவா, அவர்களுடைய மனம் சர்ப்பத்தின் கதியைப்போல வளைந்து செல்லும் குடில எண்ணமுள்ளது. அப்பேற்பட்ட கெட்ட எண்ணமுள்ள மித்ரர்களை விட்டுவிட வேண்டும்.'' (43)

''மூர்க்க சேவகன், கிருபணலோபி உள்ளமுள்ள அரசன், மனம் மாறும் ஸ்திரி, கபட எண்ணமுள்ள மித்ரன் ஆகிய நால்வர்களும் சூலத்தைப்போல பிறர்களுக்கு ஹிம்சை செய்பவர்கள். என் பிரியமான நண்பா, நான் வாலியைக் கொல்லுவேனா, முடியாதா என்கிற சந்தேகங்களையும் விட்டுவிடு. நான் எல்லா பிரகாரங்களிலும் உனக்கு உதவி செய்வேன்.'' (ராமா, ஆஞ்சநேயா, சுக்ரீவா, உங்கள் கிருபையால் நல்ல மித்ரர்கள் எனக்கு கிடைக்கவேண்டும்.) (44)

[தியானம்

ஆம் ஆம் ஆம் ஆம், ராமபக்தி ஸாம்ராஜ்யம் ரொம்ப ரொம்ப பெரியது. அதில் ஸாது ஜனங்கள் இருக்கிறார்களே, அந்த வைஷ்ணவதாஸர்கள், அடியார்க்கு அடியார், அவர் அடியார்க்கு அடியார் அவர்களின் தரிசனம் அதியத்புத பரமானந்தம். தியாகராஜர், துளசிதாஸர், வால்மீகி, கம்பன் போன்ற கவிகள் அனுபவிக்கிற ஸ்வயானுபவம் அவர்களைக் கேட்டால்தான் தெரியும். மது மதுகரமாகவிருக்கும் சீதையின் லீலையும், ராமனுடைய பரதத்வமும், சீதாராம அடியார்களின் பிரேமையும் என்னை மனோஹரப்படுத்துகின்றன. அன்று பிராசேதஸ் முனிவரான வால்மீகிக்கு கிரௌஞ்ச மிதுனமாகிற காமம்க்ரோதம் என்கிற பக்ஷிகளை வதம்செய்த கோதண்டராமா, அந்த ராவணன் காமத்தினால் க்ரோதவசமடைந்து உன் கையினால் அழிந்தான். ஹே லக்ஷ்மி நாராயண மிதுனங்களே, நீங்கள்

எப்போதும் பிரிவுபடாமல் சாஸ்வதமாக இருக்கவேண்டும். ராமனை விட்டுப்பிரிந்த சீதை, ராம மன்னன், தன் ஸ்வய கதையாகிற ஸ்ரீமத் ராமாயணத்தை மதுரமாக மதுரஸ்வர ஸம்பத்துக்களை உடையவர்களும் பார்த்திவ லக்ஷணங்கள் உடையவர்களும், வால்மீகியால் சீதை தனியாகவிருந்த பொழுது, மதுரமாகப் பாடி ஆனந்தித்த லவகுசர்களைக் கேட்டுப்பார்த்து, ப்ரீதி அடைந்தார்களோ அப்பேறபட்ட உத்தமமான ஸ்ரீமத்ராமாயணம் பிராட்டியையும் பகவானை யும் ஒன்று சேர்த்ததுபோல என்னையும், என் லவகுசர்களையும் என்னிடம் மஹானுபாவையான சீதையின் சரித்திரத்தை புகழட்டும். ஆஞ்சநேயரே, வால்மீகியே, ராமாசீதா, துளசி தாஸரே, தியாகராஜரே, அன்று ராமசீதா பிரணய கலகத்தில் ஜகத்திற்கு பரிந்து பகவானிடம் பேசின சீதை, கோபஸ்தரான பகவானை மல்லிகை மாலையினுல் கட்டி அந்த அஞ்சனவண்ணனை என்னிடம் காண்பித்தாளே, அந்த லவகுசர்களின் மாதாவான ராஜலக்ஷ்மி, சீதை எனக்கு பகவானைக் காண்பிக்கமாட்டாளா? என் பிராட்டி, முத்து, பவளக்கொழுந்து, எழில்தாமரை புலங்கள் முற்றும் பொழில் சூழ்ந்து அழகாய் புல்லாணிமேல் உட்கார்ந்திருக்கும் சீதை எங்கே, ரெங்கநாயகி எங்கே, ராஜ தாமரை எங்கே, பூமியின் ஜீவன் எங்கே? இந்த ராமசீதா கதை ஸங்கீத சாஸ்திரத்தின் ஞானபாவமும் சாஹித்தியத்தின் சுக சௌக்கியம் எதுவோ அதுபோல ஸ்ரீமத் ராமனின் சீதையாகிற பிரேமை எங்கே? பக்தியினுல் ஸ்ருங்காரரஸம் முதலிய அகில மதுர ரஸங்களில் ஸாரமாகவிருக்கும் ராம கதையை லவகுசர்கள் பாடினுல் அதை தியாகராஜ துளசிதாஸ வால்மீகி ரிஷிகள் கவிதைகள் கீர்த்தனங்கள் செய்தால், யார்தான் பிரேமை பக்தியை ஆஞ்சநேய சுக்ரீவாதிகளைப் போல அடையமாட்டார்கள்? ராம பக்தியாகிற ஸாம்ராஜ்யத்தில் மாபெரும் ஸஜ்ஜன பாரிஜாதங்களே, உங்களால் அல்லவா நியமநிஷ்டை யசோதனமாகிற கீர்த்தி, ஸ்ரீமத் ரமாவர கடாக்ஷமும் பகவானுடைய சாரூப்யமும், நம்மாழ்வார் தியாகராஜர் துளசி தாஸர் ஸம்பந்தமும், ராமானுஜ திருவடிகளும் நாரதர் ஆசீர்வாதங்களும் கிடைக்கின்றன. அந்த வால்மீகி லவகுச ராமபக்தி, ஸ்ரீமத் ராமாயாணத்தில் நடு நாயகமாகவிருக்கும் கௌஸ்துப மணியாகிற ஆஞ்சநேயரே, உமக்குத்தான் ஆயிரம் நமஸ்காரங்கள். நீர்தான் தலைக்கட்டி சீதாராம தரிசனத்தை எனக்கு அருள்கூர்ந்து காண்பிக்க வேண்டும்.]

சுக்ரீவன் மீண்டும் சொன்னான். "ரகுவீரரே கேளும். வாலி அமித விக்ரமன், மஹா பலசாலி. ரணத்தில் அதிதீரன்." அதன்பிறகு சுக்ரீவன் துந்திபியின் எலும்புக்கூட்டைக் காண்பித்தான். ரகுநாதர், மஹாவீரன், (உலகங்களைப் படைத்த பரவாஸீதேவர், ஸ்ரேஷ்டர், நல்லோரைத் துன்பப்படுத்தும் துஷ்டர்களை அழிக்கும் வீரர், கதி, படைப்பு காந்தி இருப்பிடம், போஜனம் இவற்றை உடைய வீரர்,) அதிக பிரயாசையின்றி, லவலேசமாக இடது கால் சுண்டுவிரலினால் அந்த எலும்பு குவியல்களை எறிந்து தூக்கிவிட்டெறிந்தார். (45)

ஸ்ரீராமனுடைய அமித விக்ரமத்தைக் கண்ட சுக்ரீவன் ஆச்சரியப்பட்டான். அவன் மனத்தில் ப்ரீதி வளர ஆரம்பித்தது. ஊர்ஜிதசாஸனரான ராமன் கட்டாயம் வாலியை வதைத்து விடுவார் என்கிற எண்ணம் வலுத்தது. அதனால் அவன் அடிக்கடி ராமசரணங்களில் விழுந்து நமஸ்கரிப்பவனாக, (நம்மைக் காக்கவந்த சிங்கவேள் இவர், என் சுடுவினைகளை அணைத்து, அன்பு தரும் மணி, என்னைப்போன்ற ராமபக்தர்களுக்கும் கவிகளுக்கும் எழுத்தாணிபோல) சாரங்கதன்வா இவர் என்று மனத்தில் சந்தோஷமடைய ஆரம்பித்தான். பிரபுவை கோதண்டஹஸ்தனை பக்தர்களைக் காக்கும் தீனபந்துவை (கருமாமுகில் போலவும், திருமாமகள் அருள் போலவும் பக்தர்களை வாரி அணைத்து, மருவார் அயோத்தி மன்னன் போலவும், வால்மீகி லவகுசர்கள் தியாகராஜதுளசிதாஸர் நிதம் கானம் செய்த மங்கைவேந்தனின் சப்த ஒலி போலவும், என் நெஞ்சு வாழும் இதயகீதம்போலவும்) சுக்ரீவன் அடையாளம் புரிந்து கொண்டான். (ஆஞ்சநேயராமா, என்னை நீதான் காப்பாற்ற வேண்டும்.) (46)

இப்பொழுது ராமஞானம் ராமவிஸ்வாஸம், ராமபரதத்வம் சீதையின் இராமனுடன் இணைபிரியாமையாகிற ஐக்கிய மிதுனத்வம் எல்லாம் சுக்ரீவனுக்கு உதயமாயிற்று; வார்த்தைகள் அவனுடைய தொண்டையிலிருந்து பீறிட்டுக்கொண்டு வந்தன. "சீதாராமா, நித்யானந்தமாகிற உன் தயை உன் கிருபை வேணுமப்பா. (நீதான் நாதம். நீதான் என் சப்தத்தின் பலம்; என் குரலின் நாதரஸம்.) (வரமிருதுபாஷண, ஸுஸ்வரமய பூஷண, வால்மீகி தியாகராஜ கம்பர் துளசிதாஸர் போன்த் கவிகளுக்கு வாக் என்னும் அலங்கார பட்டாடைமாதிரியிருக்கும் சுக்ரீவராமா,) நீர் என்னிடம் காட்டிய தயை, நாதா, என் பயத்தையும் சந்தேகத்தையும் அறுத்தது. சுகபிரும்ம ஆனந்தத்தைக்

கொடுத்தது. (சீதாராம சரணங்களாகிற ராமஸாம்ராஜ்யத்தைக் கொடுத்தது. வினயஸம்பத்துக்களை கொடுத்து, உன்னுடைய ஸமஸ்த பரிவார ஸஜ்ஜனங்களின் ஸாது சேர்க்கை சம்பந்தத்தைக் கொடுத்தது. நியமநிஷ்டை யசோதனமாகிற கீர்த்தி புகழ் எல்லாம் எனக்கு கொடுத்தது.) வெளிப்படையாக உள்ள தனங்களாகிற சுகம், ஸம்பத், கீர்த்தியாவற்றையும் நான் தியாகம் செய்து, இன்று முதல் உன் சேவகன். உன் அடியார்க்கு சேவகன். (ஹேநாதாசலதீபனே, என்னை ஸ்வீகரித்து உன் பாதசரணங்களில் கிருபையுடன் சேர்த்துக்கொண்டு ரக்ஷித்தருள வேண்டும். (ஸாமநிகமசுதா, குணசீலா, தயாளா, மோஹன கர, சீதாராமா) என்னை ரக்ஷித்தருள வேண்டும் என்று சுக்ரீவன் மீண்டும் ராம கிருபையை வேண்டினான். (47)

"ஐயா, தங்கள் சரணங்களையே குறிக்கோளாக வைத்து வாழும் (சம்பு, உமை, காகபுஸுண்டி, கருடன், ராமானுஜன் பரதன் சத்ருக்னன்) ஸாதுக்கள் அடிக்கடி ஆராதனை செய்கிறார் கள். அவர்கள்தான் சுகத்தை பிறர்களுக்கு கொடுக்கிறார்கள். அவர்கள்தான் ஸாதுக்கள் என்று மதுரமாக அழைக்கப்படு கிறார்கள். உங்களுடைய பாதபத்மங்கள் தான் காமங்களை அறுக்கும் பரம விரோதி. வெளிப்படையான பாக்யலக்ஷ்மி யாகிற பந்தங்கள் ராமபக்திக்கு விரோதமாக எண்ணப்படு கின்றன. இந்த ஜகத்தில் எத்தனையோ மித்ரர்களும் சத்ருக்களும் இருக்கிறார்கள். சுகத்தையும் துக்கத்தையும் கொடுக்கவைக்கும் எத்தனையோ சம்பவங்கள் ஸம்சாரத்தில் ஏற்படுகின்றன. இப்பேற்பட்ட த்வந்தங்கள் மாயையாகிற அஞ்ஞானத்தினால் ஏற்பட்டன. வாஸ்தவத்தில் இவைகள் பரமார்த்தமில்லை; தங்களுடைய பாதபத்மங்களே காமங்களை அறுக்கும் கோடாரிபோல, அவைகள் பரமார்த்தமாகவுமிருக்கின் றன. (காலாதீதா, காமாதாரா, காமகுடாரா, கமலாக்ஷா, காமவிலாஸனே, கமலேசனே, உமக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) கருணையை என்மீது பொழியும். கமனீயனே, என்னிடம் அன்பாயிரும். அருள்கொண்டு என்னைப் பொருளாக்கி ஜீவிக்கச் செய்யும். ஜகம் ஸமஸ்தத்திற்கும் ஸ்திரமாகவிருக்கும் உமது பாத சரணங்களின் பக்திபிரேமையை சீதாராமா, அனவரதமும் கொடும்." என்று ஆஞ்சநேயர் ஸந்நிதானத்தில் சுக்ரீவன் கதறினான். (48)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மியாகிற சூர்யோதய பிரபையாகிற சூரியநாராயணு, உங்களை பாத நாராயணராகிய வியாஸரை முன்னிட்டு சரணம் அடைகிறேன். பரவித்யையினுலும் பிரும்ம ஞானத்தினுலும் பரமபதத்திலிருக்கும் சிசு கர்ப்பமாக விளங்கும் ரஹஸ்ய ஸ்வரூபத்தை தொடுகிறவரும், தம்மையே அனுபவித்துக் கொண்டு சாந்தமாயும், மோக்ஷ மார்க்கத்திற்கும், பிரபன்ன வித்யைக்கும் சாதனமாகிற பரபக்தி பரஞான பரமபக்தியைக் கொடுக்கும் வேதவியாஸரை நான் நமஸ்கரிக்கிறேன். மாதுளம் பழத்தின் பீஜங்கள்போல ரத்ததந்திகையும், கோரஸெளம்ய ஸ்வரூபங்களால் பூமண்டலம் முழுவதையும் வியாபித்திருப்பவளும், பிரளய காலத்தில் சேதனுசேதனங்களை தன்னிடம் சேர்ப்பவளும், சதக்ருதுவினுல் அடிக்கடி ''ரக்ஷி'' என்று வேண்டப் படுகிறவளும், பக்தர்களுக்கு அபயத்தைக் கொடுத்து, காப்பாற்றி வாழவைக்கும் சூர்யோதய பிரபையாகிற சாமுண்டா, என் சீதே, எங்கு ஒளிந்துகொண்டிருக்கிருய்? அவளே தியான சக்தி; அவளே துரிய சக்தி; அவளே யோக மாயை; அவளே எனது தஞ்சம். அந்த சீதை மஹானுபாவரான தியாகராஜருக்கு, ''ராமுனிகுரிதப்பக கண்டி'' என்று! சொல்லும்படி நிச்சய புத்தியினுலும், ஞானத்தினுலும் பொறுமையாலும் மனுேபலத்தாலும் திடமான நம்பிக்கையாலும், தன்னை தைரியத்துடன் பசி, குறி இந்திரியங்கள் இவைகளால் ரக்ஷித்துக்கொண்ட மஹானுபாவரான தியாகராஜருக்கு குறி தப்பாமல் ராமனை ஸமஸ்த பரிவாரங்களுடன் காண்பித்துக் கொடுத்தவள். அதிவினயமாக, பரிமள சுகந்த புஷ்ப, கந்த ஆகாராதிகளால் சேவைசெய்யத் தகுந்தவளும், விசிரி சாமரம் ஆகிய ஒன்பது வித ஆராதனைகளை செய்யத் தகுந்தவளும் சுரபூஸுர தேவதைகளால் சேவிக்கப்படுகிறவளுமான அந்த பிரபா தேவி எங்கே? மது வித்யையை உபாஸிக்கும் ஆஞ்சநேயா, சுக்ரீவா, ராமானுஜராகிய லக்ஷ்மணன் முன்பு ஸ்ரீராமனை தரிசித்து, புளகாங்கித சரீர, மன ஆனந்தத்துடன் அம்புஜ நேத்ரங்களிலிருந்து அம்ருதமாக பெருகிவரும் ராமகிருபையை அனுபவிக்கும் ஆதித்யவஸுக்களே, உங்களுடைய வஸுத்வமும் ஆதித்யத்வமும் நிலைக்கவும் அதிலிருந்து பெரும்பலனுகிய ஜ்யோதிஷ் நாராயணனை உபாஸனை உபாஸ்ய உபாஸித்ருத்வ, ரூபகர்ம கர்த்ரு பாவங்களாகிற விரோதிகளை ஒழித்து அதனுல், ஏற்படும் அஹங்காரம் மமகாரம் ஆகிய அவித்யைகளை ஒழித்து, மீண்டும் தங்கள்

ஸ்தானங்களேயும் பகவத் நாராயண பாதங்களே அடைய இச்சை யுடன் இருப்பதால், அந்த லக்ஷ்மியாகிற கிருபையை வேண்டிய வர்களாய், ''அஸௌவா ஆதித்யோ தேவமது'' என்கிறபடி மதுவித்யையினுல் சூரியன் அஸ்தமிப்பதுமில்லே, சூரியன் உதயமாவதுமில்லே தினம் முழுவதாகவும், ஒன்ருகவும் சூரிய னுடைய கிரணங்கள், பாகங்கள் ஒவ்வொன்றையும் பாவம் (भाव) போக்யமாக உபாஸனே செய்து, காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறவர்களாக இருக்கிருர்கள். அப்பேற்பட்ட ஸ்வ உபாஸனே, ஸ்வய அனுபவம் இவைகளால் பிரும்மானந்தம் அடைந்த சுக்ரீவமஹாராஜனே, உம்முடைய ஆனந்தத்தை நான் எவ்விதம் வர்ணிப்பேன்? லக்ஷ்மணு, ராமானுஜா, தியாக ராஜா, சுக்ரீவா, பகவான் வேதவியாஸரே, சீதாதேவி, சாமுண்டிகா, பத்ரகாளி, மஹாமாயா, மதுவித்யா, என்னே நீங்கள்தான் காப்பாற்றிக் கிருபை செய்யவேண்டும். கருணே செய்து உதவவேண்டும். இதற்கு மஹேந்திரனும் ஆதித்யர்களும் வஸுக்களும் உதவி செய்யட்டும். ஆஞ்சநேயா நீர் என் குரு, என் ஆனந்தம், எனது தஞ்சம்.]

(தேனேக் குடித்து, தேனே குடிக்கவைத்து இன்புறும்) சுக்ரீவன், (மதுவித்யா பிரியன்,) இன்று ஆஞ்சநேயருடைய கிருபையால் சீதாராம சரணங்களே, அதன் பிரபாவங்களே, ராமானுஜன் ஸந்நிதியில் அனுபவித்தான். த்வந்தங்களிலிருந்து விடுதலே அடைந்தவனும், (ஆதித்யவஸுக்களேப்போல மஹா பாக்யத்தை அடைந்தவனுமாகிற) சுக்ரீவன் மீண்டும் ராமகிருபை யைப் பிரார்த்தித்தான். ''ராமா, எனக்கு வாலி பிராதா. பரமஹிதகாரி. அவன் என்னே துக்கக் கடலில் ஆழ்த்தி, சோகம் உண்டுபண்ணிராவிட்டால், நான் எவ்விதம் உன்னே காணமுடியும்? நான் ரிஷ்யஸ்ருங்க முனிவர் பெயரால் அழைக்கப் படும் இந்த பர்வதத்தில், பிரபோ, (அந்த பத்ராசல பர்வதத்தில் தியாகராஜர் நான் ராமனே நிச்சயமாகக் கண்டேன், குறி தவருமல் அங்க அடையாளங்களுடன், பரிவார சகிதம் கண்டேன், என்று புளகாங்கிதமடைந்தாரோ, தன்னுடைய அம்புஜநேத்ரங்களால் அம்ருதத்தை பெருக வைத்துக்கொண்டு உன்னே ''கிரிபை ராமா!'' குருதப்பக என்று அழைத்தாரே, அதுபோல) இன்று உன்னே ராமானுஜன் சகிதம் கண்டேன், மஹாபாக்யத்தினுல் கண்டேன். என்னுடைய பயங்கள் சந்தேகங்களே விலகி விட்டன.

(வாலியினுல் ஏற்படுத்தப்பட்ட சோகம், களைப்பு, நீண்ட காலம் காத்திருந்தது, பொறுமை ஆத்மபலம், திருதி எல்லாம் உன்னை, எனக்கு பலமாகவும் சகாயமாகவும் அடைவித்தது. அந்த மஹானுபாவனுகிற (இந்திரரூபியான) வாலிக்கு ஆயிரம் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். அவனுடைய கிருபையால் அல்லவோ உமது தரிசனம் எனக்கு கிடைத்தது. (எனக்கு வேதவியாஸரைப்போல சம்சாரதாபங்களுக்கு) ஸ்வாமி, நீர், ஔஷதம் போலவும் பேஷஜர்போலவுமிருக்கிறீர். நீர் என் ரோகத்தையும் பரிகாரத்தையும் நன்கு உணர்ந்த வைத்தியராகிய பிஷிக்.) எனக்கு பரம உபகாரியாக தாங்கள் வந்தீர், ஸ்வாமி. ஸ்வப்னத்தில்கூட அவனேடு சண்டை போடுவதாக கண்டால், முழித்த பின்பு லஜ்ஜைப்படுபவனுக வாழ்ந்துவந்த நான் பரமப்ரீதி கலந்த பயத்துடன் (மஹேந்திர நினைவுடன்) வாழ்ந்து வருகிறேன்.'' (49)

"பிரபு, உம்முடைய கிருபை எனக்கும் வாலிக்கும் வேண்டும். அதன் பிரகாரம், அந்தகரே, பரிகாரம் செய்யும். (நாராயணரே, மதுவித்யை உபாஸகர்களைப் போல,) தினம் ராத்திரி என்று பாராமல் உம்மை உபாஸனை செய்கிறேன். (சாமுண்டா தேவியான பிரபை ஜ்யோதிஷ் நாராயணன் என்னிடம் கிருபை செய்யவேண்டும். என்று பலதடவைகள் பிரார்த்தித்து) ராம லக்ஷ்மண சரணங்களில் சுக்ரீவன் விழுந்து சுக்ருத நமஸ்காரங்கள் செய்தான். (அப்பேற்பட்ட சுக்ரீவனுக்கு, ஆதித்ய வஸுரூபிக்கு நமஸ்காரங்கள்.) பிரபு சுக்ரீவனுடைய வார்த்தைகளைக் கேட்டார். (ஞானம் வைராக்கியம் பக்தி பிரபன்னம் ஆகிற) ரஹஸ்யவார்த்தைகள் அனுஷ்டானங்கள் கொண்ட வசனங்கள், நமஸ்காரங்கள் எல்லாவற்றையும் ஸீதன்வா வாகிற கோதண்டராமன் பத்மம் மலர்வது போல விகஸித்துக் கொண்டு எல்லாவற்றையும் கேட்டார். அவனுக்கு தன்னுடைய பரதத்வத்தை விளக்கிவைக்க வேண்டும் என்கிற நோக்கத்தில், (திவிஸ்ப்ருக், பராயணம் என்று சொல்லப்படும் பிரபு) சாந்தியை அளிக்கும் வசனங்களை அருளினர். (50)

"சுக்ரீவனே, நீ சென்னது யாவும் வாஸ்தவம்தான். ஸத்யம் தான். ஆனல் என் சகாவே, நன்ருய் கேள். என்னுடைய வசனங்கள், சங்கல்பங்கள், பரதத்வங்கள், விசேஷகிருபை, என் ஆஸ்ரிதர்களை ரக்ஷிக்கும் விரதங்கள், ஸத்யகாமஸத்ய சங்கல்பங்கள், யாவும் வீண்போகாதவை, குறிதப்பாது. (வாலி உனக்கு அபராதம் செய்தபடியால் மரித்துப்போவான். உனக்கு

ராஜ்யம் கிடைத்தது மாதிரி நினைத்துக்கொள் என்கிறதை சூசிக்கிரவராக பகவான் சுக்ரீவனையும், வாலியின் குழந்தையான அங்கதனையும், மனைவியான தாரையையும் காப்பாற்ற எண்ணமுள்ளவனாக ஆனான்.) (பரமகிருபாளு அவனுக்கு அனேக நமஸ்காரங்கள் செய்கிறேன்.) காகபூசுண்டி கருடனைப் பார்த்துச் சொல்கிறார்: "பதகேஸ்வரா, (வேதாத்மாவே,) உன்னால் கானம் செய்யப்படும் வேதங்கள், ராமனை சூத்ரதாரி, (வ்ருஷாகபி, பிரவிருத்தி நிவிருத்தி தர்மங்கள் ஆகிய இரண்டிலும் பிரியம் வைத்திருக்கும் விருஷப்பிரியர்,) ஒரு குரங்கை ஆட்டிவைத்து ஆடிப்பாடி நர்த்தனம் செய்துவைக்கும் மனிதனைப் போல ஜகத்தை அவர் நடத்துகிறார் என்று கோஷிக்கின்றறன." (51)

அதன்பிறகு ரகுநாதன் சுக்ரீவனை அழைத்துக் கொண்டு கையில் கோதண்ட ஹஸ்தமாகவும், பாணம் ஏந்தியவனாகவும் சென்றார். அப்போது ரகுபதி சுக்ரீவனை வாலியினிடம் அனுப்பி வைத்தார். சுக்ரீவன் ராமபலத்தினால் வாலியின் முன்பு கர்ஜனை செய்துகொண்டு நின்றான். (52)

க்ரோதம் நிறைந்தவனாக வாலி சுக்ரீவனுடைய கர்ஜனையைக் கேட்டான். அவனுடைய ஸ்திரியான தாரை, (சசீதேவி போல களங்கமில்லாத) பதிபக்தி உள்ளவள் வாலியினுடைய சரணங்களைப் பிடித்துக்கொண்டு சொன்னாள். "நாதா, தயவுசெய்து கேளும், இந்த சுக்ரீவன் எந்த புருஷர்களைக் கண்டானோ, அந்த இரு ஆத்மபந்துக்களும், தேஜஸ்ஸிற்கும் பலத்திற்கும் இருப்பிடமானவர்கள். தர்ம ரூபியாகவும், அந்தகர் போலவும் இருப்பவர்கள்." (53)

"அவர்கள் கோஸல தேசத்தின் ரவிகுலத்தில் உதித்த தசரத புத்ரர்களான ராமன், லக்ஷ்மணன் ஆகிய சகோதரர்கள். காலத்தைக்கூட ஜயிக்கும் சக்ரதாரி. கோதண்ட ஹஸ்தர்கள். அந்தகர்கள். (அவர்களே சாமுண்டாதேவி.") (54)

வாலி பதில் உரைத்தான் "பயந்த ஸ்வபாவம் உடைய தாரையே, என்பிரியே, நன்றாககேள். எனக்குத் தெரியும். ராமன் ரகுநாதன் ஸமதர்சி. (அவர் விரும்புவதினாலேயே பிரவிருத்தி நிவிருத்தி ஆகிய இரண்டும் தர்மமாயின. அவரது விருப்பத்தைத் தெரிவிப்பதுதான் வேதவிதிகளின் கருத்து.) அவர் பக்தர்களை சம்ரக்ஷணை செய்பவர். ஸத்யவாக்குள்ளவர். அந்த பரமபுருஷன் கையினால், (மஹேந்திரன் ஆதித்யன் ஆகியவஸு ஆதித்யர்கள் உபாஸிக்கும் மாதவன் கோவிந்தன்.) (மஹா நராயணனின் கைகளினால்) நான் கொல்லப்படுவேனாகில்,

ஸநாதனமானதும், நபுனராவர்த்ததே என்கிற பரமபதத்தையும் அடைவேன். (ராமானுஜன் இருக்கும்போது அவர் அவனுடைய கட்டளையில் இருப்பவர்'') என்று சொன்னான். (55)

[தியானம்

''நாராயணா, மஹாலக்ஷ்மி ஸமேதா, அத்யுஜ் ஜ்வாலையாக விருக்கும் சீதே, நீதான் என் ஸ்ரேயோ மூர்த்தி. நீதானே என் ஔதார்யமாக விளங்குகிறாய். உன்மகிமை அளவிடமுடியாத படி ''நோத்ய மதோதி சேரதே'' என்கிற வேதவசனத்தின்படி ''நித்யம் அந்விஷ்யமாணஃ'' என்றும் நான்மறைகள் தேடியும் காணமாட்டா என்று ஆழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி, என் தேடுதலுக்கும் பரமாக விருக்கிறாயே. சீதே, என் மஹாலக்ஷ்மியே, நீ எங்குபோய் ஒளிந்துகொண்டிருக்கிறாய்? நானும் லக்ஷ்மணனும் தேடிஅலைந்தும் எங்களுக்குப் புலப்படவில்லையே, நீயாக உன்னையே தந்தருளமாட்டாயா? கிருபை செய்யமாட்டாயா? ஆஞ்சநேயா, என் ராமதாகம் அதிகரித்துக்கொண்டு வருகிறது. அரிமலர்க் கண்ணீர் ததும்ப அந்துகிலும் நில்லாவே என்கிறபடி என் ராமன், என் சீதை எனக்கு எப்போது கிடைப்பார்கள்? உன் நாமருசியும், பாவருசியும் அதிகரித்துக்கொண்டே வருகிறது. காமம் போல நடிக்கும் எனக்கும் உன்பக்தியும் பிரேமையும் எப்படி அப்பா இருக்கும்? நீ அருந்ததி போல அல்லவா பதிவிரத தன்மையை என்னிடம் அனன்ய பக்தி பிரேமையை எதிர்பார்க்கிறாய்? தியாகராஜசிசுவை நீ பரிபாலிக்கவில்லையா? அவரால் போதனை செய்யப்பட்ட நான் ஸந்ததமும் உன்னை அல்லவா நம்பி வாழ்கிறேனே. கிருபை செய் அப்பா, அம்மா.]

வாலி இவ்விதமாக தாரையிடம் சொல்லிவிட்டு, மிக்க ஸ்வய அபிமானியாக சுக்ரீவனுடைய பலத்தை திருணமாக மதித்து அவனுடன் சண்டை செய்யக் கிளம்பினான். சுக்ரீவனை வாலி பலமாகக் குத்தி, காயப்படுத்தி, முஷ்டியினால் குத்தி, அடித்து, பூமியில் தள்ளினான். சந்தோஷ வெறியினால் கர்ஜனை செய்தான். (56)

அப்போது சுக்ரீவன் களைப்படைந்து வியாகுலமடைந்தான். வாலியினுடைய முஷ்டியினால் குத்தப்பட்ட ஒவ்வொரு குத்து, வஜ்ரத்துக்கு சமானமாக விருந்தது. சுக்ரீவன் கதறினான். ''கிருபாளு, ரகுவீரா, அப்போதே நான் சொல்லவில்லையா? வாலி

என் அண்ணன் இல்லே. என்னைக் கொல்லவந்திருக்கும் காலனே இவன்.'' (57)

ஸ்ரீராமன் சுக்ரீவனிடம் வந்தார். ''அப்பா சுக்ரீவா, கவலைப் படாதே. நீங்கள் இருவர்களும் ரூபத்தில் சமமாக விருக்கிற படியால் எனக்கு கலக்கம் ஏற்பட்டது. அதனால் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இப்பொழுது என்னால் ஸ்பர்சிக்கப்பட்ட வனாக நீ யுத்தத்திற்குச் செல்.'' என்று சொல்லி, (ஸ்ரீராமன் லக்ஷ்மணனை இவன் இவ்விதம் அலக்ஷ்யம் செய்திருக்கக் கூடாது என்கிற நீதியைப் புகட்ட மனத்தில் நினைத்தவராக,) அவனை இருகரங்களாலும் தடவிக்கொடுத்தார். ராமனுடைய கையின் ஸ்பரிசம் பட்டவுடன் அவனுடைய சரீரம் வஜ்ரம் போல கடினத் வத்தை அடைந்து அவனுடைய சரீர பீடைகள் யாவும் மறைந்து விட்டன. (58)

பிறகு லக்ஷ்மணனை விட்டு புஷ்பமாலை ஒன்றை தயார் செய்யச் சொல்லி, அதை ஸ்ரீராமன் அடையாளமாக சுக்ரீவன் கழுத்தில் போட்டார். அதனால் மிக்க பலம் அடைந்தவனாக சுக்ரீவன் மீண்டும் யுத்தத்திற்கு கிளம்பினான். மறுபடியும் வாலி யும் சுக்ரீவனும் விதவிதமாக சண்டை செய்தார்கள். ஸ்ரீரகுநாதன் ஒரு மரத்தின் பின்புறத்திலிருந்து இவர்கள் சண்டை போடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தார். (59)

சுக்ரீவனுடைய பலமும் கதியும், வேகமும் அதிகரித்தது. நன்றாக சண்டை செய்தான். ஆனால் முடிவில் களைப்பை அடைந்தான். அவனுக்கு பயம் அதிகரித்தது. ராமனிடம் பரதந்திரனாகி, ரக்ஷிக்கும்படி அனன்ய கதியை அனன்ய சரணத்தை அடைந்தான். ஸர்வாந்தர்யாமியாகிற பகவான் இதை அறிந்தார். ஒரு பாணத்தை எடுத்து வாலியின் ஹிருத யத்தில் அடித்தார். (60)

பாணத்தினால் அடிக்கப்பட்ட வாலி கலக்கமடைந்து அதி வியாகுலத்துடன் பூமியில் விழுந்தான். பூமியிலிருந்து எழுந்து உட்கார்ந்தான். அப்போது பிரபுவைப் பார்த்தான். அதிசய செய்கையை உடைய எம்பெருமான், நீலமேகஸ்யாமள வர்ணன். முடியில் ஜடாமுகடம். கோபத்தினால் சிவந்த நேத்ரங்கள். கடைக்கண்களில் அரவிந்த மாதிரி கருணை பொங்கும் விழிகள். இருகைகளில் கோதண்டமும் பாணமும் இருந்தன. (ஸ்வரூபத் தில் ஸங்கோசமும் விகாஸமும் அற்றதாய், எந்நாளும் அழிவற்ற தாய், குறைதலும் மிகுதலும் அற்றதாய் அளவற்றதாய் விளங்கிற்று.) (61)

[தியானம்

சீதா ராமா, மஹாலக்ஷ்மி நாராயணு, ராமா, தண்டரே, ராவணன் வாலி முதலான ஸ்வஅபிமானிகளை வதம் செய்யும் தமயிதரே, சுக்ரீவனுக்கு நன்மையைச் செய்யவிரும்பி வாலியை அடக்கிய தனுர்தரரே, ஆஞ்சநேயர் சீதாபிராட்டியின் கருணையை அடைந்த என்னிடம் நித்யம் கருணையுடன் இரும். அனவரதமும் ஸுஸ்வரத்துடன் கானம் செய்து, ராம நாமத்தை ஜபித்து சுகமடைந்த தியாகராஜரிடம் காட்டிய மஹாகிருபையை என்னிடம் காண்பி. ராமா, வித்வானும் நீதியில் ஸமர்த்தரும், ஊஹா போகங்களின் முறையை அறிந்தவரும் பிரம்மசாரியும், வேதங்களைக் கற்றுஅறிந்து தர்மானுஷ்டானங்களையும் ஆத்மதத்வத்தையும் அறிந்தவரும், தாய் தந்தையுள்ளவரும், நற்குணக் கடலும் ஆகிற ஸ்வேத கேதுவை தேவலர் அறிந்து தன்புத்ரியான ஸ்வர்ச்சலையை கொடுக்கவில்லையா? ஹேசீதே, அன்று வலுவில் காட்டுக்கு போகநினைத்து, ராமனைப்பார்த்து, கோப வார்த்தைகள் உன்னல் சொல்லப்படும் போது, அந்த ராமன் உன்னுடைய ஸ்பர்சத்தால் தசாங்குலமும் ஸந்துஷ்டியை அடைந்தான். உன்கோபக் குரலைக்கேட்ட குயில் வெட்கம் தாங்காமல், கோபத்தில் இவ்வளவு மதுரமாக விருக்கிறதே என்று செத்து விட்டதைப்பார்த்த ராமன், உன்னை மரவுரி உடுத்தும் போது உனக்குத் தெரியாமல் நீ கலங்கியதைப் பார்த்து, ஜ்வலித்த தேஜஸ் உள்ளவனுக உனக்கு உடுத்தி, உன்னை ஆனந்தப் படுத்தினுன். அப்பொழுது அவன் கந்தர்வராஜ பிரதிமை போலவும், தர்மக்ஞனும், தர்மதர்சியாகவும், பிரதானமாக பலம் உள்ளவனுவும் அமேயாத்மாவாகவும் விளங்கினுன். என்ஆசார்யரான பீஷ்மர் தர்மரிடம் சொல்லும்போது அவரால் சொல்லப் பட்ட வார்த்தைகள் ஞாபகத்திற்கு வருகின்றன. "யுதிஷ்டிரரே, இந்த கிருஷ்ணர் என்கிற புருஷன், சக்ரதாரி, கோதண்ட ஹஸ்தன் ஸம்சயமில்லாமல் தர்மத்தை சுமக்கிருன். கேசவனை சரணம் அடை" என்று அடிக்கடி சரதல்பத்திலிருந்து சொன்னுரே. "ஹேசீதே, அந்த நாராயணரிடம் உன்குரலால் என்னைப் பற்றிச் சொல்லமாட்டாயா? தசரதரால் வேண்டப் பட்டு, "நீ ராஜ்யத்தில் இரு, ராமன் வனம்போனுல் போகட்டும்" என்று சொல்லப்பட்டும்; வஸிஷ்டர், கௌஸல்யா போன்ற மாதாக்களால் தடுக்கப்பட்டும், என்னுடன் வனம் வந்தாயே? லக்ஷ்மணனையும் வனத்திற்கு வருவதற்கு உதவினுயே. அப்பேற்பட்ட சீதே நீ எங்குபோய் ஒளிந்து கொண்டாய்? கல்யாணி,

நான் இவ்வுலகத்தில் உண்மையாய் பொட்டையாய் இருக்கிறேன். எப்பொழுதும் அவ்விதமே நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். அதுபோல விசாலாக்ஷி, அவ்விதமாக என்னையும் அறிந்து கொள் '' என்று ஸ்வேதகேது சொன்னபிரகாரம், சீதே உன்னை யின்றி நான் பொட்டை, உன்நினைவாக விருக்கிறேன். குற்ற மில்லாத ஜனகாத்மஜா, சசிதேவியினால் ஆராதிக்கப்பட்டவளே, என்னை வந்தடைய மாட்டாயா? அன்று நீ அகில ஜகத்தையும் ஞானஸ்வரூபமாகக் கண்டாயே. அர்த்த ஸ்வரூபமாகப் பார்க் கிறவர்கள் மோஹத்தை அடைகிறார்கள்; சுத்த ஞானாத்மாக்கள் ஞானாத்மகமாக உன்னை அறிகிறார்களே. அந்த சீதை என்னை இருபத்தைந்தாவது தத்வமான புருஷனாகிற என்னை அறியமாட் டாயா? அதுபோல உன்நினைவு, உன் ஆத்மஞானக் கண்ணில் லாதவன் பிறவிக்குருடனே என்று சொல்லப்படுகிறான். உலக திருஷ்டியுடன் நான் எல்லா கர்மாக்களையும் பற்றுதல் இல்லாமல் செய்கிறேன். காரியமான பிரபஞ்சத்தையும் அதற்கு காரண மாகிற பரமாத்மாவையும் பாவித்துக்கொண்டு நான்சுமை யில்லாதவனாக சாந்தனாக இருக்கிறேன். நான் கர்மத்தைச் செய்வதில் மிருத்யுவை விலக்கிக்கொண்டு, வித்தையால் மோக்ஷ ரூபமும் முக்தியை அடையவிக்கும் அந்த ஆத்மரூபத்தை பார்த்துக்கொண்டு நான் பொறுமையில்லாதவனாக வசிக்கிறேன், என்று பகவான் ஹ்ருதயபுண்டரத்தில் வசித்து வருபவரும், எல்லா பிராணிகளுக்கு ஆத்மபூதரும், மதுவென்னும் அசுரனைக் கொன்ற ஸ்ரீஹரியானவர் ஸ்வேதகேதுவாக வந்து நின்று, சொன்னபோது, ஸ்வர்ச்சலை அவரை தன்பதியாக ஏற்றுக் கொண்டாள். அப்பேற்பட்ட கிருஹஸ்தாஸ்ரமத்தை சரிவரச் செய்து முடித்த ஸ்வேதகேதுவை ஸ்வர்ச்சலையை, என்ராம சீதாதம்பதிகளை, நான் வணங்குகிறேன்.]

வாலி அடிக்கடி பகவானாகிற ராமனை நோக்கி, கந்தர்வ பதுமை போலிருக்கும் அழகை முதலில் பருகினான். (குஹனைப் போலவிருக்கும்) அசாதாரண அழகுடன் ஜ்வலிக்கும் பிரபுவின் பாத சரணங்களில் அடிக்கடி தன் சித்தத்தை நிலைநிறுத்தினான். என்ன அழகு, என்ன பொறுமை, என்ன கவர்ச்சி, கருணை; (இவரையல்லவோ, நான் மித்ரனாக அடைந்திருக்க வேண்டும். இவரை அல்லவோ நான் பஜித்திருக்க வேண்டும், இவர் அல்லவோ யாவராலும் பஜிக்கத் தகுந்தவர். இவரை நான் ''சாஸ்தா'' என்று அடையாள லக்ஷணங்களால் அறிந்து கொண்டேன்.) இன்றுதான் என் ஜன்மத்தின் லாபம்

கிடைத்தது. உடனே அவனுடைய மனத்தில் ஏற்பட்ட அசுசி விலகியது. ஹ்ருதயத்தில் பொருமையற்றவஞக, சாந்தியுடன் விளங்கும் ஆத்ம நிரதனுக அவன் விளங்கினுன். ஆனுல் ராம பாணத்தினுல் யேற்பட்ட வலியை அவனுல் பொறுக்க முடிய வில்லை. அதனுல் அவன் கடூரமான வசனங்களை ஹ்ருதய தாபத்தினுல் ராமன்மீது வீசி எறிந்தான். (62)

''கோஸாயி, தர்மத்தை ரக்ஷிப்பதற்காக தாங்கள் அவதாரம் எடுத்திருக்கிருர்கள். ஆனுல், மறைந்துகொண்டு வேடன் அடிப் பதுபோல, உம்மை பிரகடனப்படுத்திக் கொள்ளாமல் என்னை அடித்துக் சொன்றீர். நான் உமக்கு என்ன விரோதம் செய்து விட்டேன் ஸ்வாமி? சுக்ரீவன் என்ன நற்காரியம் செய்துவிட்டு, உமது பிரியத்தை அவன் அடைந்துவிட்டான்? ஸ்வாமி, என்னி டம் என்ன தோஷத்தைக் கண்டு நான் சம்ஹரிக்கத் தகுந்தவன் என்று நினைத்தீர்? (63)

ஸ்ரீராமன் சொன்ஞர், ''உன் தம்பியின் மனைவியை நீ கவர்ந் தாய். அவள் உன் சகோதரிக்கும் புத்ரனின் மனைவிக்கும், உனது பெண்ணுக்கும் சமமானவள். இவ்விதமின்றி வேறு கெட்ட திருஷ்டியினுல் இவர்களை நடுத்துபவன் மஹா பாபி. அவனைக் கொன்ருல் ஒருவித பாபமும் இல்லை.'' (64)

''ஹே மூடா, நீ அத்யந்த அபிமானம் உள்ளவன். அதனுல் உன் குற்றங்கள் உனக்குத் தெரியவில்லை. பல தடவைகள் உன் மனைவியாகிற தாரை உனக்குச் சொல்லியும் நீ அவளுடைய வார்த்தைகளை லக்ஷ்யம் செய்யவில்லை. காது கொடுத்துக் கேட்க வில்லை. சுக்ரீவன் என்னுடைய புஜபலத்தை ஆஸ்ரயித்தவன். அவ்விதமிருந்தும் என் பக்தனுகிற அவனை, அதமனும் ஸ்வய அபிமானியாகவுமிருக்கிற நீ கொல்ல விரும்பினுய்.'' (65)

வாலி, ராமஸ்வாமியின் வசனங்களைக் கேட்டான்; பின்பு பதில் உரைத்தான். ''ராமபிரானே, தயவு செய்து கேளும். உம்மிடம் நான் கெட்டிக்காரத்தனத்துடன் வாதாட முடியுமா? நியாயம் அநியாயம் என்பது உமது மனத்தில் ஏற்படும் ஸங்கல் பத்தைத் தானே பொறுத்தது. ஸ்வாமி, என்னை நீர் கருணை யுடன் பார்க்கவேண்டும். பிரபு, உமது கைகளால் மரணம் ஏற்பட்டிருக்கிறது. அந்திமகாலத்தில் உமது பாத பத்மங்களே எனக்கு பரமாம்கதி. அவ்விதம் சரணம் அடைந்திருக்கிற என் னிடம் தாங்கள் கிருபா திருஷ்டி செலுத்தி, என்னை, பாபாத்மாக விருந்தபோதிலும், உம்மை அடுத்து வந்திருக்கும் என்னை

சம்ரக்ஷிக்காமல் உதறித் தள்ளவேண்டாம்'' என்று வேண்டிக் கொண்டான். (66)

ராமன் வாலியின் அதிகோமளமான வார்த்தைகளைக் கேட்டார். தயை மேலிட்டவராக அவர் தனது கோமளமான கரத்தை அவன் தலையில் வைத்து அவனைத் தடவிக் கொடுத்தார். அவருடைய ஸ்பர்சம் பட்டதும், வாலி அத்யந்த சந்தோஷத்தை அடைந்தான். அப்போது பகவான் சொன்னார். ''நான் உன் சரீரத்தை அம்ருதமாக்கிவிடுகிறேன். பிராணனைத் தரித்துக் கொள்'' என்றார். வாலி பதில் உரைத்தான். ''கிருபையின் பொக்கிஷமே தயவுசெய்து எனது வார்த்தைகளைக் கேளும்.''(67)

[தியானம்

நாராயணா, உமக்கு சரீரமாயிருக்கும் பிரகிருதி, மஹத் அஹங்காரம் முதலிய தத்வங்கள் எல்லாவற்றையும் வகிக்கும் சரீரபூத ப்ருத், அபராதபட்டவர்களிடத்திலும் பொறுமையைக் காண்பித்த விஸ்வதக்ஷிண ராமா, உலகத்தில் தர்ம ஆசாரங்கள் மரியாதை வியவஸ்தைகளைப் பிரகடனப்படுத்துவதற்காக வந்த பூரிதக்ஷிணரே, என்னிடம் கிருபையுடன் இரும். அன்று ஸ்வர்ச்சலை ரூபமாக வந்த சீதே, என்னிடம் ஞானம் உபதேசமாகிற கர்மங்கள் அனைத்தையும் ஞானத்தீயில் லயிக்கச்செய்து, பஸ்மமாக்கி, நானும் நீயும், ஸ்வேத கேதுவும் ஸ்வர்ச்சலையாகவும் கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டித்து, உலகம் சித்திபெற வேண்டியும், தனக்கு சித்தி உண்டாக வேண்டியும் கர்மங்களைச் செய்த என் சீதே, ஹே ஸ்வர்ச்சலை, எங்குபோய் நீ ஒளிந்துகொண்டிருக்கிறாய்? புத்தியும் க்ஷேத்திரஞனுக்குமுள்ள ஒற்றுமையைப்போல நம்மிருவருக்கும் சரியான தம்பதிகள், யாகங்களாலும் கர்ம ஆராதனங்களாலும் தேவர்களை திருப்தி செய்து வைப்பதாலும் கிடைக்கும் ஆத்ம ஞானமாகிற ''நீயும் நான்; நானும் நான் யாவும் நான்'' என்கிற பாவத்தால் பதிதர்மம் செய்தாய். உலகங்களின் இந்த படைப்பானது பகவானுடைய லீலை; பகவான் பூமியில் அவதரித்து எதைச் செய்கிறாரோ, அதையே மற்றவர்கள் அனுஸரிப்பார்கள். அந்தக் காரணத்தால் உலகம் நிலை பெறுகிறது. உலகில் எவ்வளவு மணல்கள் காணப்படுகின்றனவோ, அவ்வளவும் ஸ்ரீஹரியின் விபூதிகள்; அவ்வளவும் அவருடைய மாயைகள்; இந்த மாயைகளின் சக்திகளும் அநேகம் உண்டு; இவ்விதம் பெரும் காட்டில் ஆத்மா அகப்பட்டதாகவிருக்கிறது. அதில் பிறப்பு இறப்பு என்னும் ஸம்சாரத்தை அறிவென்கிற கத்தியால் வெட்டிவிட்டு எவன் செல்லுகிறானோ,

அவனே அறிவுள்ளவன், அவனே எனக்கு (ஹரிக்கு) நேச முள்ளவன். அவன் நானே, ஸந்தேகமில்லை என்று ஹரியின் உறுதிமொழிகளை ஊர்ஜிதம் பண்ணுவதுபோல விருக்கிருய்.'' மூடர்களாலும், கெட்ட புத்தியுள்ளவர்களாலும் அந்த பரமாத்மா விஞல் உலகம் நிறைந்திருக்கிறது; பரமாத்மாவினுடைய ஐஸ் வர்யமானது பல ரூபங்களாகக் காணப்படுகிறது. சூர்யனும் அக்னியும் வேதங்களும் அவரை அறிகிறதில்லை. வேதங்களும் சப்த பிரும்மமும் "இது" என்று காண்பிக்காத போனுலும், அருகிலுள்ள அடையாளங்களிலிருந்து கொண்டு உபதேசித்துக் கொண்டிருக்கின்றன. அந்த பரமாத்மா என் மனதில் இருக் கிருன். இதுவே ஆத்ம ஞானம். எங்கும் நிறைந்துள்ள ஸ்ரீகோவிந்தரிடம் கர்மங்களை அர்ப்பணம் செய்து பரமாத்மா மயமான பாவனையுடன் நெடுங்காலம் கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டித்த என் சீதை, என்னை விட்டுவிட்டு எங்கு ஒளிந்து கொண்டிருக்கிருய்? அவள் என்னிடம் தயைகொண்டு ஸ்வயமாக பிரகடனம் செய்துகொள்ள மாட்டாளா?]

வாலி சொன்னுன்? "பரமாத்மாவே, உம்முடைய உருவம் காணுவதற்கு மிக்க அரியது. பல ஜன்மங்கள் அதைக் காணப் பெறுவதற்குமுனி ஜனங்கள் எடுக்கிருர்கள், கணக்கில்லாதபடி ஜன்மங்களை அடைந்தும், அநேக ஸாதனங்களைச் செய்தும் இந்திரியங்களை அடக்கியும், மனத்தை அடக்கி, தவம் செய்தும் அவர்களுக்குக்கூட தங்களைப்பற்றிய கருணுேத்பத்தி ஏற்படுகிற தில்லை. எனது அந்திமஸ்துதியாகிற ராமா, சீதாராமா, (நாரா யணு, ஸ்ரீமத் நாராயணு, சதாசிவ நாராயணு, ராமானுஜ நாரா யணு) என்று அவர்களின் வாயால் ஒரு தடவைகூட சொல்ல முடிகிறதில்லை. ("ராமா" என்கிற சப்தத்தைச் செய்வதற்கு அவர்களால் எவ்வளவு பிரயத்தனப்பட்டும், முடிகிறதில்லை.) ஸ்வாமி, எப்போது "ராம" சப்தத்தை ஒருவன் உச்சரிக்க முடி கிறதோ, அதன் அர்த்தமாகிற நீர் அறியப்படுகிறீர். (உலக மானது ஆகாயமின்றி இருக்க முடியாது. ஆகிலும் அதில் சம் பந்தப்படுகிறதில்லை. அதுபோல சப்தமும் அர்த்தமுமாகிற தாங்கள் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாதபடினும், விரோத மின்றி இருப்பதால் ஆகாயம் பூமி ஆகியவைகளைப்போல உனது நாமம் ரூபம் ஆகியவைகளால் தெரிந்துகொள்ள வேண்டியவராக நீர் இருக்கிறீர்.) ராமா, உன் நாம பலத்திஞல் அல்லவா என் பிரபு ஸதாசிவன் (நாததனு மணிரூபத்தில் "நான்" என்கிற அஹங் காரமற்றவராக, கல்யாண குணங்களுடன் கூடிய பொருளாகிற

தங்களை அறிவிக்கும் திறமையுள்ள நாதபிரும்ம சப்தத்தால், பரமாகிற ஆத்மப் பொருளை,) காசி க்ஷேத்ரத்தில் ஆத்ம ஞானத்துடன் பாடி இன்புறுகிறுர். அது மாத்திரமில்லை. ராமா, அந்த பிரபு, உதாரர், தன்னைப்போல எல்லோருக்கும் அவிநாஸியாகிற உன் கதியை உன் பதங்களை அளிக்கிறுர், அடைய வைக்கிறுர். இதுவல்லவோ முக்தி, ஆனந்தம் என்று அறியப்படுகிறது. (68)

"அப்பேற்பட்ட அனுமான பிரும்மமாகிற தாங்கள் மஹா கிருபையுடன் (கபீந்திரராக,) ஸ்வாமி, என் நேத்ரங்களுக்குப் புலப்படுகிறவராக வந்து, என்னிடம் சாக்ஷாத்கரித்திருக்கிறீர்கள். (உம்மைப்பற்றிய சப்தங்கள் பொருள் இல்லாதவைகளன்று;) அப்பேற்பட்ட பிரபு எனக்கு மீண்டும் காக்ஷி அளிப்பவரா? இதைவிட எனக்கு அரிய சந்தர்ப்பம் எப்போது கிடைக்கும்?" (69)

"ஸ்வாமி, பரமாத்மாவாகிற உம்மைப்பற்றிய வாக்குக்களுக்கு (சப்தங்களுக்கு) பொருளாகவிருக்கும் லக்ஷணங்களை உடைய ராமா, வேதபிரும்மம் என்று சொல்லப்படும் அகோசரமான அனுமான பிரும்மமே, (ஸாதனத்தை உபதேசிப்பதாலும் வழியை சூசனம் செய்வதாலும் உபலக்ஷண முறையுடன் மற்றவைகளை முறையுடனும் உம்மை அறிவிப்பதாலும், பரிசுத்தரான உம்மை வேதத்தால் அறியப்படத்தக்கவராகவல்லவோ நீர் இருக்கிறீர்?) (சப்தசஹரே, சப்தார்த்தரே,) முனிகணங்கள் உம்முடைய குண கீர்த்திகளை மனம் இந்திரியங்கள் பிராணன் யாவற்றையும் அடக்கி, நல்ல ஆசாரத்தாலும், தெளிந்த புத்தியினுல் பரமார்த்தம் என்று நிச்சயிக்கப்பட்ட ஞானத்தினுலும் ஆத்மாவாகிற உம்மை தியானத்தினுல் அறிந்து உத்தம கதியை அடைகிறுர்கள். (வாயு, சூர்யன், அக்னி உம்மை அறிகிறதில்லை. அந்த பரமாத்மாவாகிய நீர் உலகம் முழுவதும் நிறைந்திருக்கிறீர்.) அப்பேற்பட்ட பிரபு மஹா கிருபையுடன், என்முன் தோன்றி எனது கோசரதிருஷ்டி பதத்திற்குப் பிரகடனப்படுத்திக்கொண்டு "வாலி" என்று என்னை அழைத்து, சாக்ஷாத்கரித்திருக்கிறீர். அதுமாத்திரமில்லை. ஸ்வாமி, என்னை கெட்ட புத்தியுள்ளவனுகவும், தர்மங்களுக்கு ஸங்கரம் செய்கிறவனுகவும் உலக மரியாதையை மாற்றுகிற நீசனுகவும், ஆஸுர பிறவியை அடைந்தவனுகவும், ஆத்ம ஞானம் இல்லாதவனுகவும், சுக்ரீவன் வாலியாகிற வேற்றுமையுடன் அக்ஞானத்தினுலும் மமகாரத்தாலும் அஹங்காரத்தாலும் உண்டுபண்ணப்பட்ட என் அபிமானத்தை அழித்து, நாசம் செய்து, உலக மரியாதையைக் காப்பாற்ற எண்ணம் கொண்டு

அவதரித்திருக்கிற ராமனுகி, சீதாராமனுக, லக்ஷ்மண சீதா ராமனுக, அவதரித்திருக்கிறீர். (பிரபு, என்னுலேயும் உம்மாலே யும், யாவராலும் உலக மரியாதையைக் காப்பாற்றத் தகுந்தது;) (நீர் "தண்டராக" விருந்தாலும், என்னையும் உம்மைச் சேர்ந்த வனுக ஆக்கிவிட நினைத்தீர். உமது கிருபையைப் பெற்றுவிடும் படி எண்ணினீர் என்கிற காரணத்தினுல்) "சரீரத்தில் பிராணனை தரித்துக்கொள். அம்ருத்யுவாக இரு" என்று கட்டளையிடு கிறீர். அது உமக்கே தகும். எங்கேயாவது, ஸ்வாமி, (கோவிந் தரே, ஸ்வேத கேதுவே,) எல்லா சுப பலன்களைக் கொடுக்கும் கற்பகவிருக்ஷத்தை வெட்டிவிட்டு, (உம்மால் ஸ்தாபிக்கப்பட்டதும் உலக ரூபியாகிற உம்முடைய வளர்ச்சிக்காக ஏற்படுத்தப்பட்ட தர்ம மரியாதை, உலக மரியாதை, தர்ம வியவஸ்தையை, அலக்ஷ் யம் செய்துவிட்டு, மமகார, அவித்யா ரூபமாகிற) அதை முள்கள் ளிச் செடிக்கு வேலி போடுவதற்கு உபயோகப்படுத்தலாமா? எந்த முட்டாள்தான் அதைச் செய்வான்? பூர்ண காமங்களை அளிக்க வல்ல தங்களுடைய பாத பத்மங்களை, கற்பக நிழலை விட்டு விட்டு, அக்ஞானத்துடன், அபிமானத்துடன் வளர்ந்துவந்த இந்த சரீரத்தை நான் இன்னும் போஷிக்கலாமா? என் ஸுர தருவே, கிருபாளுவே, தயா ஸாகரமே." (70)

"இப்போது நீர்தான் எனக்கு நாதர். (நீர்தான் என் போக்தா.) உம்முடைய ஸ்வரூபமாகிற ஆனந்தத்தை என்னை அனுபவிக்கச் செய்விப்பவரே. கருணுதிருஷ்டியுடன் சீதா பிரபோ, என்னைப் பாரும். ராமா, நாராயணு, உம்முடைய தயையை எதிர்பார்க்கும் எனக்கு, (திருமாலாக என் நெஞ்சுக்குள் புகுந்த உன் ராமநாமத்திற்கு, பாசத்தால் இன்னும் கட்டுண்ட எனக்கு,) ஒரு வரதானம் செய்யக் கடவீர்; என் கர்ம கதியினுல் இன்னும் எத்தனையோ ஜன்மங்கள் எடுப்பேனு, அந்த ஒவ் வொரு ஜன்மத்திலும் சீதாபிரபோ, ராமபதம் ஆகிற உங்க ளுடைய திவ்ய சரணங்களில், அனுராகம் உடையவனுக, (என் மடநெஞ்சம் நாரணன் எம்பெருமானுக்கு, ஆற்றுமை சொல்லி அழுவோமை நீ நடுவே, பேற்றேர் வகையில் கொடிதாய் எனை யூழி, மாற்றுண்மை நிற்றியோ வாழி கனையிருனே, என்கிறப் போல) எனக்கு மங்களங்களைச் செய்யும் கல்யாண ப்ரதபிரபோ, என்குலத்தின் மணியாகிற என் புத்ரன் வினயத்திலும் சரி, பலத் திலும் சரி என்னைப்போல விருக்கிறுன். ஆனுல் என்னைப்போல உன் ஸ்நேக ஸம்பந்தம் பெருத பாக்ய ஹீனனுக அவன் வாழும் படி நான் விரும்பவில்லை. ஆகையால் தாங்கள் இந்தக் கருணை

யால் அவனை உமது கைங்கர்யத்திற்கு ஸ்வீகரித்துக்கொள்ள வேண்டும். சுரநர நாதா, (இவனும் மது வித்யையில் தேர்ந்த வன்; எனக்கு அணியாக விருப்பவன்,) என் கைகளினால் பிடிக் கப்பட்ட இந்த அங்கதனை, உம்முடைய ராமதாஸனுகக் கருதி அவனை அங்கீகரித்து என்னையும் கிருதார்த்தனுக்க வேண்டும். சீதா அன்வேஷணம் முதலிய கைங்கர்யங்களில் ஈடுபடச் செய்து அவனை அங்கீகரிக்க வேண்டும். (71)

ராமசரணங்கள், ("பாற்கடல் கடையும்போது வந்த அமு தம் இனிது; அதினிலும் இனிது அதன் ஸாரமாய்த் தோன்றிய பெண்ணமுதுவாகிற சீதாபிராட்டி; அவ்வமுது எம்பெருமானும் கண்டு வியப்புற்று நிற்கும்போது, அப்பெண்ணமுதுக்கு இசைந் துள்ளது அதனை ஏத்தும் வண்ணமலர்; இவ்வமுது தோன்றி யதும் இதற்கு ஏற்ப மலர்மாரி பொழிந்தன நீர்முகில்கள்; அம் மட்டோ கஜேந்திரங்களும் அமைதியாக பொற்குடங்களால் நீராட்டி நின்றன; அப்பேற்பட்ட மங்கள ஸ்வரூபியான பிராட் டிக்கு உகந்த பத்ரபீடமாகிற'சீதாராம சரணங்கள்.") அந்த ராம சரணங்களுக்கு என் ப்ரீதி வளரட்டும் என்று தெளிந்த ஞானத் தால் வாலி, பகவானைப் பிரார்த்தித்துக்கொண்டு, சரீரத்தை எளி தில் தியாகம் செய்தான். அவனுடைய சரீரத்திலிருந்து வெளிக் கிளம்பின பிராணன் முரட்டு யானையின் கழுத்திலிருந்து நழுவி விழும் பூமாலை எவ்விதம் அதற்குத் தெரியாதோ, அதுபோல அவனை அறியாமல், சிகித்ஸைக்கு அஸாத்யமான ஸம்சார ரோகத்தைப் போக்கும் ஔஷதமாகிற ராமபேஷஜர் முன்னிலை யில் ஒருவித உபத்ரவமின்றி பிரிந்தது. (அப்பேற்பட்ட ராமா, என்னைக் காப்பாற்று.) (72)

[தியானம்

நாராயணு, ஜயலக்ஷ்மி, தேவதானவ அசரசர வந்தித சீதா தேவி, பெரிய குடமும் சிறிய குடமும் பூமியில் நிலைபெற்றிருப் பதுபோல காணப்படும் பிரபஞ்சம் முழுவதும் மிச்சமின்றி பர மாத்மாவினிடம் நிலைபெற்றிருக்கிறதுபோல, சீதே, நான் உன் னிடம் லயித்திருக்கிறேன். ஸ்ரீவத்ஸ மோஹித நாராயணி, நீ பெண்ணுமன்று ஆணுமன்று அலியுமன்று. ஞான உருவை ஒன்றையே உடைத்ததாகவிருக்கும் சீதையே, என்னிடம் வர மாட்டாயா? உன்னை ஒன்ருகப் பார்க்கிறவன் அம்ருதத்தை அடைகிருன். உன்னை பேத புத்தியுடன் பார்க்கிறவன் ஜலம் வேறு, ருசி வேறு, பிரகிருதி வேறு, ஆத்மா வேறு, என்று பார்க்

கிறவன், பயத்தையும், மரணத்தையும் அடைகிறான். தண்ணீரைக் குடிப்பவன் திருப்தியை அடைவதுபோல உன்னை அறிவிக்கும் வேத வாக்கியங்களைக் கொண்டு, அடையாளங்களால் அறிவை அடைந்து, அந்த அறிவின் அனுபவத்தால் உன்னுடன் கூடிய ஆத்ம சுகம், ஸ்ரேயஸ் முதலியவைகளை அடைகிறான். தாயே, பரமாத்மா, "மாம்ஏகம் சரணம்வ்ரஜ ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி," என்கிற நல்வார்த்தையை அறிபவர்கள் பரணிக்கூடு வரிந்தாற்போல இவ்வாத்மாவைச் சூழப்பொதிந்து கிடக்கிற ஜன்மங்களோடும் அவை புக்கவிடத்தே புகக்கடவதான வ்யாதியோடும் அங்கனேயாகிலும் சிறிது நாள் செல்லாதபடி இடி விழுந்தாற் போலே வரைஜரையோடும், அங்கனேயாகிலும் மிருக்க ஒண்ணாதபடி இவனுக்கு அனபிமதமான விநாசமுமாகிற இவற்றை விரகர் நெடுஞ்சுவரைத் தள்ளுமாப்போலே தள்ளி, அவை போனபின்பும் வரக்கடவதான கைவல்யம் ஆகிற மஹா துக்கத்தை ஸவாஸனமாகப் போக்கி, பாதரேகைபோல தன் திருவடிக்கீழ்ச் சேரும்படி பண்ணி, புனராவிருத்தி அறும்படி அவனும் நீயும் பண்ணும் ரக்ஷையை, சீதாராமா, மஹாலக்ஷ்மி நாராயணா, அனுஸந்தித்து வ்யஸனம் கொண்டவனாய் காலத்தை எதிர்பார்க்கும்போது, தங்களுக்கு ஆஸ்ரயணீயனாய் விரோதி நிவர்த்தகனான ஆச்சரிய பூதனுக்கொழிய வேறு ஒருவருக்கும் ஆளாவாரோ என்று நம்மாழ்வார் அருளிச்செய்த முத்தனார் முகுந்தனார் ஒத்தொவ்வாத பல்பிறப்பு ஒழிந்து நம்மை ஆட்கொள்வான், அத்தனாகி அன்னையாகி ஆளும் எல்லாம் பிரானாகிப் புகுந்து, வலுவில் புகுந்து, நம்முள் மேவினார் ஏழை நெஞ்சமே, எத்தினால் இடர்க்கடல் கிடத்தி என்று ஹேப்ரத்யிநீக கல்யாண குணங்கள் கொண்ட நாராயணா, லக்ஷ்மணா, சீதாராமா, என்னை ஆட்கொள்ளமாட்டாயா? பத்ரராமா, சீதாலக்ஷ்மி, எனக்கு அருளமாட்டாயா?]

ஸ்ரீராமச்சந்திரன் வாலியைத் தன்னுடைய நிஜ பதமாகிற வைகுண்டத்திற்கு, லக்ஷ்மிநிவாஸம் செய்யும் ரமாநிகேதனத்துக்கு அனுப்பினான். பரமகிருபாளு. நகரத்தில் மாந்தர்கள் அனைவரும் அரசன் இறந்துவிட்டதை அறிந்து வருத்தமுற்றார்கள். அவனுடைய மனைவியாகிற தாரை அநேக பிரகாரம் அழுதாள். தலைமயிரை விரித்துப் போட்டுக்கொண்டு, நடுங்கும் உடம்பினால் அவள் பலவிதமாக அழுதாள். பாவம். அவளைப் பார்ப்பதற்கு பயமாகவும், பரிதாபமாகவுமிருந்தது. (73)

பிரபு ரகுராம் தாரையின் வருத்தத்தைக் கண்டார். அவருக்கும் மனவருத்தம் ஏற்பட்டது. (அன்று ஜாலந்தரனின் மனைவியின் ஸ்திதியை நினைத்து துக்கப்படுவதைப்போல் பிரபு துக்கப்பட்டார்.) அப்பொழுது தாரைக்கு கருணையின் வசமடைந்தவராகி, பிரபு, ஞானத்தை புகட்டினார். தீனமான ஸ்திதியிலிருந்த தாரை மாயை விலக்கப்பட்டு ஞானத்தை அடைந்தாள். பிரபு சொன்னார், "தாரை, ப்ருத்வி, ஜலம், அக்னி, ஆகாசம், வாயு இவைகளாலான பஞ்சபூத சேர்க்கையாகிற இந்த சரீரம் அழியக்கூடியது, அது அழிந்துவிட்டது. (74)

உன் கண் முன்னால் பிரத்யக்ஷமாகவிருக்கும் சரீரம் அதன் நாசத்தை அடைந்து லயமாகிவிட்டது. இதனுள் வசித்த ஜீவன் நித்யம். அவ்விதம் இருக்கும்போது நீ சோகமடைவது சரியில்லை. யாருக்காக சோகமடைகிறாய்?" எப்பொழுது ஆத்மா வேறு, சரீரம் வேறு என்கிற ஞானம் உதயமானதோ அப்பொழுது அவளுடைய துக்கம் விலகியது. பகவானுடைய சரணங்களைப் பற்றிக்கொண்டு, (அன்று துளசிதேவி பகவத்சரணங்களில் பிரேமை பக்தியை வரமாக அடைந்தாளோ, அதுபோல) சீதாராம சரணங்களில் தாரை அத்யந்த பிரேமை பக்தியை வரமாகக் கேட்டாள். (75)

சிவன் பார்வதியை நோக்கிச் சொன்னார். "உமா, என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் பதினாறு கலைகளுடன் விளங்கும் ராமச்சந்திரன், ஸகலரையும் பொம்மை மாதிரி ஆட்டி வைக்கிறான், கோஸாயி. அவருக்கு உட்படாதவர் யாருமில்லை." அதற்குப் பின் ஸ்ரீராமச்சந்திரன் சுக்ரீவனுக்கு ஆக்ஞை செய்து, விதிபூர்வமாக வாலியின் மீதி ஈமக்கடமைகளைச் செய்யச் சொன்னார். (76)

அதன் பின்பு ராமன் தன் தம்பியான லக்ஷ்மணனை அழைத்தார். அவனிடம் "லக்ஷ்மணா, நீ கிஷ்கிந்தைக்குச் சென்று சுக்ரீவனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவிட்டு வா" என்று கட்டளையிட்டார். ரகுபதியின் ஆக்ஞையைப் பெற்ற ராமானுஜன் ராமசரணங்களில் விழுந்து நமஸ்கரித்து அவரிடம் விடைபெற்றுச் சென்றான். (77)

லக்ஷ்மணன் கிஷ்கிந்தையின் புரவாஸிகளையும் பிராம்மண சமாஜங்களையும் சீக்கிரமாக அழைத்து அவர்களுடைய உதவியினால் சுக்ரீவனைப் பட்டாபிஷேகம் செய்துவைத்து யுவராஜ பட்டாபிஷேகத்தை வாலியின் குமாரனாகிற அங்கதனுக்குச் செய்து முடித்தான். (78)

"ஹே உமா, ஜகத்தில் ஸ்ரீராமச்சந்திரனுக்கு ஸமானமாக அனுகூலம் செய்பவர் குரு, பிதா, மாதா, பந்து, பிரபு யாவரும் இல்லை. யாரும் இருக்க முடியாது. தேவர்கள், மனிதர்கள், முனிஜனங்கள் ஆகிய யாவருக்கும் ஸ்வார்த்தமாக ஏதாவது இருக்கும். அதனால் அவர்கள் ப்ரீதி செய்கிறார்கள்." (79)
[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மிபிரியா, சீதாராமா, ஸ்ரீவத்ஸசின்னா சரணம் சரணம். எனக்கு ரதிசுகத்தை தருபவளே, அகஸ்திய லோபாமுத்ரையினால் அர்ச்சிக்கப்பட்டவளே, உன்னுடைய குரு நிதம்பமும், கமனமராளி நடையும், நூபுரசிஞ்சிதமணியின் கிங்கிணி ஓசையும், ஸஹஸ்ரகோடி சூர்யர்கள் சேர்ந்து உதித்தாற்போல பிரபையும் உள்ள சீதே, என் ராதை, நீ எங்கேயிருக்கிறாய்? அன்றொரு நாள் ராத்திரி கும்பிருட்டு. ஒரே மழையும் இடியும் மின்னலுமாகவிருந்தது. அப்போது மழை தாரைகள் கொட்டியவண்ணமிருந்தன. திசைகள் வழி எல்லாம் மறைந்து ஒரே கலக்கமாயிருந்தபோது என் ராதை என்னைத் தேடிக் கொண்டு ஓடி வந்தாளே. அந்த சீதை இப்போது என்னைத் தேடி ஓடிக்கொண்டு வரமாட்டாளா? மற்றொரு நாள் நான் குறிந்த நேரத்தில் போகவில்லை. "இந்த மாதவன் வரவில்லை; என்னை ஏமாற்றி விட்டான்; எந்த பாக்யவதி இந்நேரம் அந்த ஸர்வகந்த, ஸர்வரஸ, ஸர்வகாம, ஸர்வமாகவும் சத்யகாமனாகவுமிருக்கிற அந்த பிரபுவை அடைந்து இன்புறுகிறாளோ," என்று ஏங்கிய சீதை இப்போது என் திருஷ்டி பதத்திற்கு வர மாட்டாளா?" ஆஞ்சநேயா, துளசி தியாகராஜருக்கு அனுக்ரஹித்த ஸர்வகந்தனே, என்னிடம் கிருபை செய்ய மாட்டாயா! வாலி ஞானவானாகவிருந்தும், அவனுக்கு ராம சரணங்கள் பூலோகத்தில் கிடைக்கவில்லை. சுக்ரீவன் பக்திமானாகவும் ஏக பராயணனுமாகவிருந்தான். அவனுக்கு ஆஞ்சநேயர் சகாவாகவிருந்தார். அந்த பிரபுவும் சீதையாகிற தயையினால், அனாதியான பிரகிருதி புருஷன்போலவும், சுக்ரீவமோஹிதனாக ஆனார். ஸத்யகாமன் ஸத்யஸங்கல்பன் என்கிற பெயரை, தான் வனத்தில் சீதை அன்வேஷனாகவிருக்கும்போது, சுக்ரீவனுக்கும் ருமைக்கும் ராஜ்யத்தைக் கொடுத்த விஜரோ, விம்ருத்யோ, விசோகோ, பசி தாகமில்லாத ராமன், நித்யனும் நித்யன், சேதனாசேதனர்களின் காமங்களை பூர்த்தி செய்யும் ஈஸ்வரன், ஆத்மா ராமன், ஈஸ்வரன் சேதனன் உலகம் ஆகிய மூன்றும் நித்யமாகவும் நிஜமாகவும் ஒன்றாகவும் இணைக்கப்பட்டவன், விசிஷ்டாத்வைதன், ராமன்

லக்ஷ்மணன் சுக்ரீவன், அங்கதன் போல காக்ஷி அளிக்கும் நாராயணரே, என்னைக்கட்டி காத்தருளும். ஐயா நீர்தானே ஸர்வ வியாபகமாகவும் அந்தர்யாமியாகவும் ப்ரேரணை செய்யும் பரமாத்மாவாகவும் எனக்கு விளங்குகிறீர். அப்பேற்பட்ட சத்ய காம, சத்யஸங்கல்ப சீதாராமா, ராதாகிருஷ்ணு, ராமானுஜா, நீங்கள்தான் எனக்குத் தஞ்சம்.

"சுக்ரீவன் தினம் ராத்திரி என்று பாராமல் வாலியினுல் பயபீதி அடைந்து, எந்த சமயத்தில் எந்தவிதமான ஆபத்து நேருமோ என்று அனவரதமும் ராம நாராயணபதத்தை ஆஸ்ரயித்திருந்தான். என் பிரியமுள்ள உமாதேவி என் பிரபு, தசரத ராமன், ஜானகிராமன், (சத்யகாமன், சத்யஸங்கல்பன்,) அப்பேற்பட்ட சுக்ரீவனை பயத்திலிருந்தும் ஆபத்திலிருந்தும் விடுவித்தார். (அவரை நான் எவ்விதம் குணமில்லாதவன், வனத்தில் நடமாடும் சாதாரண மனிதன் ஜானகியைத் தேடிப் போகும் காமி, விஷயபோக இச்சையுள்ளவன் என்று எவ்விதம் என்னுல் சொல்லக்கூடும்? அவனே ஸர்வகந்த ஸர்வரஸமாக விளங்கும்போது, அவருடைய சரீரமோ இந்த பிரபஞ்சம் முழுவதும் இருக்கிறபோது, அதில் அவர் அந்தர்யாமியாகவிருந்து ப்ரேரணை செய்யும் ஈஸ்வரராகவிருக்கும்போது, எவருடைய கிருபை ஸ்வரூபம் ஸ்வபாவம் ஸ்வபிரவிருத்தி ஆகியவைகளை ஞானத்தின் மேல் படியாகிற பக்தி பிரபன்னயோகத்தால் அறிந்து, "ஸத்யான் காமான்ஸ்ச தேஷாம் ஸர்வேஷீ லோகேஷீ காமசாரோபவதி," விடுதலை அடைந்த முமுக்ஷுக்கள் அடைகிற ஆனந்தம், கல்யாண குணசேர்க்கைகளின் இன்பம், நிஜஸத்யமானதும் ஹிதமான ரூபம்கொண்ட பரபிரும்மம் அல்லவா?) (இந்த ராமனும் சீதையும் சேதனுசேதனங்கள் கொண்ட இந்த பிரபஞ்சமும் அல்லவா? "இமான்லோகான் காமாதிகாம ரூப்யனு ஸஞ்சரன் ஏதன் ஸாம காயனுஸ்தே, ஹாவ் ஹாவ் ஹாவ்" என்று அனுபவிக்கிருர்களே அந்த முமுக்ஷுக்கள், அந்த பரம்ஜ்யோதி அல்லவா சீதாராமன். அந்த பரபிரும்மமே ஸ்வேனரூபேனுபி நிஷ்பத்யதே, அந்த முமுக்ஷுக்கள் பரபிரும்மத்தை அண்டி, அந்த பரபிரும்மக் கிருபையினுல் தங்கள் இச்சைகளைப் பூர்த்தி செய்துகொண்டு, தாங்களும் அவனைப்போல போகமாத்திரம் ஸாம்யமாக அடைகிருர்கள். அவர்களுக்கு அந்த ஈஸ்வரனைப் போல ஜகத் வியாபாரம் வர்ஜம். மற்ற குணங்களிலும் லக்ஷ்மி நாராயணனைப் போல அம்சமுள்ளவர்கள். ஆனுல் மஹாலக்ஷ்மி மாத்திரம் நாராயணனை சரீர சம்பந்தத்தோடு இருப்பவள்,

அப்பேற்பட்ட பிரபு, சாரீரகம் என்கிற குணஸம்பத்து உள்ளவர். சகலபிரபஞ்சங்களிலும் உள்ளும் வெளியுமாக வியாபித்திருக்கும் விஷ்ணு, சத்யகாமன் தன் அடியார்களின் குறைகளைத் தீர்த்திடும் ஸத்யசங்கல்பன், ஸ்ரீவத்ஸ மறுவன், வனமாலி, லீலையான தன் பார்யையான லக்ஷ்மியுடன் இந்த உலகத்தில் க்ரீடித்துரமிக்கிறான். அவன் இச்சைதான் ஸர்வமும். அவனுடைய ஸ்ருஷ்டி தான் இந்த வாலியும் சுக்ரீவனும். அப்பேற்பட்ட குணவானுகிற ராமன், ஸர்வவித் பக்திமானுகிற சுக்ரீவனை ஆஸ்ரயித்தான்.] அந்த சுக்ரீவனுடைய உடம்பில் ஏற்பட்ட அநேக குத்துக்களின் வலியைப் போக்கினான். அவனுடைய மனத்தில் கொழுந்து விட்டு எரிவதுபோல, கவலையும் தாபங்களும் தகித்துக் கொண்டிருந்தன. (ஸர்வகந்த ஸர்வரஸனுகிற) என் பிரபு, சீதா ராமன், (ராதாகிருஷ்ணன்) அந்த தீனஸ்திதியை அடைந்த சுக்ரீவனைத் தழுவி, என் கிருபாளு, ரகுவீரன், அவனை ஆஸ்வாசப்படுத்தி பயத்தைப்போக்கி, வாலியைக் கொன்று ராஜ்யத்தை அளித்தான். என் உமா, உனக்கு நான் இன்னமும் சொல்லவேண்டுமா? (அந்த தசரத ராமன் இயற்கையாகவே கிருபாளு என்று இன்னமும் உனக்குத் தெரியவில்லையா?") (80)

"அப்பேற்பட்ட பிரபுவை, (பரத்வமகிமை, ஸௌலப்ய வாத்ஸல்யாதி குணங்களின் சேர்க்கை, பக்தர்களிடம் காட்டும் ரக்ஷணம், அன்பு, பிரேமை, இயற்கையாகவே தோஷங்களைப் பாராத அரவிந்த லோசனங்கள் ஆகிய எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு,) அவரை நிஷ்காம்ய பக்தியினுல் ஆராதியாமல் போனுல், அவர்கள் சுலபத்தில் விபத்தை அடைந்துவிடுகிருர்கள். அவர்கள் கஷ்டம் அடைந்தபோது, "ஐயோ, நாம் ஏமாந்து போனேமே" என்று பச்சாதாபம் அடைகிருர்கள்." அதன் பிறகு பிரபு சுக்ரீவனை அழைத்தார். அவனுக்கு ராஜநீதி, ராஜதர்மங்கள் பலவற்றை உபதேசித்தார். (81)

அதன் பிறகு பிரபு சொன்னுர். "வானர்களுக்கு ஈசனே, நன்ருகக் கேள். பதினுன்கு வருஷங்கள் நான் வனத்தில் இருக்க வேண்டும். கிராமத்திற்கு உள்ளே நான் வரமாட்டேன். கிரீஷ்மருது சென்று வர்ஷருது வந்துவிட்டது. ஆகையால் நான் இந்த கிஷ்கிந்தாபுரிக்கு பக்கத்திலுள்ள பர்வதத்தின் குஹையில் வசித்துவருகிறேன்." (82)

"அங்கதன் சகிதமாக ராஜ்யத்தை ஆண்டுவா. என்னுடைய காரியத்தைப்பற்றி ஹ்ருதயத்தில் தியானம் செய்து ஆலோசனை செய்துவா. என் சீதையைத் தேடுவதில் உபகாரம்

செய்'' என்று சொன்னார். அதன்பிறகு சுக்ரீவன் தனது அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். அந்த சமயம் ஸ்ரீராமன் லக்ஷ்மணனுடன் பிரவர்ஷண மலைக்குச்சென்று வசிக்க ஆரம் பித்தார். (83)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி நிவாஸா, உனக்கு ஆயிரம் நமஸ் காரங்கள் செய்கிறேன். பிரபோ, நீர்தான் ஆகாயம். நீர்தான் அக்னி, வாயு, இந்திரன் சந்திரன், பூமி நீர்தான் ஸர்வமும். உள்ளும் புறமும் வியாபித்து, ஸத் அஸத் அம்ருதம் என்று பிரபஞ்ச முழுவதும் காணப்பட்டும், காணப் படாமலுமிருக்கிறீர். நீரே காமமாகவும் அகாமமாகவும், க்ரோதமாகவும் அக்ரோதமாக வும் இருக்கிறீர். நாராயணனே ஸகலவிதமான பந்து, அருட் கடல், தனது ஸங்கல்பத்தினால் கூர்மரூபியாக அனைத்தையும் தரிக்கிறான். பிராட்டியின் யோகத்தால் அதிகமாக இரக்கம் காட்டுகிறான். ஹேமனஸே, இதைப் புரிந்துகொள்ளாமல், காலத்தை வீணாக கழிக்கிறாயே. ஆஞ்சநேயரே, ராமனை பக்தி செய்யும் பிரபுவே, என் மனத்திற்கு ஒன்று பலவாகி, பலரூப நாமங்களுடன் விளங்கும் மாயை, ஈஸ்வரருடைய ஆக்ஞைக்கு கட்டுப்பட்டதாகவிருக்கிறது. சீதாராமனுடைய தயையினால், உன் கிருபாகடாக்ஷத்தினால், ஸர்வபூதாந்த ராத்மா, க்ஷரமாகிற ஜீவாத்மாவுக்கு அக்ஷரமாக விளங்கும் பிரபு, மாயாது பிரகிருதி: வித்யான்மாயினம்து, மஹேஸ்வரர். அவரே வ்யாப்தம் ஸர்வ மிதம் ஜகத், அவருடைய குணக் கடல் பாதிக்கப்பட்டும், கேட் கப்பட்டும், அறியப்பட்டும், ஸத்யமாகவும் அகோசரமாகவும் கிருபையினால் அவரே தன்னைக் காண்பிக்கிறவராகவும்விருக் கிறார். அவரே ஸம்ராட், பரமம் பிரும்மமாகவும் அறியப்படுகிறார். அப்பேற்பட்ட பிரபு, சீதா அன்வேஷணாக, ஒன்றும் தெரியாதவ ராக, சுக்ரீவ ஸக்யத்தினால் சீதையை அடைய விரும்புகிறவராக வும், அந்த சீதையும் ராமனிடம் சேருவதற்கு ஆஞ்சநேயருடைய உதவியையும் வேண்டுபவளாகவும் மாயா நாடகம் நடத்திய சீதா, ராமா, என்னிடம் எப்போது வருவீர்கள்? எனக்கு உன்னிடம் பக்தி கிடையாது. நான் செய்த பூஜையும் போராது என்று நினைத்து தயங்குகிறீர்களா? சீதைக்காக வர்ஷருது முழுதும் காத்துக்கிடந்து அதனால் சூசிக்கப்படும் இந்த ராவணன் நம்மிடம் வர மாட்டானா? நம் சீதையை அழைத்துவர மாட்டானா? என்று மஹாதபஸ் செய்து, பொறுமையை அனுஷ்டித்தாயே,

அந்த பொறுமையை என்னிடம் காண்பிக்கமாட்டாயா ? மனஸே, உனக்கும் பொறுமையல்லவோ வேண்டியிருக்கிறது. ஆஞ்சநேயர், சீதை ராமானுஜன் கிருபை செய்யாதபோனல், உன்னால் ஒன்றும் செய்வதற்கில்லை. பேசாமலிரு. சீதாதேவி மாயை. ஆனல் அவள் ராவணனை "ராமனிடம் பக்திசெய். மித்ர பாவத்தினல், அடை" என்று சொன்னாள். அந்த மித்ரபாவத்தோடு நீ இரு. அதுவே போதும்.]

(பகவான் ராமசந்திரன் தன் மனைவி ஜானகியை ராவணன் வீட்டில் சிறைபுகும்படி செய்தார். லோகபாலர்களின் மஹிஷிகள் ராவணன் வீட்டில் சிறையில் இருந்தார்கள். அந்த உத்தம தபஸ்விகளை சிறை மீட்பதற்கு ஜகன்மாதாவாகிற சீதை தன்னை ராவணன் வீட்டில் சிறைபடுத்திக்கொண்டாள். சீதை, லோகபாலர்களின் மஹிஷிகள் யாவரும் ராம வரவில், ராமஆக மனத்தில் காங்க்ஷை உள்ளவர்களாகத் தோன்றினர்கள். மாயையாகிற சீதை ராமனின் ஆக்ஞைக்கு உட்பட்டு ஸ்வ்ராட் பரமம் பிரும்மமாகிற ஸ்ரீராமனை எதிர்பார்த்தவண்ணமிருந்தார்கள். ஆனல் ராமனே வர்ஷருது கழிந்த பின்புதான் சீதையைத் தேட நினைத்தான். தர்மபராயணன். சாதுர்மாஸ்ய விரதம் கொண்டான். அத்தோடு மகாகிருபை மஹாதபஸ் ஆகியவைகளை ஆஸ்ரயித்தவனாக பொறுமையுடன் விளங்கினன்.) அவன் இன்புற சகல தேவதைகளும் யதிகளாகிற ராமலக்ஷ்மணர்களை போஷித்தார்கள். அவர்கள் வசிக்கும் குஹையையும் பர்வதத்தையும் அழகுறச் செய்தார்கள். அவர்களுக்கு ஜீவன வாழ்க்கை ருசியேற்படும்படி இன்பமயமாகச் செய்தார்கள். "நம் பிரபு ராமன், மஹாகிருபாநிதான், நாம் அவனை சம்ரக்ஷிக்க வேண்டும்" என்று ஆலோசித்து அவர்களும் ஒவ்வொரு நாம ரூபத்துடன் அந்த குஹையின் அருகே வசித்து வந்தார்கள். (84)

அந்த வனம் அழகான தோட்டம் போலவிருந்தது. மல்லிகை போன்ற வாசனையுடன் புஷ்பங்கள் நிறைய பூத்திருந்தன. (ஸகல தேவதைகளும் மதுவித்யை உபாஸகர்கள் சூரியமண்டலத்தை ஆஸ்ரயித்திருப்பதுபோல, மது உண்ணும் காமி வண்டுகளைப்போல அந்த சீதா அன்வேஷணாகவிருக்கும் ராம லக்ஷ்மணர்களைச் சுற்றி வலம் வந்து அவர்களுடைய பாத பத்மங்களில் ஊறும் தேனைப்பருக ஆரம்பித்தார்கள்.) அந்த வண்டுகள் குஞ்சித கீதம் பாடினர்கள். (நாராயணராகிய ஜகந்நாதர் லோபமாகவும் ஈஸ்வரி திருஷ்ணயுடனும், லக்ஷ்மி ரதிராகமாகவும் பகவான் கோவிந்த ரூபமாகவும், அந்த விடத்தில்

விளங்கினார்கள். அப்பேற்பட்ட சீதாராமனை தேவர்களுடன் சேர்ந்த லக்ஷ்மணனை, நான் அடிக்கடி வண்டுரூபமாக வலம் வந்து, பாதபத்மங்களின் தேனை அந்த குருகூர்சடகோபனை சேர மன்னன் குலசேகரன் பருகியது போல பருகுகிறேன். திருவுக்கும் திருவாகிய செல்வா, தெய்வத்துக்கு அரசே, காரார் முகில் வண்ணா, அன்று திருமங்கை மன்னன் அனுப்பிய வண்டு தூதை ஏற்ற நாரணா, என் நெஞ்சுக்குள் கடி தீபா, என் நஞ்சுக்கு நல்ல அமுதம் போல வந்த கூர்மரூபியே, என் பஞ்சுக்குவியலாகிற தௌர் பாக்யத்திற்கு வந்த வின் பொறியே, வரிகொள் வண்டறை பைம் பொழில் மங்கையர் கலியன் தொலிமாலை, நானும் அந்த வண்டும் பாடும் இன்னிசையை, ராஜ அமுதத்தைப் பாடிய நல்லோர்க்கு, வாக்கு தேவதையே, அருவினையடையாமல் காப்பாற்ற மாட்டாயா ?) அந்த தேவர்கள் கந்த மூலபழங்களை வளரச்செய்தார்கள். பிரபு வந்த காலத்தி லிருந்து அழகான பத்ரம், ருசியான பழங்கள், நிழல் தரும் கொடிசெடிகள் அநேகம் உண்டாயின. (85)

அந்த மனோஹரமானதும் உவமையற்றதுமான மிக்க பாக்ய மடைந்த பிரஸ்ரவணகிரி தேவதேவனாகிற ஸ்ரீராம ஸந்நிதியில் லக்ஷ்மணனுடைய போகாஸனத்தில் வீற்றிருக்கும் ஸுரபூபதியின் நிழலில் அதிலாவண்யமாக விளங்கியது. தேவதைகள் சித்த புருஷர்கள் முன் ஜனங்கள் வண்டு, பக்ஷி மிருகம் முதலியவைகளின் சரீரங்களை தாரணை செய்து கொண்டு, பிரபுவுக்கு சேவை செய்ய ஆரம்பித்தார்கள். (86)

எந்த நிமிஷத்திலிருந்து ரமாபதியான ஸ்ரீ ராமசந்திரன் அந்தவிடத்தில் வாசம் செய்ய ஆரம்பித்தாரோ, அந்த வனம் முழுவதும் ஒரே மங்களமயமாக விருந்தது. அழகான ஸ்படிகம் போல பிரகாசிக்கும் கற்பாறை ஒன்று யிருந்தது. அந்தவிடத்தில் ராம லக்ஷ்மண சகோதரர்கள் சுகமாக உட்கார்ந்து கொண்டு காலத்தைக் கழித்தார்கள். (87)

பிரபு தன் தம்பியாகிற லக்ஷிமணனுக்கு அநேக கதைகள் இதிஹாஸங்களைச் சொன்னார். அவைகள் பக்தியைக்கொண்ட தாயும், வைராக்யம், ராஜ நீதி, விவேக ஞானம் ஆகிய விஷயங் களைப் பற்றிய இதிஹாஸங்களாக விருந்தன. வர்ஷ காலத்தின் அடையாளமான மேகங்களின் நிழல்கள் எங்கு பார்த்தாலும் காணப்பட்டன. மேக கர்ஜனைகள் கேட்கப்பட்டன. வெடித்துப் போன பூமிக்கு சுகம் தரும் மேகதாரைகள் (சீதையின் தாபத்தினால் வாடி வதங்கும் ராம லக்ஷ்மணர்களுக்கு அனு

தாபத்தை தெரிவித்து, துக்கத்தை சமனம் செய்வதுபோல) மனத்திற்கு சந்தோஷத்தை உண்டாக்கின. (88)

ஸ்ரீ ராமன் சொல்ல ஆரம்பித்தார். ''லக்ஷ்மணா, அதோ பார். மயில் தன் அழகான இறக்கையை விரித்து ஆடுகிறது. மேகத்தைக்கண்டு, ஆனந்தப்படுகிறது. வைராக்யம் கொண்ட கிருஹஸ்தன் யாராவது விஷ்ணு பக்தனைக் கண்டால் எவ்விதம் ஆனந்தப்படுவானே, அதுபோல இன்பத்தை அடைகிறது.'' (89)

''ஆகாசத்தில் மேகக் கூட்டங்கள் கர்ஜனையிட்ட வண்ணமாக விருக்கின்றன. என் பிரியையான சீதையை விட்டுப் பிரிந்த நான் நடுக்கத்துடன் இருக்கிறேன். அந்தப் பெண் மேக கர்ஜனையைக் கேட்டு பயந்து என்னை தழுவிக்கொள்வாள். அதனால் நானும் அவளும் பயம் தெளிந்தவர்களாக விருப்போம். இப்போது சீதை என்னிடமில்லை. மின்னல் ஒளி மேகத்தில் தோன்றி மறைவதுபோல, துஷ்டர்களின் ப்ரீதி நீடித்து நிற்கிறதில்லை.'' (90)

''மேகங்கள் பூமிக்கு அருகே வந்து மழையை தாரையாகப் பொழிகின்றன. அவைகளைப் பார்த்தால் மஹாவித்வான் வினய ஸம்பத்துடன் அடங்கி, யாவருக்கும் எளிமையாகி உபயோகப் படுவதுபோல விருக்கிறதை ஞாபகப்படுத்துகின்றது. சிறு சிறு மழைத் துளிகளை பெரிய பர்வதங்கள் சகித்துக்கொண்டு இருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் துஷ்டர்களின் வசனங் களை ஸாது ஜனங்கள் சகித்துக்கொண்டு கேட்பதைப் போல விருக்கிறது.'' (91)

''சிறுசிறு நதிகள் பெரு வெள்ளத்தை சுமப்பதுபோல தங்களை பெரிதாக நினைத்துக்கொண்டு வெகு வேகமாக கரைகளை உடைத்துக்கொண்டு போவதைப்பார்த்தால், துஷ்டஜனங்கள் அல்பஸம்பத்தைப் பெற்றவுடன் மரியாதை வியவஸ்தை ஆகிய வைகளை தியாகம் செய்து விட்டுப் (புதுப்பணக்காரர்கள்) போல கர்வத்துடன் விளங்குவது போலத் தோன்றுகின்றனர். பூமியில் விழும் ஜலம் அழுக்கு தூசியுடன் சேர்ந்ததாக விருக்கிறது. அதேபோல சுத்தஜீவனும் மாயையாகிற அவித்யையினால் பிறந்தது முதல் சூழப்பட்டிருக்கிறான்.'' (92)

''ஜலம் சேர்ந்து ஒன்றாக குளம் முழுவதையும் நிரப்பிவிடு கிறது. ஒவ்வொரு துளிபோல ஒவ்வொரு ஸத்குணம் ஸாது ஜனங்களை அண்டி அவர்களை குண ஸம்பன்னர்களாகவும், அடக் கம் உள்ளவர்களாகவும் காண்பிப்பதுபோலத் தோன்றுகிறது. நதியினுடைய பிரவாகம் ஸமுத்திரத்தில் சங்கமமாகி, ஸ்திர

மாயிருப்பதைப் பார்த்தால், பரதந்திர ஸ்வபாவமுடைய ஜீவன் ஸ்ரீ ஹரியினுடைய பாதங்களைப்பற்றி அவருடைய கிருபையினுல் சம்சாரத்திற்கு மீண்டும் திரும்பி வரமுடியாததான மோக்ஷ பதத்தை அடைவதுபோல தோன்றுகிறது.'' (93)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி பிரியா, சீதாபதே, சீதே, மஹாலக்ஷ்மி, நீயும் நானும் பிரும்மருத்ராதி தேவர்களை சொக்கட்டான் ஆடும்போது, நீ என்ன சொன்ஞய்? எனக்கும் ஸ்ருஷ்டி காலத்துக்கு முன்பு ''ஆநித் அவாதம்ஸ்வதயா ததேசம்'' என்கிற வேதவாக்யப்படி உனக்கு காரணத்வம் உண்டு; ''ஜகத் ஸம்ஹரதே சாந்தேதத்தத் காரண ஸமஸ்திதா'' அந்தந்த காரணங்களில் நிலை நின்ற இவளே தக்க காலத்தில் படைக்கிருள், இவளே மூவுலகத்தை முடிவில் அழிக்கிருள் என்று வாதாடின சீதை எங்கே? அவள் என் முன்னுல் வரமாட்டாளா? ஆனுல் வாஸ்தவத்தில் என்ன நடக்கிறது? நீ செயல் முறையில் பகவானிடம் இதை ஒப்பிவித்திருக்கிருய், பாபம் செய்தவர்களுக்கு தண்டனை அளிக்கும் பகவான் உன்னைக்கேட்கும்போது, இவன் தப்பு செய்யமாட்டான் என்று வாதாடுவாள் என்று பகவான் பயந்து உன்னைக் கேட்காமல் சேதனர்களைத் தண்டிக்கிருன். ஆனுல் ஜகத் வியாபாரம் உனக்கும் உண்டானபடியால் உன் ப்ரீதிக்காக அந்த பகவான் உன் வார்த்தைக்கு கட்டுப்பட்டவஞக வசப்படுகிருன். அப்படிப்பட்ட சீதை என்னை ரக்ஷிக்கமாட்டாளா? பிராட்டியே, நான் யாரிடம் புகல்கொள்வேன்? இந்த ஞானமோ முடிவற்றது. இந்த மாயையோ அனுதி- அத்துடன் பிறந்திருக்கும் அவித்யையும் கால தர்மத்தினுல்தான் நாசமடையும். அவ்விதம் நாசமடையும்போது முழுதும் அழியப்படுகிறதில்லை. எனக்கு பக்தியும் கிடையாது. ஆனுல் ஒரே ஒரு எண்ணமிருக்கிறது. அந்த எண்ணமும் அழிவதற்கு முன்பே உன்னிடம் நான் சொல்லிவிடுகிறேன். பகவான், சேதனன் ஆகியவர்களுக்கு அனுதிகால ஸம்பந்தம் உள்ளது. பகவான் இந்த உலகம் ஆகிய இரண்டும் ஸநாதனமான சேர்க்கையை உடையது. ஆகவே ஸத்யம் என்கிற தல்பத்தில் வீற்றிருக்கும் நீங்கள், ஆதிதம்பதிகள் உங்களை அண்டிவாழும் சேதனர்களுக்கும், உங்களால் ஒடுங்கிய சித் அசித்துக்களை விரித்தல் எனப்படும் ஸ்ருஷ்டித்த உலகிற்கும் உள்ள நித்ய ஸம்பந்தத்தை நான் அறிவேன். நீங்கள் சூரியன்

அக்னிபோல் இந்த சேதனர்களுக்கும் உலகத்திற்கும் ஒளி கொடுக்கிறீர்கள். உங்களுடைய ஸங்கல்பத்தால் யாவரும் நிர்மித ஸ்தான பேதம் அடைகிறுர்கள். அப்பேற்பட்ட பெருமாளுடைய சங்கல்பத்திற்கு அனுசரணையாக நடக்கும் எனக்கு, நீங்களே கதி நீங்களே ஞானம், நீங்களே கர்மம், நீங்களே பக்தி நீங்களே ஸர்வமும், ஸாரமும் ஆக இருக்கிறீர்கள். மாயையினுல் நாமரூபங்கள் பல காணினும் நாராயணராகிய ஏகம், ராமநாமம் என்கிறது ஏக நாமமாக விளங்குகிறது. இதுவே எனக்குத் தாரகம். இதுவே நான் உஜ்ஜீவிக்கும் வழி. இதுவே எனது பூர்வாசாரியர்கள் காண்பித்த அஷ்டாக்ஷரத்வய வழி. நீங்கள் என்னை கைவிடக்கூடாது. கெஞ்சிக் கேட்கிறேன். தாயே, தகப்பனே.]

"இந்த பூமி, (பிராட்டியின் கடாக்ஷமாக மரகத பச்சை போல,) பசும் புல்லினுல் அணைக்கப்பட்டு என் மனத்தை புல்லரிக்கும்படி செய்கிறது. அந்த பசும் புல்லினுல் வழி மறைக்கப்பட்டிருக்கிறது. நடைபாதை (என்னை பகவானுகிற தண்டரிடம் காப்பாற்றி) மறைத்து வைக்கிறது. (இதை நினைத்தால் பக்தி இல்லாதவனும், பகவானே சரண்யம், பிராட்டியே அனன்ய கதி என்கிற நம்பிக்கையில்லாத பிரும்மவாதிகள், பாஷண்டிகள் அதிரஹஸ்யமான ஆதி தம்பதிகளின் குப்த சேர்க்கையை விவாதிப்பது போலவும், ஸத்கிரந்தம், (ஸ்ரீ வித்யையாகிற பரபிரும்ம தத்வத்தை) அறிந்தும் அறியாதவர் போலவும், உள்ளே மறைந்து கிடக்கிற ஆத்ம தத்வத்தைப் புரிந்து கொள்ளாத ஆத்ம ஞானி போலவும், பரந்து விஸ்தரித்துக் கிடக்கிற வ்யாப்ய நாராயண தத்வத்தை அறிந்தும் சாஸ்வதமில்லை என்று வாதிப்பது போலவும், மாயை அவித்யை அக்ஞானம் தேர்ச்சியில்லாத யோகம்; குணஹீனமான பிரபன்னயோகம் போலவும்,) கெட்ட வழிகளினுல் அடையப்படாத லக்ஷ்மி நாராயணன், சீதாராமன், ராம (அஷ்டாக்ஷர) தாரகம் குப்தமாக விருப்பது போலவும் தோன்றுகிறது." (94)

"நான்கு ஓரங்களிலும் தவளைகள் சத்தம்செய்கின்றன இந்த த்வனிகள் வேதபாடனம் செய்யும் வித்யார்த்திகளின் கோஷங்கள் போலிருக்கின்றன. எங்கு பார்த்தாலும் புதுப் புதிதான கொடிகள் அநேகம் காணப்படுகின்றன. அவைகளைப் பார்த்தால் அனுதியான சக்தியின் உதவியினுல் ஸாதகனுடைய மனம் தெளிந்து, மாயை அவித்யை, குத்பதாசாரம் இவைகளிலிருந்து விடுபட்டு, பக்திமார்க்கத்தில் ஏற்படுவதான விவேகஞானம்,

பிரபன்ன விவேகம், மஹாவிஸ்வாஸம் ஆகியவைகளை சூசிப்பது போல தோன்றுகிறது.'' (95)

'' மதாரம், ஜவாஸம் செடிகளின் இலைகள் முழுவதும் உதிர்ந்து வெறும் செடிகளாக நிற்பதைப் பார்த்தால், உத்தம ராஜ்யத்தில் துஷ்டர்களின் திட்டங்கள் பலிக்காமல் நாசமடைவது போலத் தோன்றுகிறது. தூசிகளை மிக்க சிரமப்பட்டு தேடினுலும் காணப்படவில்லை. க்ரோதம் நடமாடும்போது தர்மம் பயந்து ஒளிந்துவிடுகிறது போல, பூமியில் தூசிகள் காணப்படுகிற தில்லை.'' (96)

'' எங்கு பார்த்தாலும் தான்யங்கள் நிறைந்து, பூத்து கொத்துக் கொத்தாக தொங்குகின்றன. தான்ய ஸம்பத்லக்ஷ்மியின் அழகு சொல்லவொண்ணுதபடி விருக்கிறது. அந்த ஸம்ருத்தியைப் பார்த்தால், உபகாரியாகிற தனவான் ஸத்ஸம்பத்துக்களை அடைந்திருப்பதுபோலத் தோன்றுகிறது. இரவில் ஒரே அந்தகார மயமாக இருட்டு விளங்குகிறது. அந்த இரவில் மின்மினி பூச்சிகள் சோபையைத் தருவதுபோல டம்பம் கபடவேஷதாரிகள் கூட்டம் கூட்டமாக சோபையைத் தருவதுபோல விருக்கிருர்கள்.'' (97)

'' அதிவிருஷ்டியினுல் வயல்களின் கரைகள் உடைபட்டிருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் ஸ்வதந்திரமடைந்த ஸ்திரிகள் விதிவிலக்கு மரியாதை வரம்புகளை மீறி நடப்பதுபோலத் தோன்றுகிறது. மிக்க சிரத்தை உழைப்புள்ள குடியானவர்கள் நெற்கதிர்களைக் காப்பதின் பொருட்டு களை புல்பூண்டுகளைக் கிள்ளி எறிகிருர்கள். அதைப் பார்த்தால் வித்வான்கள் மோஹம், மதம், தன்மானம் ஆகியவைகளைத் தியாகம் செய்கிறது போல விருக்கின்றது.'' (98)

'' சக்ரவாக பக்ஷிகள் காணப்படவில்லை. அதைப் பார்த்தால் கலியுகம் வந்ததில் தர்மம் பயந்து ஒளிந்துகொண்டருப்பதை ஞாபகப்படுத்துகிறது. பாரபக்ஷமின்றி மழை பயனளிக்காத நிலத்திலும் விழுகிறது. ஆனுல் புல்கூட அந்த நிலத்தில் முளைக்கிறதில்லை. அதைப் பார்த்தால் ஹரிபகவானுடைய சேவகனின் மனத்தில் தகாதவிடத்தில் காமம் ஏற்படாதது போல விருக்கிறது.'' (99)

'' பூமியில் அநேகவிதமான ஜந்துக்கள் நடமாடுகிருர்கள். அவர்களின் சோபை நல்ல அரசாங்கத்தில் ஜனத்தொகையின் பெருக்குபோல காணப்படுகிறது. அங்குமிங்கும் வழிப் போகும் யாத்ரிகர்கள் தங்கள் சிரமம் நீங்குவதற்கு தங்குகிருர்கள்.

அதைப் பார்த்தால் இந்திரிய நிக்ரஹம் ஏற்பட்டபின்பு ஞானம் மனிதனுக்கு நிலைத்து நிற்பதுபோலிருக்கிறது. விஷயங்களில் ஈடுபாடு குறைந்த மனம் அமைதியுடன் இருப்பதுபோல அவர்கள் விளங்குகருர்கள்.'' (100)

[தியானம்

ஹே நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் புகழ்பாடிய நாரணு, விஷ்ணுபத்னி, விஷ்ணோர்ஸ்ரீ, ஸ்ரீயப்பதி, திருவுடை அடிகள் என்று பிராட்டியினுல் சூசிப்பிக்கப்படும் ஜகந்நாராயணு, ராமா சீதா, உங்களை ஆயிரம் சுக்ருத பிரணுமங்கள் முன்னும் பின்னும் பக்கலிலும் நான் செய்கிறேன். பிரபோ, உங்கள் இரண்டு பேருக்கும் உள்ள தடையில்லாத காதல், காடோபகூட சேர்க்கை என்றும் பிரிவற்றது. எல்லையற்ற குணங்களை உடையது. அப்பேற்பட்ட நித்யதம்பதிகளை நான் நமஸ்கரிக்கிறேன். ஹே சீதே, நீ காரணமாயிருத்தலால் அல்லவா நானும் தியானிக்கப் படுகிறேன். உன்னுடன் கூடிய வஸ்துவாகிற நான், எம் பெருமான் என்று அழைக்கப்படுகிறவன், ''ஆநந்தாதயஃ பிரதானஸ்ய'' என்கிறபடி ஆனந்தாதிகள் போல நீயும், தியானத்திற்கு விஷயமாகிற உன் திருவருளும் உன்னோடு கூடி அல்லவா நான் பரத்வத்தை அடைகிறேன். அணைவதரவணை மேல் பூம்பாவை யாகம் புணர்வது என்கிறபடி நம்மிரண்டு பேருடைய திருவிளையாடல் புரியும் படுக்கை சேஷன். அது போல யோகிகளின் ஹிருதயத்திலும் நாம் விளையாடுவோம். வலக் கண்ணில் உள்ள இந்திரன் (பரமாத்மா) இடக் கண்ணில் உள்ள இந்திர பத்னியாகிற பிராட்டி என்கிறபடி நாமிருவரும் இரட்டை ஒன்றெக்கொன்று நிரூபிக்கத்தக்கது. இந்த அன் யோன்ய தம்பதிகளின் விஷயத்தில் வேதங்களும் ராமானுஜனும் விளையாடும் ஸ்தலங்களாயிற்றே. அப்பேற்பட்ட சீதே என்னை யும் ராமானுஜனையும் விட்டு எங்கு போய் ஒளிந்துகொண்டாய்? நான் உன்னைவிட்டுப் பிரிந்து உடம்பில் வலுக் குறைந்து உயிர் பிரியும் மலைத் துண்டம்போல ஜடமாக கிடத்தினேனே. ஹே சீதே, அசுரர்குழாம் சென்று உன்னடிபணியும் தேவமாதர்கள், ஹிதம் சொல்லும் ராக்ஷஸிகள் மற்றைய உன் சகபாடிகளை அருள் நோக்கச் சென்ற சீதே என் மணியே, என் அணியே, குருகூர் சடகோபனின் கற்பகமே, என்னிடம் வாராயோ.]

(ஆஞ்சநேயா, நீதான் எனக்கு ஸேது, பராத்பரம் புருஷ முபைதி திவ்யம் ஆகிற சீதாராமனிடம் பராத்பரம் யன்மஹதோ

மஹாந்தம், தேன இதம் பூர்ணம் புருஷேணஸர்வம், இந்த ஜகம் முழுவதும் உங்களால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. ததோ யதுத்தரதரம் தத்ரூபம் அநாமயம், உங்களைவிட வேறு பரமாம் கதிஎனக்கு யார் இருக்கக் கூடும்? உங்களுக்கு ரூபம் அநேகம். நாமம் அநேகம். ஆனந்தமே உங்களுக்கு ஸ்வரூபம். பரம கருணையே கவசம். நீங்கள் இன்றி நான் எவ்விதம் வாழ்வேன்? உமாசங்கரரே ராமானுஜா, ஆஞ்சநேயரே, நம்மாழ்வாரே, திருமங்கை மன்னனே அருள்புரியமாட்டீர்களா?)

"இங்குமங்கும் சில சமயங்களிலும் வாயு பலமாக அடிக்கிறது. சில சமயங்களில் மந்தமாகச் செல்லுகிறது. அதனுடைய பலத்தினால் ஒன்றுகூடிய மேகங்கள் பிரிந்து சிதறுகின்றன. ஒரு கெட்டபுத்ரன் குலத்திற்கு ஸம்பவித்தால் குலத்தின் பரம்பரையான உத்தம தர்மங்கள், ஸதாசாரங்கள் நாசமடைவது போலத் தோன்றுகிறது." (101)

"சில சமயங்களில் பகல்பொழுதிலும் கூட அடர்ந்த மேகக் கூட்டங்களின் காரணமாக இருள் படர்ந்து, சூர்யன் பல சமயங்களில் மறைக்கப்பட்டும், காணப்பட்டும் விளங்குகிறான். இதைப் பார்த்தால் கெட்ட சேர்க்கையை அடைந்த ஞானவான் தன் ஆசார அனுஷ்டானங்கள் நஷ்டமடைவது போல விருக்கிறது. அதேமாதிரி நல்ல ஸத்ஜன சேர்க்கையை அடைந்தவன் ஸ்வயம் பிரகாசமாக சூர்யன்போல பிரகாசிக்கிறான்." (102)

"லக்ஷ்மணா, இதோ பார். வர்ஷருது சென்றுவிட்டது. பரம சுகத்தை தரும் சரத்ருது வந்துவிட்டது. இந்த பூமிமுழுவதும் காஸப் புல்லினாலும் வெண்மையான புஷ்பங்களாலும் நிரம்பி சோபை தருவதாயிருக்கிறது. வர்ஷருதுவின் கிழத்தனமாகிற நரைமயிர்களை இந்த வெண்மைநிறம் கொண்ட புஷ்பங்களும் காஸப்புல்லும் பிரகடனப்படுத்துவது போலிருக்கிறது." (103)

"அகஸ்திய நக்ஷத்திரக் கூட்டங்கள் ஆகாயத்தில் உதயமாகி, வழிமார்க்கத்தில் தேங்கும் ஜலத்தை வற்ற அடிக்கச்செய்து ஜலமில்லாதபடி உண்டாக்குகின்றன. (பாத்ரபாத மாதத்தில் அமாவாஸை கழிந்த ஸப்தமியன்று இந்த நக்ஷத்திரக் கூட்டங்கள் —Canopus—உதயமாகின்றன.) இதைப் பார்த்தால் லோபத்தை வரட்சி செய்யும், நாசமடையச் செய்யும் ஸந்தோஷமாகிற ஆத்ம திருப்தி போலவிருக்கிறது. நதிகளும் குளம் குட்டைகளிலும் நிர்மலமான ஜலம் சோபையுடன் எங்கும் காணப்படுகிறது. அவைகளைப் பார்த்தால் மதம் மோஹம் நாசமடைந்த ஸாதுக்களின் நிர்மலமான ஹிருதயம் போலவிருக்கின்றது." (104)

"ருசியுள்ளதும் நிர்மலமான நதி குளம் குட்டைகளில் ஜலம் கொஞ்சம் கொஞ்சமாக வற்றிக்கொண்டு போகிறது. அதைப் பார்த்தால் விவேகஞானி தன் அபிமானம் என்கிற மமகாரம் அஹங்காரம் முதலியவற்றை தியாகம் செய்வது போலிருக்கிறது. ஆம். சரத்ருது வந்துவிட்டதை தெரிவிப்பதுபோல கஞ்சன பக்ஷிகள் வந்துவிட்டன. ஸமயம் இதுதான், (காமாக்ஷியின் புண்யகடாக்ஷத்திற்கு இதுதான் தருணம்) என்று ஜகத்திற்கு பிரகடனம் செய்வதுபோல சுக்ருதங்கள் அதிருஷ்டமாக வந்து சேருகின்றன (105)

[தியானம்

ஹே லக்ஷ்மிநாராயணு சீதாபதே, ராமா, உங்களை ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்! என் பிரியமான சீதே, உனக்கு, என்னைப்போல ஸ்வரூபவ்யாப்தியும், என் திருமேனியை விட்டு இறையாகிற நீ அகலாமையில்லாததையும், ஸ்வரூப ஸ்வ பாவங்களால் என்னைப்போல ஒன்ருயிருந்தாலும் உனக்கு பிரத்யேகமான தயை என்கிற குணம் என்னிடம் இல்லையே, நான் என்ன செய்வேன்? ஸத்யவ்ரதம் என்கிற ஆஸ்ரித ரக்ஷணம், பகவத் பாகவத ஸம்பந்தம், நீயும் நானும், நானும் நீயும், யாவும் நான் என்கிற ஞானபக்தி கொண்ட ஆஸ்ரிதர்களை காப்பாற்றுவது நம் இருவருக்கும் ஏற்பட்ட விலக்ஷணமான பொது உடமை அன்ருே! இருந்தபோதிலும் "ஸ்வேதகேது" என்கிற ஸர்வ உண்மையாகிற பகவான், சேதனன், உலகம் ஆகிய மூன்றும் ஒன்ருக இணைக்கப்பட்டு நான் உன் ஹ்ருதயனுக துரியா வஸ்தையில் ஸதா அடைந்திருக்கிறேன். இப்போது என்னை விட்டு நீ தனித்திருந்தால் நான் எவ்விதம் என் மெய்விரதத்தை பூர்த்திசெய்வேன்? கிருபை, தயை என்றும், தாய்ப்பூனை குட்டியை எடுத்து அணைவதுபோல, நான் யாரை அணைத்துக் கொள்வேன்? சுக்ரீவன் என்னை அடைந்தான். அதனுல் அவனை ஸம்ரக்ஷித்தேன். வாலி என்னை அடையவில்லை. அதனுல் அவனை நான் ஸம்ஹரிக்க நேர்ந்தது. பரிக்ரஹிக்க முடியவில்லை. ராவணனை நான் எதிர்பார்த்தும் அவனும் வரவில்லை. ஆனுல் மஹாபாகவத உத்தமனுன விபிஷணன் வந்தான். அவனை சேஷனுக ஸ்வீகரித்தேன். நீயோ உன் ஸ்திரிவர்க்கத்தை ஆஸ்ரயிக்கப்பட்டும், ஆஸ்ரயிக்கப்படாமலும் ஸ்வீகரித்தாய். அந்த மேம்பட்டகுணம் எனக்கு இல்லையே, நான் என்ன பண்ணுகிறது?]

(ஆஞ்சநேயா ராமானுஜா, வேதாந்த தேசிகரே, என்னை சுடும் வினை உணர்ந்தும், எழில் தாமரை முகத்தாள், அன்றும் என்றும் எனக்கு அன்பராய் என் இசை கீதங்களைக் கேட்டு, மகிழ்ந்த மகிழ்வித்த என் பிராட்டி, பராசரரால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட ஸ்ரீதேவி, சதக்ருதுவினுல் மனம்மொழி மெய் ஆகியவைகளாலும் புகழப்பட்ட ஸ்ரீதேவி, என் அற்பமதியினுலும் சேவையினுலும் மகிழமாட்டாளா? பெரிய தாய்ப் பூனை மாதிரி குட்டி பூனையாகிற என்னிடம் தயை கொண்டு வரமாட்டாளா? என் மாலிருஞ் சோலை மாமன் வண்ணனை வணங்கும் தொண்டராகிய எனக்கு நல்வினை எப்போது வரும்?)

"எங்கு பார்த்தாலும் சகதி இல்லை; தூசியுமில்லை, எங்கு பார்த்தாலும் பூமி நிர்மலமாகவிருக்கிறது. இதைப் பார்த்தால் நீதி ரீதியில் நிபுணனுகிற அரசன் ராஜ்யம் நடத்தினுல், களங்கமில்லாமல் அரசாங்க விவகாரங்கள் செல்வதுபோல விருக்கின்றன. ஜலம் குறைந்து வருவதைக் கண்டதும் மீன் குஞ்சுகள் வியாகுலம் அடைகின்றன. இதைப் பார்த்ததும் விவேகசூன்யமாகவுள்ள குடும்பி தனம் செலவழிந்து போவதைக் கண்டு வருத்தப்படுவானே, அதுபோல விருக்கிறது." (106)

"கனத்த மேகங்கள் இன்றி ஆகாயமும் நிர்மலமாகிவிருக்கிறது. அந்த மேக ஹீனமான ஆகாயம் ஒரு விஷ்ணுபக்தன் பகவத் பாகவத ருசியைக் கண்ட பின்பு விஷய ஆசைகளையும் போகங்களையும் தியாகம் செய்வது போல விருக்கிறது. அங்கேயும் இங்கேயும் சில மழைத் துளிகள் சிறிதாக பெய்துகொண்டிருக்கின்றன. இதைப் பார்த்தால் பல ஜன்மங்களுக்குப்பின் ஞானவானுகிற ஒரு சேதனன் பகவானும் பிராட்டியுமே சரணம் என்று பக்தி பிரபன்னமடைந்து, அந்த மகாத்மா வாஸீதேவரே ஸர்வம் என்று நிச்சயம் பண்ணி ஹரிபகவானை ஆராதிப்பது போல விருக்கின்றது." (107)

"சரத்ருது வந்து விட்டதை அறிந்து அரசன், தபஸ்வி, வணிகன், பிச்சை கேட்டு ஜீவிப்பவன் ஆகிய நால்வகை ஜனங்களும் சந்தோஷம் அடைந்து, தங்கள் நகரமாகிய கிருஹத்தை விட்டு திரிந்து கொண்டு செல்கிருர்கள். இதைப் பார்த்தால் ஹரிபக்தி ஹரியினுடைய பாத சரணங்களில் தஞ்சம் என்கிற விஸ்வாசத்தை அடைந்த நான்குவித ஆஸ்ரமவாசிகள் (பிரும்மசார்யம், கிருஹஸ்தம், வானபிரஸ்தம், ஸந்நியாஸம்) இனி ஸாதனையாகிற சிரமங்கள் கொண்ட நானுவித பரிஸ்ரமங்களை தியாகம்

செய்து விட்டு, நாராயண பரர்களாக திரிந்து கொண்டிருக்கிறார்களே அதுபோல இவர்கள் காணப்படுகிறார்கள்.'' (108)

''எந்த பாக்ய விசேஷத்தினால் மீன் குஞ்சுகள் ஆழமான ஜலங்களில் சுகமாக வாழ்கின்றதோ, அதேபோல (''மாம் ஏகம் சரணம்வ்ரஜ'' என்கிறபடி) ஸ்ரீஹரி பகவானுடைய பாதசரணங்களில், (''என் நெஞ்சே நினைத்திடு, தொழுதிடு, மாயன் மணி வண்ணனன் வள்ளல்; என் அம்மா, லக்ஷ்மி மருவும் ரமாபதி;'' என்று) பக்தி வசம் கொண்டு நாராயண ஏகபராயணர்களாக விருக்கும் மஹாபாக்யமுள்ள வைஷ்ணவ சீலர்கள் ஒருக்காலும் கவலையென்னும் கடும் வினைக்கு ஆளாக மாட்டார்கள்போல, (தேன் மணநாறும் தண்சேறையெம் பெருமான் தாளை நாளும் உள்ளத்தே காணும் என்னமுதுவை,) அறிந்து நிர்பயமாக நிரபரனாக, வாழ்வது போலவிருக்கின்றது. இந்த புஷ்ப தடாகத்தில் மிக்க பெருநீர் கொண்ட குளத்தில் எங்கு பார்த்தாலும் அழகிய தாமரை புஷ்பங்கள் பூத்து சோபித்திருக்கின்றன. அப்பேற்பட்ட பத்மவனாலயம் தயையுடன் கூடிய ஹரிபகவானைப் போல, (சௌசீல்ய சௌலப்ய வாத்ஸல்யம் ஆகிற குணங்களோடும் விளங்கும்) ஸகுண பிரம்மமாக குணரஹிதர், குணத்திற்கு அப்பால் விளங்கும் பிரபு (நாராயணன், ஸர்வலோக சரண்யம், பிராட்டியுடன் கூடியிருந்தால் தயையையே ஸ்வரூபமாகவிருப்பது போலவும்,) (வலுவில் தாய்ப்பூனை குட்டிப்பூனையை அணைப்பது போலவும்) தயை காருண்யம் கொண்ட ஸகுண சீல நாராயணனாக விருப்பது போலத் தோன்றுகிறது.'' (109)

[தியானம்

ஹே ராமா, சீதா நாராயண மஹாலஷ்மி ஸமேதா, எவ்வளவு காலம் பொருத்திருந்தும் உங்கள் கிருபை எனக்கு இன்னமும் கிடைக்கவில்லையே. ''என் நிலை மிகவும் மோசமாகிக் கொண்டு வருகிறது. சீதே உன் நினைவு எனக்கு பரிபூர்ணமாக விருந்த போதிலும் உன்னை அடைவது மிகக் கஷ்டமாயிருக்கிறது. ராவணனின் நெஞ்சில் நெருப்பென்று நின்ற சீதே, நான் செய்வது ஒன்றுமில்லை. நீயாக மனம் கசிந்து என்னிடம் வரவேண்டும். உன்னுடைய நாமங்களும் பகவானுடைய நாமங்களைப் போல ஆனந்தமானவை, உன்னையும் ஸம்சாரார்ணவ தாரிணி, பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே என்று ஸ்வாயம்புவும், நம்மாழ்வரும் சொல்லியிருக்கிறார்கள். பட்டரும் ஸ்ரீஸூக்தியில் பரமம்பதம் வாவீதீர்ய என்று சொல்லுகிறார். ஹேஜலதிதனயா,

 

லக்ஷ்மி, இந்திரா, ஸ்ரீவத்ஸவக்ஷா, முகுந்த பத்னீ, என்னை ஜன்மசக்கிரத்திலிருந்து, இந்த பிணி வருத்தங்களிலிருந்து ரக்ஷிக்கமாட்டாயா? மர்க்கடக நியாயப்படி சிறு குரங்கு தாயைத் தவ்வி கட்டி அணைப்பது போல, நான் உன் பாதங்களை பிடித்துக்கொண்டிருக்கிறேன். தயை செய்யமாட்டாயா? வேங்கடேச தயதே, தயாபரி, தியாகராஜயோசு ஹ்ருதய நிவாஸினி, நாராயணி, ரமா, உமாபதி தயவு செய்.]

"வண்டுகள் மதுவை உண்டு ரீங்காரம் செய்கின்றன. அவைகளுடைய உத்தம கீதம், பூவும் சந்தனமும் நிலவும் தென்றலும் (கிருஷ்ணனிடமுள்ள மையலும் எவ்விதம் ராதையைக் கலக்குகின்றதோ, எவ்விதம் கலங்கிய ராதை பெருமூச்சு விட்டு சிரிப்பது, அழுவது, கோபிப்பது, ஸரஸ மொழிகள் பகருவது, 'மாதவா உன் பாதமே கதி, என்னைக் கைவிடுதல் முறையோ, சீதமதியும் என்னை சுட்டு வாட்டுவது நீ அறியாயோ," என்று எவ்விதம் ராதை பரிதவித்தாளோ, அதுபோல) என்னை தடுமாட்டம் அடையச் செய்கிறது. (காட்டுக்கு வந்த பின்பு சுமந்தரரிடம் சேதி சொல்லி அனுப்பிய ஸமயம் "என் கிளி, என் மைனு இவைகளை சரியாகக் கவனித்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிய சீதை அப்பொழுதும் அவளுடன் கொஞ்சி விளையாடும் பக்ஷிகளைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள்.) அப்பேற்பட்ட கிளி, மைனு குயில், மயில் போன்ற பக்ஷிகள் சீதையின் பிரிவால் வாடி கதறுகின்றன. இரவு வந்து விட்டதை அறிந்து மனத்தில் பெரும் பீதி கொண்ட சக்ரவாக தம்பதிகள் துக்கத்தை அடைந்து பரிதவிக்கின்றன. இவைகளைப் பார்த்தால் பிறர்களின் ஸம்பத்து பெருக்குக்களைக் கண்ட துஷ்டஜனங்கள் பொருமையினுல் வெந்து போகிருர்கள், என்று சொல்லும்படியிருக்கிறது." (110)

"சாதக பக்ஷிகள் தாகம் அதிகமாகி கதறுகின்றன. உமா சங்கரத்ரோஹிக்கு எவ்விதம் சுகம் ஆனந்தம் கிடைக்காதது போல அவர்களுடைய விலலாபமும் அதிகரிக்கிறது. ஸரத்ருதுவின் உஷ்ண தாபங்களை இரவில் உதிக்கும் சந்திரன் அபகரிக்கிருன். மஹாபாவங்களைச் செய்த பாதகிகள் ஸாது ஜனங்களைப் பார்த்த மாத்திரம் தங்கள் பாவங்களை விலக்கிக் கொள்வது போல விருக்கிறது." (111)

"சகோர பக்ஷிகளின் ஸமுதாயம் சந்திர உதயத்தைக் கண்டு ஆனந்தித்து அதனுல் அவைகள் அந்த சந்திரனையே பார்த்த வண்ணமிருக்கிருர்கள். இதைக் கண்டால், பரம சுக்ருதத்தின்

விளைவாக பகவத் தர்சனம் கடாக்ஷிக்கப் பெற்ற ஹரிபக்தன், (ராஜநாராயணன்,) எவ்விதம் பேச்சு மூச்சில்லாமல் பகவானையே தரிசனம் செய்துகொண்டு பேச்சு மூச்சில்லாமலிருப்பானே அதுபோல காணப்படுகிறது. கொசுக்களும் விட்டில் பூச்சிகளும் குளிர் பயத்தினுல் நாசமடைகின்றன. அது பிராம்மண த்வேஷம் கொண்டவர்களின் குலம் நாசமடைவது போலவிருக்கிறது.'' (112)

''வர்ஷருதுவின் காரணத்தால் எந்த ஜீவர்கள் பூமியில் நடமாடுகின்றனவோ, அவை எல்லாம் சரத்ருது வந்தவுடன் நஷ்டமாகிவிடுகின்றன. இதைக் கண்டால் ஸத்குரு கிடைத்த பின்பு சம்சயங்களும் மதிமயக்கங்களும் அறுந்து நாசமடைகின்றது போலவிருக்கின்றன.'' (113)

''வர்ஷருதுவின் மழை கடைசியாக முடிந்துவிட்டது. நிர்மலமான சரத்ருது வந்துவிட்டது. நான் சீதையின்றி இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். என்னைப் பிரிந்து சீதைவாடி வருந்திக் கொண்டிருப்பாள். (மலய பர்வதத்தின் மிருதுவான காற்று, குவிந்து மலர்ந்த பூச்செடிகளின் காக்ஷி, குயிலினங்களின் இன்னிசை வனமெங்கும் ஒளியை வள்ளலாகக் கொடுக்கும் மதியின் சீதகிரணங்கள் என் விரஹதாபத்தை அதிகரிக்கின்றன.) சீதையைப்பற்றி ஒரு தகவலும், அவள் அகப்படுவாள் என்பதற்கு உரிய அடையாளங்களும் காணப்படவில்லை. அவளுடைய பெயரை ஜபித்துக் கொண்டு, அவளை எவ்விதம் அடைவது என்று ஆவலுடன் இருக்கும் எனக்கு, ஏதாவது ஒரு தகவல் கிடைத்தால் போதும்; எனக்கு அவள் இருப்பிடம் தெரிந்தால் போதும். காலனே என்னுடன் யுத்தம் செய்ய வரட்டும். அவனை வென்று (என் மரகதமணியை, பிரேமைரத்ன மணியாகிற) சீதையை, (என் ரதியை) நான் மீட்டுக் கொண்டு வருவேன்.'' (114)

[தியானம்

ஹேகுமாரனை அணைத்த உமையே, பழம் நீ என்று ஸுப்பிரமண்யரைச் சொன்ன என் மஹாலக்ஷ்மியே, என்தாயே, குஹனை மருவிய உமாலக்ஷ்மியே என்னிடம் வரமாட்டாயா? அன்று ஓங்காரவடிவமாக விருந்த விஷ்வக்ஸேனன் வந்திருக்கிறுன். அவனுக்காகவாவது சீதே நீ, நேயநிலைக்கதவம் தாள் திறவாய். இவ்விதம் குஹன் கணேசன் ஆகிய இருவர்களிடமும் அன்பு செலுத்தி எல்லோரும் பிரமித்து நிற்கும்படி ஆக்கிவிட்டாயே.

அம்மா, நான் ராதையின் வீட்டுக்கு உன்னை வஞ்சித்துச் சென்றேன் என்று நினைத்து, விடியற்காலையில் திரும்பிவந்த என்னைப் பார்க்கமாட்டேன் என்றுயே, அந்த சீதே என்ரமாதேவி எங்குபோய் ஒளிந்துகொண்டிருக்கிருள்? என்பதரே, என்னிடம் கிருபை செய்யமாட்டாயா? நான் காளிங்கன் போன்ற மஹா சர்ப்பத்திற்கு அனுகிரஹம் செய்ய சென்றிருந்தேன் என்று வ்யாளராகச் சொன்ன பெருமானை நீ கடாக்ஷிக்கமாட்டாயா? இந்திரா, கமலாலயா நான் ஸாமஸ்வரூபி. நீ உத்கீதி அல்லவா. நான் பித்ருகணம்; நீ ஸ்வதாதேவி அல்லவா; பத்மா, சாஸ்வத மானபுஷ்டி தேவதையே, நான் ஸர்வாத்மக ஆகாசமாகிற விஷ்ணு அதில் நீ ஸ்வர்க்கலோகமல்லவா, என்னைவிட்டு நீ எங்கு தனியாகச் சென்ருய்? ஸ்ரீதரனுகிற நான் சசாங்கன். அக்ஷய மான ஸ்ரீதேவியாகிற நீ காந்தியல்லவா? ஹேஅன்பாயினி, லக்ஷ்மி நீதானே ஜ்கத்சேஷ்டையாகிற த்ருதி. ஹரிபகவானுகிற நான் ஸர்வகாமி. (எங்கும் தடையின்றி செல்லும்) வாயு அல்லவோ தனியாக என்னைவிட்டு விட்டு நீ எங்குசென்ருய்? நான் புவனேஸ்வரன். நீயோ என்னை ஆளும் தேவி. ஜனகசுதா, இந்திரா, ஜகந்நிவாஸினி ரமாதேவி என்னிடம் வரமாட்டாயா? உன் ஹிருதயத்தில் உள்ள கோபத்தை விடு. கோமளமான கரங்களை உடைய ஜனகபுத்ரி, உன் பராயணமாக விருக்கும் என்னை, அபராதங்கள் செய்த என்னை, ஸுதனு, மன்னித்துவிடு. உன்புத்ரர்களான குஹன் கணேசன் என்னுடன் வந்திருக் கிருர்கள். அவர்களுக்காக நீ தயைகொண்டு என்னிடம் கிருபை செய். இனி உன்னைவிட்டு நான் பிரிந்துபோக மாட்டேன். என்னுடைய பக்கம் உன்னைவைத்துக் கொண்டு மாதவன் என்கிற பெயருடன் விளங்குகிறேன் இது ஸத்யம். நளினுக்ஷி, பத்மாக்ஷி, ஸாத்விக ஜனங்கள் லக்ஷ்மி பதாம்புஜத்தை யோகம் செய்து அடையவேண்டும் என்று புகழ்கிருர்களே; அன்று மார்க்கண்டேய ரிஷி ஜகதாம் ஜனனியாகிற உன்னை கோபம் துறந்தவள்; பிராணேஸ்வரனுகிற நாராயணரிடம் எப்பொழுதும் காடோபகூடமாகவும் சிரித்துக்கொண்டும் ஸதா ஐக்ய சிவதம்பதி களைப்போல ஆனந்த ஸாகரமாக விருப்பவள் என்று புகழ்ந் தாரே, அந்த சீதே, ரமா, என் உமா, வைஷ்ணவி என்னிடம் நீ தயை செய்யமாட்டாயா? நான் உன்னை உன்புத்ரர்களின் பெயரைச் சொல்லிக் கேட்கிறேன். குசலவர்களின் மேல் பக்தி கொண்ட சீதா கிருபைசெய். குஹனும் விஷ்வக்ஸேனரும்

என்னுடன் சேர்ந்து உன்னை ஸ்துதி செய்கிறார்கள். என் ராமரமா, வா, ஓடிவா என்னிடம். என்னை மருவ ஓடிவா.]

ராமன் மீண்டும் கதறினார், விப்ரலம்ப ஸ்ருங்காரம் நிரம்பிய வராக (அன்று "வஞ்சக" மிருகவேட்டைக்கு நான் சென்றேன் என்கிற சொல்லை நம்பாமல், ராதையின் வீட்டுக்குச் சென்றேன் என்கிற காரணத்தினால் என்மீது கோபித்துக் கொண்ட ரமா தேவி, பங்கஜவாஸினி, "உன்பிம்பாதர அமுதை நான் பருக வேண்டும்." என்று சொன்னபோது நீ துளசிதாஸருடைய கஸ்தூரிகாந்த திலகத்தையே நோக்கிக் கொண்டிருந்தாயே, கல்யாணி, என்னிடம் ரோஷத்தையும் கோபத்தையும் விட்டுவிடு. நீ எங்கு சென்று ஒளிந்துகொண்டிருக்கிறாய்? எங்கே இருந்தாலும் எனக்காக ஜீவித்திரு. என் பக்தர்களுக்காக ஜீவித்திரு, ஹேஜகந்நிவாஸனி, உன்பிரணயகோபம், ரோஷம் ஆகிறவற்றை விட்டுவிடு. க்ஷீராப்திராஜகன்யே, தரணிஸுதே. ஜனகபுத்ரி என்னையும் என்பக்தர்களையும் காப்பாற்று" என்று) ராமன் சீதையைக் குறித்து அழுதார். "ஹேலக்ஷ்மணா, நான் சாரங்கபாணியாகவிருந்தும், (என் தேவி) எனக்கு கிருபை செய்ய முன்வரவில்லை. (உன்னைப் போன்ற ஜகத் பக்தர்களுக்கு கிருபையைக் கட்டாயம் செய்வாள். அம்புஜாக்ஷி, நாம் இருவரும் யத்னம் செய்து அவஸ்யம் கமலாகிருஹம் அடைவோம்.) அவளைத் தேடிப்பார்ப்போம். சுக்ரீவனும் நமக்கு உதவிசெய்வான். ஆனால் அவனும் சீதையைப்போல என்னை மறந்து விட்டான். அவனுக்கு ராஜ்யம் மீண்டும்கிடைத்துவிட்டது. பொக்கிஷத்தை அவன் அடைந்துவிட்டான். நகரத்து ஜனங்கள் அவனை வெகுவாகக் கொண்டாடுகிறார்கள். அவனுடைய ஸ்திரிருமையை அவன் மீண்டும் கிடைக்கப் பெற்றான். ஆகையால் அவன் தீனனான என்னை காரிய ஸாமர்த்தியம் போருதவன் என்று நினைத்து மறந்தே போய்விட்டிருக்கிறான். (சீதைக்கு என் மீதுள்ள கோபம், ரோஷம் ஆகிய ஒன்றும் தணியவில்லை. அவளுடைய கிருபையையும் எனக்கு கிட்டவில்லை.) நானோ அவளின்றி உயிர்வாழேன். அவள் இல்லாமல் இந்த ஜகம் முழுவதும் உயிர்தரிக்காது. இந்த ஜகம் முழுவதையும் நான் எரித்துவிடுகிறேன். (115)

எந்த பாணத்தால் வாலியை நான் கொன்றேனோ, அதே பாணத்தால் செய்த உபகாரத்தை மறந்தவனும் என்னை பிரியம் செய்யாமல் அலக்ஷ்யம் செய்தவனும் மூடாத்மாவுமாகிற சுக்ரீவனைக் கொன்று, இந்த ஜகம் முழுவதையும் நன்றியில்லாத

ஜீவர்கள் அனைத்தையும் நான் நசித்துவிடும்படி செய்கிறேன். (நான் சீதையை இழந்தவன், ராஜ்யத்தை இழந்தவன், சோகத்தை உடையவன் என்று அவன் நினைத்துக் கொண்டிருக்கிறான்'') என்று சொன்னார். என் பிரபு சிவன் உமையைப் பார்த்துச் சொல்கிறார். ''உமா, எந்த பிரபுவினால் இந்த சகல பிரபஞ்சமும் உயிர்வாழ்கின்றதோ, (எந்த சீதையினால் இந்த ஜகம் ஆதாரமாகவும் பிரபு ஸ்திரமாகவும் விளங்குகிறாரோ, அந்த பிரபுவினுடைய மஹாகிருபையை மறப்பவன், அவர்களுக்குப் பிரியம் செய்யாதவனாகி, மதம் மோஹம் அடைகிறான். இவைகளை நாசம் செய்வதற்கு அவர்களுடைய கிருபையைத் தவிர வேறு கதியில்லை.) அப்பேற்பட்ட பிரபு ஜகஜ்ஜன்னி, ராமன் சீதை ஆகியவர்களுக்கு காமம் கிரோதம் ஸ்வப்னத்திலும் இருக்கிறதாக நினைத்துக்கொள்ளாதே. அவர்கள் மஹாக்ஷமையை அடைந்தவர்கள். லீலா மரத்திரத்தில் ஜகத்ஸ்ருஷ்டி ஜகத்ஸம்ஹாரம் செய்பவர்கள்.'') (116)

''என்னைப் போன்ற யோகிஜனங்கள் ஸ்ரீ ரகுநந்தனுடைய சரணங்களே கதி, அதுவே பரமாம் கதி, சீதாராமனே பரமார்த்தி, அவர்களின் திருப்தியே பரமஸந்துஷ்டி என்று நினைக்கிறார்கள். அப்பேற்பட்ட என்னைப் போன்ற யோகிஜனங்கள் இந்த ராம சீதா நாடகத்தை லீலை என்று அறிவார்கள். அவர்கள் செய்யும் பிரணய ரஹஸ்யத்தை அறிந்தவர்கள், அவர்களைப்போல இன்புறுவார்கள்.'' லக்ஷ்மணன் பிரபுவின் கோபத்தையும், அதனால் அவர் கிரோதமடைந்ததையும் நன்கு தெரிந்து கொண்டான். உடனே பகவானுடைய இங்கிதத்தை தெரிந்து நடக்கும் லக்ஷ்மணன் பாணத்தைப் பூட்டின தனுஷ்ஷுடன் கிளம்பினான். கிஷ்கிந்தாபுரியை நோக்கிச் சென்றான். (117)

லக்ஷ்மணனுடைய காரிய ஸாமர்த்தியத்தைத் தெரிந்த பகவான் ரகுபதி மீண்டும் சுக்ரீவனிடம் தயையின் எல்லையை அடைந்தவராகி, அத்யந்த கருணையினால் ''லக்ஷ்மணா, சுக்ரீவனுக்கு பயத்தைக் காண்பித்து அவனை இங்கு அழைத்து வா, ஆனால் அவனுக்கு தீங்கு ஒன்றும் செய்துவிடாதே'' என்று ஆக்ஞையிட்டார். (118)

இங்கே கிஷ்கிந்தாபுரியில் பவனஸுதன் ஹனுமான் தன் மனத்திற்குள் பக்தபோஷகனாகிற ஸ்ரீராமசந்திரனிடம் வியாகுலம் அடைந்தான். (எவ்விதம் ஸ்ரீராமனுக்கு அபராதம் நேரிடாமலும், சுக்ரீவனும் ராமகார்யத்தை மறந்து விட்டிருக்கிறபடியால் அவனுக்கு மஹாத்மாவான ராகவனுடைய பிரஸாதம் மீண்டும்

எவ்விதம் கிடைக்கப்பெறும் என்று சிந்தனை செய்து வியாகுலமடைந்தவராக ஆனன்.) சரி, நாம் சுக்ரீவனைக்கண்டு நேரில் விண்ணப்பித்து விடவேண்டும், என்று நினைத்தவனாக, ஆஞ்சநேயன், வாயுகுமாரன், (அஞ்சனையின் செல்வன்,) ஓடினன் சுக்ரீவனிடம். தலைவணங்கினன். அவனுக்கு நான்கு விதங்களான ஸாமதான பேத தண்டம் ஆகிய நான்கு ராஜதர்மங்களின் சூக்ஷ்மங்களை விளக்கினன். (119)

சுக்ரீவன் ஹனுமத் வசனங்களைக் கேட்டு, அபகாரம் செய்தவனாக தன்னை நினைத்து, பயம் கொண்டான். தன்னை விஷய போகங்களில் ஈடுபட்டு மதியிழந்தவனாகக் கருதினன். ராம சரணங்களின் பெருமையை அறிந்த சுக்ரீவன் ஹனுமாரை அழைத்து வேண்டினன். "மாருதசுதா எங்கு எங்கு வானரர்கள் இருக்கிறார்களோ, அங்கு தூதர்களை அனுப்பு." (120)

"அவர்களுக்கு கடுமையான என் ஆக்ஞையைத் தெரிவி. பதினைந்து தினங்களுக்குள் அவர்கள் யாவரும் இவ்விடம் வந்து தீரவேண்டும். அவ்விதம் அவர்கள் வராவிடில் நான் அவர்களை என் கையினால் வதம் செய்துவிடுவேன், என்று செய்தியை அறிவிக்கச் சொல்" என்று சுக்ரீவன் கட்டளையிட்டான். அதன் பிரகாரம் ஹனுமான் தூதர்களை அழைப்பித்து, அவர்களை தகுந்தபடி ஸம்மானம் செய்தான். (121)

ஹனுமான் எல்லோருக்கும் பயம், ப்ரீதி, ராஜநீதி ஆகிய எல்லாவற்றையும் விளக்கினன். சகல தூதர்களும் ஹனுமாரை சிரம் வணங்கிச் சென்றார்கள். இந்த சமயத்தில் லக்ஷ்மணன் கிஷ்கிந்தைக்கு வந்து சேர்ந்தான். அவனுடைய கோபத்தைக் கண்டு, வானரங்கள் பயந்து ஒடிஒளிந்து கொண்டன. (122)

[தியானம்

ஹே வேங்கடபதே, ரங்கநாயகி சமேத ரங்கநாதா, வரத வெங்கடேசா, நீதான் சரணம். ஸர்வபல ப்ரதநாராயணா, ஸர்வலோக மஹேஸ்வரி, ஜனார்த்தனா, கோவிந்தா, நீங்கள் இருவர்களும் பிரம்மபூத ஆத்மாவாகவும் சரீரமாகவுமிருக்கிறீர்கள். அசேஷ ஜகத்திற்கு பதியாகவிருக்கும் சீதாராமா, பரமேஸ்வர, பரமேஸ்வரி உங்களுடைய சுத்தமான ரூபத்திற்கு நாங்கள் சரணமடைகிறோம் உங்களுடைய பிரும்ம ரூபத்தை வஸிஷ்டவிஸ்வாமித்திர வாமதேவ அகஸ்தியலோபா முத்திரை பிரஹஸ்பதி பிருகுகியாதி முதலானவர்கள் ஸதா தியானம் செய்து கொண்டு சந்தோஷமடைகிறார்கள். நீங்கள் இருவரும்

ஸர்வபூத ஸர்வஸத்வ மனோரதமாக விருக்கிறீர்கள். ஜகத்பதே, என்னுடைய தவத்தின் பலத்தைக் கொடுப்பதற்காக என் திருஷ்டிபதத்தில் நீங்கள் வரவேண்டும். எப்போது வருவீர்கள் ?]

அதன் பிறகு லக்ஷ்மணன் தனுஷ்ஷை டங்காரம் செய்தான். அவனுடைய வில்லின் நாணொலி சப்தம் நகரம் முழுவதும் பரவியது. அவனுடைய டங்கார சப்தம் கிஷ்கிந்தாபுரியை நாசம் செய்யும் மேககர்ஜனையைப் போலக் கேட்டது. அந்த சப்தத்தைக் கேட்ட கிஷ்கிந்தாபுரி ஜனங்கள் வியாகுலம் அடைந்து, மஹா கோபத்துடன் ஜ்வலிக்கும் லக்ஷ்மி வர்த்தனனாகிற லக்ஷ்மணனிடம் ஓடிவந்தார்கள். (123)

அங்கதன் ஓடிவந்து லக்ஷ்மணனுடைய பாதசரணங்களில் நமஸ்கரித்து வினயத்துடன் க்ஷமையை வேண்டினான். "எங்களுக்கு அபயம் கொடும்" என்று ராமானுஜனை வேண்டினான். நாங்கள் தீனர்கள். உங்கள் கரகமல உதவியின்றி ஒரு க்ஷணமும் நாங்கள் வாழமுடியாது. பரம சந்தோஷமடைந்த லக்ஷ்மணன் அவனை வாரி அணைத்து, பயத்தைப் போக்கி, அபயஹஸ்தத்தினால் அவனுடைய தலையைத் தடவி ஆசீர்வதித்தான். சுக்ரீவன் லக்ஷ்மணனுடைய க்ரோத பூர்வமான வார்த்தைகளைக் கேட்டு அத்யந்த வியாகுலத்துடன் ஹனுமாரைப் பார்த்துச் சொன்னான் : 124)

"ஹனுமாரே, நீதான் சாமர்த்தியசாலி. என் வசனங்களைக் கேள் நீ தாரையைக்கூட அழைத்துச் செல். லக்ஷ்மணனை நமஸ்காரம் செய்து அந்த ராஜகுமாரனை சமாதானம் அடையச் செய்." அதைக் கேட்டு ஹனுமார் தாரா சகிதம் லக்ஷ்மணனை சந்தித்து, அவனுடைய சரணங்களை வந்தனம் செய்துவிட்டு, பிரபு ஸ்ரீராமசந்திரனுடைய புகழை கானம் செய்தான். (125)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி, உங்களுடைய பரத்வம், அபார அனவத்ய குணங்களோடு அனாதி காலமாக இருந்தபோதிலும், நீங்கள் அர்ச்சாவதாரத்தில் எளியவர்களுக்கு எளியவர்களாக விருக்கிறீர்களே அது ஆச்சரியம், ஆச்சரியம். என் பிரபு ராமன் லக்ஷ்மணனுடன் மரத்தின் கீழே உட்கார்ந்திருக்கும் போது, வானரர்கள் மரத்தின் மீது மேல் உட்கார்ந்து பழம் சாப்பிட்டுக் கொண்டு தோலிகளையும் சொட்டைகளையும் உமிழ்ந்து எறிந்து கொண்டிருந்தன. அதே வானரங்களின்

யோசனையை பிரபு ஸ்ரீராமசந்திரன் விபீஷணனை அங்கீகரிக்கும் விஷயத்தில் கேட்டார். அப்பேற்பட்ட எளியவரான ராமன், ஸம்ஸ்தானர், எல்லாவற்றிற்கும் முடிவாக விருப்பவர்; துருவனுக்கு அழியாத துருவபதம் என்னும் உயர் பதத்தை அளித்த ஸ்தானதரராகிய ஸ்வாமி என்னிடம் கிருபை செய்வாரா?]

(நான் இன்று, சீதே, மஹாதேவி, உன்னைத் தேடி அலைகிறேனே. நீ அகப்படமாட்டாயா? ராஜ்யம் இழந்தவனாக, சகாயமற்றவன், எளியவர்களோடு பழகுகிறவன், என்று எண்ணி நீ என்னை தள்ளிவிடமாட்டாயே. அம்மா, உன்னிடமிருந்துதான் நான் இதை கற்றுக் கொண்டேன். உன்னால் அல்லவா நான் மகிமை பெற்று ஸ்ரீவிபாவனர் என்கிற நரமத்தை அடைகிறேன். உன் குணங்கள் அனவதியாகவும் அளவிடமுடியாதபடியும், துதிப்பவரின் மதியை அற்பமாக்கிவிடுவதாகவும் இருக்கின்றன. உன்னுடைய பழைய ஸங்கேத ஸ்தானமாகிற நிகுஞ்ச மண்டபத்தில் நான் எவ்வளவு தடவை உன் நாமத்தை ஜபம் செய்து, உன் வரவை ஆவலுடன், உன் மராளி நடையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதை அறிகிறாயா? தயையுடன் என்னிடம், உன் உபயவிபூதி நாயகனாகிற என்னை ஸ்ரீயப்பதியாக மீண்டும் ஆக்கமாட்டாயா? என் சீதே, என் ராதே, என் லக்ஷ்மி, என் பத்மா, என் தயாபரி, ஓடிவா, என்னிடம் ஓடிவா.)

தாரையும் ஹனுமாரும் மஹாவினயத்துடன் லக்ஷ்மணனை தங்கள் அரண்மனைக்குக் கூட்டிவந்தார்கள். அவனுடைய பாத சரணங்களைப் பூஜை செய்து, ராமானுஜனை சிறந்த ஆஸனத்தில் அமரும்படி செய்தார்கள், அந்த சமயம் கபீஸனாகிற சுக்ரீவன் ராமானுஜனுடைய பாத சரணங்களில் நமஸ்கரித்து, அவனுடைய கரகமலங்களைப் பிடித்து தன் கழுத்தில் வைத்து அணைத்துக் கொண்டு அவனுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றான். (126)

சுக்ரீவன் கிருதாஞ்சலியுடன் மீண்டும் சொன்னான். "நாதா, விஷய போகங்களைப்போல கடுமையான எதிரி யாரும் இருக்கமுடியாது. மனிதனுடைய நிலைத்த நிலைமையை பாழடையச் செய்து மதம் அடையச் செய்கிறது. என்னை அக்ருத்க்ஞனாகவும், குற்றவாளியாகவும் தாங்கள் நினைக்க வேண்டாம் எப்பேற்பட்ட உத்தம விரதம் கொண்ட முனி ஜனங்களின் மனத்தை க்ஷண மாத்திரத்தில் மாயையாகிற மோஹம் அழித்து பங்கப்படுத்துகிறது. இதை (போகேந்திரனாகிற தாங்களும் அறியாதவர்களா?" என்று பரம வினயத்

துடன் சுக்ரீவன் வார்த்தைகளைச் ஸமர்ப்பித்தான். சுக்ரீவனுடைய வினதியைக் கண்ட ராமானுஜன் சுகத்தை அடைந்தான். தான் வந்திருக்கும் காரியத்தையும் ராமனுடைய வருத்தத்தையும் லக்ஷ்மணன் எடுத்து உரைத்தான். (127)

அந்த சமயத்தில் வாயுகுமாரன், (அஞ்சனுஸுதென்) ஹனுமான் சீதையைத் தேடும் விஷயத்தில் தூதர்களை அனுப்பிய யேற்பாடுகளை விவரமாகச் சொன்னுன். (128)

வானரராஜன் சுக்ரீவன், அங்கதன் இன்னும் அநேக வானர பிரமுகர்கள் சகிதம், சந்தோஷத்துடன் லக்ஷ்மணனுடன் கூடச் சென்று, ராமானுஜன்முன் சென்று வழிகாட்டுபவனுக, ரகுநாதன் இருக்கும் இடத்தை அடைந்தார்கள். (129)

[தியானம்

ராமாசீதா, சீதாராமா, நாராயணு, உங்களை உமாசங்கரரை முன்வைத்து, ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். பிரபோ, உம்முடைய கிருபை அனந்தமாகவும் பரிபூர்ணமாகவும் கிடைக்க வேண்டும்.

சீதே, லக்ஷ்மி, ஶ்ரீதேவி, உன்னைக்யாதி பிருகு ஆகியவர்களுக்கு புத்ரியாக அவதரித்தாய் என்று மைத்ரேயருக்கு பராசரர் சொன்னபோது, மைத்ரேயர் "அது எப்படி ஏற்பட்டது? லக்ஷ்மீ க்ஷீராப்தியில் அம்ருதமதன ஸமயத்தில் ஆவிர்பவித்தாள் என்று சொல்லப்படுகிறதே," என்று சொன்னுர். அதற்கு பராசரர் "த்வஜோத்தமா, லக்ஷ்மி ஜகன்மாதா. விஷ்ணுவினுடைய ஶ்ரீதேவியானவள் அனபாயினி. அவள் நித்யம், எவ்விதம் பகவான் ஸர்வவியாபியாக விருக்கிருரோ, அதுபோல மஹாலக்ஷ்மி அவருடன் சேர்ந்து ஸர்வவியாபகமாக விளங்குகிருள்." என்று சொன்னுர். அப்பேற்பட்ட சீதே, லக்ஷ்மி, என்முன் வரமாட்டாயா? ராகம் என்கிற சங்கீத ஸமுத்திரத்தில் கடைந்து எடுக்கப்பட்ட அம்ருதமான ஸ்தோத்திரத்தினுல், ராதே, சீதே, லக்ஷ்மி உன்னை ஆராதித்து உன் திருப்திக்காக சந்தோஷமடையச் செய்யவேண்டும். நீ என்னை விட்டு எவ்விதம் பிரிந்திருக்கலாம்? நான் அர்த்தம்; நீ வாணியாகிற நாதபிரும்மம் அல்லவா? உன்னை போகம் செய்யாமல் கோடிக்கணக்கான ரதிதேவிகள் இருந்து என்ன பிரயோசனம்? உன்னை வேத மஹாமந்த்ரரஸம் என்று சொல்லுகிருர்களே. என்னிடம் வரமாட்டாயா? அத்யத்புத ஸ்ருங்காரமய ராதே, காதல் என்னும் தீவிலே, அன்று நான் கண்டு எடுத்த பெண்

மணியே; காதல் என்னும் சோலையிலே சீதை என்று நின்ற கற்பக பூந்தருவே· கோலமாக்குயிலே, மாதரசே, செல்வப் பெண்ணே, வானவர்கள் புகழும் உயர் இன்ப வாழ்வே, என்னிடம் புரு மாதிரி பறந்து வரமாட்டாயா? நான் ஸமுத்திரம்; நீதானே அதன் கரைகள். நியில்லாமல் உலகம் விஷம்போல விருக்கிறது. எங்கேயாவது ஹரிசரணம் பதிந்த ஜயதேவரோ, தியாகராஜரோ, கோபிகைகளோ, கவி பாரதியோ, கம்பரோ, ஒரு நிமிஷம் அவனேயோ அவனடியாரையோ அகலாது விளங்குவாரோ! என் கோமள கலாவதியே, உன் அருளைப் பற்றி நான் ஸ்துதி செய்யவில்லை; உன் தூய உள்ளத்தை நான் அறியவில்லை. விஷ்ணுவின் திருவுள்ளத்துக்கு பிடித்தபடி நான் நடக்கவில்லை என்கிற கோபம் கொள்ளலாமா? உனக்கு என்னை அடைய வழிதெரியவில்லையா?]

(பிரபு ராமா, சீதா, இன்னும் எனக்கு புண்ய பாபசம்பந்த மான கர்மம் அதன் காரணமாகிற அக்ஞானம், அதன் காரண மாகிற முக்குணங்களாகிற பிரகிருதி, அதன் காரணமாகிற அனுதி அசித் ஸம்பந்தம், அந்த ஸம்பந்தம் அழிய சரணுகதி, விமல மனங்களால் செய்யும் பக்தி, உன்னை முன்னிட்டு உன் பாதங்களையே வழிகாட்டியாக அமைத்து திவ்ய தம்பதிகளாகிற உங்கள் பாதங்களை உபாயமாக அத்யவஸித்து, ஜனுர்த்தனரை சரணமாக அடையும் என்னிடம் தயை செய்யமாட்டாயா? உங்கள் ப்ரீதியை உத்தேசித்து உகந்து செய்யும் என்னையும், என் கிரிசைகளையும் ஆதரிக்கமாட்டாயா? லோக மரியாதையைப் பண்ணுவதில் ஆர்வம்காட்டிய துளசிதாஸர்கூட உன்னை தர்மஸேது என்று சொல்லுகிருரே, ராமானுஜரும் தேசிகரும், தேவி, " தவ " என்று சொல்லி தன் முன்னிலையில் எழுந்தருளி யிருக்கும் தாயாரை (அர்சா மூர்த்தியை) "ப்ரியாய மம விஷ்ணோஸ்ச" என்னும் பிரமாணத்தை ஒட்டி, சரணமடைந்து பராசரரைப் போல நான் உன்னைக் குறித்து, விஷ்ணுவை குறிக்கிறேன். சீதையைக்காட்டி ராமனை உய்த்து உணர்கிறேன். அப்பேறபட்ட சீதே என் முன் பிரகட்னப் படுத்தமாட்டாயா? ஆஞ்சநேயா, நீ தான் ஸாமர்த்தியசாலி தயை செய்.)

சுக்ரீவன் ரகுநாதனுடைய சரணங்களில் விழுந்து விழுந்து நமஸ்கரித்தான். கைகளை கூப்பிக்கொண்டு ஆனந்த பரவச மடைந்தவனுக, பயம் தெளிந்தவனுக, (ராமனுடைய மனதில் சீதையாகிற மன்மதபாணம் ஊடுருவிப் பாய்வது போல, காதலன் உள்ளத்தில் உறையும் நங்கையின் உருவம்போல

ஹரியின் சரணகமலமே சரண் என்று நினைத்திருந்த சுக்ரீவன் (ராக ஸமுத்திரத்திலிருந்து கடைந்து எடுக்கப்பட்ட வினயம், பச்சாதாபம் என்கிற அம்ருதம்போல) வார்த்தைகளைச் சொன்னாள். "பிரபோ, நான் கால விளம்பனம் செய்தேன் என்று நினைக்கக்கூடாது. உம்முடைய மாயை, உம்முடைய உதாரஹ்ருதயம் ரொம்ப ரொம்ப பலமுள்ளது. (மனைவியை விட்டு வெகுகாலம் பிரிந்தவனாகிற இவன், அனுபவிக்கட்டும் என்கிற) உதாரஹ்ருதயத்துடனிருந்த ஸ்ரீராமா, உம்முடைய ஸங்கல்பத்தை, பிரேரணையை யாரால் அறியமுடியும்? இப்போது என்னிடமும் தயையுடன் கூடியவராக விருக்கிறீர். உம்முடைய கிருபை கிடைத்தால் அல்லவா ஜீவனுக்கு அனாதியாகிற அசித் ஸம்பந்தம் ஒழிகிறது." (130)

"ஸ்வாமி, உம்மால் நிர்மிதம் செய்யப்பட்ட இந்த விஷய போகங்களை தேவதைகள், மனுஷ்யர்கள், முனிகணங்கள்கூட சுலபமாகத் தள்ளிவிட முடியுமா? (காம குடாரனே,) என் ஜன்மத்தைப் பாரும். காமம் நிறைந்த பசு மிருகங்களில் நான் அத்யந்த காமியாகிற வானரம். அதிலும் மூர்க்கன். உத்தமநாரி நயனங்களுக்கும் மன்மத பாணத்திற்கும் இறையாகாதவன், யாராவது இருக்க முடியுமா? அவ்விதமிருக்கும் மனுஷன் (பகவான் சங்கரரைப்போல) பயங்கரமான க்ரோதம் என்கிற இருட்டில் ஜாக்கிரதையாக முழித்துக்கொண்டு காமத்தையும், மன்மதனையும் வென்று, ஊர்த்வரேதஸ்ஸாக (என் பிரபு ஆஞ்சநேய பிரும்மசாரியைப்போல,) இருப்பவன் உம்முடைய ஸ்வரூபமாகிற ரகுநாத ஸ்வரூபமல்லவா? நான் அவ்விதம் எப்படி ஆகமுடியும்?" (131)

"ஸ்வாமி, (நான் தாங்கள் கிருபையினால் மீண்டும் மனிதனாக ஆக்கப்பட்டுக் கிரஹம், மனைவி, ராஜ்யம் ஆகியவை அடையப் பெற்றேன். தன் ஸ்திதி நிலையை அடைந்த பின்பு) எந்த மனிதன் லோபத்தினால் கவரப்பட்டு, தன் சுகமே பெரியது, இனி உலகம் எவ்விதம் போனால் நமக்கு என்னவென்று உதாஸினனாகவிருப்பதும் சஹஜம்தானே. ஐயோ, என் பிரபு ரகுநாதன் கஷ்டப்படுகிறார். நமக்கு எதற்கு இந்த சுக போகங்கள் என்று உதறித் தள்ளும் தியாக புத்தியை உடைய மனிதன், ஹே ரகுநாத்ஜி, உமக்குச் சமமான தேவத் தன்மையை உடையவன் அல்லவா? ரகுராம், இந்த உத்தம குணம் தியாகம் ஸாதனை அப்யாஸங்களினால் வரக்கூடியதில்லையே. அனாதிகாலமாக வரும் உம்முடைய கிருபையினால் அல்லவோ யாரோ ஒருவன் அதை ஸம்பாதிக்கிறான்." (132)

பார்த்தார் பிரபு ரகுபதி. (தன் ஸ்ருஷ்டியின் மேன்மையை நேரில் கண்டார்.) மனத்திற்குள் சிரித்துக்கொண்டார். அவர் அருள்வாக்கு சொன்னார். "தம்பி, சுக்ரீவா நீ பரதனைப்போல எனக்குப் பிரியன் அல்லவோ! நான் எவ்விதம் உன்னைத் தள்ளி விடுவேன்! இப்பொழுது நீ செய்யவேண்டியது, உன் மனத்தை ஒருமைப்படுத்திச் சிறந்த உபாயத்தினால் சீதையைப் பற்றிய தகவலை அறிய வேண்டியதுதான்" என்றார். (133)

இந்தவிதமாக சம்பாஷணைகள் நடந்துகொண்டிருக்கும் சமயம், வானரக் கூட்டங்கள் நானா திசைகளிலிருந்தும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வர்ணங்களும் பலவித மாக விருந்தன. எங்குப் பார்த்தாலும் வானரக் கூட்டங்கள் வந்துகொண்ட வண்ணமாக விருந்தார்கள். (134)

சிவன் சொன்னார், "உமா, அந்த வானரச் சைன்யங்களின் கூட்டத்தை நான் பார்த்தேன். அவர்களின் எண்ணிக்கைகளைச் செய்பவன் மூர்க்கனாகத்தான் இருக்கவேண்டும். சகல வானரங் களும் ஓடிவந்து ஸ்ரீராம பாதங்களில் சரணம் அடைந்து, நமஸ் கரித்து, அந்த நிரதிசய ஸ்ரீராம ஸ்ரீமுகத்தைத் தர்சனம் செய்து, அவருடைய சௌந்தர்ய மாதுர்ய அழகுகளை பருகியவண்ண மிருந்தார்கள். தங்களை மஹாபாக்யம் படைத்த கிருதார்த்தர் களாக அவர்கள் நினைத்தார்கள்." (135)

"அப்பேற்பட்ட மஹத்தான வானர சைன்யத்தை ஒவ் வொருவராக, மஹா க்ருபாளு, (பூர்வமதுர பாஷணனாகிற) ஸ்ரீராமன் இன்சொல்லாலும், இன்முகத்தாலும் வரவேற்றார். குசல பிரஸ்னம் செய்யப்படாத ஒரு வானரமும் இருந்ததாகக் காணப்படவில்லை." துளசிபிரபு சொல்கிறார்: "நான் சொல்வது வரம்பு மீறி அதிக்ரமித்த விஷயம் என்று நினைக்கக்கூடாது. என் பிரபு ரகுநாதன் மஹா க்ருதக்ஞன். எளியவர்களிடம் எளியவனாகவும், ஸர்வ ஸுலபனாகவும் இருக்கக்கூடிய ரகுராம் விஸ்வரூபத்துடன் ஸர்வ வியாபகனாக விருக்கிறவன். அவன் எடுக்காத உருவம், இல்லாத ஸ்தானம் எங்கு இருக்கிறது?" (136)

[தியானம்

சீதாராமா, மஹாலக்ஷ்மி நாராயணா, ராஜராஜேஸ்வரி, அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். ஹே பிரும்ம மஹா விபூதியே, உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். "மஹா விஷ்வக்ஸேனர், குருகுஹன் ஆகியவர்களின் மூர்த்தியே, சீதே, என்சித் சக்தியே எங்கேயம்மா நீ ஒளிந்துகொண்டிருக் கிறாய்? உன் சிஷ்ய ஜன வன கீர்த்தியே, என்னிடம் ஸுமுகமாக

வரமாட்டாயா? உன்னை யோகிகளின் ஹ்ருதய பிரகாசினி, பகவானிடம் சித்த பிரவிருத்தி செய்பவள், மாயா மோஹ அபஹாரிணி, போக யோக ப்ரதாயினி, நிபுண சக்தி தேவதை, ஆகம ரஹஸ்ய தத்வ அனுஸந்தானம், என்னை ஆனந்தப்படுத்தும் ஶ்ரீதேவி, என்று சொல்லுகிறார்களே; நீ இப்படி என்னிடம் அதிவிரக்தியாகவும், மஹா உதாஸீனமுள்ளவளாகவும் இருக்கலாமா? தயாபரி, நீதானே என் ஆத்மேஸ்வரி. உன் கிருபையினால் அல்லவோ, ஈஸ்வரன் ஜீவன் என்கிற பேதபுத்தி உண்டாகிறது. மஹா விபூதியே, உன்னை ஆஸ்ரயித்தவர்கள் ஆத்ம தத்வாதி போதன ஸாதன ஸம்பத்தை அடைகிறார்கள். என்னிடம் கருணை செய்யமாட்டாயா?'' சீதே, ஜானகிநாதனாகிற ராமன் ஆத்மகோடி பக்தனாக உன் ஆரக்த ஸ்வேத மிஸ்ர சரணங்களில், உன் விரஹதாபத்தினால் அன்று வனமாலி ராதையைக் குறித்து தவித்தானே, அந்தி ஆநிரைமேயக் கண்ணனாகிய நான் இன்று வானர சகிதம் உன் வரவை மிக்க ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். என்னை புனர் மாதவன் புனர் ராமனாக பண்ணமாட்டாயா? என் ஆத்ம உதய ரவிசந்திரிகா, மாதவஶ்ரீ என்சித் ஆனந்த ராதையே ஓடிவா.]

''நாங்கள் என்ன செய்யக்கடவோம்? எங்களுக்கு ஆக்ஞை செய்யவேண்டும்?'' என்று அதிவினயத்துடன் அந்த வானரர்கள் கேட்டார்கள். அப்பொழுது சுக்ரீவன் அவர்களுக்கு எல்லா விபரங்களையும் சொன்னான். ''வானர சமூஹங்களே, இது என் பிரபு ஶ்ரீராமச்சந்திரனுடைய கார்யம். இது என்னுடைய கடுமையான ஆக்ஞை. இதை எவ்விதமாவது நிறைவேற்றியாக வேண்டும். வானரங்களே, நான்கு திக்குக்களிலும் சஞ்சரித்து சீதையைத் தேடிப் பார்க்க வேண்டும்.'' (137)

''ஜனக ஸுதாவாகிற சீதையைக் கட்டாயம் கண்டுபிடித்தாக வேண்டும். என் தோழர்களே, ஒருமாத தவணைக்குள் நீங்கள் திரும்பி வந்துவிட வேண்டும். அதுமாத்திரமில்லை. ஒரு மாதத்திற்குள் சீதையைப் பற்றிய தகவல் கொண்டுவராது போனால் என் கையால் நீங்கள் கொல்லப்படுவீர்கள். இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்,'' என்று கட்டளையிட்டான். (138)

அரசரான சுக்ரீவனுடைய வசனங்களைக் கேட்ட வானர சைன்யங்கள் உடனே பல திக்குக்களில் சஞ்சரிக்க ஆரம்பித்தார்கள். அந்த சமயம் சுக்ரீவன், அங்கதன், நளன், ஹனுமான் ஆகிய முக்யர்களை அழைத்துச் சொன்னான். (139)

"தீரபுத்தி, தீர்க்காலோசனை உள்ளவர்களும், உண்மையாக உழைப்பவர்களும், மிக்க காரிய சாமர்த்தியமுள்ள நீல அங்கத, ஹனுமான், ஜாம்பவான் நீங்கள் நன்ருகக் கேளுங்கள். ஸ்ரேஷ்டமான வீரர்களுடன் நீங்கள் தக்ஷிணதிக்கை நோக்கிச் செல்லுங்கள். சீதையின் தகவலை ஒவ்வொருவரிடமும் கேட்டு அறிந்து வாருங்கள்." (140)

"மனம், கர்மம், வசனம் ஆகிய உபாயங்களால் சீதையை, (ஜகன்மாதாவை, மஹா விபூதியாகிற மஹாலக்ஷ்மியைத்) தேடுங்கள். இது என் பிரபு, என் கிருபாளு, ராமசந்திரனுடைய காரியம். உங்களுடைய முயற்சியினுல் இனிது நிறைவேற்றப்பட வேண்டும். குளிர்காலத்தில் வெப்பம் அடைய வேண்டுமானுல், ஸூரியனுக்கு முதுகுப்புறமாக உடம்பைக் காட்டவேண்டும்; அக்னியின் முன்புறமாகத் தேகத்தைக் காட்டி வெப்பம் அடைய வேண்டும். ஆனுல் ஸ்வாமியின் தாஸனுகிறவன் தன் துக்கங்களையும், வீண்பொழுதையும் தியாகம் செய்துவிட்டு, ஸர்வ பாவத்துடன் அந்தரங்க சுத்தியுடன் மனம், வசனம், கர்மம் ஆகிற வழிகளால் எஜமானரின் காரியத்தை நிறைவேற்றிவைக்க வேண்டும்." (141)

"மாயையாகிற விஷய போகங்கள், மமகாரங்கள், அகங்காரங்கள் இவைகளை தியாஜ்யம் செய்துவிட்டு, பரமாம்கதி என்கிற வைகுண்ட பிராப்திக்காக சதா இவ்வுலகில் முயற்சிசெய்து கொண்டு வரவேண்டும். அவ்விதம் செய்வதால் இந்த வாழ்க்கையில் ஏற்படும் தாபதிரயங்களும் அழிந்து பவஸம்பவமாகிற ஜனன மரண சக்ரசுழலில் அகப்படாமலும், சோகப்படாமலும் நித்யமான மோக்ஷ ஆனந்தத்தை அடையலாம். இந்தத் தேகத்தை யத்ருச்சையாக நாம் அடைந்த ஜன்ம லாபத்தினுல், இதர எல்லா காமங்களையும் நிராஹரித்துவிட்டு ஸ்ரீராமன் ஒருவரையே ஆசையாக வரித்து, வைத்து, நிரந்தரம் பஜனை செய்து நாம் இன்புற்று வாழ்வோம்." (142)

"குணக்கடல், குணுக்யன், குணுேத்தமன், மஹா பாக்யவான் என்று யார் அழைக்கப்படுகிருன் தெரியுமா? எவன் ஒருவன் ரகுவீரனுடைய பாத சரணங்களில் மிக்க அனுராகம் கொண்டு தன்நிலை மறந்து ஸதா ஆனந்தம் அவைகளே என்றும், பரமார்த்தம் அவைகளே என்றும், ஸாம்ராஜ்ய போகங்கள் அவைகளே என்றும் நம்பி வாழ்கிருனே, அவனே ஸர்வகுண சீலன். மஹாப்பேறு படைத்தவன். (எவனிடத்தில் யோக மாயையினுல் ஸ்ருஷ்டிக்கப்படும் பஞ்சதன் மாத்திரைகள், காலம்

கர்மம், குணங்களின் விசேஷமான வீர்யம் போக ஐஸ்வரியங்கள் நிரம்பப்பட்ட இந்த மஹா விபூதியாகிற உலகம் ஆகியவற்றில் பற்றிய ஆசைகள் இல்லையோ, அவனிடத்தில் பகவானும், பிரும்மமும் ஸாத்வதாம்பதி மஹா விபூதியுடன் கூடிய நாராயணர் சந்தோஷமடைகிருர். அந்த பகவானிடம் ஸர்வ குணங்களும் அடங்கி, உபசாந்த சக்தியாகவும், அவரிடம் ஸ்வராஜ்ய லாப ப்ரதிபூர்த ஆத்மாவாக மாயையினுல் ஆக்கப் பட்ட ஸத்வரஜதமாதி குணங்கள் அடங்கி, ஆத்ம ஆனந்த யோனியாக விளங்குகின்றது. அப்பேற்பட்ட பிரபு வாயுவின் கதிபோல எங்கும் சஞ்சரிப்பவராக விருந்தும் இந்த ஸஜ்ஜன பக்தனிடத்தில் நிலைத்து நிற்கிருன். அப்பேற்பட்ட மஹா பிரபுவான நாராயணருக்கு என் சீதாராமனுக்கு, க்லேசங்கள் இல்லாமல் சிரமமின்றி செய்யப்படும் ராம நாம உச்சாரணம் போல மிகமிக சுலபமான காரியத்தைச் செய்துவிட்டு, அந்த காரியத்தின் பலனை நாராயண ப்ரீத்யர்த்தமாகச் செய்தேன் என்று நினைக்கிறவன் தனது கர்மத்தை நாராயண ஆராதனம் என்று அர்ப்பிக்கிறவன், வேருக்கு தண்ணீர் வார்த்தால் சகல இலை கொடி தண்டு, பூ, காய் பழம் ஆகிய எல்லாவற்றிற்கும் தண்ணீர் உணவு பிரயோசனம் ஏற்படுவது போல, அந்த அற்பகாரியத்தினுல் பிரபஞ்சம் முழுவதும் வியாபிக்கப்பட்ட விஷ்ணு பகவான் மாத்திரம் திருப்தி அடையப்பட்டால், இந்த பிரபஞ்சங்கள் முழுவதும் திருப்தி அடையப்பெறுகின்றன. அப்பேற்பட்ட பிரபு, என் சீதாராமன், ஸத்வ குணத்தை அவலம்பித்து, ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காக அவதரித்திருக்கிருர். அப்பேற்பட்ட ஏகம் ஆராதனம் விஷ்ணும் ஸர்வேஷாம் ஆத்மனஸ்சக்ஷுு என்கிறபடி, அனந்தனுடன் கூடிய நிர் குணன், குணேஸனுடைய காரியத்தை மஹா பாக்யத்தால் நாம் அடையப்பெற்று அதைப்பூர்த்தி செய்வோமாகில் நம்முடைய துர்பாக்கியங்கள் எப்பொழுதும் தலைகாட்டாமல் நாசமடையுமே.) ஆகையால் இந்த வார்த்தைகளை ஞாபகம் வைத்துக்கொண்டு ஸ்ரீ ராம சீதா சரணங்களில் பிரேமையை வைத்து, (அவர்களை நம்மிடத்தில் சதாகாலமும், கடல் உள்ளவரையும், நிலம் உள்ள வரையும், ஆகாயத்தில் சந்திர சூரியர்கள் கிரஹ நக்ஷத்திரங்கள் உள்ளவரையிலும், அவினுசியான பகவான் சங்கரர் உமையுடன் கூடியிருப்பதுவரையிலும் ராம நாம தாரகம் உள்ளவரையிலும், என் பிரபு சீதாராமன் பக்த அனுராகியாக, நம்மைத் தேடி ஓடிவருவதற்கு, நினைத்துப் பார்ப்பதற்கு நமக்கு ஆனந்தம்

தருவதற்கு, இந்த சீதா அன்வேஷணம் என்கிற கார்யத்தை ஜயத்துடன் முடித்து வரவேண்டும்'' என்று கண்ணீர் பாஷ்பங்கள், மஹாகிருதத்ஞை, சேவகத்தன்மை எஜமான விஸ்வாசம், பரபிரும்ம மஹாவிபூதியைப் பற்றிய ஞானம் கொண்டு, சீதாராம பக்தி பரவசனாக சுக்ரீவன் வார்த்தைகளை அருளினான்.) அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு, அந்த நான்கு வானர ஸ்ரேஷ்டர்கள் தலைவணங்கி, ஆக்ஞையை சிரஸில்தாங்கி ஸ்ரீ ரகுராயைப் பூர்ணமாக நமஸ்கரித்து மிக்க சந்தோஷத்துடன், ஜய கோஷத்துடன் புறப்பட்டுச் சென்றார்கள். (143)

[தியானம்

ஹே ராமா சீதா, நாராயணா, மஹாலக்ஷ்மி சமேதா, உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரபோ, தேவி, வினயமாக ஸ்துதி செய்யும் என்னை நீ ஆட்கொண்டு உன் அணைப்பில் சேர்க்கவேண்டும். ஸம்பிரதாய ஸதாசார்ய கடாக்ஷத்தினால் ஏற்படும் உங்களுடைய முக்த முகாரவிந்தம், நீலரத்னம் போல விருக்கும் பாராவதாரராம கார்மேகத்தினிடையே பறக்கும் நாரைக் கூட்டத்தைப்போலவும், வெண்மையாக ஜ்வலிக்கும் ஹாரம்போலவும் விளங்கும் சீதே, என்னிடம் தயை செய்ய மாட்டாயா; சீதே, மஹாலக்ஷ்மி, உனது நடையின் ஓசையோ, சந்தடியின்றி மருவும் ஸ்தனங்களோ, என் உள்ளம் மகிழும்படி உன் குண அழகு பூஞ்சோலையையோ, என்று நான் நேரில் காண்பேன்? திருமாலிருஞ்சோலை அழகன் மார்பில் வடிவாய் நின்ற வலமார்பினில் வாழ்கின்ற மங்கையே, ஹரி மரகதம்போல விருக்கும் ராமனிடம் ஜாம்பூநதபா போல விருக்கும் சீதையே, உன் புகல் இன்றி எவ்விதம் அழகிய பரவாஸுதேவனுடைய இன்பக்கடலை நான் அனுபவிக்க முடியும்? ராஜகோபாலா, ராதையே, கோமாதாவே, உன் கிருபை வடிவான ஸங்கல்பமின்றி என்றும் வற்றாத கடலாகிற சுத்த ஸத்வ ஆத்மகமாய் பிரகாசிக்கும் ஸ்வயம் பிரகாசமாயிருக்கும் பகவான் பிராட்டி சம்பந்தம் எப்படி அம்மா எனக்கு நிலைபெறும்? அன்று தத்தாத்ரேய பிரஹ்லாத * ஸம்வாதத்தில், எனக்கு பரநிந்தை கிடையாது. பரஸ்துதி இல்லை. எனக்கு முக்குணங்களைக் கொண்ட நரஸ்துதி கிடையாது. நான் எல்லோரையும் இன்புற்றிருக்கச் செய்வதற்கு மஹாத்மாவான பரவாஸுதேவரூபமாக இந்த ஜகம் முழுவதையும் பார்க்கிறேன். தான் என்கிற மமதையை அழித்து, ஸர்வ

---

* மஹாபாரதம்

ஹிதைஷியாக விருந்து, விகல்பமான மனமில்லாமல், அந்த மனத்தை ஸத்வம் என்கிற அகங்காரத்தில் நிலைக்கச் செய்து, அந்த மஹத் என்னும் அகங்காரத்தை மாயை, மூலபிரகிருதி ஆகிய பிராட்டியிடம் சேர்ப்பித்து, வைகாரியானவனும் ஸத்வத்ருக்கான புருஷன் தன்னையும், பிராட்டியின் நினைவாகிற மனத்தையும் ஆத்மாவாகிற பரவாஸுதேவனிடம் நிலைக்கச் செய்து, ஆத்மவிருத்தம் என்று சொல்லப்படும் பகவத் பரனுக, நாராயண பரனுக ஒருவித காரிய ஸங்கல்பமின்றி பிரஹ்லாதன் நாரதர் யுதிஷ்டிரரைப் போல வாழ்கிறேனே, உனக்கு இது தெரியாதா? உங்கள் லீலையாகிற அலைகளின் விசையினுல் உந்தி தள்ளப்பட்டு உங்கள் மரகத சோபையை அனுபவிக்கிறேனே. அப்பேற்பட்ட என்னிடம் தயைகொண்டு சுகரிடம் ஓடிவருவது போல நீங்கள் ஓடிவரமட்டீர்களா?]

அவர்கள் விடை பெற்றுக்கொண்டார்கள். ஆனுல் (வைகாரியான புருஷனைப்போல ஜ்வலிப்பவரும் எனக்கும் பிரஹ்லாதனுக்கும் தியாகராஜருக்கும், நாரதகுரு ஸ்வாமி எவ்விதமிருப் பாரோ, அதுபோல ஸர்வராம பக்தர்களுக்கும் ஹிதம் செய்யச் சதா விழிப்புடன் காத்திருக்கும் மஹாத்மாவான) ஆஞ்சநேயர், (உமா சங்கரரின் ஐக்ய சங்கல்பம் என்று சொல்லப்படும் கிருபாளு,) தலைவணங்கி, தயங்கி நின்ருர். ராமபக்தி என்கிற வெள்ளத்தில் மிதக்கிற ஆஞ்சநேயரை, வாயு குமாரனை பிரபு, மீண்டும் ஆலோசித்தவராக, தன் அருகே வரும்படி சமிக்ஞை செய்தார். (மடியின்மேல் அமர்ந்திருக்கும் பிரஹ்லாதனை லக்ஷ்மி நரசிம்மன் எவ்விதம் ஆலிங்கனம் செய்துகொண்டு அவன் தலையை தடவிக்கொடுத்தாரோ, அதுபோல) என் பிரபு மங்கள ஆசிர்வாதம் செய்கிறவராக தன்னுடைய குஞ்சிதகரகமலங்களை ஹனுமாரின் தலையில் வைத்துத்தடவிக் கொடுத்தார். அந்த ராம ஸ்பரிசம் ஏற்பட்டதும், ஹனுமாருடைய மனம் சந்தோஷத்தால் துளிர்த்தது. அவனிடம் பிரபு தன்னுடைய கரமுத்திரிகாவாகிற அங்குலீயத்தை (மோதிரத்தை) அளித்தார். (144)

மேலும் சீதையின் நினைவாகச் சொன்னுர் "சீதையை பல விதங்களால் ஆஸ்வாசப்படுத்து. என்னுடைய அமிதபலம், விரஹ தாபங்கள், என்னுல் வேகமாகச் செய்யப்போகும் ஏற்பாடுகள், எல்லாவற்றையும் சொல்லி, அவளை என் பிரேமை வெள்ளத்தில் நிலைக்கச் செய்து, "நீ சீக்கிரமாக ஓடிவந்துவிடு." (ஹனுமான் தனக்குள் நினைக்க ஆரம்பித்தார் "என் ஜன்மம் பலனடைந்தது. நான் கிருதார்த்தனுக ஆக்கப்பட்டேன்.

மஹாகிருபா நிதாம் என்று சொல்லப்படும் பிரபு, என்னை அபாரகாருண்யத்தினுல் பிராட்டியிடம் சேர்க்கிறர். ராம நாம தாரகம் கொண்ட மோதிரத்தை அளிக்கும்படி ஏவினுர்; பிராட்டிக்கு உகந்தது ராம சரிதம் தானே என்று புகட்டுகிறர்.'' என்று பலவித எண்ணங்களுடன் மஹாகிருதக்ஞை கொண்ட வழிப்போக்கன் மழை இருட்டு நீங்கிய பின்பு சூரிய வெளிச் சத்தால் வழியைக் காண்பவன் போல) சந்தோஷத்துடன் பெருமிதம் கொண்டார். ராமதிருவடிகளை தன் மனத்தில் பதித்து வைத்து, (அஹங்கார மற்ற வைகாரி புருஷன் நின்று நிலைத்து ஆத்ம விருத்தியை அடைந்த வைஷ்ணவ தாஸனைப் போல) ராம கார்ய பிரவிருத்தியில் இறங்கினுர்.'' (145)

துளசிதாஸர் சொல்லுகிறர், "என் பிரபு ஸர்வக்ஞன். ஸர்வசக்திமான், ஸர்வதேவதைகளையும் ரக்ஷிக்கக் கூடிய ஸாமர்த்தியம் உள்ளவன். ராஜ நீதியைப் பரிபாலிக்கும் எண்ணத்துடன் சீதையின் தகவலை அறிவதற்கு வானரர்களை முதலில் தூதர்களாக அனுப்பினுர்.'' (146)

ஸகல வானரங்களும் சென்றுர்கள். வனங்களிலும் காடுகளிலும் நதிகளிலும் குளம் குட்டைகளிலும் பர்வதங்கள், பர்வத அடிவாரங்கள் எல்லா விடங்களிலும் ஒன்று விடாமல் தேடலானுர்கள். அவர்களுடைய மனம் ராமகாரியத்தில் பூர்ணமாக லயித்திருந்தது. சரீரத்தின் சிரமம் ஒன்றும் தெரியவில்லை. அவர்கள் அதை மறந்தேவிட்டிருந்தார்கள். (147)

எங்கேயாவது அவர்கள் ராஷஸர்களின் கூட்டத்தைக் கண்டால் ஒரே அறையில் அவர்களைக் கொன்றுவிடுவார்கள். இவ்விதம் ஒரு இடம் விடாமல் பர்வதங்களையும் வனங்களையும் பூர்ணமாகத் தேடினுர்கள். எங்கேயாவது ஒரு முனிவரைக் கண்டால் மஹா வினயத்துடன் அவரை சூழ்ந்து கொண்டு சீதையின் தகவலை விசாரிப்பார்கள். (148)

[தியானம்

ஜீவன் பிரும்மம் போன்ற ஸஹஜஸ்நேகம் உள்ள ராமசீதா, சீதாநாராயணு, உங்கள் பெருமைகளை நான் எவ்விதம் வர்ணிப்பேன்? எவ்விதம் நான் அறிவேன்? மஹாலக்ஷ்மி, நீ பகவானுடைய நித்ய விபூதி அல்லவா? அன்று அர்ஜுனனுக்கு ராமானுஜனுகிற கிருஷ்ணன் காட்டிய விஸ்வ விபூதிகளல்லவோ நீ. ஹே கிருஷ்ணு, நீர் ஜகன்னுதர். உம்முடைய விபூதிகளுக்கு முடிவு கிடையாது. உம்முடைய விபூதி மஹாவிஸ்தாரமுள்ளது.

ஒவ்வொன்றினுடைய தேஜஸ் ஒரு அம்சத்தில் தோன்றினது. அந்த விபூதியினுல் எனக்கு யாது பயன்? "இவ்வுலகம் அனைத்தையும் ஒரு அம்சத்தினுல் நான் தரித்திருக்கிறேன்" என்று சொன்னுயே கிருஷ்ணு, ஒரு சூரியன் இவ்வுலகம் அனைத்தையும் எவ்வாறு விளக்குகிருனே, அவ்வாறு நீர் க்ஷேத்ரக்ஞனுகி, எல்லா சரீரத்தையும் பிரகாசித்துக்கொண்டு, உமக்கு எவ்வித ஆதாரமுமின்றி ஸ்வயம்பிரகாசராக விளங்குகிறீர். ஞானமாகிற கண்ணுல் இந்த மஹா விபூதிக்கும் க்ஷேத்ரக்ஞனுக்கும் உள்ள சம்பந்தத்தையும் வேறுபாட்டையும், பூதாகாரமாக பரிணமித்திருக்கின்ற பிரகிருதியினிடத்தினின்று விடுவித்துக்கொள்வதற்காக உபாயமான அமானித்வம் முதலிய குணங்களையும் எவர்கள் அறிகிருர்களோ, அவர்கள் பரபிரும்மத்தை அடைகிருர்கள் என்று நரநாராயண அம்சர்களான கிருஷ்ணுர்ஜுனர்கள் எனக்கு உபதேசித்தார்கள். அப்பேற்பட்ட ராமலக்ஷ்மணு, நரநாராயணு, என் அஸ்வினி தேவர்களே, உங்களிடத்தில் கோபமும் லோபமும் கிடையாது. யுத்தமுமில்லை. மிக்க தாழ்ந்தவனையும் மிகச்சிறந்தவனையும் ஒருவரையும் நிந்தித்தல் கிடையாது. அறிவுடன் விளங்குபவர்களும், லோபம் அஹங்காரம் நீங்கினவர்களும், மனமடங்கி இந்திரியங்களை சிக்ஷித்தவர்களும், தைர்யம் பொறுமை மென்மை உள்ளவர்களும் ஸகல லோகங்களையும் பரிபாலனம் செய்யும் ஸுமேதஸ்ஸாகவும், இருக்கிறீர்கள். ஹேபுத்ரகாமேஷ்டி யாகத்தில் ஜனித்த ராமலக்ஷ்மணு, யக்ஞ பூமியில் அவதரித்த என்னைக் கட்டிக்காத்து சீதையிடம் சேர்ப்பிக்கமாட்டீர்களா? உங்களுடைய உத்தரவைப் பெற்றுக் கொண்ட ஹனுமார் க்ஷேமத்துடன் சீதையைக் கண்டு தரிசித்து திரும்பிவந்து உங்களுடைய பாதங்களில் வணங்கி ராமபதத்தை பெரிதும் கைக்கொண்டார். கர்வத்தைவிட்ட நான் இடைவிடாமல் உங்களையே தியானித்து, வாரைக் கொடியுடைய தனஞ்சயனைப் போல கேசவா, நாராயணு, ஜனர்த்தனு, நரநாராயணு, எல்லா உலகங்களையும் படைப்பவரும், எல்லா விபூதிகளுக்கும் ஈஸ்வரரும், எல்லாக் கர்மாக்களையும் அறிந்தவருமான நாராயணு, நீயும் மஹாலக்ஷ்மியும் என்னை உங்களுடைய பந்துவாக, ஸஹஜஸ்நேகத்துடன் அறியமாட்டீர்களா? பிராட்டியின் அவதாரமும் ஸ்வயம் ஜாதா என்றும் கர்மத்தாலன்றி ஸ்வய இச்சையால் தோன்றுதல் என்கிறபடி என்முன் தோன்றமாட்டாளா?]

இவ்விதம் சீதையின் தாகத்தினுல் வாடும் அந்த வானர வீரர்களுக்கு இவ்விதம் அலைந்து திரியும்போது, அவர்களுக்கு

நிஜமாகவே தாகம் அதிகரித்தது. எங்கு பார்த்தாலும் ஜலம் காணப்படவில்லை. ராமசீதா காடு ஒரே அடர்த்தியான வனமாக விருந்தது. வழியோ தெரியவில்லை. மனம் தளர்ந்து, வியாகுல மடைந்தார்கள். ஹனுமான் தனக்குள் நிச்சய புத்தியை அடைந்து, எவ்விதம் இவர்களை நாம் காப்பாற்றலாம்'' என்று ஆலோசிப்பவராகவிருந்தார். எவ்விதமாவது இவர்களுக்கு தாக சாந்தி ஏற்படுத்துவதற்கு ஜலம் கொடுக்கவேண்டும் இல்லா விடில் இவர்கள் மரணமடைந்து விடுவார்கள் என்று நினைத் தார். (149)

உடனே ஹனுமார் ஒரு மலையின் உச்சிக்கு ஏறி நான்கு புறங்களிலும் பார்த்தார். அவ்விதம் பார்க்கும்போது, பூமியின் அடியில் ஆச்சரியமாகச் செல்லும் ஒரு குகையைக் கண்டார். அந்த குகையின் வாயிலிருந்து சக்ரவாக பக்ஷிகள், நாரைகள், ஹம்ஸங்கள் வெளிவந்து கொண்டிருந்தன. இன்னும் அநேக பக்ஷிகள் அதில் பிரவேசம் செய்து கொண் டிருந்தன. (150)

பவன குமாரனுகிற ஹனுமான் பர்வதத்திலிருந்து அவ்விடம் சென்று பார்த்த பின்பு ஒவ்வொருவரையும் அங்கு அழைத்துச் சென்றுர். ஹனுமாரை புரஸ்ஸகாவாகக் கொண்டு கால விளம்பனம் செய்யாமல் எல்லோரும் குகையில் நுழைந் தார்கள். (151)

அவ்விடம் ஒரு உப வனத்தைக் கண்டார்கள். அநேக தாமரை மலர்கள் பூத்துக் கிடக்கும் அழகான குளத்தைக் கண்டார்கள். அங்கு ஒரு அழகான கோவில் காணப்பட்டது. அந்த கோவிலின் சமீபம் ஒரு ஸ்திரி தபஸ்செய்துகொண் டிருப்பதைக் கண்டார்கள். (152)

தூரத்திலிருந்து அவர்கள் அந்த ஸ்திரிக்கு சிரம் வணங்கி ஞர்கள். அவளைக் கேட்ட பின்பு, வானரர்கள் தங்கள் விருத் தாந்தங்கள் அனைத்தையும் சொன்ஞர்கள். அவைகளைக்கேட்ட அந்த ஸ்திரி சொன்ஞள். ''முதலில் ஜலபானம் செய்யுங்கள். அதன் பின்பு ரஸமுள்ளதும் ருசியுள்ள பழங்களைச் சாப்பிட்டு சிரமம் தீர்த்துக் கொள்ளுங்கள்.'' (153)

அவளுடைய ஆக்ஞையைப் பெற்ற வானரங்கள் ஸ்நானம் செய்தார்கள். ருசியுள்ள பழங்களைத் தின்றுர்கள். அதன்பிறகு எல்லோரும் அந்த தபோநாரியிடம் சென்றுர்கள். அவள் தன் ஆத்ம கதையை அவர்களுக்குச் சொன்ஞள். ''நான்

இப்பொழுது ஸ்ரீரகுநாதன் இருக்கும் இடத்திற்குச் செல்வேன்.'' (154)

''நீங்கள் எல்லோரும் கண்களை மூடிக்கொள்ளுங்கள். அதே க்ஷணத்தில் குகையின் வெளிப்புறத்தில் இருப்பீர்கள். உங்களுக்கு சீதையினுடைய தரிசனம் கிடைக்கும். உங்கள் காரியம் ஸபலமாகும். அவளைப்பற்றிய எல்லா தகவல்களையும் நீங்கள் அறிவீர்கள்.'' என்று அவள் சொன்னாள். (155)

அதன் பிரகாரம் அவர்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். அடுத்த க்ஷணத்தில் திறந்து பார்த்ததும் அவர்கள் ஒரு பெரிய சமுத்திரத்தின் கரையில் தாங்கள் இருப்பதாக கண்டு கொண்டார்கள். (156)

அந்தநாரி ஸ்வயம் பிரபை என்கிற மயனுடைய புத்ரி. அவள் ரகுநாதனிடம் சென்றாள். அவருடைய கமலபதங்களில் விழுந்து நமஸ்கரித்து, தனது பக்தியை வெளிக்காட்டினாள். அவளை பிரபு மஹாவினயத்துடன் கண்டு, அவளுக்கு திடபக்தியையும் அசஞ்சலமான பிரேமையையும் வரமாக அளித்தார்.(157)

பிரபுவினுடைய ஆக்ஞையை அடைந்து, அவரை வணங்கி, ஸ்ரீராமசந்திரனுடைய யுகள சரணங்களை நெஞ்சில் பதித்துக் கொண்டு (பிரும்ம மஹேசர் இந்திர வருண மருத்கணங்கள் வழிபடும் அந்தஸநாதன நாராயணரை ஹ்ருதயத்தில் பூஜித்துக் கொண்டு) அவள் பத்ரிவனம் சென்றாள். (158)

[தியானம்

நாராயணா, ராமாசீதா, நாரதரால் சேவிக்கப்பட்ட நர நாராயணா, லக்ஷ்மணா, சீதாராமா, பத்ரி வனத்தில் பிரும்மா வருண இந்திர மருத்கணங்களால் திவ்யமான வேதஸாங்க பத கிரமமாக ஸாமகானம் செய்யப்படும் நரநாராயண ரிஷிகளைப் போலவிருக்கும் தபஸ்விகளே, உங்களால் தியானம் செய்யப்படும் சீதை எங்கு இருக்கிறாள் ! என் மனது அவளை ரூபத்தால் பார்க்கிறது. அடையாளங்களால் தெரிந்துகொள்ள முயல்கிறது. என் கண் முன் அவள் வரவில்லையே. நான் என்ன செய்வேன் ? ஜனகவம்ச குலமணியே, ராமலக்ஷ்மண யோகிகளால் மனத்தில் ஆராதனம் செய்யப்படும் சீதே, ஜானகி, ஸுரஅசுர கணங்களுக்கு தேவியாகவிருக்கும் உன்னை நான் அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். ஹேமனசே, நீ சீதாராமன் தான் பரமார்த்த நிதி, அவனை நினைத்தல் கங்காஸ்நானம் செய்வதுபோல புனிதமானது. விஷய கிணற்றில் விழுந்து அழுந்தி சாகணும் என்று

நீ நினைக்காதே. தாஸரதி ராமா, ஜனக சுதா, சீதாவின் நினைப்பே சுகம். மமதைபிடித்த நரர்களை ஸ்துதி செய்து வாழ நினைக் காதே. ஸுமதி கொண்ட தியாகராஜ வால்மீகி ஆஞ்சநேய வழி களில் பின்பற்றி, ஜானகிராமனை ஏகாந்த ராமசிதையை பஜி. பட்டி கட்டின காளை மாதிரி எதையும் பக்ஷித்துக்கொண்டு வெட்கமின்றி எதையும் சொல்லிக்கொண்டு துஷ்டர்களின் சேர்க்கையால் லோபமுள்ள மனிதர்களை நரஸ்துதி செய்து கொண்டு கேவலமாக வாழாதே. தியாகராஜ வால்மீகி நரனு டைய ஆப்த பந்துவாகிற நாராயணனை நினைத்து ஆனந்தமடை. "தேவதேவ, நீ நினைக்கிறபடி என்னுல் நடக்க முடிகிறதில்லை. எனக்கு பக்தி ஹீனம் அதிகமாகவிருக்கிறது என்று நினைத்து என்னிடம் வராமல் இராதே. மனம் மொழி மெய் என்கிற ஸேவைகளில் உங்களுக்கு நான் உகந்தவனுக இல்லை" என்று தள்ளிவிடாதே. பகவானுக்கு அசாதாரண லக்ஷணமாக விருக்கும் லக்ஷ்மியே, சீதாபதி, நாரதாதி ரிஷிகள் அரவிந்த உத் பவனுன பிரும்மா, புரந்தரன், சிவன், உமை, தியாகராஜரால் சேவிக்கப்படும் ராமா, தேவர்களாகிற வானரர்களால் ஆராதிக்கப் படும் கிஷ்கிந்தா ராமா, உன் சீதையை நானும் தேடிக் கொண் டிருக்கிறேன், என்று என்னிடம் வரமாட்டாயா? உன் கிருபை எனக்கு எப்போது கிடைக்கும்? ஹே, திரிபுர சுந்தரி, நீயே எனக்கு சரணம். தயையுள்ள ராஜமனோஹரி, பராத்பரி கருணை செய்.]

இங்கே சமுத்திர தடத்தில் வானர கணங்கள் கவலையின் எல்லையை அடைந்தார்கள். சுக்ரீவன் கொடுத்த ஒரு மாதம் என்கிற தவணை முடிந்துவிட்டது. ஆனுல் நம் காரியம் ஒன்றும் முடியவில்லை. சுக்ரீவனுடைய தண்டனையும் மிகக் கடினம். நாம் என்ன செய்வது இந்த சந்தர்ப்பத்தில்? என்று தங்களுக்குள் வார்த்தை சம்பாஷணைகள் செய்துகொண்டிருந்தார்கள். எல்லோரும்கூடி மீண்டும் சம்பாஷித்துக் கொண்டார்கள். "நாம் சீதையைப் பற்றிய தகவல் ஒன்றும் கொண்டுபோகாமல், வெறுமென திரும்பிப்போவதால் என்ன பிரயோசனம்?" (159)

அங்கதனுடைய (புண்யமான) லோசனங்களிலிருந்து கண்ணீர் தாரைகள் வந்துகொண்டிருந்தன. அவன் சொல்ல ஆரம்பித்தான். "எனக்கும் உங்களுக்கும் இருவிதத்திலும் மரணம் நிச்சயம்தான். சீதையைப்பற்றிய நல்ல தகவல் கிடைக்கவில்லை என்று கட்டாயம் இதை வியாஜமாகவைத்து, சுக்ரீவ மஹாராஜா என்னைக் கொன்றுவிடுவார்." (160)

"என் பிதா வதம் ஆனபின்பே அவர் என்னைக் கொன்று விட்டிருக்கவேண்டும்; என்பிரபு ஸ்ரீராமன் என்பால் கருணை கூர்ந்து என்னை ரக்ஷித்தார். அப்பேற்பட்ட பிரபுவுக்கு என்னால் ஒன்றும் நல்லகாரியம் செய்யப்படவில்லை. அவருக்கு நான் நன்றி செலுத்த சந்தர்ப்பம் ஏற்பட்டிருந்தும், என்னால் ஒன்றும் செய்யப் படவில்லை." இவ்விதம் அங்கதன் அடிக்கடி மனவருத்தம் கொண்டு தவித்து கதற ஆரம்பித்தான். கடைசியில் பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னான். "நம் எல்லோருக்கும் மரணம் நிச்சயம். இதில் சந்தேகமே இல்லை." (161)

வானரவீரர்கள் அங்கதனுடைய வசனங்களைக் கேட்டார்கள். ஆனால் அவர்களும் என்ன பதில் சொல்லுவார்கள்? அவர்களுடைய நயனங்களிலிருந்தும் பயத்தாலும் நன்றி விஸ்வாசத்தாலும் கண்ணீர் ஜலம்பெருகி வழிந்துகொண்டிருந்தது. ஒரு க்ஷணம் அவர்கள் பேசாமலிருந்தார்கள். அதன் பிறகு எல்லோரும் சொன்னார்கள். (162)

"நல்ல மதியுள்ள யுவராஜரே, நாங்கள் சீதையின் தகவலை அறியாமல் திரும்பமாட்டோம்." இவ்விதம் சொல்லிவிட்டு அந்த வானரவீரர்கள் சமுத்திரக் கரையில் தர்ப்பை ஆசனத்தின் மேல் உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். (163)

அங்கதன் மஹா துக்கத்தை அடைந்திருப்பதைக் கண்டார் ஜாம்பவான். அவனை ஆஸ்வாசப்படுத்தி விசேஷ அர்த்தங்கள் கொண்ட இதிஹாஸ புராணவசனங்களை எடுத்துச் சொன்னார். "என் அருமை பிள்ளாய், இந்த ராமனை சாதாரண மனிதனாக நினைக்காதே. மஹா விசேஷங்கள்கொண்ட பரமாத்மா, கோபம் க்ரோதமில்லாத பரபிம்ருமம். யாவராலும் ஜயிக்கப்படாதவர். தம்மைப் பற்றினவர்கள் தம்மை அடைவதற்கு இடையூறான எல்லாவற்றையும் விலக்குகிற அஜர்." (164)

"நாம் எல்லோரும் அவருடைய சேவகர்கள் ஆவதற்கு மஹாபாக்யம் செய்திருக்கவேண்டும். இந்த பரமாத்மா ஸகுண ஸ்வரூபமாக, அநேக கல்யாண குணவிசேஷங்களுடன் பூமியில் அவதரித்திருக்கிற சமயம் நாம் அவரை அத்யந்த பக்தியினாலும் சிரத்தையினாலும் பூஜித்து சந்தோஷப்படுத்த வேண்டும். (165)

"தேவகார்யம், பூமியின் பாரத்தை ஒழிப்பது, பசு பிராமணர்களின் ஹிதத்திற்காக பிரபு ஸ்வய இச்சையினால் மானிட அவதாரம் எடுத்திருக்கிறார். அவருடைய உபாஸகர்கள் ஸாதுஜனங்கள் மோக்ஷ ஆனந்தங்களை தியாகம் செய்துவிட்டு, அந்த பிரபுவை நேரில் சேவைசெய்து, அவர் இஷ்டப்படி நடந்து

அவரை திருப்திசெய்ய பூமியில் அவருடன் பிறந்திருக்கிருர்கள்.'' (166)

இந்தவிதமாகவும் ஜாம்பவான் அநேகவிதங்களில் சொல்லி அவனை ஆஸ்வாசப்படுத்தினுர். இவர்களுடைய சம்பாஷணைகளை மலையின் அடிவாரத்திலுள்ள ஒரு குகையில் படுத்திருக்கும் ஸம்பாதி என்கிற கழுகு கேட்டது. அது எட்டிப் பார்த்தது. வெளியில் ஒரு பெரிய வானர சேனை காணப்பட்டது. தனக்குள் அது எண்ணமிட்டது. ''ஜகதீஸ்வரனுல் எனக்கு என் வீட்டைத் தேடி ஆகாரம் அனுப்பப்பட்டது.'' (167)

''நான் இன்று இந்த வானரங்கள் அனைத்தையும் சாப்பிட்டு விடுகிறேன். இவ்வளவு நாள் நான் ஆகாரமின்றி பசியினுல் வாடிப் போயிருக்கிறேன். எனக்கு வயிறுநிறையும்படி ஆகாரம் இதுவரை சரியாக கிடைக்கவில்லை. என் நிலையைப் புரிந்துதான் கடவுள் எனக்கு அதிக ஆகாரம் ஸ்வயமாகவே இன்று அனுப்பியிருக்கிருர்.'' (168)

கழுகின் வசனங்களை வானரவீரர்கள் கேட்டார்கள். அவர்களுக்கு மரணபயம் நிச்சயமாக அதிகரித்தது. ''இனி தப்புவதற்கு மார்க்கம் இல்லை.'' என்று வானரவீரர்கள் நினைத்துக் கொண்டு எல்லோரும் ஸம்பாதியைக் கண்டு தங்கள் ஸ்தானத்திலிருந்து எழுந்து நின்ருர்கள். ஆனுல் ஜாம்பவானுடைய மனத்தில் கவலை எழுந்தது. (169)

[தியானம்

நாராயணு, பரமகிருபாளு. யாதொரு லக்ஷ்மிதேவியாகிற சீதையின் கடாக்ஷ வீக்ஷண்யத்துக்கு நானும் ஸகல தேவர்களும் ஆசைப்படுகிறேமோ அந்த லக்ஷ்மி உன் மார்பில் நித்ய வாஸம் செய்கிருள். லக்ஷ்மிராமா, உம்முடைய பாத பங்கஜங்களினிடத்தில் உண்டாகும் மகரந்த தூள்களை துளசியுடன்கூட அந்த லக்ஷ்மிதேவி விரும்புகிருள். அதுபோல நாங்களும் உம்முடைய பாததூள்களை சீதையை முன்னிட்டு நமஸ்கரித்து விரும்புகிறேம்.]

[ஹே சீதே, என் பாவங்களையும் கர்வங்களையும் போக்கும் ஸ்திரிரத்தினமே, உன் பாதமூலத்தை அடைந்த என்னை, அமுதினில் வரும் பெண்ணமுதே, அரவணையில் உன் முலைகள் சோர்ந்து பாய திருவுடைய வாய்மடுத்துத் திளைத்து தைத்துப் பருவிடாயே, அழகிய புண்டரீக அக்ஷங்களால் இன்புற்று சிரிப்புடன் கூடிய உன் அமுத பார்வையை என்பாலும் உன் அரவிந்த

நேத்ரங்கள் உடைய என் கோபால கோளரி வைதேஹிராமனிடம் செலுத்தி, உக்ரமான காமாக்னியால் தவிக்கப்படும் எனக்கு உங்கள் ஊழியத்தை தரமாட்டீர்களா? உங்களுடைய முகமா கிறதும் வரதாபயம் செய்கிற கைகளையும் லக்ஷ்மிதேவி விளையாடும் உமது மார்புபிரதேசத்தையும் பார்த்து வருந்துகிற எங்களை உமது அடிமைகளாக கொள்கிறீரோ? சீதை விளையாடிய உம பாதமலரைத் தொட்டு நாங்கள் சுகம்பெற எவரையும் கேட்க அசக்தர்களாகவிருக்கிறோம். பாண்டவர்களுடைய அடக்கம், வானரர்களுடைய அடக்கம் இவைகளை பார்த்த நான் மனிதன் கயிற்றால் கோக்கப்பட்ட மரப்பாவையைப் போல கடவுளால் ஏவப்பட்டு வேலைசெய்கிறான். மனிதமுயற்சிகளைக் காட்டிலும் தெய்வசங்கல்பம், தெய்வச்செய்கை பெரிதென்று சஞ்சயன் சொன்னதுபோல நான் நினைக்கிறேன். மனத்தை அடக்கின வனும் ஆபத்திலும் தர்மார்த்தங்கள் சம்பாதிக்கிறவனும், தர்ம அதர்மங்களை கலந்தவையாயினும் நன்றாக புத்தியினால் அறிகிறவன் நாராயண பரனாகவிருக்கும் அவன் தெய்வத்தின் வசத்தால் எல்லாம் உண்டானது என்று நினைத்து சுபத்தை அடைகிறான். மஹாபலிசக்கிரவர்த்தி கர்மத்தால் செய்யப்பட்ட இந்த குணங்களையும் தற்காலிகம் நிலையற்றதென்றும்; நினைக்கக் கூடிய செல்வங்களும் வறுமையும் கர்மாவினால் செய்யப்பட்டதாக அறிந்து இதில் முடிவுகிடையாது என்று ஆலோசித்து, காலத்தை தவிர வேறு காரணம் உண்டு என்று நினைக்கவில்லை. இந்திரியங் களின் ஆசையை அடக்குகிறவன் ஞானத்துடன் துக்கம் இல்லாத வனாகவும் ஆனந்தத்தையும் அடைகிறான். கிருஷ்ணனை வழி காட்டியாக உடைய அர்ஜுனனும் கர்மங்களை எரித்தான். அது போல ராமானுஜ வழியில்வருகின்ற எனக்கு என்று சுகம் ஏற் படும்? திக்கஜங்களால் அபிஷேகம் செய்யப்பட்ட பத்ரே, ஸிம்மாஸனமாகிற பத்மபீடத்தில் அமர்ந்திருக்கும் மஹா லக்ஷ்மியே, என்னிடமும் தயை செய்யமாட்டாயா ?]

அங்கதன் மனத்திற்குள் யோசனை செய்தான் அதன்பின்பு "ஜடாயுவுக்கு சமமான தன்யன், ராமக்ருபாகடாக்ஷம் உள்ளவன் யாரும் இருக்க முடியாது. ஸ்ரீராம காரியத்திற்காக தனது தேகத்தைவிட்ட மஹானுபாவன், மஹாபாக்யவான், ஹரிபகவா னுடைய அனுவிருத்தி சப்தமுள்ள பரமபதத்தை அடைந்த மஹா புண்யவான்," என்று வாய்விட்டு அங்கதன் சொன்னான். (170)

அந்த ஸம்பாதி என்கிற பக்ஷி அங்கதனுடைய வசனங்களை வருத்தத்துடனும் சந்தோஷத்துடனும் கேட்டது. அது உடனே

வானரர்களின் சமீபம் வந்துசேர்ந்தது. அது அவர்களுக்கு அபயத்தைக் கொடுத்து, ஜடாயுவின் பூர்ண விருத்தாந்தங்களை முழுவதும் அவர்களிடம் கேட்டது. அவர்களால் ஸம்பாதிக்கு சகல கதாவிருத்தாந்தங்களும் சொல்லப்பட்டன. (171)

தன் தம்பியான ஜடாயுவின் கதையைக் கேட்ட ஸம்பாதி அநேகவிதமாக ஸ்ரீரகுபதியின் மகிமைகளை வர்ணித்தது. (172)

அதன்பிறகு ஸம்பாதி வானரங்களைப் பார்த்துச் சொன்னது. ''என்னை நீங்கள் சமுத்திரக்கரைக்கு அழைத்துச் செல்லுங்கள், என் பிரியபந்துவான ஜடாயுவுக்கு திலதர்ப்பணம் செய்யவிரும்புகிறேன். இதற்கு பிரதி உபகாரமாக நான் சீதையின் இருப்பிடத்தை தெரிவிக்கிறேன். அந்த வசனபலத்தினால் நீங்கள் சீதையைத் தேட ஆரம்பிக்கலாம். உங்களுக்கு சீதையின் விருத்தாந்தங்கள் கிடைக்கும். கவலைப்பட வேண்டாம்.'' (173)

ஸமுத்திரக் கரையில் தன் தம்பி ஜடாயுவின் அந்திம கிரியைகளை ஸம்பாதி செய்தது. அதன்பிறகு ஸம்பாதி தனது ஆத்ம கதையை வானரர்களுக்குச் சொல்ல ஆரம்பித்தது. ''வீரர்களே கேளுங்கள். நானும் ஜடாயுவும் சகோதரர்கள். நான் மூத்தவன். நாங்கள் இருவர்களும் யௌவனமாகவிருந்த சமயம் சூர்யனை நோக்கி ஆகாயத்தில் பறப்பவர்களாகச் சென்றோம்.'' (174)

''என் தம்பி ஜடாயுவினால் சூர்ய வெப்பத்தை தாங்க முடியயில்லை. அதனால் அவன் திரும்பிவிட்டான். நான்மாத்திரம் அஹங்காரம் கொண்டவனாக மேலேபறந்து சூர்யனுடைய சமீபம் சென்றேன். சூர்யனுடைய அமிததேஜஸ்ஸினால் என் இறக்கைகள் கொளுத்தப்பட்டன. அதனால் மிக வேகத்துடன் மூர்ச்சையற்று பூமியில் தள்ளப்பட்டு கீழே விழுந்தேன்.'' (175)

''அந்தவிடத்தில் சந்திரமா என்கிற முனிவர் இருந்தார். அவருக்கு என்மீது தயை பிறந்தது. அவர் எனக்கு ஞானத்தை பலவிதமாகச் சொல்லி, ஆஸ்வாசம் செய்தார். அதனால் தேக சம்பந்தமான அபிமானத்தை இழந்தேன்.'' (176)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி ஸந்நிதா, ராமா, சீதா, சரணம் சரணம்,'' ஹே சீதே, நீ மாமரமாகவிருக்கிறாய், மல்லிகையாக விருக்கிறாய்: வில்வமரமாக யிருக்கிறாய், யமுனை ஆற்றில் தீர்த்த வாசிகள் போல பிறர் உபயோகத்துக்கு பிறவி எடுத்த விருக்ஷங்கள் போலவிருக்கிறாய். சீதையிடம் என் மனம் பரிகொடுத்த

பின்பு, எனக்கு அவள் போனவழியைச் சொல்வதற்கு யாரும் இல்லையா? பூமியே, கேசவனது ஸ்பரிசம் பெற்ற நீ, வராஹ அவதாரத்தால் என்னுடைய ஆலிங்கனம் பெற்ருயே, அப்போது அந்த மலர்மகள், மலைமகள் ஜடாதாரியான கங்காதரனைப் பார்த்தது போல என்னைப் பார்த்தாளே அந்த சீதை உன் தவப் புதல்வியாயிற்றே. அவள் எங்கு இருக்கிருள்? துளசி மாலையின் வாசனையை முகரும் வண்டு போல எனக்கு மதம் பிடித்து, சீதையை மதுவைப் போல உண்ணும் தேவ பத்னிகளாகிற வண்டுக்கள் உன் மீது இருக்கிற என் காதலையும் வணக்கத்தையும் தெரிவித்தார்களா? ஈஸ்வரன் ஜீவன் உலகம் ஆகிய தத்வ திரயங்களில், ஸ்ருஷ்டி காலத்திலும் பிரளய காலத்திலும் சேதன அசேதன பொருள்கள் விரிந்தும், சுருங்கியும், ஸ்தூலமாகவும், சூக்ஷ்மமாகவும் காணப்படுகின்றன. ஈஸ்வரன் பலவற்றை ஸ்ருஷ்டித்து அதில் உட்புகுந்து ஜகத் வியாபகமாக விளங்குகிருன். பிரளய காலத்தில் அவன் யாதொரு மாறுதல் இன்றி விளங்குகிருன். அவனுடன் சம்பந்தப்பட்ட ஜீவன் அசித் இரண்டும் தனியாக ஈஸ்வரருடைய சரீரத்தில் புத்தி அஹங்காரம் மனஸ், அவ்யக்தம் அக்ஷரம் என்று விளங்குகிருன். பிரளய காலத்தில் ஈஸ்வரனே இறப்பின் சரீரம், அவனே யமனையும் அடக்கும் அந்தராத்மா, அவனுக்கு ஜரை, வியாதி கிழத்தனம் தோழர்கள் யாவும் கிடையாது. அவனே சாஷாத் நாராயணன், அவனே சாளராத்திரி, அவனுடன் கூடிய லக்ஷ்மியே அவ்யக்தம். அச்சமயம் சேதனு சேதனங்கள் அத்யந்த சூக்ஷ்மமாக ஆதிபீஜமாக விளங்குகின்றன. ஆனந்தமயமாகவிருக்கும் மதுசூதனன், "நான் பலவாக ஆவேன்" என்று சங்கல்பித்து, தனது வீர்யத்தால் ஸ்ருஷ்டித்து, ஒவ்வொன்றிலும் உட்புகுகிருன். முக்குணங்களை படைப்பிக்கிருன். ஜகத் வியாபாரம் செய்கிருன், அப்பேற்பட்ட சரீரத்தில் இரு ஸுபர்ணர்களாகிற பரமாத்மா ஜீவாத்மா, உலகம் ஏற்படுகிறது. பொன் உருவமுள்ள பரமாத்மா சங்க தோஷமின்றி, ஸர்வசாக்ஷியாக எல்லாவற்றையும் பார்க்கிருன். சுகதுக்கங்களை கர்மத்திற்கு தக்கபடி ஜீவாத்மா அனுபவிக்கிருன். ஆத்மஞானம், சரியான முயற்சி, பொறுமை, தர்மத்தையே நித்தியமாக உடையவனுக இருத்தல், இவைகள் எவனை புருஷார்த்தத்திலிருந்து நழுவச் செய்யவில்லையோ, அவனே ஞான பண்டிதனுகச் சொல்லப்படுகிருன். ஒரே மரத்திலிருந்து நல்லதும் கெட்டதுமான வஸ்துக்கள் ஏற்படுகின்றன. பண்டிதன் ஸ்லாக்யமான கார்யங்களைச் செய்து, நிந்திக்கப்

பட்டவைகளை ஒதுக்குகிறான். கோபம், ஸந்தோஷம், மதம் லஜ்ஜை, வணக்கமில்லாமை, நான் பூஜ்யன் என்கிற எண்ணம் இவைகள் எவனை புருஷார்த்தத்திலிருந்து நழுவச் செய்ய வில்லையோ, அவனே ஞான பண்டிதனாகச் சொல்லப்படுகிறான். அப்பேற்பட்ட வித்வானுக்கு தேர்ந்த அறிவினால் எதை அடைய முடியும் எதை அடைய முடியாது என்கிற தெளிவான ஞானத் தினால் ஆபத்துக் காலங்களிலும் புத்தி மயக்கம் ஏற்படாமல், காலத்தை வீணாக்காமல் ஸம்பத்துக்குரிய காரியங்களை சிரத்தை யுடன் செய்கிறான். ஆனால் இந்த உலகமோ தடையில்லாமல் மாறிமாறி மாறுதல்களை அடைந்து ஈஸ்வரனுடைய அசித்தான பாகமாக விளங்குகிறது. ஞான திவாகரனாகிற ஜீவன் அவனுள் வாழும் பரமாத்மாவின் பிரேரணையினால் நடக்கிறவனாகி, பகவத்லீலை என்று ஸர்வத்தையும் அறிந்து (சித் ஆகிற தன்னையும், அசித் ஆகிற உலகத்தையும்) பகவத் லீலையாக அறிந்து மாயையாகிற பிரகிருதி ஸம்பந்தம் நீங்கியவனாக ஞானாத்மானாகி, பரமாத்மாவிற்கு அடங்கியவனாக, பரதந்திரனாக, பகவானே எல்லாவற்றிற்கும் காரணம் என்று நினைப்பவனாகி, பகவானே சிலந்தி பூச்சி போல தன்னை விரித்தும் தன்னைச் சுருங்கியும் செய்து கொள்ளுகிறான் என்று நினைப்பவனாக, பகவானை ஆதி புருஷனாகவும் சீதையை லோக மாதாவாகவும், பகவானை ஹிரண்ய கர்ப்பராகவும் சீதையை பிரும்மாண்டங் களாகவும் நினைக்கிறான். அப்பேற்பட்ட சீதாராமா, என்னை சுகத்தையும் புருஷார்த்தத்தையும் அடையும்படி செய்ய வேண்டும். க்ஷேத்திரக்ஞன் என்கிற சம்பந்தத்தால் எனக்கு ஏற்பட்ட பரமஹேதுவினால் பண்டிதர்கள் அடையும் வழியை உபதேசிக்கவேண்டும்.]

அந்த பிரும்ம ரிஷி சொன்னார் "ஸம்பாதி, கவலையைவிடு. திரேதாயுகத்தில் பரமாத்மாவாகிற ஹிரண்யகர்ப்பர் மனுஷ்ய சரீரத்தை எடுத்துக் கொண்டு பூமியில் சஞ்சரிப்பார். அப்போது அவருடைய ஸ்திரியை ராக்ஷஸர்கள் தூக்கிக் கொண்டு போய் விடுவார்கள். அந்த சமயத்தில் பிரபு தன் நாயகியைத் தேடு வதற்கு தூதர்களை அனுப்புவார். பகவத் கிருபையால் நீ அவர்களை சந்திப்பாய். அப்பொழுது நீ பரம புனிதமாக ஆக்கப்படுவாய்." (177)

"அந்த சமயம் உன்னால் இழக்கப்பட்ட இறக்கைகள் மீண்டும் வளர்ந்து விடும். இறக்கைகள் போய்விட்டதாக கவலைப் படாதே. அப்பொழுது பரம சந்தோஷமடைந்து அந்த பிரபுவி

னுடைய பார்யையாகிற சீதையை உன் திருஷ்டியினுல் பார்த்து அவளுடைய தகவலே அறிவிப்பாய். இவ்விதமாக என் பிரபு, என் குரு ஸத்யமான வசனங்களே அன்று சொன்னர். அவருடைய வசனங்கள் இன்று ஸத்யமாகி விட்டன. இப்பொழுது என் வார்த்தைகளேக் கேட்டு நீங்கள் பிரபுவின் காரியங்களேப் பூர்த்தி பண்ணுங்கள்.'' (178)

'' திரிகூட பர்வதத்தின் சிகரத்தின் மேல் லங்கா நகரம் காணப்படுகிறது. அங்கே ராவணன் வசித்துவருகிருன். அவன் ஸ்வபாவமாகவே பயமில்லாதவன், அந்த ராக்ஷஸனுல் சீதை அசோகவனத்தில் சிறை வைக்கப்பட்டிருக்கிருள். அவள் எப்பொழுதும் வருத்தமுள்ளவளாக உட்கார்ந்து கொண்டிருக்கிருள்.'' (179)

'' நான் அவளே இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கிறேன், உங்களால் அவ்விதம் பார்க்க முடியாது. கழுகின் திருஷ்டிமிக்க அபாரமானது. நான் இப்போது கிழத்தசையை அடைந்திருக்கிறேன். என்னுல் யாது பண்ணக்கூடும்? இல்லாத போனுல் உங்களுக்கு சகாயம் செய்யக்கூடும்.'' (180)

எந்த மஹானுபாவன் நூறு யோசனே அகலமுள்ள (எண்ணூறு மைல்கள் அகலமுள்ள) சமுத்திரத்தை தாண்டுபவனே, எவனிடம் அபார புத்தி சாமர்த்தியம் இருக்கிறதோ, அந்த மஹா புருஷன் ஸ்ரீராம காரியத்தைச் செய்து முடிப்பான். என்னேப் பாருங்கள். என்னுடைய இறக்கைகள் ராமகிருபையினுல் முளேத்து விட்டிருக்கின்றன. ஆகையால் உங்களுக்கும் பயமும் காரிய சந்தேகமும் ஏற்படவேண்டாம். மனத்தை தைரியப் படுத்திக் கொள்ளுங்கள். நான் இப்பொழுது என் துர்பாக்கியம் அழிந்து போய், அழகாக விளங்குகிறேன், தைர்யப்படுங்கள்.'' (181)

'' எப்பேற்பட்ட மஹா பாதகங்கள் செய்தவனும் கூட ராம நாமத்தை தியானம் செய்து, மிக்க சுலபமாக ஆழமான பவசாகரத்தை தாண்டி விடுகிருர்கள். நீங்களோ மஹா பாக்யமுள்ள ராம தூதர்கள். ராம காரியத்தைச் செய்து முடிப்பதற்கு ராமனுலேயே ஏவப்பட்டவர்கள். ஆகையால் தைரியமடைந்து ராமனே மனதில் தரிப்பவர்களாக ஏதாவது உபாயம் செய்து சீதையைக் கண்டு பிடியுங்கள்.'' (182)

காகபுசுண்டி கருடனேப் பார்த்துச் சொல்லுகிருர் '' கருடரே, இந்த விதமாக ஸம்பாதி சொல்லிக் கொண்டு உயரக் கிளம்பிச் சென்றுவிட்டது.'' இதைப் பார்த்த வானர வீரர்கள் பயம்

தெளிந்தவர்களாகவும் ஆச்சர்யப்பட்டவர்களாகவும் தோன்றினார்கள். அதன் பிறகு ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பலத்தை பரிசோதிப்பவர்களாகவும், தங்கள் சாமர்த்தியத்தைக் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் சமுத்திரத்தின் அக்கரையை அடைவதற்கு எல்லா வானர வீரர்களும் சம்சயத்தை அடைந்தவர்களாக காணப்பட்டார்கள். (183)

[தியானம்

நாராயணா, பூமி தனயா, ஜலதிதனயா, லக்ஷ்மி என்று திருநாமங்களால் ஜபித்த மாத்திரத்திலேயே, ஸம்சாரபந்தம் நீங்கி முக்தி கிடைக்கின்றது. தாயே, திரும்பத் திரும்ப வெளிப் பட்ட தயை நிறைந்த அமுத அலைகளான கடாக்ஷ்ய விக்ஷணயங்களை என் மீது பொழியமாட்டாயா? அன்று பிரும்மதேவரால் வேண்டப்பட்ட மஹா தவத்தைச் செய்து சுரபி, ''ஸ்வாமி, இப்போது எனக்கு வரம் ஒன்றும் வேண்டாம். உம்முடைய ப்ரீதி ஒன்றே போதுமானது'' என்று சொன்னாள். அதுபோல அம்மா, தயிதே, விஷ்ணுபத்னி, சீதாராமா, தாபத்ரயம் அடைந்த என்னை, உன் தியானமாகவிருக்கும் என்னை, ஒரு க்ஷணமாவது குளிரவைக்க மாட்டாயா? ஒருவனுக்கு வாக்கினாலும், மற்றொருவனுக்கு கிரியையாலும் வேறு ஒருவனுக்கு மனத்தினாலும் யக்ஞம் ஏற்படுகிறது. மஹத்தும் யசஸ் உள்ளதுமான உன்னுடைய பிரும்ம ஸ்வரூபத்தை அடைய ஸாதனமாக விருக்கக்கூடிய மௌனமாகிற உபாஸனையை, மனத்தில் சலிப்பு ஏற்படாமல், ஸ்துதியினால் சந்தோஷத்தையும் நிந்தையில் ரோஷத்தையும் தள்ளி, ''தாயே, பராத்பரி, மஹாலஷ்மி அம்மா, உன் நிலையாயிருப்பவன் வேதங்களில் சொல்லப்பட்டபடி காடோப கூடமான ஐக்யமிதுனமாகிற சீதாராமா, லக்ஷ்மி நாராயணா, உங்களை பார்க்கிறான்; அறிகிறான். யோகப்ரியே, நாராயண ரிஷியாகிற யோகிஸேவ்யே, கருடப்ரியே, கருட வாஹனே, புத்திக்கு எட்டாத உங்களுடைய ரஹஸ்ய உருவம், உருவம் தோற்றமளிக்காத சூக்ஷ்மரூபம், தத்வஞானிகளாலும் ராமானுஜன் போன்ற ஸந்யாசிகளாலும் அறியப்படுகிறது. நீங்கள் நிலங்களாகவும் ஆகாயங்களாகவுமில்லை; உங்களிடம் காற்று அடிப்பதில்லை; ஸூர்யன் பிரகாசிப்பதில்லை; மனம் செல்வதுமில்லை; காணப்படும் பொருள்களனைத்தும் உம்மிடமிருந்து உண்டாகின்றன. தேகத்தில் ஸுபர்ணராகவும், பேசுகிறவனும் நினைக்கிறவனும், ருசி முகருதல் பார்த்தல் ஆகிய

எல்லாவற்றையும் நீங்கள் தான் செய்கிறீர்கள். ஞானரூபியாகிற நீங்கள் அறிகிறவர்களாகவும் அறியப்படுபவர்களாகவும் நீங்கள் அறிவிக்கிறவர்களுமாக இருக்கிறீர்கள். பற்றுக்களைத் துறந்த மனத்தினுல் தியானத்தால் ஒன்றினுலேயே அடையப்படு கிறீர்கள். மோக்ஷ திவாரமே, உங்களிடம் கருடன், லக்ஷ்மிதேவி யினுல் வலுவில் அடையப்பட்ட காமதேனுவும் ஆஞ்சநேயரும், பீஷ்மரும், மாருத ஸ்வபாவமுள்ள உமது ஐக்ய ஸ்வரூபத்தை தியானித்து ஆசையை ஒழித்து, தேகவியாபாரங்களைவிட்டு ஜபம் என்னும் யாகத்தை முக்யமாகக் கொண்டு மனத்தினுல் தியானித்து ஆத்ம ஞானமுள்ளவர்களாக பரமகதியை அடைந் திருக்கிறுர்கள். பசுக்களை எவ்விதம் நான் ஸ்லாகிக்கிறேனே, எவ்விதம் ஸுரபி பிரும்ம தேவரிடம் அவரது பிரியத்தையே வரமாகக் கேட்டாளோ, எவ்விதம் கருடன் நாராயணரை அச்சுதனை, அப்ரமேயரைப் பார்த்து, சம்பாஷித்து, அனுகிரஹம் அடைந்தாரோ; அதே பக்தியுடன் பீஷ்மருடைய திவ்யயோகத் தினுலும் சரணம் என்று உங்களை அடைந்திருக்கிறேன். உங்க ளுடைய பிரியத்தை, உதாரரே, மஹாத்மாவே, தத்வ தர்சனமே, ஆஞ்சநேயா, உனது சக்யத்தினுல் துளசி மகிமையினுல் எனக்கு அளிக்கமாட்டீரா! சங்கு வஜ்ரம் தாமரை அங்குசம் ஆகிற ரேகைகள் பதிந்த உன்பாத சரணங்களை, ராஸரதி பிரியா, ப்ராணபாலா, கிருஷ்ண சந்திரா, ராமசந்திரா, உமாசந்திரா, கோபாங்கனப்ரியா, கேசியை வதம் செய்த கிருஷ்ணு, கராரி, ஆத்ம ஸ்வரூபம் அடைந்த எனக்கு உன் பிரியத்தைக் கொடுத்து, என்னை ரமிக்கமாட்டாயா?]

(கோபத்தினுலும் பொருமையினுலும் மூடப்பட்ட தன் தாயாகிற வினதையை க்ஷமித்து, தன் இளைய தம்பியான கருடன் மீது அபார அனுக்ரஹத்தைச் செய்த அருணனுடைய புத்ர னுகிற) ஸம்பாதி மீண்டும் பலவானுகி, ராம கிருபையினுல் இறக்கைகளை அடைந்ததை வானர வீரர்கள் இன்புற்று பார்த் தார்கள். சமுத்திரத்தை தாண்டுவதற்கு அவர்கள் கலங்கிக் கொண்டிருந்த சமயம், கரடிகளின் அரசனுகிற ஜாம்பவான் சொன்னுர். "நான் இப்பொழுது கிழவனுகிவிட்டேன். எனது பலம் குன்றிவிட்டது. என் சரீரத்தில் திருவிக்ரம அவதாரத்தின் சமயம் ஏற்பட்ட பலத்தில் லவலேசமும் இப்போது எனக்கு இல்லை. என் பிரபு கராரி, மதுசூதனர், வாமனுவதாரத்தில் உலகளந்த பெருமானுக வளர்ந்த சமயம், (நான் திருவிக்ரமனை பிரதக்ஷிணம் செய்து, அவருடைய ஏகபாதத்தில் பெருகின

கங்கையை நேரில் பார்த்தவனுக) பகவானுடைய விஜயத்தையும் பலி சக்கிரவர்த்தியினுடைய தோல்வியையும் கொண்ட மஹிமை களையும் விஸ்வம் முழுவதும் மணி அடித்து பரப்பினேன். அப்போது நவயௌவன தருணத்தில் இருந்தேன். என்னிடம் (கருடரைப் போல) அமித பலம் வசித்து வந்தது.'' (184)

'' அன்று உலகளந்தானை உகந்து, விண் முழுவதும் பறை சாற்றிய எனக்கு, ''பலி கட்டுண்டபட்டவனுகவும், அவ னுடைய ராஜ்யம் அனைத்தையும் நாராயணன் ஸ்வீகரித்துக் கொண்டான் ; சதுர்பாதமுள்ள சார்ங்க தன்வி, ஒரு பாதத்தால் பலியின் தலையின் மேல் அடிவைத்தான் ;'' ('' நான் திருமால் அடிமை, என்னை வலிய வந்து அடைக்கலம் கொண்டான் '' என்று பெருமிதம் செய்த பலியை ஆக்ரமித்து, பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும் பிரஹ்லாதனும் பெருவேள்வி செய்த சுக்ராச்சாரியரும் விஸ்மயித்துப் போயிருக்கும் சமயம், '' வேள் விக் குறையை முடிப்பாய் ;'' என்று பகர்ந்த மறையானின் பெறுமைகளையும், எம்பெருமான் ஈசன் எழில் வேங்கட மலை போல வளர்ந்து நிற்கும்) உம்பர்கோமானின் பெரும் தோற் றத்தை நான் இப்போது வர்ணிக்க சக்தி அல்லேன். செண்பக மாய், திரைலோகிய ராஜ்யலக்ஷ்மியுடன் நிற்கும் திருவுடையானை நான் அச்சமயம் ஓடிப்போய் நமஸ்கரித்து, ஒரு மணி நேரத்திற் குள் அந்த பவளவாய் பெருமானை ஏழு பிரதக்ஷணம் செய்தேன். அப்பேற்பட்ட அந்த பொன் திருவடிகளை கருத்துடைய நான் இப்போது செய்ய அசக்தனுகவிருக்கிறேன்.'' (185)

அங்கதன் சொன்னுன். '' நான் ஒரே தாவினுல் அக்கரை சென்று விடுவேன். ஆனுல் திரும்பி வருவதற்கு சம்சயமான பலத்தைக் கொண்டவனுக விருக்கிறேன். '' அப்போது ஜாம் பவான் சொன்னுர் '' நீ ஸர்வ ஸ்ரேஷ்டன், மஹாயோக்யதை பெற்றவன். ஆனுல் நீ இப்போது எங்களுக்கு எஜமானன். உன்னை நாங்கள் எவ்விதம் அனுப்புவோம் ?''. (186)

[தியானம்

ராமா சீதா, லக்ஷ்மணு, சரணம் சரணம், நாராயணு விக்ஷரரே, ஆஸ்ரிதர்களிடம் அன்பு வாத்ஸல்யம் கொண்ட நாராயணு, நீர் விஸ்வாதீதர், விஸ்வஅந்தர்யாமி. உம்முடைய பெருமை அறிய முடியாதபடி விளங்கும் கபிராத்மா. பிராட்டி யுடன் கூடிய ராம நாராயணு, உம்மை விட்டுப் பிரிந்த நான் மஹா அபாக்யம் செய்தவன். உமக்கு கைங்கர்யம் செய்யாத

நான் அடையவேண்டிய பொருளை அடையாதவன். உம்மை பக்தி பிரபத்தியாக அடைய விரும்பாமல் போனால் மோக்ஷ ஆனந்தத்தை இழந்தவன் ஆவேன். என் வினைகள் கடும் தடைகளாக விருக்கின்றன. உம்மை அடைந்தல்லவோ நான் பொருளாய் விளங்குவேன். வேத வேற்பே, கரிகிரி மேல் நின்று என்னைக் காக்கும் ராமா, கண்ணு, என் ஆராத அருள் அமுதமே, உன் மார்பில் விளங்கும் கௌஸ்துபம் என்னைப் போன்ற ஜீவனாக விளங்குகிறது. மூல பிரக்ருதியாகிற பிராட்டி ஸ்ரீவத்ஸமாக விளங்குகிருள். சிவனாகிற மஹத் என்கிற தத்வம் கதையாக விளங்குகிறது. ஞானமாகிறது வாளாகவும், அக்ஞானம் கத்தியின் உறையாகவும் தாமஸஸாத்விக அஹங்காராதிகள் வில்லும், சங்கும், உங்கள் மனம் சக்கிரமாகவும், இந்திரயங்கள் பத்தும் அம்புகளாகவும், பூதங்கள் தன் மாத்திரங்கள் வனமாலை என்கிற தத்வங்களாக விளங்குகின்றன. அப்பேற்பட்ட ராமா சீதா, மஹாலக்ஷ்மி நாராயணு, சரணம். உங்களை நம்பிவாழும் எனக்கு வேறு உபாயம் இல்லாதவனாக நினைத்து அருள் செய்ய வேண்டும். சீதே, மஹாலக்ஷ்மியே, வேறு உபாயமில்லாதவனாகிற என்னை ஸர்வ லோக சரண்யனாகிற பகவானிடம் உன்னை சரணம் அடைந்து கர்மயக்ஞாதிகளால் உபாயமில்லாதவனும், அகிஞ்சனனும், என்னை ரக்ஷகம் செய்யவேண்டிய கடமையை நீ ஸ்வீகரித்து புருஷகார பூதையாகி நின்று, ஸித்தோபயமாய் பகவானை அடைய செய்விக்க வேண்டும்.]

அந்த சமயம் கரடி ராஜனாகிற ஜாம்பவான் ஹனுமாரிடம் சொன்னார். "ஹனுமான்ஜி, நீர் கேளும், ஹேபலவான், எல்லா சாமர்த்தியங்களும் குடி கொண்டிருக்கும் கோயிலே, என் சர்வ மங்கள மூர்த்தியே, எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டும் பேசாமலிருக்கிறீரே, நீர் வாயு குமாரன் அல்லவா. பராக்ரமத்திலும் கதியிலும் வாயு பகவானுக்கு நிகரானவர் அல்லவா நீர். புத்தியிலும், விவேக ஞானத்திலும் பொக்கிஷமாக நீர் விளங்குகிறீர் அல்லவோ. (187)

[தியானம்

ஹேரமாரமணு, நாராயணு, ஆஞ்சநேயர் உங்களைத் தொழுது மனம் கசிந்து பாடிபக்தி செய்தார். அதேபோல, சீதாராமா, நீ தான் அப்பா எனக்கு பெரியவன். உன்ஸத்யம் தான் எனக்குப் பெரிது. பல்குனன் எவ்விதம் போரில் சிறந்தவனோ, காண்டீவம் எவ்விதம் விற்களில் சிறந்ததோ, கேசவர்

எல்லா பிராணிகளிலும் சிறந்தவர். அவருடைய சக்ரம் எல்லா ஆயுதங்களிலும் மிகச் சிறந்தது. அதுபோல அர்ஜுனனுடைய தேரில் விளங்குகின்ற வானரக் கொடியானது கொடிகளில் சிறந்தது. கிருஷ்ணரையும் அர்ஜுனனையும் அந்த தேரானது சேர்ந்து சுமந்ததோ, அந்த தேரானது கிளம்பினதான கால சக்ரம் போல பகைவர்களை நசிக்கச் செய்கிறது. எவர்களுக்கு பீமனும் அர்ஜுனர்களும் போர் வீரர்களாக இருக்கின்றனரோ, அவருக்கு கிருஷ்ணர் சகாயம் செய்பவர். அப்பேற்பட்ட தர்ம நந்தனர் யுத்த சமயத்தில் மஹா அடக்கத்துடன் பீஷ்மரை, துரோணரை, கிருபரை சல்யனை, வாஸுதேவர் மூலம் கர்ணனை வணங்கி விஜயத்தை வேண்டினர். அதுபோல அனுகூல்ய ஸங்கல்பமுடைய நான் என் அஹங்காரத்தை வர்ஜித்துவிட்டு, பிராட்டியையே சரண உபாயமாக அடைகிறேன். எனக்கு பக்தியோ தர்மங்களோ அதர்மங்களோ இல்லை. பிரபத்தியாகிற யோகத்தை அவலம்பித்த எனக்கு "நான்" என்கிற ஆத்ம நிக்ஷேபணம் செய்து, கருணையையும் பாரபக்ஷமில்லாத உன் கிருபையை, அம்மா, தாயே, உன் பிரஜையாகிற நான், உன் தாய்மையில் அடங்கிய வாத்ஸல்யத்தை எதிர் பார்க்கிறேன். ராமன் அனவரதமும் உன் நேசத்தை நாடி, மஹாலக்ஷ்மி அம்மா, "உனக்கு மங்கள ஜயங்கள் சதா ஏற்படட்டும்"; என்று நினைப்பவனாக உன்னை வக்ஷஸ்தலத்தில் ஏற்றுக் கொண்டானே, அந்த கருணை ஸ்வரூபத்தையும், "என் அடியார் ஒருக்காலும் தப்பு செய்யமாட்டார்கள்," என்கிற புருஷகார சாமர்த்தியத்தையும், ஔதார்ய குணமாகிற ஸ்ரேயசையும், பகவானைச் சேர்த்து வைக்கும் உபேயத்வ குணத்தையும் க்ஷமை முதலான விரதங்களையும் கைக் கொண்ட சீதையை நேரில் பார்த்த ஆஞ்சநேயர் ஒன்று சொன்னர் "அஞ்சுதல் வேண்டாம். நான் உனக்கு தஞ்சம்." "உனக்கு நான் எப்பொழுதும் துணை செய்வேன், என்னை அடைந்த நீ என் அருளைப் பெறுவாய்; உன்னைக்காப்பது நான் உவந்து செய்யும் கொடை, தானம்." இவ்விதம் அருள் நோக்கு கொண்ட ஆஞ்சநேயர் இருக்க, என் அண்ணல், அர்ஜுனனின் வானரக் கொடியோன் கிருஷ்ணனுக்கும் தர்மருக்கும் ராமனுக்கும் தூதராக விருந்த என் ராம தாஸன் துளசிபிரியன் இருக்க, ஏன் நமக்கு பிராட்டியின் கடாக்ஷம் கிடைக்காது? சீதையின் மனத்தையும் ஹ்ருதயத்தையும் மகிழ்ச்சி செய்வித்த வாயு குமாரா, உன் கீர்த்தியைப் பாடும் கம்பன் போன்ற மஹா கவிகளுக்கு நீ அருள் செய்ய

வில்லையா ? என்னையும் உத்தாரணம் செய்ய முன்வரமாட்டாயா ? சங்கு போலவும் பசுவின் பால் போலவும் வெண்மை நிறம் கொண்ட ஹனுமாரே, என்னையும் ரக்ஷிக்க முன் வரமாட்டாயா ? உன்னை நான் தஞ்சம் என்று அடைந்துவிட்டேன்.]

" இந்த ஜகத்தில் உனக்குக் கடினமானது செய்யமுடியாத காரியம் ஒன்று இருக்கிறதென்று நாங்கள் கேள்விப்பட்டதில்லை. (துளசியை மாலையாக அணிந்த ஆஞ்சநேயா, அஞ்சுதல் வேண்டாம், துஞ்சும்பொழுதும் துணையாயிருப்பவன் நீ அன்றோ. உன்னைத் தஞ்சம் என்று அடைந்தவரைக் காக்கும் பொறுப்பையும், கருணையும் கொடுக்கும் கொடைவள்ளல் அண்ணல் அன்றோ நீ !) இவ்விதம் பராங்முகமாக இருக்கலாமா ? உன்னைவிட்டு, உன் ஸ்வரூப சேர்க்கையை மறந்து வாழ விரும்புகிறவன் சுகத்தைக் கனவிலும் அடைவானா ? அடைய முடியுமா ? இதுவும் ஸ்ரீசீதாராமனுடைய காரியமல்லவோ ? சாதுக்களை ஸம்ரக்ஷிப்பதை விரதமாகக் கொண்ட ஆஸ்ரித வாத்ஸல்யனாகிற சீதாராமனுடைய பரிவாரத்தைச் சேர்ந்த அண்ணலே, நீ ச்தாராமர்களுக்குக் கைங்கரியம் செய்வதற்கல்லவோ, அவர்களுடைய ராமநாம வைபவத்தை, (நாரதர் நாராயணருடைய நாம பிரபாவத்தைச் சொல்லி மகிழ்வதுபோல, உமையினுடைய நாம ஸங்கீர்த்தனத்தை நான் ஓயாமல் நினைத்து மகிழ்வதுபோல,) அவதாரம் செய்திருக்கிறாய். என் வார்த்தையை, என் கோரிக்கையை தயவு செய்து கேளு அப்பா. எங்களைக் கைவிட்டு விடாதே. (குற்றமற்றவரே, உன் நேர்மையையும், ஸத்யத்தையும் அடக்க வினயங்களையும் யார் தான் புகழமாட்டார்கள் ? பரமசிவாதிகளின் ரௌத்ர கோபத்தையும் தணித்து தர்மசிந்தனைகளையும் ஊட்டிவைக்கும் அண்ணலே, பக்தர்களுக்கு உயிர், மானம் ஆகியவற்றைக் கொடுத்தும் ராம கிருபை, சீதா கடாக்ஷம் ஆகிய ஸம்பத்துக்களை வாரிக் கொடுக்கும் கொடை வள்ளல் அன்றோ நீர் ? உன்னை நினைத்து, உன் கமல பாதங்களைத் தொழுது, நான் ஆர்த்தி, உன் சேவடி செய்யும் அன்பன் என்று வினயமாகச் சொன்னவனுக்கு, சீதாராம தர்சனம் செய்ய விரும்பும் எனக்கு, உன் அடிக்கோலம் கண்டு உன்னை படிக்கோலம் கண்ட எனக்கு, என்னைப்போன்ற, சீதாராமா, மஹாலக்ஷ்மி நாராயணா, பக்தர்களுக்கு, நாரதர் தர்மர் ஆகியவர்களின் பயத்தைப் போக்கியதுபோல, அருள்செய்ய மாட்டாயா ? எங்கள் மீது கருணைகொள்ள மாட்டாயா ? ஆஞ்சநேயா, நானும் உன்னைச் சேர்ந்தவன் என்று கருணையுடன் ஸ்வீகரித்துக்கொள்ள மாட்டாயா ? என்று சொல்லிக்கொண்டு)

ஜாம்பவான் வேண்டி நிற்க, பகவான் ஆஞ்சநேயருடைய ஸ்வ ரூபமும் ஸ்ரீத்வமும் பர்வதாகாரமாக மேலே, மேலே நோக்கி வளர்ந்து கொண்டிருந்தது. (அப்பேற்பட்ட விஸ்வரூபம் சொண்ட ஆஞ்சநேயா, நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.) (188)

அவருடைய சரீரம் மெருகு வார்த்தத் தங்கம்போல தேஜோ மயமாக பிரகாசித்தது. அவரைப் பார்த்தால் தங்கமலையாகிற மேரு பர்வதம் இன்னொன்று பூமியில் முளைத்துவிட்டிருந்தது போல விருந்தது. ஹனுமான்ஜி அடிக்கடி, அடிக்கடி சிம்மநாதம் செய்தார். வீரகர்ஜனை முழக்கத்துடன் "நான் இந்த ஜலநிதியாகிற தண்ணீர்த் தேக்கத்தை மாட்டின் குளம்பின் தேக்கிய மடுவைப்போல ஒரே தாவில் தாண்டிவிடுவேன். விளையாட்டாகவே நான் ஒரே தாவில் தாண்டிவிடுவேன்." (189)

"நான் ஒரே அடியில் ராவணனையும், அவனுடன் கூட விருக்கும் சகாய பந்துக்களையும் கொன்று விடுவேன். திரிகூட பர்வதத்தை ஒரே அடியில் பெயர்த்து இங்குக் கொண்டுவந்து விடுவேன். ஹே ஜாம்பவான், உன்னை நான் கேட்கிறேன். எனக்கு உசிதமாக ஆலோசனை கூறு. நான் என்ன செய்ய வேண்டும். உடனே உத்தரவு கொடு." (190)

ஜாம்பவான் சொன்னார், "பிள்ளாய், நீ போய் இதுமட்டும் செய்தால் போதும். சீதையைத் தேடிக் கண்டுபிடித்து, சமாசாரத்தை அறிந்துவா. அவளைப்பற்றிய க்ஷேம விலரஸங்களை அறிந்துவா. ராஜீவலோசனன பிரபு ஸ்ரீராமசந்திரன் தன்னுடைய பாஹீ பலத்தினால் அனாயாஸமாக ராவணனையும், ராக்ஷஸர்களையும் கொன்று விளையாட்டு மாதிரி சீதையை மீட்டுக் கொண்டு வானர வீரர்கள் சகிதம் லங்கை போய் திரும்பி வருவார்." (191)

[தியானம்

நாராயணரே, மஹாலக்ஷ்மியின் பிரபுவே, விபுவே, ராமா, சீதா, லக்ஷ்மணா, சார்ங்கத்தை வில்லாகக் கொண்ட கோதண்ட ராமா, உங்களை ஒருக்காலும் அவமதிக்க முடியாது. உங்களை ஜயிப்பவர்கள் எப்பொழுதும் இருக்கப் போகிறதில்லை. எல்லாவற்றையும் தாங்கும் முக்கிய கதியாக விருப்பவரே, நீர் ஜயசீலராக இருக்கவேண்டும். மந்தரமலை, கூர்ம அவதாரம், தேவர்கள் அசுரர்களின் பலம் வாஸுகியின் பலம் க்ஷிராப்தியைக் கடைதல் ஆகிய எல்லா வஸ்துக்களிலும், காரியங்களிலும், நாராயணா, நீர் தானே ஊடுருவிச்சென்று, ஸகலருக்கும் பலத்தை அளித்து

அம்ருதத்தை அடையச் செய்தீர். ரிஷிகளும் கந்தர்வர்களும் தேவர்களும் யக்ஷராக்ஷஸ பன்னக பிசாசங்கள் மனிதமிருக பக்ஷிகள் யாவரும் உம்மால் படைக்கப்பட்டு, அனுக்ரஹிக்கப் பட்டு, துக்கத்தைப் போக்குகிறுர்கள். பத்மநாபரே, வாஸுதேவ பிரத்யும்ன அநிருத்த சங்கர்ஷணமூர்த்தியே, உமக்கு எப் பொழுதும் ஜயம் உண்டாகட்டும். ஆதிசேஷனே வாசஸ்தனமாக உடைய லக்ஷ்மிநாராயணு, சீதாபதே, தவமும் ஸத்யமும் உமக்கு பலம். உம்முடைய செய்கை தர்மஸ்வரூபமாகவுள்ளது. உமது தேஜஸ் அக்னி; ஹம்ஸரே, ஸுபர்ணரே, காற்று உமது ஸ்வாஸம். அஸ்வினி தேவர்கள் உமது காதுகள். வாயு வாஹனரே, பூமி உமது பாதங்கள். திக்குக்கள் உமது கைகள். ஆகாயம் உமது தலே. சூர்ய சந்திரர்கள் உமது கண்கள். ஸரஸ்வதி உம்முடைய நாக்கு. வேதங்கள் உம்முடைய சிறந்த குணங்களே ஸதாகானம் செய்கின்றன. தாமரை மலரின் நடு இதழ் போன்ற அகன்ற கண்களே உடைய விசாலாக்ஷரே, என் பர பிரும்மமே, தர்மத்தை நிலேநிறுத்தவந்த ஸத்ய பராக்ரமா, ஸதஸித் ஸ்வரூபரே, பிரும்மதேவருக்கும் நாதரே, பத்மநாபரே, உமக்கு ஸதா மங்களங்களும் ஜயங்களும் ஏற்படவேண்டும். ஹரியே, விஷ்ணுவே, நீர் ஜயமடையவேண்டும். விபுவே, உமது மகிமைகள் ஆத்மத்ய அனந்தமில்லாதவை. என்னேப் போன்ற வர்களே கரையேற்ற மகிமைகள் உடையவை. உலகத்திற்கு அணே போன்றவர்; தர்மஸேது என்று உம்மைச் சொல்லுகிறுர் கள். விஸ்வா வஸுவே, விஷ்வக்ஸேனரே, நித்திய நைமித்திக காம்யரூபங்களாகிற ஸமஸ்தகர்மஸ்வரூபியே, விஸ்வேதேவர் களே, பரவாஸுதேவா, லக்ஷ்மிபதி தேவரிரை நான் சரணமடை கிறேன். தேவரீர் ஜயசீலராக விளங்கவேண்டும். அம்மா ஜானகி, ஆபத்தை அடைந்தவர்களின் துயரத்தை நீக்கும் செயலில் விஷ்ணுவுக்கு சமமாக தீக்ஷை எடுத்துக்கொண்டு, கருத்து ஒற்றுமையுடன் இனிய மனேவியாக உம்மைச் சொல்லு கிறுர்களே. துயரத்தில் வசப்பட்ட தேவர்களேயும் அசுரர்களேயும் பாற்கடலேக் கடையும்போது உன் கருணே அலேகளால் தேவர் களே ஹரிவக்ஷஸ்தலத்திலிருந்து இனிமையாக்கினுயே அதுமாதிரி ஆஞ்சநேயரை இனிய சொற்களோடும் மனம் குளிரவைத்தாயே. பகவானுக்கு ஸமதனு:ஒத்த வடிவமுள்ளவளாய் பராசராதி ஸனகாதிகளால் கானம் செய்யப்படும் காம மூர்த்தியே, உங்கள் பாத பங்கஜங்களே நம்பிவாழும் தியாகராஜ வால்மீகி நாரதாதி களுக்கு உங்கள் அன்பு கிடைத்ததே. துளசி பிரியனுகிற

எனக்கு, ஆஞ்சநேயா, உமாசங்கரரே, சுக்ரீவனுக்கு அபயம் அளித்ததுபோல என் ரக்ஷணத்தை உன்மூலம் சீதாராம பாதங்களில் ஸமர்ப்பித்து விட்டேன். என் கோரிக்கைகளை கேட்க மாட்டாயா? கிருஷ்ணு, ராமா, நாரதபிரியா, கங்கையின் கரையின் மேல் பத்ரிகாஸ்ரமத்துள்ளானே, என் உள்ளம் புகுந்தானே, என் கலியனே வாராயோ.]

"என் பிரபு சீதாராம லக்ஷமணர்களுக்கு சதா ஜயங்களும் மங்களங்களும் ஏற்படட்டும். அவர்கள் ஜயசீலர்களாக விளங்கட்டும். சீதாபதியான ராமசந்திரன் வானர சைன்யங்களை அழைத்துக்கொண்டு லங்கை சென்று லக்ஷ்மண சகிதம் ராக்ஷஸர்களைக் கொன்று சீதையை மீட்பார்." ("என் பிரபு, திரிவிக்ரமன் உபேந்திரன் தேவனுகும்போது என் தாய் தேவ சரீரத்தை எடுப்பாள். மனிதராகும்போது மனுஷ்ய ரூபமாக லக்ஷ்மி அவதரிப்பாள்.) விஷ்ணுவின் திருமேனிக்கு தகுந்தாற்போல திருமேனி எடுக்கும் இந்த மானுஷியாகிற சீதை, என்பிரபு சீதாபதி மூன்று லோகங்களையும், மூன்று காலங்களையும் பாவனம் செய்யக்கூடிய சக்தி வாய்ந்தவர்கள். அவர்களுடைய மங்கள கீர்த்திகளை புண்ய ஸ்ரவண கீர்த்தி பிரபாவங்களை நாரத ஸனகாதி முனிவர்கள், தேவயக்ஷகின்னரர், பன்னுகாதிகள், ரிஷிகணங்கள், பசுபக்ஷி மிருகங்கள் யாவும் கானம் செய்துகொண்டிருக்கின்றனர். (ஆறு குணங்களால் நிறைந்தவரும் தேவரும் லோக நாதர்களுக்கெல்லாம் லோகநாதரும், அவதாரங்கள் நித்ய விபூதி ஆகியவைகளில் ஒத்து பின்தொடரும் என்பிராட்டியாகிற சீதையின் அலை போன்ற) மங்கள கீர்த்திகளைப்பாடி நேரில் கண்டு, கேட்டு பிறர்களுக்குச் சொல்லி கானம் செய்து இன்புறுகிருர்கள். பரமபதமும் அடைகிருர்கள். அப்பேற்பட்ட வரதரூபியான எம்பெருமான் எல்லா பூதங்களுக்கும் நிலைபெற்ற மங்கள விக்ரஹமுடைய ஸ்ரீசீதாராமனை அறிவதாலே, மனிதர்கள் சுலபமாக சம்சாரக் கடலைத் தாண்டி பரமபதத்தை அடைகிருர்கள். (என் ரகுவீரனுடைய பதாப்ஜங்களை நம்பிவாழும் உத்தமயோக சீலர்கள், ஸாமஜவரகமன அழகுள்ள மோஹன ராமனை, நாதோபாஸனை என்கிற மலையின் உச்சியில் தீபமாக விளங்கும் காலாதீதனை வேதங்களின் மூச்சுக் காற்ருகிற பிரணவ ஸப்த ஸ்வரங்களால் பாவராகதாளத்துடன் கானம் செய்யும் உபாஸகர்கள் ஸாமவேதத்தின் ஸாரத்தை அல்லவோ அவர்கள் அறிகிருர்கள்.) அந்த பிரபுவின் பதாப்ஜங்களை நிலைபெற்ற மனத்துடன் அல்லவோ தாஸர், ஆஞ்சநேய தாஸன், ராமானுஜ

தாஸனுகிற பிரபு துளசிதாஸர் சதா ஆனந்தமயத்துடன் "என் சரசாபதரா, யோகிவரனுதா, பரிபூர்ணு, மதுர நரரூபா, பிரணத பாலா, சுரபிஸேவிதா, நிஜஸஜ்ஜன பாலா, (அன்று பாரதத்து ஐவர் தூதனுகச் சென்ற கிருஷ்ணு,) ராமா" என்று கானம் செய்துகொண்டிருக்கிருரே. வண்டு ரூபமாக அவருடைய செந்தாமரை மதுரரஸத் தேனை ஸதா பருகிக் கொண்டிருக்கிருரன்ரோ? (அந்த மதுரகீத வண்டுவின் தூசியாக விருக்கும் எனக்கு சீதாராமா, உங்கள் தேன் இன்பம் கிடைக்காதா?) (192)

"ரகுநாதரே, என்பவபேஷஜரே, உம்முடைய கீர்த்திகளை (காமக்ரோதம் லோபம் மதம்மாத்ஸர்யம் இன்னும் அநேகவித மான தோஷங்களுடன் கூடிய அசுப மதியினுல் நான் கவரப் பட்டும், அந்த துளசி தியாகராஜ வால்மீகி ஆஞ்சநேய, நாரத அகஸ்தியாதிகளுடன் ஸம்பந்தம் பெற்ற நான் ராமானுஜ சீதாபதி சேர்க்கையை விரும்பினவனுக சதா உங்களை தியானம் செய்துகொண்டு) கானம் செய்கிறேன். பிரபோ, நரனேடு அவதரித்த ராமா, ஶ்ரீபதி, என் தாபங்களைப் போக்கும் மிருத சஞ்சீவினியே, எந்த மனிதனே, ஸ்திரீயோ, இந்த புகழ் கீர்த்தி களைக் கேட்டாரோ, அவர்களுடைய மனேரதங்களை பூர்ணமாக என்பிரபு திரிசிரஸ்ஸின் சத்ரு ஶ்ரீரகுநாத் பூர்த்தி செய்வார். இது ஸத்யம் இது ஸத்யம்." (193)

நீலோத்பலமான சியாமசரீரம், ஸஹஸ்ரகோடி மன்மதர்கள் வெட்கமடையும்படி லாவண்ய மோஹன ராமா, உம்முடைய ரூபமாத்திரமல்ல; உம்முடைய நாமமாகிற ராம நாமமும் மிக்க பவித்திரமானது. பாபரூபங்களாகிற பக்ஷிக்கூட்டங்களுக்கு நாசம் செய்யும் க்ரூர நெஞ்சுள்ள வேடனைப் போல உள்ளது அல்லவா? (அப்பேற்பட்ட பிரபு, உலகத்திற்கு ஸேதுபோல விருக்கும் வாஸுதேவஸ்வரூபி, நித்ய ஜயசீலர், மனுஷ்ய அவதாரத்தில் எல்லா உலகங்களுக்கும் சுகத்தை உண்டுபண்ணு வதின் பொருட்டும், ராக்ஷஸ வதம் செய்வதின் பொருட்டும், தர்மத்தை நிலைநிறுத்தி கீர்த்தியையும் அடைந்தார். பரதத்வ ஸ்வரூபியாகிற ராமா, நீர் சீதையோடு சேர்க்கையை அடையப் போகிறீர்.) அப்பேற்பட்ட கோதண்டராமன் லீலைக்காக ஸ்வஸங்கல்பத்தினுல் மானிட வேஷம் பூண்ட ரகோத்தமன், என் பிரபு ராமன், தாஸர்களாகிற நம்முடைய கோரிக்கைகளை நிச்சய மாக ஸ்வீகரித்துக் கொள்வார். பரிபூர்ண ராமன், சீதா பிரபு நம்மையும் பரிபூர்ணர்களாக ஆக்கிவிடுவார். அப்பேற்பட்ட ராமநாமம், ராமமூர்த்தி நமது கோரிக்கைகளையும் மனேரதங்

களையும் அவர் அவசியம் கேட்டு பூர்த்தி செய்வார். அவருடைய குண விலாஸங்களையும், கம்பீரமான வாக்குக்களாலும், தீர்க்க பாஹூக்களாலும் செய்யப்படும் லீலா சமூஹங்கள் யாவராலும் ஸ்மரிக்க வேண்டியவை. அப்பேற்பட்ட அனுகூல ஸங்கல்ப நாராயணர், மஹாதீர்த்த ராமன் நம்மை ஸதா காப்பாற்றட்டும். (194)

**மாஸபாராயணம் 23வது கட்டம்**

**ஸ்ரீமத் ராம சரித மானஸரோவரில் ஸகல கலிகல்மஷங்களை நாசம் செய்யும் நான்காவது சோபானமாகிற கிஷ்கிந்தா காண்டம் ஸமாப்தம்**

**சுபம்**

[தியானமும், 194 சுலோகங்களும்]

# சுந்தரகாண்டம்

[தியானம்

ஸ்ரீமந் நாராயணு, மஹாலக்ஷ்மி, பிரபோ, மதுகைடப ஹாரி, உங்களை ராமானுஜனை முன்வைத்து சரணம் அடைந் தேன். ராமாசீதா, வாஸுதேவஸ்வரூபமே சரணம். மஹா பூதஸ்வ ரூபியே நமஸ்காரம். சீதாதேவி ! தாயே, யோகிகளின் கூட்டத்துக்குப் பரமபதத்தை அடையவிக்கிற யோகசித்தியை உண்டுபண்ணும் துர்க்காதேவி, பிரும்மஸ்வரூபிணி, மந்திர அசோகவனத்தில் வசிப்பவளே, உனக்கு நமஸ்காரம். தவருத பிரும்மசரிய விரதம் உள்ளவளே, காலசக்தியே, ருத்ரருடைய பத்னியாகிற உமையே சரணம் சரணம். கபிலையே, கோபாலர் களுக்குத் தலைவரான கிருஷ்ணருடைய இளைய ஸஹோதரியே சரணம் சரணம். குசிச குலத்தில் பிறந்த கௌசிகியே சரணம். வித்யைகளுக்குள் நீ பிரும்மவித்யையாக விருக்கிருய். ஹே பகவதி, துர்க்காதேவி, காட்டிலும் மலையிலும் வசிப்பவளே, என்னைக்காப்பாற்று. மஹாதேவி, ஸர்வஸௌபாக்ய லக்ஷண முள்ளவளே ! காத்யாயனி, உனக்கு ஸர்வதா ஜயங்கள் ஏற்படட்டும். மஹிஷன், சும்பன், நிசும்பன் முதலியவர்களை நாசம் செய்த மாஹேஸ்வரஸ்வரூபிணி, ஸரஸ்வதி என்னும், வேதமாதாவான ஸாவித்திரி என்றும், சுக்ர அகஸ்திய பிரஹஸ் பதிக்கும் இந்திராணிக்கும் அனுக்ரஹம் செய்தவள் நீ என்றும் ! ரங்கராஜனின் பத்னி என்றும் உன்னைச் சொல்கிருர்கள். நீ மஹாநித்ரை. மோஹினி, ஜ்ரும்பனி, மாயை, ஹ்ரீ, ஸ்ரீ, சாந்தியுள்ள ஸந்தியை, துஷ்டி, புஷ்டி, தைர்யம் ; சந்திரனையும் சூரியனையும் விருத்தி பண்ணும் காந்தி ; யுத்தத்திலும் ஆபத்துக் களிலும் சித்தர்களாலும், சாரணர்களாலும் நீ பார்க்கப் படுகிருய். என்னுடைய ராஜ ஸம்பத்தே, என் பரமார்த்தமே, உன்னையும் ஹே ராஜராஜேஸ்வரியே, புவனேஸ்வரியே, உன்னை

---

குறிப்பு :—இந்தப் புஸ்தகத்தில் துளசிதாஸரின் ராமசரித மானஸ ராமாயணத்தின் மொழி பெயர்ப்பு செய்யுட்களின் நம்பரில் வரிசையாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது. பிராக்கட் செய்திருக்கிற தியானமும், மொழி பெயர்ப்பில் பிராக்கட் டுக்களில் போடப்பட்டிருக்கும் வசனங்களும் என் மனேபாவத்தையும் துளசி தாஸரின் கருத்துக்களையும் விமர்சனம் செய்கின்றன. (மொத்தம் 341 ஸ்லோகங் கள்)—ஆசிரியர்.

முன்னிட்டு ஜமதக்னியின் குமாரரான பரசுராமர்; புத்திமானுன மார்க்கண்டேயர், பிருகுநாரதர் வியாஸர் பீஷ்மர் ஆகியவர்களேயும் முன்னிட்டு; வாஸுதேவரே, நீர் பிரபுவென்றும் பத்ம கர்ப்பர் என்றும், அழிவற்ற சாஸ்வதர் என்றும் மஹாத்மா என்றும், எல்லா ஈஸ்வரர்களுக்கு யெல்லாம் ஈஸ்வரர் என்றும் அறிகிறேன்.]

[பிரபிதாமஹரே, ஜகந்நாதரே! சங்கு சக்ரம் கதைபத்மம் சாரங்கம் என்கிற பஞ்சாயுதங்களேத் தரித்திருக்கும் உம்மை நான் சாதாரண மனிதனுக நினேக்கவில்லே. ராமா சீதா, நீங்கள் இருவர்களும் உத்தமமான தேஜஸ். உத்தமமான பதம், பிரும்மம், கீர்த்தி, அழிவற்றது; சாஸ்வதமானது; புருஷன் என்று பெயருள்ளதாக கானம் செய்யப்படுவதும் அறியப் படாததுமான உத்தம ஒளி நீங்கள்தான். நீங்கள்தான் சுகம்; நீங்கள்தான் ஸத்யம். தேவர்களுக்குத் தேவர். மார்க்கண்டேயர் "உம்மை ஸநாதனர்; எல்லோருக்கும் முன்னிருந்தவர், ஆதிப்பிரான்; இப்பொழுதும் எப்பொழுதும் இருக்கும் நாராயணர்; யக்ஞங்களுக்கு யக்ஞமென்றும், தவத்திற்கு தவம்" என்றும் சொல்லுகிருர். வியாஸர் உம்மை தேவருக்கு தேவர் என்றும்; பிருகு உம்மை வாஸு தேவர் என்றும், அங்கிரஸ் உம்மை ஸ்ருஷ்டி கர்த்தாவென்றும், தேவலரும் அஸிதரும் அவ்யக்தமானது (மூலப்ரகிருதி, பூதசூக்ஷ்மம்) உமது சரீரத் தினின்று வெளிவந்தது என்றும்; வ்யக்தமானது உம்முடைய உள்ளத்தில் நிலேபெற்றிருக்கிறதென்றும் சொன்னுர்கள். நாரதர் உம்மை நாராயணராகவும் ஸாத்யர்களுக்கும் தேவர்களுக்கும் பிரபு என்றும், தேவ தேவ ஈஸ்வரர்; உலகத்திலுள்ள வஸ்துக்களின் தத்வத்தை அறிந்தவர் என்றும் சொல்லுகிருர். அப்பேற்பட்ட கிருஷ்ணமூர்த்தி, ராமமூர்த்திபிரபோ, உம்மை அன்யோனிய லக்ஷ்மியுடன் கூடியவராக அறிகிறேன். வைஷ்ணவி, வாராஹி, மாஹேஸ்வரி, பிரும்மாணி, என்கிற சப்தங்களால் அறியப்படும் மஹாலக்ஷ்மியே, என் சீதாதேவியே, உங்கள் திருவுடை அடிகளே பரத்வமாகவும் சௌலப்ய பாவத்துடன் ராமானுஜன் காட்டிய வழியில் சங்கர்ஷணரான ஆஞ்சநேயரை முன்னிட்டு சரணமடைகிறேன். பிரபோ, தேவி, உங்களே காமம் அர்த்தம் என்கிற மார்க்கத்தில் உபாஸிக்கிறேன். நீங்களே தர்ம நந்தனரைப்போல எனது ஏகபராயணம். நீங்களே என் பரமாம்கதி. நீங்களே என் தியானம். நீங்களே வேதாந்தங் களின் ஸ்ருதி. உங்களேயே நான் ஸப்த ஸ்வரங்களால்

கானம் செய்கிறேன். என்னிடம் உங்களுடைய அன்பு ஸதா இருக்கவேண்டும். ராமன் மனக்கோயிலில் உள்ள சீதையின் ஸந்நிதிக்கு திறவுகோலான ராம நாமமே, என் குரு ஆஞ்சநேயர் மஹா அட்டஹாஸத்துடன் கர்ஜனை செய்து கொண்டு ராம நாமரூப பிரபாவத்தால் அன்றே ஆகாசத்திலிருந்து தாவிப்பாய்ந்து சமுத்திரம் சூழ் லங்கையை ஒரே மூச்சில் அடைந்தார். சீதாபிரபோ! உம்முடைய அரவிந்தாக்ஷங்கள் என்மேல் படட்டும். உமது நிஜபதத்தை ஆழ்வாராதிகள் தியாகராஜ வால்மீகி துளசி போன்ற மஹாத்மாக்கள் மனம் தாழ்ந்து சொல் நிறையச் சொல்லி சிந்தை செய்து, நம்பி வாழ்ந்தார்களே. என் அன்பன், என் இன்பன், என் கண், என் எம்பிரான், என்று வாடித்திரியும் எனக்கு மோஹனகரா, என் முன் வாராயோ, செய்தி கூருயோ? என்று வினயபூர்வமாக பிரார்த்திக்கிறேன்.]

## துளசிதாசரின் ராமசரிதமானஸம்—சுந்தர காண்டம்—5வது சோபனம் ஆரம்பம்

ஹே பகவான், நீர் உத்தமமான சாந்தஸ்வரூபி. (மார்க்கண்டேயர் வாமதேவர், இந்திரன், பிரும்மா போன்ற மஹானுபாவர்கள்) உம்மை சாஸ்வதர், (புருஷர், புருஷோத்தமர்) ஆதிமத்ய அந்தமில்லாதவர், (நாராயணர்) என்று பறைசாற்றுகிருர்கள். பிரமாணங்களுக்கும் இந்திரியங்களுக்கும் பிரும்மா முதலான தேவர்களுக்கும் நீர் அறியப்படக் கூடாத அப்ரமேயர், சுத்தர், களங்கமில்லாதவர். பாபபுண்யங்களால் நனைக்கப் படாதவர். உம்மைத் தியானித்து உமது மேன்மைகளைப் புரிந்து அறிந்து கொண்டு, உமது சேஷனுக, உமக்குப் பலவாறு பணிவிடைகள் செய்து கொண்டு வாழ்வதுதான் நிர்வாண சாந்தியைக் கொடுக்கும் என்று சொல்லுகிருர்கள். (போகப்ரியா, திவ்ய தம்பதிகளான உங்களுடைய திருவிளையாடல்கள் ஆனந்தகரமாகவிருக்கின்றனவே. ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட உயர்ந்த "அணவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது" என்கிறபடி ஸ்ரீதரனுகிற நீர் ரமையுடன் சித்தம்விளையாடுகிறீர். அந்த சமயம் ஏகாந்தமாக போகம் அனுபவிக்கும் சமயம், இந்திரன் இந்திர பத்னி ஆகிற வலக்கண், இடக்கண் விழும் சமயத்தில் அல்லவோ, சேதனன் உஜ்ஜீவிக்கப்படுகிருன். வேதாந்தங்கள் மோக்ஷபதங்கள் எல்லாம்

உங்களையே பிரதி பாதிக்கின்றன.) ஹே பிரபோ, போகவதி போகேந்திர சயநாஸநா, உம்மை, (க்ஷீராப்தி நாதனுகிற) விபுவை, பிரும்மா உமாமஹேஸ்வரர் ஆதிசேஷ பகவான் ஸதா சேவித்துக்கொண்டு (ஸாத்வத தந்திரத்தில், பாஞ்சராத்திர ஆகம விதியினுல் ஸ்ரீமந் நாராயணராகிய ரங்கநாதனை விதிப்படி ஆராதித்து) கானம் செய்கிருர்கள். ஹே பிரபோ, (அமாவாஸ்யையில் பிரும்ம ரூபியாயும், பூர்ணிமையில் யோக ரூபியாக விருக்கும் கேசவரே,) ஜகதீஸ்வரரே, ஹரே, (ஹ்ருஷ்கேசரே, கோவிந்தரே, ஜனுர்த்தனரே, வாராஹரே, புண்டரீகாக்ஷரே,) உம்மையல்லவோ சகல வேதங்களும் வேதாங்கங்களும் பரம புருஷராக அறிந்து கானம் செய்கின்றன. (ஆகாயம் உமது சிரஸ்; பூமி உமது இருகைகளால் வியாபிக்கப்பட்டிருக்கிறது; மூவுலகங்களும் உம்முடைய வயிறு. நீர் ஸநாதனர். ஆத்ம ஸாக்ஷாத்காரத்தினுல் திருப்தி அடைந்த ரிஷிகளுள் நீர் உத்தமர். தேவர்கள் உம்மிடமிருந்து உண்டானவர்கள். ஆறு குணங்களால் நிறைந்தவரும் ஸர்வ வியாபகருமான ஸ்ரீ ஹரி பகவான், புருஷோத்தமரான ஸ்ரீ விஷ்ணு என்றும், யோகமகிமையை அறிந்த ஸனத் குமாரர் போன்றவர்களால் துதிக்கப்படுகிறீர்.) தேவதேவர்களுக்கு ஈஸ்வரரான விபுவே, விஸ்வேஸ்வரரே, (ஸர்வ தர்மங்களையும் பிரதானமாக உடைய ராஜரிஷிகளுக்கெல்லாம் நீர் நிதியாக விருக்கிறீர்.) மாயையினுலும் [ஸ்வஸங்கல்பத்தினுலும் ஸர்வதர்மங்களையும் ஸ்தாபிக்கவும் என்போன்ற அடியார்களை ரக்ஷித்து பரிபாலிக்கவும் உதார ஸ்வபாவத்துடன் எளியவருக்கு எளியவராகவும், அடியார்களுக்கு மெய்யனுக) மானிட தேகத்தை எடுத்து சீதா பிராட்டியுடன் ராமா, ரகு நந்தனு, நீர் பூமியில் அவதரித்திருக்கிறீர். ஹே ஹரி பகவானே, தேவர்கள் உம்மிடத்திலிருந்து உண்டானுர்கள். அதனுல் நீர் தேவர்களுக்கும் குருவாக விளங்குகிறீர். பிரபோ, அகிஞ்சனுன எனக்கு நீரே கதி. உம்முடைய கருணையையே நான் அவலம்பித்து வாழ்கிறேன். உம்மை நான் அதிக ப்ரீதியுடன் சரணம் அடைகிறேன். (வாஸுதேவரே, ராமா, உம்மை ஆசாரியர் என்றும் பிதாவென்றும் இருவராகவும் அறிகிறேன்.) ஸ்வாமி, என் விஷயத்தில் கருணைபுரிய வேண்டும். எனக்கு ஸதா க்ஷேமத்தை நினைக்க வேண்டும். (ஜனுர்த்தனரே, என் மோஹத்தை ஒழிக்கும் பிரபோ, பெரும் பயங்களிலிருந்து ரக்ஷனத்தை எனக்கு அளிக்கவேண்டும்.) ரகுகுல சிகாமணி, ராமா, சீதாபிரபோ, தசரத நந்தனு, நீர் அல்லவா பூபால

சூடாமணி உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். (ராஜகோபாலரே, ஜகதீஸ்வரரே, பரமபுருஷராகிய உம்மை அறிந்து வணங்கி சரணம் அடைபவன் நரஹரியாகிற கேசவரை, யோகிஸ்வரரை சரணம் அடைகிருன். நரோத்தமரான உம்மை அடிக்கடி அடிக்கடி வந்தனம் செய்கிறேன்.) (1)

ஹே ரகுநாத்ஜி, நான் ஆயிரம் தடவைகள் ஸத்யம், ஸத்யம் என்று உத்கோஷிக்கிறேன். பிரபோ, அது மாத்திரமில்லே. தாங்கள் என் ஹிருதய ஆகாசத்தில் கோயில்கொண்டு ஸர்வ அந்தர்யாமியாக விருப்பதால், நான் நினைப்பது தங்களுக்குத் தெரியும். உம்மைவிட்டு எனக்கு யார் கதி? (திருமார்வனே, கண்ணபுரத்து எம்மானே, வேத முதல்வனே, கதிர்முடிமேல் வண்ண நறுந்துழாய் அணிந்தோனே, உமக்கு அடங்கின என்னை நன்கு அறிவாய், உன் தொண்டன் நான். உன் தொண்டனுக்குத் தொண்டன் நான் என்று அறியீரோ!) அது மாத்திரமல்ல. (அன்று ரிஷபதேவர் சௌவீர ராஜனுக்குச் சொன்னது போல,) ஸமஸ்த சரீரங்களிலும் ஒரே ஆத்மா பிரகாசிக்கின்றபடி, சகல பொருள்களிலும் சேதனங்களிலும் ஊடுருவிநிற்கும் பிரபுவாகிய நீர், ஏகமாத்திரமாக நான், நீ, அது இது யாது எது என்று சொல்லும்படி அநேக விதமாகவும், ஒன்ருகவும், ஸ்தூலமாகவும் சூக்ஷ்மமாகவும் விளங்குகிறீர். (யோக புருஷர்கள் பிரகிருதி ஸம்பந்தம் விடுபெற உம்மைத் தியரனம் செய்து, ஸம்யோக ரூபத்திஞல் பரமாத்மாவாக உம்மை அடைகிருர்கள். அப்பேற்பட்ட அவ்யயமானவரும் பரஞானமயமாக விருப்பவரும், சகல ஜீவராசிகளின் சரீரத்தில் ஞானமயமாக வசிப்பவரும், த்வந்தங்கள் என்கிற இரட்டையில் ஒன்றிலும் பற்றில்லாதவரும். பற்றப்படாதவரும் ஸுபர்ணரும், தேகாதிகளில் கர்மங்களின் காரணமாகப் பேதமாகக் காணப்படுகிறவரும் வாஸ்தவத்தில் அபின்னமாக விருக்கும் ஆத்மா ஒன்றே என்கிற பரஞானம் கொண்ட எனக்கு ஸ்வாமி உம்மைப்பற்றிய பரமபக்தி என்கிற பகவத் பாகவத கைங்கர்யத்தை உமது அன்பிற்காகவே செய்யக்கடவேன் என்கிற பிரேமை பூர்ணமான பிரபத்தி யோகத்தை எனக்கு அருளும்.) உம்முடைய ரக்ஷணத்தை அடைந்தபின்பு எனக்கு என்னைப்பற்றிய பொறுப்புக்கள் யாவும் இல்லாதபடி நிர்பரனுக விருக்கும்படி அருள் செய்யும். (யானே, எனது உடைமையே உமது என்று எம்பிரானே ஸ்வீகரித்து அருளும், அது மாத்திரமல்ல, வரதா, வேங்கடநாயகா, தாசரதே) ஐம்புலன்களின் ஆசையால் உம்மை மறந்து,

வஞ்சகத்துடன் அவமதித்து (நின் நாமம் நின் ஊர் நின் க்ஷேத்ரம் நின் அடியார்கள் ஆகிய யாவற்றிலும், உம்மால் ஸங்கல்பிக்கப்பட்டு அநாதிகாலமாக நடந்துவரும் தர்மங்களில் பற்றில்லாதவனாகவும் விமுகனாகவும் பிறந்து இறந்து மீண்டும் அதே சுழலில் வாழும் எனக்கு) உமது அடிகளை அடைய முடியாபடி பிரதிபந்தக காமாதி தோஷங்களாக விருக்கும் தடைகளை, (என்னுடைய ஸ்வரூப ஞானத்திற்கும் பக்திபிரபன்ன யோகத்திற்கும் விரோதியாக விருக்கும்) விபரீத தோஷங்களையும் சமனம் செய்து, என்னை விமல மனத்துடன் ஆட்கொள்ளும். (உமது நிருபாதிக கிருபையினால் நான் உம்மைச் சேர்ந்தவன் என்று அனவரதமும் சீதாபிராட்டியை முன்னிட்டு என்னை ஆட்கொண்டு, மாதவா என் மனத்தைப் புனிதப்படுத்தி அருள் செலுத்தும்.) (2)

[தியானம்

பிரபோ, நாராயணா, மஹாலக்ஷ்மி சமேதா, ராமாசீதா சரணம். பரமார்த்தம் என்று உங்களைத் தேடி நான் ஆஞ்சநேயரைப்போல வந்திருக்கிறேன். ஆனால் ஆஞ்சநேயரைப் போல நான் இருக்கமுடியுமா? பெரிதான ஒன்றை அடைய விரும்புகிறவன் இந்திரியங்களை தர்மத்திலும் அர்த்தத்திலும் அடக்கவேண்டும். அடக்கப்பட்ட இந்திரியங்களாலே, விறகுகளால் அக்னியை வளர்ப்பது போல, புத்தியை வளர்க்க வேண்டும். வசமாகாத இந்திரியங்கள் பழக்கப்படாத குதிரைகளைப்போல திறமையில்லாத பாகனை கொன்றுவிடுகின்றன. ஆகையால் முதலில் தன்னை வென்றுகொள்ளவேண்டும். காமக்ரோதங்கள் சிறிய கண்களை உடைய வலையினால் மறைக்கப்பட்ட இரண்டு மீன்கள்போல சரீரத்தில் இருக்கின்றன. அவைகளோ ஞானத்தை நாசம் செய்கின்றன. இவ்வுலக இயற்கையில் பயந்து, ஆசையுற்று ஸ்வர்க்கத்திற்குச் செல்லுகிறவனுடைய ஸ்வர்க்க வாயிலை தேவர்கள் எவைகளால் மறைக்கின்றார்களோ, அவைகள் காமக்ரோதங்கள் என்று அறியவேண்டும். ஆசையையும் லோபத்தையும் கோபத்தையும் கர்வத்தையும் மமகாரத்தையும் நன்கு வெல்ல எவன் அறிவனோ, அவனே பரமார்த்தமாகிற உங்களைத், நாராயண தம்பதிகளே, அடைவான். கார்யத்திற்கும் காரணத்திற்கும் "நான் ஒருவனே காரணம்" என்று அறியும் யோகிகள், "எனக்கு மரணமும் ஜனனமும் இல்லை; நான் அஸத்தான தேகம் முதலியவையாகச் செய்யப்படவில்லை;

எப்பொழுதும் இருப்பதும் பகவானுமான சுத்த பிரும்மமாகிற உங்களை தியானித்துக்கொண்டு, சரீரத்திலேயே சிறகுகளில்லாத ஜீவ ஈஸ்வரர்களை தேனீக்கள் பிராம்மணுதி தேகமாகிற ஸ்வர்ண மயமான அஸ்வத்த மரத்தை அடைந்து, அதில் பரமாத்ம ஞானம் முதலிய சிறகுகளுள்ளவைகளாகி, அவை அவைகளுக்கு உரிய திக்குக்களை நோக்கிப் பறக்கும் ஸுபர்ணர்களை, கருடாத் மாவை, வேதபுருஷனை, என்னை மயக்கி ஆளவைக்கும் மஹா புருஷனை, சாஸ்வதமான சுத்த பிரும்மமாகவும் பூர்ணமாகவும் பார்க்கின்றனர். (அதுபோல பரமாத்மா, சுத்தரே, புத்தரே, ஸனத்ஸுஜாதர் திருதிராஷ்டிரன் காந்தாரி ஆஞ்சநேயர் போன்ற மஹான்களால் பூஜிக்கப்பட்ட வேதாத்மாவே, கருடரே, பெரிய திருவடியே, பூர்ணமான பிரும்மத்திலிருந்து வாலகில்யர் களுடைய தபஸ்ஸினுல் இந்திரனுக்கும் மேலான பலவானுகவும் விஷ்ணுபகவான் மஹாலக்ஷ்மி ஆகியவர்களுக்கு வினய வாகன னுக காணப்படும் ஹம்ஸரே, எனக்கு வாயு வாஹனனுக சீதா ராமனை அனுக்ரஹிக்கச் செய்யும்.) பூர்ணமான ஜீவர்கள் பூர்ண மான பிரும்மத்தினுல் செய்யப்பட்டவர்கள். முடிவில் பூர்ணமான பிரும்மமே மிஞ்சுகிறது. பிரும்மத்தினிடம் வாயு வந்தான். அதனிடமே வாயு அடங்கியிருக்கிறுன். அதுபோல அக்னியும் ஸோமனும் ஆதித்யனும் அடங்கி இருக்கிறுர்கள். பிரும்மமாகிற ஹம்ஸம் ஸம்சாரமாகிற ஜலத்தின் மேலே ஸஞ்சரிப்பதாகவும், ஜீவனுகிற தன் ஒரு பாதத்தை உயர எடுப்பதில்லை. சம்சாரத்தில் பரவினதான ஒரு பாதத்தை அது எடுக்குமானுல் பந்த மோக்ஷங்கள் ஏற்படா. எப்பொழுதும் இருப்பவனும் பகவானு மாகிற நாராயணரை வித்வானுனவன்மனம் புத்தி அடக்கத்தினுல் தன் ஹ்ருதய குகையில் வசிக்கும் அந்தராத்மாவை, சுத்த பிரும்ம மாக அறிகிறுன். அப்பேற்பட்ட மஹா யோகீஸ்வரர்களான ஆஞ்ச நேயா, கருத்மானே, புஜகோத்தமா, ராமானுஜா, உமாசங்கரரே, உங்களை நான் ஸனகாதியோகிகளை முன்னிட்டு என் காமக்ரோ தங்கள் மமகாரங்கள் அழிய அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.]

என் பிரபு ஆஞ்சநேயர், (வாயுகுமாரன், அஞ்சனுதேவியின் புத்ரன், சீதாராமதூதன், பரம உபகாரி) அதுளித பல முள்ளவர். மேருமலையின் நிறம்போல ஸ்புடம்போட்டுச் செய்யப்பட்ட தங்கபர்வதம்போல எனக்கு காக்ஷி அளிப்பவர். (நளினஸ்வபாவம் உள்ளவர்.) தனுபுத்ரர்களாகிற தைத்யர்களின் வனத்தை அழிப்பதில் காலாக்னி போன்றவர். (தைத்யர்களின் குண விசேஷங்களான காமம் க்ரோதம் லோபம் மதம், மமகாரம்,

வணங்காமல் இருத்தல், ஸ்வதர்மம் என்கிற வஞ்சனையின் பெயரால் தர்மத்தையும் அர்த்தத்தையும் நழுவச் செய்தல், சுத்த பிரும்மமானதும் ஹ்ருதய ஆகாசத்தில் வசிக்கும் ஹிரண்ய கர்ப்பரை, ஸுபர்ணரை, அஸ்வத்தரை அறியாமலிருத்தல், சம்சார பற்றுதல்களால் கட்டுண்டு ஹம்ஸராகிற பரமாத்ம புருஷனை அறிய முயலாமலிருத்தல், ஆகிய சகல தோஷங்களை யும், அவித்யைகளையும் வென்றவர். பெரியோர்களால் அடக்கப் பட்டு, பழிக்கப்பட்டதும் அருவெறுப்புள்ளதும், லஜ்ஜையை விளைவிக்கக்கூடிய பாதகங்கள் என்கிற வனத்தை அழிப்ப தற்கு காலாக்னியைப் போன்றவர்.) ஞானவான்களுக்குள் முதல் ஸ்தானத்தை வகிப்பவர். யோகிஸ்வரர்களில் (ஸனகாதிஸனத் ஸுஜாதர் போன்று மனம் புத்தி அடக்கத்தினால் ஆதித்யனை குருவாக அடைந்து, வேதாத்மாவை நன்றாக சுத்த பிரும்மமாக அறிந்து, ராமசீதாவே, தனக்கு பரமார்த்தம் என்று நம்பிவாழும் கிருபாளு,) ஞானபண்டிதன், நவவ்யாகரண பண்டிதன், ஞானி களுள் அக்ரண்யர். (பிரும்ம மூலமாக உலகத்திற்கு வியாகரணம் (விவரணம்) ஏற்பட்டிருக்கிறது. அந்த பிரும்மம் எல்லா அர்த்தங்களையும் வியாகரணம் (விவரணம்) செய்வதால் வையா கரணனாகச் சொல்லப்பட்டு உலகங்களைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறது. தன்னையே லக்ஷ்ணமாக உடைய பிரும்மத்தை எவன் அறிந்தானோ, அந்த சிறந்த முனி எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு ஸத்தியத்திலும் பிரும்மசர்யத்திலும் நிலை பெற்றவனாக, தன்னையும் (ஜீவாத்மாவையும்) தன்னை அடக்கி ஆளும் பிரும்மமாகிற ஈஸ்வரரையும் வேதங்களின் முறை களாலும் பழக்கப்பட்ட புத்தியினாலும் அறியும் மஹா யோகிஸ்வரர்.) அவரை அடிக்கடி அடிக்கடி நான் நமஸ்கரிக் கிறேன். அவரையே ஸகல கல்யாணகுண ஸம்பன்னன் என்று சொல்லலாம். (தர்மஸ்ஸத்யம், தவம், அடக்கம், மாத்ஸர்ய மில்லாமை, அகார்யத்தில் லஜ்ஜை, சுகதுக்கங்களைச் சகித்தல், அசூயை யில்லாமை, தானம், வேத அத்யயனம், தைரியம், பிறர் பிழைகளைப் பொறுத்தல் இவைகளும், நல்ல உதாரமனமுடைய தன்மையினால் ஆறு குணங்களாகிற (1) நண்பனுக்கு மகிழ்ச்சி உண்டாக்குதல், துன்பம் வந்தபோது தானும் வருந்துதல்; (2) தனக்கு மிகப் பிரியமான பொருளையும் கூடக்கேட்டாலும் கொடுத்தல்; (3) ஆசையால் இகத்தில் போகங்களை அனுபவி யாமலிருத்தல்; (4) கர்மங்களுடைய பயனில் விருப்பத்தைத் தொலைத்தல். (5) திரவியமுள்ளவனாயிருத்தல் (6) குணமுள்ள

ஸாத்வியாக விருத்தல் ஆகிய குணச் சேர்க்கையுடன் விளங்கும் பரிபூர்ணன். இவ்விதம் கேவலமாக ஸம்ருத்தி உள்ளவரும், ஸத்வத்தில் நிலைத்தவரும், பிரும்மதியானமாகிற ஸத்ய ஸங்கல் பத்தில் நிலைத்திருப்பவரும்) வானரங்களுக்கு ஈசரான ஆஞ்ச நேயரை ஆயிரம் தடவைகள் நான் நமஸ்கரிக்கிறேன். சீதா ராமனுக்கு (புத்ரன் போலவும்) பக்தன்போலவும் (ஆப்தன் போலவும் கிங்கரன் போலவும் இருக்கும்) என்பிரபு வாயு புத்ரரான ஆஞ்சநேயரை நான் ஆயிரம் தடவைகள் சுக்ருத பிரணமம் செய்து நமஸ்கரிக்கிறேன். (3)

ஹனுமான் ஜாம்பவானுடைய வசனங்களைக் கேட்டார். அவருடைய ஹ்ருதயத்தில் உத்ஸாஹம் பொங்கிக்கொண் டிருந்தது. தன் சகாக்களைப் பார்த்துச் சொன்னர் "என் சகோதரர்களே, துக்கத்தை விடுங்கள். கந்தமூல பழங்களைத் தின்றுகொண்டு இங்கேயே இருந்துகொண்டு நான் திரும்பி வரும்வரை சுகமாக காலத்தைக் கழியுங்கள்." (4)

"நான் சீதாதேவியைப் பார்க்காமல் திரும்பி வரப்போகிற தில்லை. என் காரியம் ஜயமாகிவிடும். என் மனம் அதிக உத்ஸாஹத்துடனும் சந்தோஷத்துடனுமிருக்கிறது" இவ்விதம் சொல்லிவிட்டு, ஹனுமான்ஜி எல்லோருக்கும் நமஸ்காரம் செய்து விட்டு ஸ்ரீ ரகுநாதனை மனதில் தரித்துக்கொண்டு சந்தோஷத் துடன் புறப்பட்டார். (5)

[தியானம்

ஸ்ரீ ராம லஷ்மண சீதா, உங்களை ஆஞ்சநேயரை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். அடிக்கடி பிரதக்ஷிணம் செய்து அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். கருடன் போலவும், பிரும்மாவினுல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட புஷ்பக விமானம் போலவும், பார்த்தஸாரதியின் தேர்போலவும், வேதவியாஸரின் விசாலபுத்தியின் கற்பனைகள் போலவும், மஹாகணபதியின் எழுதுவதின் ஸாமர்த்தியம் போலவும், ஸாகரம்போல கம்பீர மானதும் பவித்திரமானதும், கங்கையின் பிரவாஹம் போலவும், சீதா ராம கைங்கரியமே விஷ்ணுவின் ஆராதனம், அந்த கைங்கரியத்தின் சங்கல்பமும் அதன் பலனும் அதனுல் ஏற்படும் ஸம்யோக மேன்மைகளும் அனந்தனுடைய பூஜை, நாரா யணருக்கு அர்ப்பணம், நிர்மலஹ்ருதயத்துடன் செய்யப்பட்டது என்கிற மஹாபாக்கியம், தேவர்களுக்கும் கிடைக்காத மஹாபேறு பெற்றவர் என் பிரபு ஆஞ்சநேயர். அப்பேற்பட்ட அமலனை

வரும் ஆசார்யரும் எனக்கு பரமமித்ரனும் என் போன்ற துளசி பிரியர்களுக்கு பரமஹிதகாரியும் ஆனந்த தரிஸனம் அளிக்கும் வாயு குமாரனை, என் சிவதூதியை, நான் அடிக்கடி மங்கள ஜயகோஷங்களுடன் பிரதக்ஷிணம் செய்து அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஹேபிரபோ, சீதாபதி, ரமா ரமணா, இந்த ஆஞ்சநேயர் இல்லாதபோனால் சீதையின் பெருமையை யும் ராமனுடைய உதார குணத்தையும் மக்கள் அறிய முடியுமா: ராமன் பரமாத்மா, மரியாதா புருஷோத்தமன் என் பது ஒருபுறம் இருக்கட்டும். அந்த மகிமைகளை என் பிரபு தாஸ்ய ஸ்வரூபம் கொண்ட ஆஞ்சநேயர் இல்லாவிடில் என் போன்று உழலும் துளசி பிரியர்கள் அறிந்து உத்தா ரணம் செய்யப்பட முடியுமா? தசரதர் குலத்தில் பிறந்தும், வஸுதேவர் தேவகி தனயனாக அவதரித்தும், என் பிரபு நாராயணன், அவரை அடைய வருந்தி எண்ணி வாழும் என் போன்ற ராமதாஸர்களுக்கு தன்னை இலக்காகவும், மறைந்த பொருளாகவும் ஆக்கி, கண்புதையல் விளையாட்டை நடத்து கிறான். இதற்கு ராமானுஜன்போல ஆஞ்சநேயர் அல்லவா நம் கண்களை திறந்துவிடுகிறார். அப்பேற்பட்ட மங்கள தூதனுக்கு ஆசார்ய ஹ்ருதயத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? பிரபன்னன் என்று என்னை பறைசாற்றிக்கொண்டால் மட்டும் போதுமா? உமாமஹேஸ்வரரைப்போல அவர் அல்ப சந்தோஷி. ஆசுதோஷி. என் ஒரு நமஸ்காரத்தினால் ப்ரிதி அடையும் பிரபோ, எனக்கு பூர்ணமாக சீதாராம தர்சனத்தை, மூன்று லோகங்களிலும் ஓடிவரும் திரிபதகா என்கிற புனிதமான கங்கையாகிற ராமாம்ருதத்தை எனக்குச் சுலபமாகக் காட்டிக் கொடுக்க மாட்டாயா? உன் கிருபை எனக்கு கிடைக்குமா? ராம மந்திரத்தின் ஸ்வரூபம் அல்லவோ நீர். நீர் உமாமஹேஸ்வரர் களின் பிரும்மசர்ய தவத்தின் உருவம்; உமக்கு பிரும்மாவின் கண்கள்; திக்குபாலர்கள் திக்குக்கள்; பிரகிருதி மலைகள் உமக்கு சரீரம். ஸத்வம் ரஜஸ்தமஸ் உம்முடைய புத்தியின் குணங்கள். பகவானுடைய அரவிந்த மலர் உம்முடைய யோக சித்திகள்; ராமபக்தி ஸாங்கியயோகம் பிரபன்ன விதியை ஆகிய யோகங்கள், உம்முடைய ஐஸ்வர்யாதி ஆபரணங்கள்; துளசிமாலை போன்ற ராமசின்னங்கள் எல்லாம் மஹாலக்ஷ்மியின் பிரஸாதங்கள். கருணையையே கவசமாகக்கொண்ட ராமபக்தா, உன்னை என்மீது தயை செய்யும்படி மிக்கத் தாழ்வுடன் கேட்கிறேன். என் பிரார்த்தனையை ஸ்வீகரித்துக்கொள். திரிகூடமலையில் இருக்கும்

நாராயணு, பாற்கடலில் இருக்கும் சீதாதேவி. லங்கையாகிற ஆதிசேஷ தல்பத்தில் ஆனந்தகரமாக வீற்றிருக்கும் சீதாபதி, என்னை நீதான் விபீஷணனை ரக்ஷித்தது மாதிரி ரக்ஷித்து அருள் புரியவேண்டும். சரணம் செய்து ஆஞ்சநேயர் சகாவாக நான் விளங்குகிறேன்.)

ஸமுத்திரத்தின் கரையிலே அழகான ஒரு மலை இருந்தது. பிரபு மாருதி அனுயாஸமாக அந்த மலையின் உச்சிக்குத் தாவினுர். அடிக்கடி அடிக்கடி ரகுவிரனுடைய நாமரூபவிலாஸங்களை ஸ்மரிப்பவராக, பவன தனயனுகிற ஹனுமான்ஜி, அதிக வீர்யமுள்ள பலவான், அந்த மலையின் உச்சியிலிருந்து தாவிக் கிளம்பினுர். (6)

எந்த பர்வதத்தின்மேல் தனது திருப்பாதத்தை அமர்த்தி தாவ எண்ணம் கொண்டு அழுத்தினுரோ, அந்த பர்வதம் பாதாளத்தில் அமிழ்ந்துவிட்டது. (அது என்னைப்போன்று ஸர்வவினயமாக அவருக்குக் காக்ஷி அளித்தது. என் பிரபு, ரகுவீரன், ரணதீரன், ஸுதன்வி, கோதண்ட ஹஸ்தன், காகாசூரனையும் மன்னித்தவன், இந்திரியங்களையும் மனத்தையும் வசம் செய்த தசரத ராஜகுமாரன், பாற்கடலைக் கடைந்து அம்ருத மதனத்தைத் தேவர்களுக்காகச் செய்த மஹாலக்ஷ்மியுடன் சேர்ந்த) சார்ங்கதன்வா, எதிரிகளின்மீது அடிக்கும், குறிதவராத ராமபாணத்தைப் பிரயோகிப்பதுபோல, அதிதீவிர வேகத்துடன் ஹனுமான்ஜி ஆகாயமார்க்கத்தில் தங்குதடையின்றி பறந்துகொண்டு சென்றுர். (ஆகாயத்தில் சூரியன் செல்லுவது போலச் சென்று கொண்டிருந்தார் பிரபு ஆஞ்சநேயர்.) அந்த ராம தூதன் எங்களை அனவரதமும் காக்கட்டும். (7)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி விபூஷிதா, ராமா லக்ஷ்மணு, பதிதனுகவிருந்து உம்மை மறந்து இவ்வளவு காலம் கழித்துவிட்டேனே. நீர் உமது சௌலப்யத்தினுலும் க்ஷமையினுலும் என்னை ஆட்கொண்டீர். உமக்கு ஸர்வவிதத்திலும் நான் தகுதியில்லை. உம்மை அறிவது, உம்மை அடைவது, ஸ்வரூப ஞானம் ஒன்றினுலேதான் முடியும். ஒரு தடவை நீர் என்னை உம்மைச் சேர்ந்தவன் என்று ஸ்வீகரித்துவிட்டீரானுல், நான் எப்பொழுதும் உமது சௌலப்யத்தாலும் க்ஷமையினுலும் கௌரவிக்கப்பட்டவனுகிவிடுகிறேன். உமது அடக்கம், வினய சம்பத்தும், வானரர்களிடம் காண்பித்த அன்பும் மரியாதையும்,

க்ஷமையும் வரம்புமீறி நின்று, யுதிஷ்டிரரைப்போல, என்னை பரவசப்படுத்துகிறது. சீதாராம ஸ்வாமி, உம்மை பராசரர் மைத்ரேயர் வியாஸர் ஆஞ்சநேயாதிகள் போன்ற மஹாபாகவத உத்தமர்கள் நாரதர் விஷ்வக்ஸேனர் போன்ற மஹானுபாவர்கள் அனுபவித்த சௌலப்ய பாக்யங்களை, உமது திருநாமமாகிற மாநதர் என்கிறதிற்கு ஏற்ப, உம்முடைய பரத்வமும் வியாபகமும், அகிஞ்சனனிடம் காட்டும் தயையும், உமது திருவுள்ள ஸங்கல்பத்தால் நீரே மலிவுறும்படி செய்துகொண்டு பிறருக்கு அடிமையாக்குகிறது. பக்தர்களின் அடிபணிந்த நீர் மான்யர்; என்னுல் மிக்க சிரமத்துடன் பூஜிக்கத் தகுந்தவர். பாண்டவர்களுக்காக தூது சென்ற நீர் ஆஞ்சநேயரை உமது காரியத்துக்காக தூது அனுப்பிய அமாநி. உமது உயர்வை நினைக்காமல் என்னிடம் நீர் பழகுவதைப் பார்த்தால் உமக்கு சமமாகவாவது யாராவது இருப்பார்களா? இதன் மர்மத்தை உணர்ந்த என் தாயான சீதை தன் ஹ்ருதயக் கூண்டில் கிளியை அடைத்து வைத்திருப்பதுபோல உம்மை அடைத்து வைத்திருக்கிருள். அப்பேற்பட்ட வரம்ருதுபூர்வபாஷணு, ராமா, ராமானுஜா, நீங்கள் என்னிடம் எப்போது பேசுவீர்கள்? ஆஞ்சநேயரிடம் முதலில் பேசும்போது ராஜநீதியாக லக்ஷ்மணனைவிட்டுப் பேசச்சொன்னீர்? ம்ருதுஸூபாஷணு, ஹரிபகவானே, லக்ஷ்மிநாதா, உங்களை அனவரதமும் நாரதர் பராசரர்போல தியானித்துக் கொண்டிருக்கும் எனக்கு அர்ஜுனனிடமும் ஆஞ்சநேயரிடமும் காண்பித்த அன்பு விஸ்வாசம் எப்போது வலுவில் எனக்கு காண்பிப்பாய்? துளசிதாஸர் உன்னை மரத்தின் கீழேயும், வானரர்களை மரத்தின்மேல் பழம் தின்றுகொண்டு கொட்டையை உமிழ்ந்துகொண்டும், வால்மீகி பகவான், ராமன் சீதையிடம் வானரர்களை "என் சகாக்கள், உன்னை மீட்டுவந்ததில் பரம உபகாரிகள்" என்று சொன்னதாகச் சொன்ன சௌலப்யத்தையும் நான் எவ்விதம் மறப்பேன்? அவர்களை முன்னிட்டு நான் உன் தயையை, ஜானகிரமணு, (கங்கையின் ஸூமரியா தீர்த்தக் கட்டத்திலிருக்கும்) உமாசங்கரரை முன்னிட்டு நான் தாழ்ந்து பிரார்த்திக்கிறேன். ஹனுமாரே, தயவு செய்யவேணும்.]

ஜலநிதியாகிற சமுத்திரம் ஹனுமாரை (தன் பிரபிதா மஹனுகிற) ரகுவம்ச சிரோண்மணியின் தூதன், ("இதுதான் சமயம் நான் காண்பிக்கவேண்டிய மரியாதைக்கு",) என்று அனுஸந்தித்து உடனே மைனுக பர்வதத்தை அழைத்துச் சொன்னது.

“ஹே மைனாக பர்வதமே, இந்த ஹனுமார் பெரிய காரியத்தை ஸாதிக்கப் போகிறான், அவன் போகவேண்டிய தூரம் வெகு சிரமமுள்ளதாகவிருக்கிறது. அவனுடைய களைப்பை நீக்கு வதற்கு அவனுக்கு வேண்டிய உபகாரம் செய்” என்று உத்தரவுவை அளித்தது. (8)

ஹனுமார் அந்த பர்வதம் நடு ஸமுத்திரத்தில் முளைத்து வளர்ந்திருப்பதை தன் கையினால் தடுத்தார். அவர் அதற்கு பிரணாமம் செய்தார். பிற்பாடு மஹாவணக்கத்துடன் சொன்னார். “ஹே சகோதரா, உன்னுடைய உபகாரத்திற்கு வந்தனம். இது ராமசந்திரனுடைய காரியம். இதை முடிக்காத வரையில் எனக்கு நிம்மதியோ களைப்போ, விஸ்ராமம் செய்வதற்கோ அவகாசம் ஏது இருக்கிறது? (நான் யக்ஞமயமான சரீரத்தை உடைய பகவான் விஷ்ணுவிற்கு என் கர்மமாகிற ஆராதனத்தை அவருடைய உகப்பிற்காக செய்வதில் ஏது சிரமம்? அவரேதான் எல்லாவற்றையும் நிறைவேற்றிவைக்கிறார்.) ஸர்வகாரண பூதரான ஜானகி ரமணனை நான் நமஸ்கரிக்கிறேன்” என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டார். (9)

பவனஸூதரான பிரபு மனோவேகமாகச் சென்றுகொண்டிருப் பதை தேவர்கள் கண்டார்கள். (இவனுக்குக் காரிய சாமர்த்தியம் இருக்கிறதா, இவன் ராமகார்யத்தை நிறைவேற்றி வைப்பானா; நம் கஷ்டங்கள் இவனால் தீருமா? என்று சம்சயம் அடைந்தவர் களாக) ஹனுமாருடைய புத்தி விசேஷத்தையும், சாமர்த்தி யத்தையும் அறிய விருப்பம் உள்ளவர்களாக ஆனார்கள். அவரைப் பரிக்ஷிப்பதற்காக ஸர்ப்பங்களின் தாயாகிய ஸூரஸை என்பவளை ஏவினார்கள். அவள் ஹனுமானை நேரில் கண்டு சொன்னாள். (10)

“இன்று தேவதைகள் எனக்குப் போஜனமாக உன்னை அனுப்பியிருக்கிறார்கள்.” இந்த வார்த்தைகளைக் கேட்ட பவன குமாரன் சொன்னார். “முதலில் நான் ராமகாரியத்தைச் செய்து விடுகிறேன், பிற்பாடு நானே உன்னிடம் வருகிறேன். முதலில் சீதையின் விபரங்களை என் பிரபு அறியட்டும்.” (11)

“அதை நிறைவேற்றிய பின்பு நானே உன் வாயில் ஆகார மாக வந்து உட்காருகிறேன். ஹே மாதா, நீயும் நானும் சத்தி யத்திற்காக கட்டுப்படுவோம். ராமகாரியத்தை முதலில் செய்வ தற்கு எனக்கு அனுமதி கொடு. நான் காலவிளம்பம் செய்யாமல் போக உத்தரவு கொடு” என்று கேட்டுக் கொண்டார். பலவித முயற்சிகள் செய்தும் அவள் ஹனுமாரைப் போக விடவில்லை.

அப்போது பிரபு ஹனுமார் ஸுரஸையிடம் "உனக்குச் சாமர்த்தியமிருந்தால் என்னைச் சாப்பிடு" என்று சொன்னர். (12)

உடனே ஸுரஸை தனது ஒரு யோசனை தூரம் அகலமுள்ள பெரிய வாயைத் திறந்தாள். அதைப் பார்த்து ஹனுமார் தனது சரீரத்தை விருத்தி செய்தார். அப்போது ஸுரஸை பதினறு யோசனைகள் அகலமுள்ளதாக தன் வாயைத் திறந்தாள். அதைப் பார்த்து ஹனுமார் தன் உருவத்தை முப்பது யோசனைகள் உள்ளதாகப் பெரிதாக்கிக் கொண்டார். (13)

இவ்விதம் ஸுரஸை ஹனுமானின் மங்கள விக்ரஹத்தின் பரிமாணத்திற்கு ஏற்ப தன் வாயையும் அதிகரித்துக்கொண்டே போனள். அப்போது அவரும் நிஜஸ்வரூபத்தைக் காண்பிப்பவராக அதிகரித்துக்கொண்டு போனர். நூறு யோசனைகள் (420 கோசங்கள்) அகலமுள்ளதாக வாயைக் கண்ட பவனசுதன் தனது உருவத்தை திடீரென்று சிறியதாக, லகுரூபமாக மாற்றிக் கொண்டு, அந்த சிறிய உருவத்துடன் (14)

அவளுடைய வாயில் புகுந்து மறுபடியும் வாயிலிருந்து வெளிப்பட்டு, தனது ஸத்யவ்ரதத்தைக் காப்பாற்றிக்கொண்டு "அம்மா, உன் வாயிலிருந்து வெளிப்பட்ட எனக்கு போக உத்தரவு கொடு" என்று விடை கேட்டார். ஸுரஸை சொன்னள், "அப்பா, உன் புத்தி தீக்ஷண்யத்தைப் பரிசோதித்துவிட்டேன். இந்த மர்மத்தை அறியத்தான் தேவர்கள் எனக்கு உத்தரவிட்டார்கள். என்னை நீ வென்றுவிட்டாய்." (15)

[தியானம்

ராமா சீதாபதே, நாராயண, மஹாலக்ஷ்மிபதே, அன்று உமாமஹேஸ்வரர் ராமானுஜன், என் பூர்வாசார்யர்கள் தியாகராஜர் போன்ற மஹானுபாவர்கள் எனக்கு அடிக்கடி உபதேசித்தது என்னவென்றல், மோக்ஷ ஞானம்தான் எல்லா ஞானங்களுக்கும் மேலானது என்றும் ரிஷிகளும் வித்வான்களும் தேவர்களும் அதையே பரமபதம் என்றும் சொல்லுகிறர்கள். இந்த ஸம்சாரம் துக்கத்தையே அடிப்படையாகக் கொண்டது. பிரும்மா முதல் தாவரம் வரை ஸம்சாரம் என்று சொல்லப்படுகிறது. அந்த மோக்ஷ ஞானத்தை ஸாங்கியம், யோகம் என்றும், பிரபத்தி பக்தி என்றும் அறிவுடையவர்கள் சொல்லுகிறர்கள். செய்கையினலும் மனத்தாலும் வாக்காலும் ஒரு பிராணிக்கும் த்ரோகம் நினைக்காமல் இடைவிடாமல் நாராயணனைத் தியானம் செய்துகொண்டு, ஸர்வபூததயையுடன் கடுமையும் அஹங்காரமும்

பற்றுதலும் அற்றவனுகி, பகைவன் மித்ரன், இகழ்ச்சி புகழ்ச்சி இவைகளிலிருந்து விடுதலே அடைந்து, விருப்பு வெறுப்பு சீதோஷ்ணம் பசி தாகம் இவைகளினுல் கலங்காமல், ஸர்வ ஆத்ம பூதரான ராமனே, என் பிரபு சீதாபதியை எந்த தாரக நாம மந்திரத்தினுல் உமாமேஹஸ்வரர்கள் அனவரதமும் சொல்லி தன் பக்தர்களே ஸத்பதாசாரத்தில் நியமிக்கிருர்களோ, அந்த மஹரிஷி நாராயணனே, கபிலாசாரியரை, வேதங்கள் அனேத்தையும் நேராக கண்ட கபிலமூர்த்தியை, ஸாங்கியம் என்கிற இருபத்தைந்தாம் தத்வத்தை உபதேசித்த ஆசார்யரை, நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். சித்திகள் பெற்று தேவதைகளுக்கு ஸமமாக விருப்பதை யோக சாஸ்திரம் என்பதும், இந்த மோக்ஷ ஞானத்தையே அதையும்விடப் பெரிதாக நான் சொல்லுகிறேன். அப்பேற்பட்ட ஸாங்கிய யோக சாஸ்திரங்கள் அனேத்தும் இந்த ராமனேயோ, கிருஷ்ணனேயோ, நாராயணரையோ விட்டு வேறு ஒன்றும் பற்றுதலடைந்து மோசம் போகாதே என்று சொல்கின்றன. இந்தபிரபுதான் தாமஸ குணரஹிதர். ஆசந்திரார்க்கம் இருக்கும்வரை மாசுசஃ என்று வார்த்தையைச் சொல்லி, வார்த்தை மாருதவன், சண்டமார்த்தாண்டன், தர்மாத்மா. அவரும் அவர் பத்தினியாகிற வைஷ்ணவ சக்தியும் பிரதானம் புருஷன் என்றும் ஸமஸ்த பூதங்களேயும் ஊடுருவிப் பார்ந்து அவைகளேத் தாங்கும் ஆதார நிலேய மூர்த்திகள், பிரதான புருஷ மயமாக விளங்குகிருர்கள். அவர்களிடம்தான் ஸம்பூர்ண ஜகத்தும் நிலேத்திருக்கிறது. அவர்களே அவ்யக்தமான மூலபிரகிருதி. வ்யக்தஸ்வரூபமாகிற ஸம்சாரம், கர்மபலன் அவர்களே. அவர்களே ஹரி, விஷ்ணு, சாக்ஷாத் பரபிரும்மம் என்று சொல்லப்படுகிருர்கள். அவர்களே விட்டு ஒன்றும் இல்லே என்கிற மோக்ஷ ஞானத்தை அடைந்து, உலகில் அற்ப பலன்களே விரும்பாமல் ஆசார்யர்களான நம்மாழ்வார், ஆஞ்சநேயர், துளசிதாஸர் போன்ற மஹானுபாவர்கள் உபாய அனுஷ்டானம் செய்து ஆஸ்திக்யம், புத்தி கூர்மை, அசூயையில்லாமை, ஸத்ஸம்பிரதாயத்தில் தெளிந்த மனம், ஸந்தேகம், பயமில்லாமை, வைராக்கியமாகிற விஷயப் பற்றுதல்களே விடுதல், பகவான் நம்மை க்ஷமித்து, ஆட்கொள்வான் என்பதை விஸ்வாஸ பூர்ணமாக அறிந்து, பிரபத்தி மார்க்கத்தையும் நாராயணனுடைய திவ்யதிருவடிகளேயும் அஷ்டாக்ஷரம், த்வயம், ராமதாரகம் ஆகியவைகளே அறிந்து அனுஸந்தித்து, வினேகள் எல்லாம் போம், அஞ்சேல் என்று ஸர்வஸமதிருஷ்டி உடைய

வரும் க்ஷேமகரருமான பிரபுவை ஏன் அடைய தயங்கவேண்டும்? ஹே மனஸே, ராமனே தெய்வம், நாராயணனே லக்ஷ்மிபதியே பரதத்வம், அவர்களின் திருவடிகளே பரமாகதி, பரமபவித்திரம், மங்களானும் மங்களம், அந்த திருவடிகளே, அந்த தாரகமே, அந்த பிரபத்தியின் பலனே தொண்டரும் அமரரும் முனிவரும் தொழும் விண்டவர்கோன், கண்ணபுரத்தம்மான், தில்லை மதி அழகன், எங்கள் கடல்மகள் மலர்மகள் மங்கையாகிற லக்ஷ்மி யின் பதி, சீதாபதி, ருக்மிணி காந்தன், பிரமன் சிவன் இந்திரன் தொழும் தலைவன், அவன் திருநாமம், எங்கள் கடும் வினைகளைப் போக்கும் நமோ நாராயணமே என்று ஏன் அறியமாட்டாய்? அவனே நீரஜாக்ஷன். ஸ்யாம சுந்தராங்கன், தாமஸகுணமில்லாத குணஸாந்திரன். அவனே எனக்கு இஷ்டதைவம். சிஷ்ட ஜனஹ்ருதய விஹாரன். துஷ்ட ராக்ஷஸர்களைத் தண்டித்த வீரன் என்று புரிந்துகொள்ளமாட்டாயா? ஹே கடும் மனஸே, இன்னமுமா உனக்கு சந்தேகம்?]

"ஸ்ரீ ராமசந்திரனுடைய சகல காரியங்களையும் இனிது செய்து முடிப்பாய். உனக்கு ஆத்மபலம், புத்தி சாமர்த்தியம், (அசூயையில்லாமை ஆகியதும் மோக்ஷ ஞானமாகிற வித்வான் களுடைய புத்தி லக்ஷணமும்) ராமனுகிற சீதாபதியினிடம் மஹாவிஸ்வாசமும் பிரபத்தியும் பக்தியும் கொண்ட பொக்கிஷ மாக விளங்குவாய். (ஹனுமான், ஆசார்ய கடாக்ஷத்தினுல் பொலிவுபெற்ற கபிலரே, மஹர்ஷியே, பரமாசாரியரே) உங்க ளுக்கு மங்களா சாஸனமாகிற இந்த ஆசீர்வாதங்களை என் அன்பு பரிசளிப்பாக தயவு செய்து ஏற்றுக்கொள்ள வேண்டும். (பரம உபகாரியே, தாமஸகுணரஹிதரே,) நீர் போகிற மார்க்கம் மங்களகரமாகவிருக்கவேண்டும்" என்று வினயபூர்வமாகச் சொன்னுள் ஸுரஸை. இந்த உத்தம வார்த்தைகளைக் கேட்ட (ஸாங்கிய யோகசாஸ்திர நிபுணரான) ஹனுமான் தன் மனத்தில் ராமனைத் தியானித்தவண்ணம் சந் தோஷமுற்ருர். (16)

அந்த மாபெரும் சமுத்திரத்தில் ஒரு ராக்ஷஸி இருந்தாள். அவள் மஹா மாயாவி. தன் மாயையினுல் ஆகாசத்தில் சஞ்சரித்திடும் பக்ஷிகளை நின்றவிடத்திலிருந்து ஆகர்ஷிக்கும் சக்தி வாய்ந்தவள். ஆகாயத்தில் எந்த ஜந்து பறந்து செல்லுகின்றதோ அதைப் பார்த்ததும் ஜலத்தில் விழும் அதன் நிழலைக் கண்டுபிடித்து விடுவாள். அவள் கை பட்டவுடன் அந்த ஜந்து தப்ப முடியாது. (17)

அந்த நிழலின் உதவியினுல் பிடிபட்ட ஜந்து மேலே எழும்ப முடியாது. ஜலத்தில் விழுந்து விடும். இந்த விதிப்படி அவள் ஆகாய மார்க்கத்தில் வரும் ஜந்துக்களைப் பக்ஷித்துக் கொண்டிருந்தாள். இதே மாயையை அவள் ஹனுமாரிடம் பிரயோகித்தாள். அதனுல் கபிஸ்ரேஷ்டரான ஹனுமார் தடைப் பட்டவராக இருந்தபோது, இந்த சாமர்த்தியத்தை அவர் புரிந்துகொண்டார். (18)

மாருதி ஸுதனுகிற பிரபு அவளை வதைத்துவிட்டு அதிபுத்தி தீக்ஷ்ணயத்துடன் காரியத்தை நிறைவேற்றி வைத்த பின்பு, தண்ணீர் மேலே பறந்து சென்று கொண்டிருந்தார். அவ்விதம் போகும்போது எதிர்த்த கரையில் அழகானவனத்தைக் கண்டார். தித்திக்கும் தேனைப் பருகிய வண்டுகள் மதுரமாக ரீங்காரம் செய்துகொண்டிருந்தன. (19)

அநேக விதமான விருக்ஷங்கள், புஷ்பமயமாக சோபிதமாக விருந்தன. பக்ஷிமிருகங்கள். கூட்டங்களாக விருப்பதைப் பார்த்து, ஹனுமாருக்கு சந்தோஷம் தாங்கவில்லை. எதிரில் விசாலமான பர்வதத்தைக் கண்டார். அதைக் கண்டதும் ஹனுமாருக்கு தன் பயணம் பூர்த்தியடைந்துவிட்டதாகக் கருதி ஸங்கேதமின்றி பயமில்லாமல் அதன் உச்சியில் தாவி உட்கார்ந்தார். (20)

சிவன் பார்வதியிடம் சொல்லுகிருர் "உமா, இந்த விஷயத்தில் வானரரான ஹனுமாரின் பிரபாவம் அதிகமாகச் சொல்லுவதற்கில்லை. அவர் காலனையும் ஸம்ஹரிக்கும் பிரபுவான ராமசந்திரனுடைய பரிபூர்ண அன்பை ஸம்பாதித்திருக்கிருர். அந்த அன்பின் பிரபாவத்தால்தான் இந்த மஹத்தான காரியத்தை அவர் சாதிக்க முடிந்தது." அந்த பர்வதத்தின் உச்சியை அடைந்து, அவர் லங்கை முழுவதையும் பார்த்தார். அநேக கோட்டைகள் கட்டப்பட்டிருந்தன. விசேஷ கோட்டை மயமாக விருந்த லங்கையை மீண்டும் பார்த்தார். (21)

அந்த லங்கை மலையின் உச்சியில் இருந்தது. அதன் நான்கு புறங்களிலும் சமுத்திரம் சூழ்ந்திருந்தது. தங்கமயமான கோட்டைச் சுவர்கள் நான்கு புறங்களிலும் பிரகாசித்துக் கொண்டிருந்தன. (22)

விதவிதமானதும் விசித்திரமானதுமான ரத்ன மணிகளால் அலங்கரிக்கப்பட்ட தங்க மயமான கோட்டைச் சுவர்கள். அந்த கோட்டையின் நடுவில் மிக்க அழகான மாளிகைகள் கட்டப்பட்டிருந்தன. நான்கு புறங்களிலும் விசாலமான நடை பாதைகள்,

கடைகள், அழகான பாதைகள், சந்துக்கள், எல்லாம் கொண்ட லங்கா நகரம் அழகாக காக்ஷி அளித்தது. யானைகள், குதிரைகள் கோவேறு கழுதைகள், யுத்த வீரர்களின் கூட்டங்கள், ரதத்தின் மேல் செல்லும் படையாட்கள் கூட்டம் கூட்டமாக சஞ்சரித்துக் கொண்டிருந்தனர். அநேக ரூபங்கள் கொண்ட ராக்ஷஸ வீரர்கள், அதிபலவான்கள், சேனைக் கூட்டங்கள் எல்லாம் வர்ணனை செய்ய முடியாதபடி அதிகமாகவிருந்தனர். (23)

[தியானம்

ராமாசீதா பிரபோ, சீதாராமா, நாராயணா, மகாலக்ஷ்மி உங்களை கிருத கிருத்யனை ஆஞ்சநேயரை முன்னிட்டு அனன்ய பிரயோசனமாக சரணமடைகிறேன். பரசுராமர் பிருகு குலத்தில் பிறந்தும் க்ஷத்திரியர்களை வென்றதினால் பராக்ரமம் அதிகம் அடையப்பெற்று ஸ்ரீரகுகுல ராமரை அவமதித்துப் பேசினார். அப்போது "என்னை ஸ்வரூபத்தோடு பாரும்" என்று சொல்லி ரகுராமர் பரசுராமருக்கு ஞானக் கண்ணைக் கொடுத்தார். பரசு ராமர் ராமருடைய சரீரத்தில் ஆதித்யர்களையும் வசுக்களையும் ருத்ரர்களையும் மருத்துக்களையும் ஸாத்யர்களையும் பித்ருக்களையும் கிரஹங்களையும் நக்ஷத்திரங்களையும் கந்தர்வ உரக ராக்ஷஸர்களையும் கின்னர யக்ஷர்களையும் நதிகளையும் தீர்த்தங்களையும், பிரும்மாவையும், ஸநாதனர்களான வாலகில்யர்களையும் தேவ ரிஷிகளையும் எல்லா சமுத்திரங்களையும் எல்லா வஷட்காரங்களையும் யாகங்களையும் உபநிஷத்துக்களையும் ஸாமத்தையும் தனுர்வேதத்தையும் மேகக் கூட்டங்களையும், மின்னல்களையும் பார்த்தார். பிறகு பரசுராமர் ரகுராமரை பகவானாகிற விஷ்ணு என்று அறிந்து பிராம்மண தேஜஸை அவருக்குக் கொடுத்தார். அப்பேற்பட்ட ரகுராமன் பிராம்மணப் பிரியராக என்னை ரக்ஷிக்க மாட்டாரா! எவ்விதம் கயன் போன்ற ராஜரிஷியின் யக்ஞங்கள் அன்னங்கள் தக்ஷிணைகள் எண்ணமுடியாதபடியிருந்ததோ, அதுபோல ரகுவீரனுடைய குணோத்தமங்களை யாரால் எண்ண முடியும்? அகஸ்தியர் வாதாபியை உலகத்தின் க்ஷேமத்திற்காகச் கொன்றார். அவர் ஹிம்சையின்றி தனம் தேடுவதையும் விரத மாகக் கொண்டவர். அதுபோல ராமா, சீதையைத் தேடும் விஷயத்திலும் ராவணனை வதைத்த சமயத்திலும் ராஜிரிஷியைப் போலவும், பிராம்மண பிரியன் போலவும், நீர் விளங்கினீர். உம்முடைய பார்யையாகிற சீதை, லோபமுத்ரை, தமயந்தி போலவும், அழகுடனும் மஹாவிரதத்துடனும் உம்மிடம்

யேற்பட்டதும், மகிமையுள்ளதும் தனிப்பட்டதுமான காதலை உடையதும், உமக்கு அதிக பிரியையுமானவளானுள். லோபா முத்ரை அகஸ்தியரைப் பார்த்து "ஜீவலோகத்திலிருந்து தன மெல்லாவற்றையும் ஒரு க்ஷணத்தில் தவத்தினுல் கொண்டு வருவதற்கு நீர்ஸமர்த்தர்" என்று சொன்னதுபோல, ராம னுடைய வீரியத்தை சீதை நன்கு அறிந்தவள். உங்கள் இருவர் களையும் ஸர்வ காலத்திலும் மாநம்த்யக்த்வா யோநரோ வ்ருத்த ஸேவி என்று சொல்லியபடி ஞானவிருத்த உபாஸனமாக அறிந்த ஆஞ்சநேயரை முன்னிட்டு நான் உங்களை சமதமாதி குணங் களுடன் கூடிய ஸாத்விகஸூக ஆராதனமாகச் செய்கிறேன். நீங்கள்தான் என்னிடம் அன்பு காட்டி பரிபாலிக்க வேண்டும்.]

வனங்கள், உபவனங்கள், தோட்டங்கள், உத்யான வனங்கள், நதிகள், ஓடைகள், கிணறுகள், பெரிதாகவும் சிறிய தாகவும் வசீகரமாகவும் அழகுள்ளதாகவுமிருந்தன. நரர்கள், நாகர்கள், தேவகந்தர்வர்கள் ஆகியவர்களின் கன்னிகைகள் தங்கள் சௌந்தர்ய விலாஸங்களோடு முனிகளின் மனத்தையும் மோஹிப்பவர்களாக சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். சில இடங்களில் விசாலமானதும் மலைபோல பெருத்த தேகங் களுடனும் கூடிய அதிபலவான்கள் கர்ஜித்துக்கொண்டு, தேக வன்மையைக் காட்டிக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வீரரும் மற்ற வீரர்களை யுத்தத்திற்கு சவால் செய்துகொண்டு அங்கங்கே காணப்பட்டார்கள். (24)

சில இடங்களில் பயங்கரமான சரீரங்களை உடைய யுத்த படர்கள் கோடிக்கணக்காக லங்கையின் நான்கு புறங்களிலும் சஞ்சரித்துக்கொண்டு நகரத்தை வெகு ஜாக்கிரதையாகக் காத்துக் கொண்டிருந்தார்கள். சிலவிடங்களில் துஷ்ட ராக்ஷஸர்கள் எருமைகளையும், மானிடர்களையும் பசுக்களையும் கழுதைகளையும் ஆடுகளையும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். என் பிரபு துளசிதாஸர் சுருக்கமாக அவர்களைப் பற்றிச் சொன்னுர். அந்தக் கதை சுருக்கமாகத்தானே இருக்க வேண்டும். என் பிரபு ரகுராமர், (பரசுராமருடைய தேஜஸ்ஸை அபகரித்த வீரர்) ஒரே ஒரு அம்பினுல் அவர்களைக் கொன்று, (பிருகு தீர்த்தம் போன்று தேஜஸ்ஸை அளிக்க வல்லதும் பரமகதியை அளிக்கக் கூடிய பிரபாவமுள்ளதுபோல,) உத்தம கதியையும் அவர் களுக்கு அளிக்கப்போகிருர் அல்லவா. (25)

இவ்விதம் லங்கை பலத்த பாதுகாப்பில் வைக்கப் பட்டிருந்தது. அங்கே கணக்கற்ற ராக்ஷஸ வீரர்களைக் கண்ட

ஹனுமான் மனத்திற்குள் ஆலோசித்தார். அதன் பின்பு மிகச் சிறிய உருவம் எடுத்துக்கொண்டு "இரவு நேரத்தில் லங்கையில் (இடது காலை முன்வைத்து) நகரத்தில் பிரவேசிப்பேன்" என்கிற முடிவுக்கு வந்தார். (26)

கபிஸ்ரேஷ்டரான ஆஞ்சநேயர் மிகச் சிறிய பூச்சி (கொசு மாதிரி) உருவம் எடுத்துக்கொண்டு நரஹரியான ரகுராமரை மனத்தில் தியானம் செய்துகொண்டு, நகரத்திற்குள் பிரவேசித்தார். அவ்விதம் போகும்போது லங்கிணி என்கிற ஒரு ராக்ஷஸி அவரைக் கண்டுகொண்டு சொன்னாள். "என்னை அலக்ஷ்யம் செய்துவிட்டு பயமின்றி என் உத்தரவு பெறாமல் எங்கு சென்று கொண்டிருக்கிறாய்?" (27)

"ஹே மூர்க்கனே, என் மர்மத்தை அறியாயோ? திருட்டுத் தனமாக வருபவன் எவனோ, அவன் எனக்கு பிரும்மாவினால் ஆகாரமாக நியமிக்கப்பட்டிருக்கிறான்." ஹனுமான், மஹாகபி, மஹாபாகு பலம் படைத்தவர், தன் முஷ்டியினால் அவளை ஒரு குத்து விட்டார். அதனால் அவள் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு பூமியில் விழுந்தாள். (28)

லங்கிணி என்கிற அந்த ராக்ஷஸி தைர்யத்தை வரவழைத்துக் கொண்டு கூப்பிய கரங்களுடன் மஹாவினயத்துடன் சொன்னாள். "ராவணன் கேட்ட வரத்தைக் கொடுத்த பிரும்மா அதே சமயத்தில் எனக்கு ராக்ஷஸர்களின் விநாசத்தை அறிவிக்கும் அடையாளத்தையும் தெரிவித்தார்." (29)

"எப்போது நீ ஒரு வானரத்தினால் அறைபடுவாயோ, அப்பொழுது ராக்ஷஸர்களின் நாசம் வந்துவிட்டதாக அறிந்து கொள். என்னைக் காப்பாற்றும் புண்யவானே, எனக்கு விடுதலை அளிக்க ஸ்ரீராமசந்திரனுடைய தூதனாகவல்லவோ என் கண்களுக்குத் தோன்றுகிறாய்." (30)

"என் புண்ணிய மூர்த்தியே, ஸ்வர்க்கம் மோக்ஷ சுகம் இரண்டையும் சேர்த்து, தராசில் ஒரு பக்கமும், ஸாதுக்களின் ஸங்கச் சேர்க்கையை மற்றொரு தட்டில் போட்டு நிறுத்துப் பார்த்தால், ஸ்வர்க்க மோக்ஷ சுகம் ஒரு க்ஷணம் கூட ஸாதுக்களின் சேர்க்கை சுகத்தை தராதபடி விளங்குகிறது. அப்பேற்பட்ட மஹானாகிற உன்னுடைய தர்சன பாக்யம் எனக்கு மஹா சுகத்தை அளிக்கக்கூடிய தீர்த்த பிரபாவம் கொண்டதாக விருக்கிறது." (31)

"நீ அயோத்யாபுரி ராஜாவான ரகுகுல ஸோமனை, (என் பிரபுவை) மனத்தில் தரித்துக்கொண்டு லங்கையில்

பிரவேசிப்பாய். அவருடைய காரியங்களைச் செய்து கிருத கிருத்யனாக ஆவாய். அந்த பிரபுவின் பெயரைச் சொன்னால் விஷம்கூட அம்ருதமாகிவிடும். பரமவிரோதிகூட மித்ரத் தன்மையை அடைந்துவிடுகிறான். மஹா விசாலமான ஸமுத்தி ரங்கள் பசுவின் குளம்பில் தேங்கின மடுப்போல ஆகிவிடுகின் றன. தீக்ஷண்யமான அக்னிகூட மிகச் சீதளமாகிவிடு கிறது.'' (32)

[தியானம்

ஆஞ்சநேயா, ராமசீதா கைங்கர்யத்திற்காக அவதாரம் செய்த பிரபோ, கைங்கர்ய தனத்தை, ராமானுஜனைப்போல, பகவத் ப்ரீதியையே விலக்ஷணமாகவும் குறிக்கோளாகவும் ''பிரீத்யை. விஷ்ணோ: தவச'' என்கிறபடி சித்தாந்தம் பண்ணினாயே, உனக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். உன்னை முன்னிட்டு ஆயிரம் தடவைகள் ராமசீதாலக்ஷ்மணர்களை நான் நமஸ்கரிக்கிறேன். நாராயணா, மஹாலக்ஷ்மிபிரபோ, உங் கள் பதத்தை பூலோகத்தில் அனுபவிக்கும் ஹனுமாருக்கு, என் சிவசக்தி ஐக்யமிதுனத்திற்கு, ஈடாகயாராவது இருக்கக்கூடுமோ? பொருள் உருவத்தில் அடங்கினது. சக்திபொருளில் அடங்கி னது. உருவமும் சக்தியும் ஞானமும் கர்மமும் சேர்ந்து தானே பகவத் ப்ரீதியை உண்டுபண்ணுவதற்கு ஹேதுவாக ஆகிறது. ஆஞ்சநேயர் இந்திரியங்களை அடக்கி, மனத்தில் நிறுத்தி, ஸ்வாதீன மனத்துடன், புத்தியை நிலைநிறுத்தி, ஆத்மசாந்தி யுடன் இரவும் பகலும் விழித்திருந்து ஸ்திதப் ப்ரக்ஞனைப் போல சீதாராமனை சாக்ஷாத்கரித்தார். ஆஞ்சநேயா, உன்மனோபாவம் யாவரையும் வசப்படுத்துகிறது. ஆசையற்றவனாய் சீதாராம உகப்பே பெரும்தனமாய் கொண்டவனாய், அஹங்காரம் மமகாரம் ஒழிந்தவனாய், சாந்தியுடன் கர்மஞானபக்தி பிரபத்தி ஸ்வரூப மாக சீதாராம பிரும்மத்தை உமாசங்கரர் எனக்குச் சொன்னது போலவும், ராமானுஜன் பிரும்மப்ராப்தி பலனாகிற பிரும்ம வித்யையை அடைந்த பிரபன்னன், ''தஸ்யைவம் விதுஷ'' என்கிறபடி, பிரும்ம விதுஷனாக ஆனபடி சஞ்சரிக்கிறானோ, அதுபோல திரிகிறாயே, என்னிடம் பரமகிருபையுடன் சீதாராம தர்சனத்தை பூர்ணமாகக்காட்டமாட்டாயா? நீர் மோஹத்தை விட்டவர். ராமாம்ருதத்தை சதா பருகி இன்புறும் நிலைபெற்ற ஆனந்த பிரும்மம். அன்று அகஸ்தியர் சமுத்திரத்தைக் குடித்து தேவர்களைக் காப்பாற்றியது போலவும், ததீசி தனது

எலும்புகளை வஜ்ராயுதத்திற்காக கொடுத்தது போலவும், என்னைப்போல கர்ம பலன்களை அபேக்ஷிக்கும் தீனர்களுக்கும் ஸம்சாரிகளுக்கும் அக்கரையைத் தாண்டி வைக்கும் ஓடம்போல, ஐயா, நீர் கைங்கர்ய தர்மமாக விளங்குகிறீர். உம்மைப் போல தர்மானுஷ்டானம் செய்பவர்களால் உலகம், பிரபன்னர்கள் யாவரும் காப்பாற்றப்படுகிறார்கள். கர்மம்தான் தர்மம். தர்மம் தான் சாஸ்வதம், அந்த தர்மம் ராம கைங்கர்யமாகிவிடில் பயனுள்ளது ; தவத்திலும், சிறந்த கைங்கர்ய அனுபவத்தினாலும் ஏற்பட்ட ஞானத்தினால் கர்மங்களுக்கு பயன் இருக்கிறது என்று நாஸ்திக வாதத்தை விட்டு பிராணிகளை உண்டுபண்ணி லயமடையச் செய்யும் ஈஸ்வரரை நிந்திக்காமல் ஸந்தேகம், விபரீதஞானம் ஆகியவற்றை ஒழித்து, கர்மமானது செய்யப்பட வேண்டியது, இது ராமார்ப்பணம் என்று செய்யும் கர்மஞான பக்தி பிரபத்தி பண்டிதன் அல்லவே நீர் ? அப்படிப்பட்ட நீர் எதைச் செய்யவேண்டியது ; எதை விடவேண்டியது ; என்று பூர்ணமாக அறிந்து செய்ய வேண்டியதை ஒன்றும்விடாமல் செய்துமுடித்தீர். கிருதகிருத்யர் என்கிறபடி விஷ்ணுவின் ப்ரீதி என்கிற உத்தேஸ்யத்துடன் வாழ்ந்த மஹானுபாவன் நீர். பகவானுடைய அப்ரீதியை ஸேதுவாகக்கொண்ட தர்மாத்மா. வேதத்தில் கண்டபடி தர்மஸேதுவாக அக்கரை சேர்க்கும் அணையைப் போல, சம்சாரமாகிற பலனை விரும்பும் இழிதான கர்மங்களை விலக்கி, கர்மஞானத்துடன் இறைவனின் திருப்பணியாக முன் காலத்தில் அகஸ்தியர் ததீசி ராமானுஜன்போன்றவர்களால் பெறப்பட்ட ராமசீதா ஸாம்ராஜ்யமாகிற பகவத் உகப்பை உன் கிருபையால் சித்திபெறச் செய்ய வேண்டும். நான் கேட்பதுமில்லை ; நீ கேட்காமல் கொடுப்பதுமில்லை என்கிறபடி கர்மமும் பலனும் ; பிராட்டியும் பெருமாளும், சக்தியும் சிவமும் சேர்ந்திருப்பதுபோல பேருபகாரத்தைச் செய்யவேண்டும். எனக்கு மட்டுமல்லாமல் என் போன்ற தீனர்களாகிற ஸம்சாரிகளுக்கும் க்ருபை செய்யவேண்டும் அப்பா. கிருபை செய்யவேண்டும்.]

காகபுசுண்டி கருடனிடம் சொல்லுகிறார். "ஹே கருட மஹாத்மாவே, (ராமகைங்கர்யம் ராமப்ரீதிகளாகச் செய்ய வேண்டும். ஸம்சாரிகளின் புத்தியாகிற கர்மபலத்யாகம் செய்து பலனில் 'அபேக்ஷையாக விருப்பது என்கிற கைங்கர்ய புத்தியிருக்கிறதே, இது ராமபக்தனின் அசாதாரண விலக்ஷணம்.) அப்படிப்பட்ட மஹாத்மாவுக்கு (சிவசக்தி ஐக்ய ஸ்வரூபமாகிற ஆஞ்சநேய பிரபுவுக்கு) சூர்யன் தினந்தோறும்

பிரதக்ஷிணம் செய்யும் ஸுமேரு பர்வதம்கூட ஒரு சிறிய கல்லாகத் தோன்றும்; ஒரு தடவை என் பிரபு ஸ்ரீராமனுடைய கிருபையை அடைந்துவிட்ட ஸ்திதபிரக்ஞன், (தன் இந்திரியங்களை அடக்கி ராம தியானத்தில் தனது மனத்தை அர்ப்பிக்கிருனே,) அவனுக்குச் செய்ய முடியாதது ஒன்றுமில்லை,'' (அப்பேற்பட்ட சீதாராம கிருபையை அடைந்த ஹனுமாரால் செய்யமுடியாதது என்கிற கார்யம் ஒன்றும் இருப்பதாக இல்லை) என்று சொன்னார். அப்போது லங்கிணியினால் அனுமதிக்கப்பட்ட ஹனுமார் மன சந்தோஷத்தினால் ஏற்பட்ட சாந்தியுடன் கிருதகிருத்யனாக பகவான் ஸ்ரீராமசந்திரனைத் தியானம் செய்து கொண்டு, லங்கையில் பிரவேசித்தார். (33)

ஒவ்வொரு வீடாகவும் ஒவ்வொரு இடத்திலும் சுற்றித் திரிந்து சீதையைத் தேடினார். அங்குமிங்கும் கணக்கற்ற யுத்த வீரர்களைக் கண்டார். ராவணனுடைய அரண்மனையையும் முழுவதும் தேடிப் பார்த்தார். அந்த அரண்மனை விசித்திரமாகவும் வர்ணனைக்கு மீறிய அழகுள்ளதாகவுமிருந்தது. (34)

ஹனுமார் ராவணன் நித்திரையிலிருப்பதைக் கண்டுகொண்டார். ஆனால் அந்த அரண்மனையில் ஜானகியை அவர் காணவில்லை. அதன் பிறகு அவர் அழகான மாளிகை ஒன்றைப் பார்த்தார். அந்த அரண்மனையின் ஒரு பக்கத்தில் விஷ்ணு பகவானுடைய கோவில் ஒன்று இருந்தது. (35)

அந்த கோவிலின் சுவர்களில் ஸ்ரீராமனுடைய ஆயுதங்களான வில்லும் பாணமும் வர்ணகலர்களுடன் தீட்டப்பட்டு அதி சோபையுடன் விளங்கின. வர்ணிக்க முடியாத அழகு பெற்றிருந்தது. அந்தவிடத்தில் நவதுளசி பிருந்தாவனங்களைப் பார்த்ததும் கபிராஜனுகிற ஆஞ்சநேயருக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. (36)

'' இந்த லங்கையானது ராக்ஷஸர்கள் வாழுமிடம். இப்படிப்பட்ட நகரில் ஸஜ்ஜன புருஷர்களும் வாழ்கின்றார்களா ?'' ஹனுமான் இவ்விதமாக மனத்திற்குள் தர்க்கம் பண்ணிக் கொண்டிருந்தார். அந்த சமயம் விபீஷணன் நித்திரையிலிருந்து எழுந்திருந்தார். (37)

அந்த மஹா பாகவதோத்தமர் ' ஸ்ரீராம் ராம் ' என்று நாம ஜபம் செய்து கொண்டு படுக்கையைவிட்டு எழுந்திருந்தார். ஹனுமான் அவரை ஸாது புருஷன் என்று எண்ணி ஹ்ருதயத்தில் வெகுமானித்தார். '' நான் இந்த மஹாபுருஷனை அறிந்து நண்பனுக்கிக் கொள்ள முயல்வேன். ஸாதுக்களால் ஸ்ரேயசும்

லாபமும் உண்டாகும். அவர்கள் பிறர்களுக்கு தீங்கு செய்ய மாட்டார்கள். என் காரியமும் இனிது நிறைவேறும்.'' (38)

[தியானம்

ஹே லக்ஷ்மணா, சீதாராமா, சரணம் சரணம். நாராயணா, மஹாலக்ஷ்மி பிரபோ, நீர் பரமபதத்தில் நித்யஸூரிகளின் கூட்டத்திலும் பூலோகத்தில் பக்தர்களின் கூட்டத்திலும் தலைமை வகிக்கும் கிராமணியாகவிருக்கிறீர். ஹரிநாமத்தை ஜபம் செய்வதைவிட சுகம் அவர்களுக்கு உண்டா? அன்று மார்க்கண்டேய ரிஷி யுதிஷ்டிரருக்கு ஸ்ரீராமனைப்பற்றி சொல்லும்போது, "நான் மிக்க வலிமை உள்ளவன்'' என்று அதர்மத்தைச் செய்யாமல் பிதாவின் கட்டளையால் சுகங்களைவிட்டு காட்டில் சஞ்சரித்தார் என்று சொன்னார். நாபாகன், பகீரதன் மிக்க வலிமை உள்ள பூபாலகர்களாக விருந்தாலும் அதர்மத்தைச் செய்யவில்லை. ஸப்தரிஷிகளும் வேதவாக்யங்களை மதித்து அதர்மத்தைச் செய்யவில்லை. எல்லா பிராணிகளும் ஈசனால் கட்டளையிடப்பட்டு ஜாதிக்கு ஏற்றவாறு செய்கையைச் செய்தாலும் அதர்மத்தைச் செய்யக்கூடாது. நல்ல ஆசாரமுடைய ஹரிபக்தர்கள் உதாஸீனர்களாக குணகாரியங்களான ராகத்வேஷாதிகளால் அசைக்கப்படாதவர்களாக சுகர் பராசரர் மார்க்கண்டேயர் நாரதர் யுதிஷ்டிரரைப் போல ஸமமான சித்தத்தை உடையவர்களாக மனோதைர்யத்துடன் மித்ரன் சத்ரு என்கிற பாவமின்றி குணங்களே பிரவிருத்தி செய்கின்றன, என்று அறிந்து ஆத்ம ஸ்வபாவமாய் ராம நாமம், நாராயணம் ஜபம் செய்துகொண்டு முக்குணங்களையும் தாண்டி குறைவற்ற பிரும்மபாவத்தை அடைந்திருக்கிறார்கள். அவர்கள் இந்த ஹரிநாமமே சாஸ்வதமான தர்மத்திற்கும் நித்யமான ஸுகத்திற்கும் இருப்பிடமானது என்று நம்பி விஷத்தை வெறுப்பது போல, மதபேதம்கொண்டவர்கள், அஹங்காரம் கொண்டவர்கள், விஷயானுபவங்களில் இச்சையுள்ளவர்கள், ஹரியை வெறுப்பவர்கள் ஆகியவர்களின் ஸ்நேகத்தை வெறுக்கிறார்கள். அப்பேற்பட்ட பாகவத உத்தமர்கள் ஹரிசரணங்களைத் தரித்து மனதில் சாந்தமும் அடக்கமுமுடையவர்களாக ஹரிதாஸர்களை அண்டி வணங்கி, தியாகராஜர்போல மஹானுபவர்களை ஸ்நேகம் செய்து கொண்டு ஸம்பாஷணை செய்ய விரும்புகிறார்கள். ஹே சீதாராமா, லக்ஷ்மிபதி, கர்மத்தினால் ஏற்பட்ட ஸ்நேகம் ஆதிநாராயண தம்பதிகளான உங்களுக்கு இல்லை. உங்களுக்கு ஏற்பட்ட இனிமையான அபிமதத்வம் இயற்கையினாலும், கர்மஸம்பந்தமில்லாத தூய

அன்பினுல் ஏற்பட்டது. அதுபோல ரக்ஷகம் என்கிற தொழிலும், பகவத்லீலை என்கிற பிரணய விளையாட்டுக்களும் உங்கள் இருவர்களுக்கு ஏற்படும் இணைப்புக்குத் தடைகளும் உங்களுடைய ஐக்கியமானதும் ஏகத்வமுமான சங்கல்பத்தால் ஏற்படுகிறது. தேவமாதர்களை விடுவிக்கத் தன்னைச் சிறைப் படுத்திக்கொண்ட சீதே, தயாக்ஷமா மூர்த்தே, வியாஸர் அர்ஜுனன் போன்ற நரோத்தமர்களும் இந்திராணி, பார்வதி, சரஸ்வதி போன்றவர்களும் சதாதியானிக்கும் நித்யானபாயினிம், நிரவத்யாம் அகிலலோகமாதரம் அஸ்மத்மாதரம் அசரண்ய சரண்யாம் சரணமஹம் பிரபத்யே என்று ராமானுஜனை முன்னிட்டு வணங்குகிற என்னிடம் தயை செய்யமாட்டாயா? விபீஷணன் ஆஞ்சநேயர் போன்ற பரமபாகவதர்களை முன் னிட்டு சரணமடையும், ரங்கபதி, ஸ்ரீயப்பதி, விஷ்வக்ஸேனரே, என்னிடம் க்ஷமையையும் அன்பையும் செலுத்தமாட்டீரா? ஸாதுக்களின் நட்பை விரும்பும் எனக்கு இந்திரன் அர்த்தா ஸனத்தில் அர்ஜுனனைத் தழுவி உச்சி முகர்ந்ததுபோல ஏகமாத்திர அன்பினுல் அருள்செய்ய மாட்டீர்களா? பிராட்டியே இந்திரா, விஷ்ணு, ஜலதிதனயா, க்ஷீராப்திக்கு அலைகள் போன்று இனிமையாக விருக்கும் லக்ஷ்மிநாராயணு, உங்களுடைய சரணங்களின் அடிப்பதங்கள் என் ஹிருதயத்திலிருந்து எப்பொழுதும் விலகாமல் இருக்கட்டும்.]

ஹனுமான் பிராம்மண வேஷம் தரித்துக்கொண்டு நிஜ ஹரிபக்தனுகிற விபீஷணனேடு ஸம்பாஷணை செய்ய எண்ணம் கொண்டவரராக அவரை அழைத்தார். அந்தக் குரலைக் கேட்டதும் விபீஷணன் எழுந்திருந்தார். பிரணமம் செய்து குசலபிரஸ்னங்கள் செய்தார். அதன்பிறகு விபீஷணன், "பிராம்மண தேவரே, தாங்கள் வந்த காரியத்தை எனக்கு ஸாதிக்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். (39)

"ஸ்வாமி, நீர் ஹரிபக்தர்களில் ஒருவரா? உம்மைக் கண்டதும், என்மனம் உத்ஸாஹத்துடன் துள்ளுகிறது. உம்மிடம் என் பிரேமை அதிகரிக்கிறது. உம்மைப் பார்த்தால் ஸம்சாரிகளும் தீனர்களும் குணங்களுக்கு அடிமைப்பட்டவர்களுமான தேகிக ளுக்கு, அழிவற்ற பகவானுடைய ஆத்மபாவத்தை அனுபவிப்பாம லிருப்பவர்களுக்குக்கூட பிரபு ஸ்ரீராமன் வலுவில் தோன்றி கருணை காட்டுகிருரா, நீர் ஸ்வயம் ஸ்ரீராமசந்திரமூர்த்தியா? (ஹரிபக்த சிரேஷ்டரான உம்மிடமிருந்து நான் அன்பைப்பெற விரும்புகிறேன். அதனுல் என் பாகவத பக்தி பிரேமை பொங்கி

வருகிறது. உத்தமமான ஸத்வகுணத்தில் நிலைக்கப்பெற்ற விவேகியானவன் முக்குணங்களைக் காட்டிலும் வேருகயிருக்கும் ஆத்மாவை கர்த்தா அல்ல என்றும், குணங்களைக் காட்டிலும் வேருன பரமாத்மா உண்டு என்று அறிந்த ராமஸ்வரூபத்தை நிஜமாக அடைந்த மஹாபாக்யன் அல்லவோ நீர். ஸ்வாமி) நான் இருக்கும் இடம் தேடி என்னையும் உய்விக்க எண்ணம் கொண்டு உம்முடைய தர்சனத்தை எனக்கு வலுவில் அளித்தீர். (தங்களுடைய முழு விபரங்களையும் எனக்குச் சொல்ல வேண்டும்)'' என்று ஹனுமாரை, விப்ரரூபமாகவிருந்த ஹரி ஸ்ரேஷ்டரை, விபீஷணன் பிரார்த்தித்துக்கொண்டான். (40)

ஹனுமான் ஸ்ரீராமசந்திரனுடைய சகலகதை விருத்தாந் தங்களைச் சொல்லி தன் பெயரையும் சொன்னுர். அதைக் கேட்டதும் விபீஷணன் சரீரம் புளகாங்கிதமடைந்தார். அதைப்பார்த்து ஹனுமாருக்கும் சந்தோஷம் பொங்கிவந்தது. இருவர்களும் ஸ்ரீராமசந்திரனுடைய குணசமுஹங்களை நினைத்துப்பார்த்து, பிரேமை ஆனந்தத்தில் மூழ்கினுர்கள். (41)

அச்சமயம் விபீஷணன் சொன்னுன் ''பவனஸுதரே, எனக்கு உள்ள கஷ்டத்தை கேளும். இவ்விடத்தில் நான் இரு பல் வரிசைகளுக்கு நடுவில் நாக்கு வசித்துக்கொண்டிருப்பது போல நாதனற்றவனுக விருக்கிறேன். என் கார்ப்பண்யத்தை தெரிந்துகொண்டு பானுகுல பிரபுவான ரகுராமன் என்னிடம் கிருபை காட்டுவாரா?'' (42)

''நான் தாமஸ குணத்தோடு ராக்ஷஸ ஜாதியில் பிறந்திருக் கிறேன். பகவத் பிராப்திக்காக ஒரு ஸாதனமும் செய்யவில்லை. அந்த சரோஜ பதங்களில் மனத்தைச் செலுத்தி ப்ரீதியை வளர்த்துக்கொண்டிருக்கிறேன். ஹே ஹனுமான்ஜி, எனக்கும் பகவத்கிருபை கிடைக்குமென்று நம்பிக்கை வந்திருக்கிறது. ஏனெனில் ஹரி கிருபை இல்லாவிடில் உம்மைப்போல ஸாது மஹாத்மாவை என்னுல் தரிசனம் செய்யமுடியுமா? (43)

என் பிரபு ரகுவீரன் எனக்கு அனுகிரஹம் செய்ய உத்தேசித்து, உம்மை இவ்விடம் அனுப்பி உம்முடைய மனத்தில் என்னிடம் ஸம்பாஷித்துவிட்டு வரும்படி ப்ரேரணை செய்திருக் கிருர். (அந்தர்யாமியான பிரபுவுக்கு என் ஆற்ருமை நன்கு தெரியும்.) உம்மை நான் கண்டதே அறிகுறியாக நான் மஹா பாக்யத்தை அடையப்போகிறேன் என்று சூசிப்பிக்கிறது. (''என் பிரிய மார்க்கபந்துவே, நான் இன்று கிருதகிருத்யனுக தெய்வசங்கல்பத்தால், சீதாராமரின் அனுக்ரஹத்தினுல், ஆனேன்

உமக்கு நான் எவ்விதம் கைம்மாறு செய்வேன்? உம்முடைய ஹ்ருதயம் இதுபோல எப்போதும் உதாரமுள்ளதாகவும் விசாலமாகவும் இருக்கவேண்டும்.'' என்று கிருதக்ஞை பூர்வமாகச் சொல்லிக்கொண்டிருந்தான் விபீஷணன்.) ஹனுமான்ஜி இதைக்கேட்டு மன சந்தோஷத்துடன் சொல்ல ஆரம்பித்தார். ''விபீஷணரே, இதுதான் பிரபுவினுடைய ரீதி. காரணமின்றி தன்னைச் சேர்ந்தவன் என்று அறிந்துகொண்டு, பக்தர்களிடம் ஸதா அன்பு செலுத்துபவர் ஸ்ரீரகுராமன். (எப்போது, யார் மூலம் கிருபை செய்வார் என்று சொல்லமுடியாது.) அவருடைய மனம் ஸதா தன் சேவகர்களின் நன்மையையே நாடிக்கொண்டிருக்கும்.'' (44)

''நீரே யோசித்துப் பதில்சொல்லும். நான்மாத்திரம் ஜாதியிலோ, ஸத்வகுணத்திலோ உயர்ந்த பிறப்பை அடைந்திருக்கிறேனு? ஜாதியில் வானரம். சஞ்சலமான புத்தியுள்ள ஜாதி. மிக்கப் பரிகாசத்திற்கு உரிய ஜாதி. எல்லாவிதத்திலும் ஸம்ஸ்காரங்கள் இல்லாதவன். பிராதக்காலையில் எங்கள் ஜாதியின் பெயரைச் சொன்னுலோ, அன்று பூராவும் போஜனம் அவனுக்குக் கிடைக்காது. அப்பேற்பட்ட அபாக்யமான ஜாதியில் பிறந்தவன் நான்.'' (45)

''ஹேஸகா, இன்னும் கேளும். நான் மஹா அதமன். அவ்விதமிருந்தும் என் பிரபு ரகுவீரன் என்னிடம் கிருபை காட்டியிருக்கிறுர். என்னை அந்தரங்க சேவகனுகப் பாவித்து சீதையினிடம் தூது அனுப்பியிருக்கிறுர். (ஸ்வசங்கல்ப மாத்திரத்தில் எல்லாவற்றையும் சாதிக்கக்கூடிய பிரபு என்மீது கருணையைக் காட்டி என் சேவகத்தை ஸ்வீகரித்திருக்கிறுர்.) அந்த ரகுவீரனுடைய கிருபாவிசேஷத்தையும் வாத்ஸல்ய ஸௌலப்யத்தையும் ஸௌசீல்யாதிகுண விசேஷங்களையும் நினைத்துப் பார்த்தால் என் மனம், சரீரம் யாவும் புல்லரித்து விடுகிறது''. இவ்விதம் சொல்லிக்கொண்டு போகும்போது இருவர்களின் நேத்ரங்களிலிருந்தும் பிரேமைக் கண்ணீர்கள் உதிர்ந்துகொண்டிருந்தன. (46)

[தியானம்

ஹே ராமா, சீதாபதி, லக்ஷ்மிநாராயணு, உங்களுக்கு என்னிடம் தயவு இல்லை. அன்று ஜடபரதனும் துருபுவும் உபதேசித்தது மாதிரி நான் உங்களைப் பரமார்த்தம் என்று தியாகராஜர் லக்ஷ்மணர் ஆஞ்சநேயர் விபீஷணர் பிரஹ்லாதன்

போல நினைக்கவில்லையென்று உங்களுக்குச் சந்தேகமா? அர்த்தம் பெரிதுதான். ஆனால் தனம் தர்மத்தை சம்பாதிக்கவும் போகங்களை அனுபவிக்கவும் செலவிடப்படுகிறதால் அது பெரியதில்லை. தர்மமும் ஸ்வர்க்கத்தைக் கொடுத்தாலும் பிறப்பை உண்டாக்குகிறது. ஸம்சாரத்தை விருத்தி அடையச் செய்கிறது. காமமும் அவ்விதமே. ஆகையினால் ஸஜ்ஜனங்கள் பரமார்த்த ஸ்வரூபம் ஒன்றுதான் என்று நினைத்து, பேதஞான ஸ்வரூபமாகிற மோஹத்தை ஒழித்து ஸர்வபதார்த்தங்களையும் ஆத்மஸ்வரூபமாகப் பார்த்து, எது அவிநாசியோ எது சாஸ்வதமோ, அப்பேற்பட்ட ஸகுணபிரும்மமாகிற உங்களை சதா பஜித்துக்கொண்டு அச்யுத சேவையைத் தவிர அன்யத் பரம் நாஸ்தி என்கிற திடபுத்தியுள்ளவராக "நான், நீ, அது இது, என்கிற பதார்த்தங்களின் குணங்களிலிருந்து விடுபட்ட வர்களாக, பரஞானம் பரமபக்தியாகிற பரமார்த்த திருஷ்டி யுடன், பேதபுத்தியை தியாகம் செய்து, ஜன்மத்திலும் முக்தியை அடைந்தவர்களாக விருக்கிருர்கள். ராமாசீதா, நாராயணு என் இஷ்ட தெய்வமே, இப்பேற்பட்ட பரமார்த்த திருஷ்டி எனக்கு ஏற்படவில்லை என்று சந்தேகமா உனக்கு? அல்லது நான் உனக்கு பாரமாக விருக்கிறேனு? அதிக தொந்தரவு செய்கிறேன் என்று என்மீது தப்பான அபிப்ராயமா? உங்களை ஸதா சூழ்ந்துகொண்டிருக்கும் பாகவத உத்தமர்கள் என்னிடம் கருணை காட்டவேண்டாம் என்று உங்கள் மனத்தை இரும்பு மயமாக்கிவிட்டார்களா? நான் ஏதோ பேத்துகிறேன், இன்னும் பக்குவம் ஆகவில்லை என்கிற நினைவா உனக்கு? அல்லது என் கடும் வினைகள் தடைகளாக விருக்கின்றனவா? சமயம் சந்தர்ப்பம் தெரியாமல் காமாதிகளால் தாக்கப்பட்டு பாபத்தைச் செய்துகொண்டிருக்கிறேன் என்று தாங்கள் நினைக்கிறீர்களா! எனக்கு புகல் வேறு ஒன்றுமில்லை என்கிற கர்வமா உங்களுக்கு? நான் இவ்விதம் மனம் கசிந்து வேண்டும்போதுகூட ரகுகுல தர்மமாகிற ரக்ஷணத்தை மறந்து, தயையின் ஊற்றுப்போல விளங்கும் சீதையைவிட்டு மறந்துபோனதின் கெடுதலா? எனக்கு ஒன்றும் புரியவில்லை. எனக்கு ஸதாசார்யஸம்பந்தம், ஸத்குருபக்தி, பகவத்பக்தி, பாகவதபிரேமை ஆகிய வைஷ்ணவலக்ஷணங்கள் என்னிடம் ஸாந்நித்யம் கொள்ளவில்லை என்று உங்கள் கருத்தா? சீதாரமணு, என்பாபஹரணு, வேங்கடரமணு, ராமராமசீதாரமணு, நீ என்ன நினைத்தாலும் நான் உன் பொருளாகிவிட்டேன். என்னிடம் ஸம்பாஷியாத

போதிலும் விபீஷணுதிகள் உன்னை தர்மாத்மா, ஸத்யவாதி, தாசரதிபுத்ரன், என்று அசாதாரண விலக்ஷணமாகக் கொண்டுள்ளார்கள். ஸ்ரீதேவியினுல் சதா ஆஸ்ரயிக்கப்பட்டவன் என்று நான் அறிந்துகொண்டேன். இப்பேறபட்ட நீங்கள் என்னிடம் உதாஸீனமாகவிருக்கலாமா? இந்த ஆஞ்சநேயரும் விபீஷணரும் தியாகராஜரும் துளசிதாஸரும், ராமானுஜரும் தேசிகரும் இவ்விதம் பார்த்துக்கொண்டிருக்கலாமா? பதித பாவனன் என்கிற பெயரை தாங்கள் காப்பாற்ற வேண்டாமா? உங்கள் பாதங்கள்தான் என்கதி.]

"எந்த மஹானுபாவர்கள் ஸ்வாமி ரகுநாதன் பரம காருணிகன், (சௌலப்ய வாத்ஸல்யாதி குணங்களால் ததும்பிக் கொண்டிருக்கும் சாந்தமூர்த்தி, பதிதபாவனன், பாபஹரணன் கொடும் அபராதங்களையும் மறக்கும் நளின ஸ்வபாவமுள்ளவன் குற்றம் குறைகளைப் பாராதவன், தயாபரியாகிற சீதையுடன் சதாரக்ஷணம் செய்யும் கோதண்ட ஹஸ்தன்) என்று அறியாமல், அந்த உத்தம ராஜதம்பதிகளை மறந்து (பேதஸ்வ ரூபத்துடன் நான், இவன், அது இது என்றும் ஜகத்தில் நிரப்பிய பதார்த்தங்களின் குணங்களின் பிருவிருத்தியை சரியாகப் புரிந்துகொள்ளாமல், அக்ஞானரூபியாக வாழ்பவர்களும், மஹா மோஹத்தை ஒழிக்காமல், வாஸுதேவரே பரமார்த்தம்,) சீதா ராமனே எல்லாவற்றிலும் பரம உத்கிருஷ்டமான ஸம்பத்து என்று அறியாமல், வாழும் தேகிகள், (மீண்டும் சந்திரனுடைய வழியில் சஞ்சரித்து ஜகத்தில் ஜனன மரணம் என்கிற பிணிக்கு அடிமையாக வாழும் நித்ய ஸம்சாரிகள் இருக்கிருர்களே,) அவர்கள் விஷயானுபவங்களில் ஈடுபட்டவர்களாகி பரம துக்கத்தை அடைகிருர்கள். ஸ்ரீராமசந்திரனை அறியாமல் தவித்து, ஜகத்தில் கஷ்டப்படுகிருர்கள். அவர்கள் இவ்விதம் கஷ்டத்தை அனுபவிப்பது ஆச்சர்யமில்லைதான்." இந்தவிதமாக இரு ராமபக்தர்கள் ராம குணும்ருதத்தை ஆடிப்பாடி மகிழ்ந்து கொண்டிருப்பதை அந்த அநிர்வசனீய சாந்தியைத் தரக் கூடிய பரம ஔஷதத்தை நாம் எவ்விதம் வர்ணிக்க முடியும்? (ஸம்சார பேஷஜனுகிற சீதாராமன் பதிதபாவனல்லவா, பாப ஹரணன் அல்லவா? உத்தம சாந்தியை அளிக்கும் வள்ளல் அல்லவா?) (47)

அதன் பிறகு விபீஷணன் மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். ஜனக புத்ரியான சீதை லங்கையில் ராமனை விட்டுப் பிரிந்திருக்கும் அவதியை தாங்கிக் கொண்டிருக்கிருன் என்றும்;

ராமனுடைய ஆகமனத்தை எதிர்பார்த்த வண்ணம் அவள் இருக்கும் அவஸ்தையையும் பற்றி முழுவிபரங்களுடன் சொல்லிக் கொண்டிருந்தார். அதைக்கேட்ட ஹனுமான் சொன்னர் "என் பிரிய தோழனே, நான் ஜானகி மாதாவைக் காண விரும்புகிறேன்." (48)

விபீஷணன் ஸ்ரீசீதாதேவியைக் காண்பதற்கு சகல உபாயங்களையும் சொன்னர். அதன் பிறகு ஹனுமான் விபீஷணனை நமஸ்கரித்துவிட்டு சீதையைப் பார்ப்பதற்குச் சென்ருர். விப்ர ரூபத்தைவிட்டு பழையபடி சிறிய வானர உருவம் கொண்டு சீதையைக் காணச் சென்ருர். அவ்விதம் செல்லும்போது அசோக வனத்தில் சீதாதேவி இருப்பதைக் கண்டார். (49)

தேவி சீதையை தரிசனம் செய்ததும் மனத்திற்குள் சுக்ருத பிரணமம் செய்தார். அவள் உட்கார்ந்துகொண்டு இரவு பூராவும் ராம நினைவாக கழித்துக்கொண்டிருப்பதையும் பார்த்தார் ஆஞ்சநேயர். அவளுடைய சரீரம் இளைத்திருந்தது. தலையில் ஜடைபோல விருக்கும் அழுக்குப்படிந்த ஏகவேணிதரா ஒற்றைப் பின்னல் கொண்டவளாக காணப்பட்டாள். ரகுபதியின் குணும்ருதங்களை கானம் செய்பவளாகவும் ஹ்ருதயத்தில் ராம நாமத்தை ஜபம் செய்பவளாகவும் காணப்பட்டாள். (50)

அந்த சீதாதேவியினுடைய நீலோத்பலமாகிற கண்களின் திருஷ்டி (எனக்கு பரமார்த்த திருஷ்டியாக விளங்கும்) சீதையின் பாதங்களைப் பார்த்தவண்ணமாகவிருந்தது. கீழே விழுந்து பாதங்களைப் பணிபவர்களை ரக்ஷிக்கும் ஸ்வபாவமுள்ள திருஷ்டி அது. அவளுடைய கருத்து ராமனிடம் லயித்திருந்தது. ஸ்ரீசீதாதேவி ஸ்ரீராமஸரோஜ பதங்களில் தன் மனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தாள். ஜானகிதேவியின் பரம துக்கத்தையும் நாதனற்ற தீனஸ்திதியையும் மஹாபாக்யவானுன பவனசுதனுகிற ஹனுமான்ஜி கண்டார். (51)

விருக்ஷங்களின் இலைகொடிகளினுல் நடுவில் தன்னை மறைத்துக்கொண்டு, (ஆத்ம விசாரம் செய்யும் யோகியைப் போல,) யோசிக்க ஆரம்பித்தார் "நான் இப்போது என்ன செய்யக்கூடும்? என்ன செய்யவேண்டும்? இவளுடைய துக்கத்தைப் பார்ப்பதற்கு சகிக்க முடியவில்லையே. நான் எவ்விதம் அவளுக்குச் சந்தோஷத்தைச் செய்வேன்?" என்று கலக்கமிட்டவராகத் தோன்றினர். அந்த சமயம் ராவணன் அநேக ஸ்திரிகள் புடை சூழ, விதவிதமாக அலங்கார பூஷணனுக அவ்விடம் வந்துசேர்ந்தான். (52)

கொடிய மனமுள்ளவனும் துஷ்டனுமாகிற ராவணன் சீதையை ஸாமதான பயபேத முறைகளால் தன்னை அவளிடம் ஸமர்ப்பித்துக் கொண்டு, அவளை வேண்டினுன். "என் ஐஸ்வர்யத்தையும் வீரத்தையும் குலப்பெருமைகளையும் பார்", என்று மார் தட்டிக்கொண்டு அஹங்கார பூர்ணமாக சீதையை வேண்டிச் சொல்ல ஆரம்பித்தான். "என் மனோராணியே, மிக்க அழகுள்ளவளே, என்னிடம் சுமுகியாக விரு. நான் சொல்வதைப் புரிந்துகொள். மந்தோதரி ஆகிற சகலபட்ட மஹிஷிகளும். (53)

உன்னை அனுசரித்து, உனக்கு இஷ்டப்பட்டவளாகவும் தாதிகளாகவும் இருப்பார்கள். ஒருதடவை உன் பரமார்த்த திருஷ்டியை என் மீது செலுத்து. என் பக்கமாக உன்னுடைய கண்ணோட்டத்தை ஒருதடவை செலுத்து. உன் அன்பு திருஷ்டியை என் மீது காட்டு," என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தான். வைதேஹி ஒரு புல்லைக்கிள்ளி, தனக்கும் ராவணனுக்கும் நடுவில் போட்டு பரமஸ்நேகிதரான அயோத்யா பதி ஸ்ரீ ராமசந்திரனை நினைத்துக் கொண்டு தன் முகத்தை துணியினுல் மூடிக்கொண்டு, பதில் சொல்ல ஆரம்பித்தாள். (54)

[தியானம்

ஹே ராமா, சீதா பிரபோ, லக்ஷ்மி நாயகா, ஸ்ரீ காந்தா, தியாகராஜர் பிருஹஸ்பதி வால்மீகி சுகர் யுதிஷ்டிரர்போல உன் நினைவில்லாமல் என்னுல் ஒரு க்ஷணம் வாழமுடியுமா? இந்த கலி காலத்தில் பரஹிம்சையைத் தொழிலாகக்கொண்டு வாழும் ஜனங்களுக்கு திடமான மனத்துடன் உன் நாமத்தைத் தவிர ராமா, நாராயணு, சீதா பிரபோ, லக்ஷ்மி நாதா, தங்கள் வினைகளைப் போக்க வேறுவழி உண்டா? நாரதர் ஸனத்குமாரரால் வணங்கப் படும் லக்ஷ்மிகாந்தா, உங்கள் பாதங்களை சுகந்தமான துளசி வில்வ மல்லிகை புஷ்பங்களால் அர்ச்சிக்காமல் இந்திரியங்களை அடக்கி மனத்தைக் கட்டுப்படுத்தாமல் மஹாபுருஷார்த்தமாகிற உன் பாதங்களை அடைய முடியுமா? அஷ்டாக்ஷர மந்திரத்தின் விசேஷத்தை அறிந்த வைஷ்ணவனே, பிரும்ம ரிஷியோ, உபாயபல பிரதிபாத காம்ஸங்களில் கிரம பிரகாரமாய் ஸதாசார்ய சம்பத்தினுல் அறிந்து கொள்ளாமல் வேறு எவ்வித உபாய அனுஷ்டானத்தினுல் பகவானையும் பிராட்டியையும் அடைய முடியும்? பெரிய பிராட்டியோடு பிரிவில்லாத நாராயணனுடைய திருவடிகளில் ஸ்வரூப பிராப்தமான ஞான

அடக்கம் என்கிற விசேஷத்தினுல், ஸர்வதேச ஸர்வ காலங் களிலும் ஸர்வவிதகைங்கரியத்துக்கும் விரோதியாகிற ஸர்வமும் கழிந்து, பரிபூர்ணமான கைங்கரிய நிலேக்கு, அகிஞ்சனுன நான் ஸ்வரக்ஷணம் செய்து கொள்ள சாமர்த்தியமில்லே என்று சொல்லி சரணம் அடைந்தேன். அன்யத்ர உபாயம் அவனுடைய சரணங்களேத் தவிர எனக்கு இல்லே. பஞ்ச அங்கங்களுடன் செய்து ஆத்ம ரக்ஷபரஸமர்ப்பணம் என்கிற விரதத்துடன் த்வய மந்திரத்தை பிரபத்தியால் இரக்கம் ஒன்றே லக்ஷணமாகவுள்ள ஆசாரியர்களால் உபதேசிக்கப்பட்டேன். அர்த்தபஞ்சகத்தைத் தெரிவிப்பதும் திருமந்திர மகிமைகளே விளக்குவதும், இந்த ஸம் சார மண்டலத்தில் திருவரங்கத்தில் ஒன்பதாவது ரஸமாகிற சாந்தியை அளிக்கக்கூடிய ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகைகளே அடைவிப்பதும், நம் பங்கயத்தாள் நாயகனுகிற பகவானே நெருங்கி ஆனந்தம் பெறச் செய்வதும், நாம் செய்கிருேம் நாம் அனுபவிக்கிருேம் என்கிற நினேவுகளால் ஏற்படும் குற்றம் தோஷங்களேப் போக்கும் ஞானவிசேஷத்தோடு கூடியதுமான பகவத் பிராப்தியை அடையப் பெற்ருேம். ஆஞ்சநேயா, உமாசம்போ, ராமானுஜா, நாரதரே, விஷ்வக்ஸேனரே உங்களேப் போன்ற பரம ஆசார்யர்களும் பாகவதர்களும் யாரும் இருக்க முடியாது. ஸத்வ குணத்தைக் காட்டிலும் ஆரோக்யத்தைத் தரும் சிறந்த வஸ்து இல்லே. வேதாந்ததேசிகரைப் போல ஸதாசார்யன் சந்தேகம் அற தத்வஞானத்தை உபதேசிக்கும் கிருபாளு இருக்கமுடியாது. ராம மந்திரம், ஏகாக்ஷரம், பஞ்சத சாக்ஷரம், ஷோடசதசாக்ஷரம் ஆகிய மஹா மந்திரங்களுக்கு மூலமந்திரமான அஷ்டாக்ஷரம் த்வயமாகிற மந்திரம் ஆகியவை களேக் காட்டிலும் சுகத்தை தருவது ஒன்றுமில்லே. அந்த அஷ்டாக்ஷரம் த்வயம் என்கிற மந்திரங்களே அனுஸந்திப்பதைக் காட்டிலும் க்ஷேமத்தைக் கொடுப்பது ஒன்றுமில்லே. இவ்விதம் எனக்கு உபதேசித்த மஹாலக்ஷ்மியே, சீதே, ஏகாம்ரநாத னுடைய நாயகியே, என் காமாக்ஷியே, காருண்ய கடாக்ஷியே, ரெங்கநாயகியே, ஆஞ்சநேயரைப் போல உன் பாதங்களேப் பற்றிய எனக்கு அன்று நீ ராமனே மணந்தபோது என்ன பூர்ணமான உள்ளத்துடன் இருந்தாயோ, இன்று ஆஞ்ச நேயரைக் கண்டு தேவமாதர்களின் சிறை நீங்கியது என்று மனம் பூரித்தாயோ, ஆஞ்சநேயர் உன் மஹா பதிவ்ரதா மஹாத்மியத்தை நினேப்பவராக உன்னுல் ஏற்படப் போகும் ராம மகிமைகளேயும் நினேத்து ஆனந்தப்பட்டாரோ அந்த

பூர்ண பொலிவுடன் கருணை நிரம்பிய மனத்துடன் அஷ்டா க்ஷரத்வயம் அனுஸந்திக்கிற என்னிடம் நோக்கமாட்டாயா? பொற் தாமரையாளே உன் கேள்வனை என்னிடம் கருணை காட்டச் சொல்லமாட்டாயா?]

சீதை சொல்ல ஆரம்பித்தாள். "தசக்ரீவா, நன்றாய் கேள். எங்கேயாவது மின்மினி பூச்சியின் பிரபாவத்தால் நளினமான கமல புஷ்பம் விகாஸத்தை அடையுமா?" ஜானகி மீண்டும் உபதேசிக்க ஆரம்பித்தாள், "ராவணா, துஷ்டனே, உன்னைக் கண்டு நான் மிக்க வருந்துகிறேன். (உன் குலம், படிப்பு வித்யை, பிராம்மண ஜன்மம், அனுஷ்டானங்கள், ராஜகுலம், ஞானம் சக்தி பலம் ஐஸ்வரியாதிகள், ஆயுஸ் ஆகிய எல்லா வற்றிற்கும்,) ஸ்ரீ ராமனுக்குத் தீங்கு இழைக்க நேரிட்டதால், உன் தப்புக்காரியத்தினால், பெரும் தீங்கை விளைவித்துக்கொண்டாய். (இவைகள் எல்லாம் வியர்த்தமாகிவிடப்போகின்றன. இதை நன்றாக புரிந்துகொள்.) ரகுவீரனுடைய கோபத்தைத் தெரிவிக்கும் பாணத்தின் மகிமையை நீ சீக்கிரம் அறிவாய். (ஐயோ, ஏன் வீணாக கெட்டுப்போக நீ விரும்புகிறாய்?") (55)

"ஹேபாபாத்மாவே, வஞ்சக புத்தியுடன் கலந்த திருட்டுத் தனத்தால் ஒருவரும் இல்லாத சமயம் என்னை அபஹரித் திருக்கிறாய். லஜ்ஜையில்லாத அதமன் நீ. நான் உனக்கு எடுத்துக்காட்டியும், மமதையினால் உன் குற்றத்தை அறிகிறா யில்லை. (அந்தோ, உன் விதி இவ்விதம்தானா ஏற்படணும்?) (56)

"ராமனுடைய மகிமையை நான் நன்கு உணர்ந்து சொல் கிறேன், கேளு. உன்னுடைய பிரதாபங்கள் மின்மினி பூச்சிக்குச் சமானம். பகவான் ராமன் ஆதித்யன். (அழிக்கும் தேவதையாகிற சங்கர்ஷணன். மந்திரத்திற்கு ஆதார பீஜமானவர். அனந்தரூபர், பிரும்மாதிதேவர்களுக்கும் முந்திய ஆதிதேவர். சூரியனும் ஒளியை அவரிடமிருந்து பெறுகிறான். ஆகையால் பானு என்று அழைக்கப்படுகிறார். சர்வசாக்ஷியாகி ஸகலருடைய கர்மங்களை யும் எண்ணங்களையும் அவர் அறிகிறார். ஸத்யோஜ்ஜாதாதி பஞ்சமுகங்கள் கொண்டவரும் நாதமே உருவாகக் கொண்ட சங்கர பகவான் விமலஹ்ருதயத்துடன் அவரைத்தான் பூஜை செய்கிறார். அர்ச்சராதி மார்க்கத்தில் ஸூரியனாக காக்ஷி அளிக்கும் ஸர்வலோகபாலர் அவரே. அவரிடம் க்ரோதம் கொள்ளாதே. (அவருடைய குறிதப்பாத பாணத்திலிருந்து இந்திரனோ, யமனோ, பிரும்மாவோ, ருத்ரரோ உன்னை தப்பி விக்க முடியாது.") இந்த வார்த்தைகள் ராவணனுக்கு கர்ண

கடூரமாகவிருந்தன. கிரோதமூர்ச்சிதனாக கத்தியை உருவிக் கொண்டு ஆசை நிராசையாகப் போனதின் காரணமாக கோபத்துடன் கத்த ஆரம்பித்தான். (57)

"சீதா, நீ வேண்டுமென்று என்னை அவமானம் செய்கிறாய். இப்போது உன் சிரத்தை இந்த வாளால் வெட்டிவிடுகிறேன் பார். உனக்கு உயிர்ப் பிச்சை வேண்டுமானால், என் வார்த்தைகளுக்கு மதிப்பு கொடு. ஹேசுமுகியே, இல்லாவிடில் நீ உயிர் இழக்க நேரிடும்." (58)

சீதை பதில் சொல்ல ஆரம்பித்தாள். "தசக்ரிவா, நீ அறிவில்லாமல் பிதற்றுகிறாய். உன் கத்தி என் தலையை வெட்ட முடியுமானால் வெட்டட்டும். நான் பயப்படவில்லை. என்னை அணைத்துக்கொள்ளும் ஸ்ரீ ராமசந்திரனுடைய புஜம் சியாம கமல புஷ்பங்களைக்கொண்டதும் அழகானதுமான புஷ்ப மாலைகளுக்கு ஒப்பானது. வெகு நளினமானதும் அழகுள்ளதும் யௌவன கஜராஜனுடைய துதிக்கைபோல் நீண்டும் பருத்து மிருக்கும். அப்பேற்பட்ட புஷ்டியுள்ளதும் அழகானதுமாயுள்ள பிரபுவின் புஜம்தான் என் கண்டத்தை அணைத்துக்கொள்ளும். இல்லாவிடில் இந்த பயங்கரமான கத்தி என் கழுத்தில் விழட்டும். வீணாக என்னைப் பயப்படுத்த முடியாது. துஷ்டா, என்னுடைய சத்யமான வார்த்தைகளைக் கேள்." (59)

"ஹே சந்திரஹாஸ். பரமசிவனால் கொடுக்கப்பட்ட கத்தியே, சந்திரனுக்குச் சமமாகக் குளிர்ச்சியைத் தரும் கத்தியே, என்னுடைய பரிதாப நிலையை உணர்ந்துகொள். ரகுபதியை விட்டுப் பிரிந்து விரகதாபமாகிற நெருப்பை சகித்துக் கொண்டிக்கிறேன். என் தாபங்களைப் போக்கி எனக்கு மனக் குளிர்ச்சியைத்தரும் சீதளத்தைக் கொடு. தீவீரமானதும் கொடூரமான ஆயுதம் நீ. உன்னுடைய குளிர்ச்சி பொருந்திய தாரைகளை அக்னிபோல கொழுந்து விட்டு எரியும் என் தாபங்களை அடக்கமிக்க தேஜஸ்ஸுடன் என்னிடம் வருவாய். என் துக்கங்களையும் போக்குவாய். ஓடிவா. சந்திரஹாஸ்." என்று சொன்னாள். (60)

சீதையினுடைய வசனங்களைக் கேட்ட ராவணன் அவளைக் கொல்லுவதற்கு ஓடினான். அந்த சமயம் மயனுடைய புத்ரியாகிற மந்தோதரி ராவணனுக்குப் புத்திமதி கூறி அவனை அடக்கினாள். அந்த சமயம் ராவணன் எல்லா ராக்ஷஸ ராக்ஷஸிகளைப் பார்த்து அதட்டிச் சொன்னான். "சீதைக்குப் பலவிதங்களால் பயத்தை உண்டுபண்ணுங்கள்." (61)

"இவள் ஒருமாதத் தவணைக்குள் என் வார்த்தைகளை லக்ஷ்யம் செய்யாத போனுல் நானே இந்த வாளினுல் இவளை வெட்டிவிடுகிறேன்." (62)

இவ்விதம் சொல்லிவிட்டு பத்துத்தலைகள் கொண்ட ராவணன் தன்மாளிகைக்குத் திரும்பினுன். அவன் போனபின்பு ராக்ஷஸிகள், பிசாசுகளின் உருவம்கொண்டு சீதையைச் சூழ்ந்துகொண்டு அவளைப் பல விதத்திலும் பயமுறுத்தத் தலைப்பட்டார்கள். (63)

[தியானம்

ராமா சீதா, ராமா, நாராயணு, மஹாலக்ஷ்மியுடன் வைகுண்டத்தில் காமேசனுடைய மனத்தில் காமேஸ்வரி வீற்றிருப்பது போல விருக்கும் சிருங்கார சாந்த மூர்த்திகளே, உங்களை சீதையினுடைய பதிவிரதா தர்மத்தின் சிகரமாகிற "தவானுபூதி ஸம்பூதப்ரீதி காரித தாஸதாம்; தேஹிமே க்ருபயா நாத நஜானே கதி மன்யதா," என்கிறபடி உன்னைத்தவிர பரபக்தி பரஞானம் பரமபக்தி என்கிற அருளைக்கொடு. உங்களை அந்த விரதத்தினுல் சரணமடைந்து கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். தாயே, சீதே, நாராயணி, சகல ஜனஸம்ரக்ஷகி அல்லவா நீ! சுத்தசைதன்ய ரூபிணி, கமல வாஸினி, உன்னைப் புறம்கொண்டு உன்காந்தனகிற ரங்கபதியை அடைய விரும்புகிறேன். நீ மனதுவைத்தால்தான் மனிதன் நிர்வாண சுகத்தை அடையமுடியும். வாஸுதேவன் பக்கம் நிற்கும் ரங்கநாயகி, தயை யென்கிற செல்வம் ரங்கநாதனுக்கு உன்னுல் அல்லவா ஏற்பட்டது. நீ ராவணனிடம் பயமான சொற்களைப் பேசும்போது, உன்னுல் ராவணனிடமிருந்து பயமான சொற்கள் கேட்கப்பட்ட சமயம் கூட, உன் மனத்தில் என்ன இருந்தது என்று எனக்கும் உன் பிரியநாதரான ரங்கேசருக்கும் அல்லவா தெரியும். பண்டாசுரனை வதைத்த லலிதாதேவி, உன்னிடம் யாராவது கர்வமாகப் பேசினுல், அவன் போகிற கதி என்ன தெரியுமா? சதா குற்றம் செய்துகொண்டும் பாபங்களை வளர்த்திக் கொண்டுமிருக்கும் ஸம்சாரியான என்னைப் போல புருஷன் உன்னை அடைந்தல்லவா குற்றமற்றவனுகவும், பயங்கள் நீங்கினவனுகவும், பகவானின் சொற்களாகிற "இவன் என்னைச் சேர்ந்தவன், இவனுக்கு நம்மை விட்டால் வேறு நாதன்கிடையாது" என்கிற கிருபையை அடைகிருன். தயாதன ஜகத்பதி என்று உங்களைக் கூறும் என்னை ஸம்ரக்ஷி. ஒரு தடவை பூர்ணமனத்துடன் அனுசந்திக்கும் எனக்கு உங்கள் ஸ்வரூபத்தை தயவுகொண்டு

காண்பிக்க மாட்டீர்களா? தீக்ஷிதர் போன்ற மஹான்கள் உன்னை ஸர்வாசாபரிபூர்ணி என்றும் பரமசிவகாமினி, துர்வாஸாதி யோகிகளால் குப்தமாக ஆராதிக்கப் படுகிறவள் என்று அநேக தடவைகள் சொல்லியிருக்கிறாரே. கமலையைத் தரித்த ரங்கநாயகி, பில்வநிலையே, ரங்கராஜதயிதே, சர்வாணி, ஸத்குருக்களான ராமானுஜர், பட்டர் ஆகியவர்களால் சேவிக்கப்படும் ரெங்கநாயகி, வேதாந்த தேசிகர் உன் சரணங்களை அடைந்துதானே, ஸகல ஜனங்களையும் சரணாகதி சாஸ்திரத்தில் முழு நம்பிக்கையை வைக்கச்சொன்னார். ஸ்ரீரங்கஸ்ரீ, ரங்கதாம், ராஜ்யதாம், புவி முகுந்த பிரியே, காத்யாயனி, உன்னுடைய சரணபத கமலங்களை என்பயம் நீங்குவதற்குக் கொடு. அடிக்கடி அடிக்கடி வினய பூர்வமாக நமஸ்கரித்து உன் புகழ்களை கானம் செய்து அகண்டைக ரஸமாகிற ரங்கநாத அனுபவங்களை நான் அடைகிறேன். ஆனந்திக்கிறேன். இச்சிக்கிறேன். உவக்கிறேன். தயாதத்வ ஸ்வரூபிணி, பார்க்கவி, ஸ்ரீதேவி, தசசக்தியாராதித ஸ்ரீமூர்த்தியே, குருகுஹன் போன்றவர்களால் சந்தோஷம் செய்யப்பட்ட கமலாம்பா, என்னுடைய ஸர்வார்த்த ஸாதக பூர்த்தே, சரணம் சரணம். நித்யஸூரிகளுக்குத் தலைவனாகிற எம்பெருமானை "எனக்கு உபாயம்" என்கிற ஞானத்துக்கு என்னை விஷயமாக்கினதற்கு, சீதே, ராமதியானமாக உள்ள அசோகவன ஜானகி, ரமா, ரங்கநாயகி, தயாதேவி, உன் இனியத்திருவருளே காரணம். பெரிய பிராட்டி, இந்த ஆத்மா உனக்கே அடிமை என்று இசைவித்தென்னை யுன் தாளிணைக் கீழிருந்துமம்மானே, என்கிறபடி என்னைப் பெருமாளால் அங்கீகரிக்கச் செய்து, உன்னுடன் சேருவது பிரியமாகவும், உன்னை விட்டுப்பிரிவது துக்கமாகவும் உபாயபூதம் உபேயம் ஆகிய இரண்டும் ஏகசப்தமாக விளக்கிக் காட்டினதற்கு நீ அல்லவோ விமர்சனமாக வந்தாய்! உன்னை அறுதியிட்டல்லவோ ஸம்பந்த ஞானம், ஸித்த ஸாத்ய உபாயங்கள், "சரணம் வ்ரஜ" என்கிற விதிக்கு விருத்தங்களான மமகாரதிகளை ஒழித்தல்; ஸம்ஸ்லேஷவிஸ்லேஷதுக்கங்கள், சந்தோஷங்கள், யாவற்றிற்கும், தயைக்கும் தாத்பர்யமாக விளங்கும் ரெங்கநாயகி சமேத ரங்கநாதா, நீ விளங்குகிறாய். அப்பேற்பட்ட பவனஸம்பவனாகிற ஹனுமான் பார்த்த அசோகவன சீதை என்மனத்தைவிட்டுப் பிரியாமல் எப்பொழுதும் சாந்த மூர்த்தியாக விளங்கட்டும்.]

திரிஜடை என்கிற ராக்ஷஸி என்பவள் ஒருத்தி அவ்விடம் இருந்தாள். அந்த ராக்ஷஸி ஸ்ரீராம சரணங்களில் அதிபிரேமை

வைத்தவள். எதைப் பிடிக்கவேண்டும், எதை உதறித்தள்ள வேண்டும் என்கிற விவேக ஞானம் கொண்டவள். அவள் மற்ற ராக்ஷஸிகளை அழைத்தாள். தான் கண்ட ஸ்வப்ன அனுபவங்களை அவர்களுக்குச் சொன்னாள். கடைசியில் அவர்களிடம் சொன்னாள், "சீதையை வணங்கி அவள் இஷ்டப்படி நடப்பதினால் தான் நமக்கு கல்யாண மங்களங்கள் ஏற்படும்." (64)

"ஸ்வப்னத்தில் ஒரு குரங்கைக் கண்டேன், அது லங்கை முழுவதையும் எரித்துவிட்டது. ராக்ஷஸர்களின் சேனைகளை அழிப்பதைக் கண்டேன். ராவணன் நிர்வாணமாகவும் கழுதையின்மேல் சவாரி போவதையும் கண்டேன். அவனுடைய சிரம் வெட்டப்பட்டதாகவும் புஜங்கள் துண்டமாக அறுபட்டதாகவும் கண்டேன்." (65)

"இந்த விதிப்படி அவன் தக்ஷிண திசையை நோக்கிச் செல்வதைக் கண்டேன். லங்கா ராஜ்யம் விபிஷணனுக்குப் போவதாக கனுக்கண்டேன். நகரத்தில் ஸ்ரீ ராமனுடைய வெற்றி முழக்கம் கேட்கப்பட்டது. அப்போது பிரபு சீதையைக் கூட்டி வரச் சொன்னார்." (66)

"இது ஸ்வப்னம்தான். ஆனால் இதுதான் நடக்கப் போகிறது. கொஞ்ச தினங்களுக்குப் பிற்பாடு நான் சொன்ன வார்த்தைகள் ஸத்யம்தான் நின்று நிரூபணம் செய்வதுபோல நடக்கத்தான் போகிறது. இதை நீங்கள் நம்புங்கள்" என்று சொன்னாள். இந்த வார்த்தைகளைக் கேட்ட ராக்ஷஸ ஸ்திரிகள் ஜனகரின் பெண்ணாகிய சீதையின் பாதசரணங்களில் ரக்ஷணத்தை வேண்டினார்கள். (67)

அவ்விதம் செய்துவிட்டு ஸகலரும் அங்குமிங்கும் போய் விட்டார்கள். சீதை தனியாக விடப்பட்டு தனக்குள் சிந்தித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய மனம் கலக்கமடைந்து, இன்னும் ஒரு மாத தவணைக்குள் நீசனான ராக்ஷஸன் என்னை வதம் செய்துவிடுவான் என்று சிந்திக்க ஆரம்பித்தாள். (68)

அந்த சமயம் திரிஜடை வந்தாள். சீதை அவளிடம் சென்று கைகளை குவித்துக்கொண்டு இரக்கம் வரும்படி வேண்டினாள். "தாயைப்போலவிருக்கும் பந்துவே, ஆபத்காலத்தில் என் கஷ்டங்களைப் போக்குவதற்கு உபாயம் செய். என்னால் ராமனை விட்டு வாழ்வது மிகக் கடினம். ஏதாவது உபாயத்தினால் நான் என் உயிரைவிடத் தீர்மானித்திருக்கிறேன். என்னால் மனம் தாளவில்லை. விரஹதாபம் என்னை மிக வாட்டுகிறது." (69)

"விறகு சிதைகளை அடுக்கு என் தாயே, அதற்குப் பின் நெருப்பு வை. ராமனிடம் நான் காட்டும் அன்புக்கு இதுதான் சத்யமாகச் செய்யவேண்டியது. ராவணன் என் பிரபுவையும் என்னையும் சூலம்போலக் கூர்மையான வார்த்தைகளால் கொல்லாமல் கொன்றுவிட்டான். என்றால் அவைகளை நினைத்துப் பார்த்து பேசாமல் இருக்க முடியவில்லை" என்று தேவி கதறினாள். (70)

திரிஜடை தேவியினுடைய வார்த்தைகளைக் கேட்டு மனம் அதிர்ந்துபோய், சீதாதேவியின் திவ்ய பாதங்களைப் பற்றிக் கொண்டு சொல்ல ஆரம்பித்தாள். 'அம்மா, தேவி, உனக்கு பிரபுவின் பிரதாபங்களும் பலமும், சரணமடைந்தவர்களையும் தன்னை நம்பினவர்களையும் காக்கும் விரதமும் நன்றாகத் தெரியும். ஏன் அதைரியமடைந்து கலங்கிக்கொண்டிருக்கிறாய்? சுகுமாரி, இப்போது நடுநிசி. அக்னி எவ்விதம் கிடைக்கும்? மனத்தைத் தைரியப்படுத்திக்கொள். எல்லாம் சரியாகிவிடும்" என்று ஆஸ்வாசப்படுத்திவிட்டு, அவளும் தன் வீட்டிற்குச் சென்று விட்டாள். (71)

சீதை தன் மனத்திற்குள் மீண்டும் சிந்திக்கலானாள். "என் விதிகூட என் மரணத்திற்கு எதிரிடையாகவிருக்கிறது. நான் மிக்க பாபம் செய்தவள். ஸரோஜநயனங்களுள்ள பிரபுவைப் பிரிந்து நான் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். எனக்கு என் உயிர்மீது ஆசையில்லை. என் ராமனுடன் வாழாமல் நான் வாழ்வதில் பிரயோசனமில்லை. என் உயிர் போவதற்கு ஒரு சாதனத்தையும்கூட நான் காணவில்லை. என் துக்கங்கள் அதிகரிக்கின்றன. ராமனுடைய சுந்தரமான முகத்தைப் பாராமல் நான் எவ்விதம் சாவேன்? திரிஜடையும் அக்னிகொண்டுவர மறுத்துவிட்டாள். ஆகாயத்தில் நக்ஷத்திரவடிவமாக ஜோதிகள் மின்னுகின்றன. ஆனால் பூமியிலோ ஜோதி ஸ்வரூபம் ஒன்றுகூட காணப்படவில்லை. (72)

சந்திரனே அக்னிமயமாக என்மீது கிரணங்களைப் பொழிகிறான். அவனுடைய கிரணங்களோ என் மீது பட்டு அதி சீதளத்தை உண்டுபண்ணுகின்றன. அப்பேற்பட்ட அபாக்யவதி நான். அசோக மரமே, என் பிரார்த்தனையைக் கேள். என் சோகத்தை ஸத்யமாகப் போக்கவேண்டும். உன் நாமத்திற்கு ஏற்ப, எனக்கு சந்தோஷத்தை உண்டுபண்ணு. (73)

[தியானம்

ராமார்த்தம் என்று வாழ்ந்து வந்த சீதையே, ஸ்ரீமானே நாராயணு, மஹாலக்ஷ்மி அம்மா, சரணம் சரணம். ஹேசீதே, நீ ராமசரணங்களை நாடி ராம மந்திரத்தை ஜபித்து ராமனைவிட்டு வாழ்வது துக்கம் ; ராமனோடு சேர்ந்து வாழ்வதுதான் வாழ்க்கை என்று அனுபவ பூர்வமாக சித்தாந்தம் செய்தாய். கிருதக்ஞையே, கிருதலக்ஷணம் கொண்ட மஹாலக்ஷ்மியே, நீதான் மந்திரங் களுக்கும் பூர்புவர்ஸ்வஃ என்கிற வ்யாகிருதிகளுக்கும் யோனியாக விருக்கிருய். லோக மாதா, நீ ஸத்யவிரதனும் பூர்ண சந்திர னுக்கு ஒப்பான முகமுள்ளவனும், எல்லோருக்கும் நன்மை செய்து பிரியனுகவிருக்கும் ராமனே எனக்கு நீ காட்டிக்கொடுக்க மாட்டாயா ! அன்று கிருஷ்ணனைக்காணுமல் யமுனு நதிக்கரை யில் விலலாபித்த கோபிகள் என்ன சொன்னுர்கள் தெரியுமா ? இந்த யசோதையின் புத்ரன் காளியன் மடுவில் மூழ்கிவிட்டான். நாமும் இவனோடு இந்த மடுவில் புகுந்துவிடுவோம். சூரியன் இல்லாமல் தினம் ஏற்படுமா? விருஷபம் இல்லாவிடில் பசுக்கள் வாழுமா ? சந்திரன் இல்லாமல் இரவு ஏற்படுமா ? நாம் எதற்கு கோகுலம் போகவேண்டும் ? இங்கேயே யமுனையில் மூழ்கி விடுவோம்,'' என்ருர்கள். அதுபோல ராமனையோ கிருஷ்ண னையோ கண்டவர்கள் வித்யை மயமானவர்கள் ; கர்மமயமான வர்கள் அல்ல என்று சொல்லப்படுகிருர்கள். அந்த வித்யையி னுல், கர்மங்களினுல் ஏற்பட்ட ஞானத்தினுல், எல்லாப் பொருள் களுக்கும் மாறுதல் உண்டாவதென்றும், இந்த பகவான் ஒருவனே சாஸ்வதம் ஸநாதனம் என்று வித்வான்கள் அறிகிருர்கள். இதையே சீதை அவளைப் பீடித்த ராவணனுக்கு அன்று உபதேசித்தாள். இதையே கிருஷ்ணர் ஆசார்யனுக அர்ஜுன னுக்கு உபதேசித்தார். ராமானுஜரும் கோபிகைகளும் இதையே, ஹே சீதே, உன்னை திருஷ்டாந்தமாகவும் குருவாகவும் வைத்து, எங்களுக்கு உபதேசித்தார்கள். சிஷ்யனுகிற மனம் என்றும் அடக்கப்பட்டு, ஞானத்தினுல் அடையப்படும் ஸ்ரீவாஸுதேவ சரணங்களை அடைபவன் எல்லா பிராணிகளிடத்திலும் ஸமமான புத்தி உள்ளவனுக இருப்பான். அவன் எல்லா பாபங்களை ஒழித்து, சுத்தமான வைஷ்ணவ பதத்தை அடைவான் என்று கிருஷ்ணன் சொன்னுர். நாராயணரே, பரந்தபரே, மஹா லக்ஷ்மியே, உங்களுக்கு நமஸ்காரங்கள் அநேகம் செய்கிறேன். உங்களிடம் அர்ப்பிக்கப்படாமல் போனுல் மனம் சுத்தத்தை அடையாது. மனம் சுத்தமின்றி தவத்தையோ ஞானத்தையோ

அடையமுடியாது. அக்ஞானத்தினுல் கர்மம்கெட்டுவிடுகிறது. பொருள் தர்மத்திற்காகவே ஈட்டப்படுகிறது. விரயமின்றி சேர்த்து வைக்கப்படும் அர்த்தமும் தோஷத்தை அடைகிறது. அதனுல் தானமும் பயனற்றதாகவிருக்கிறது. ஆகையால் ஆஞ்சநேயர் உத்தவர் கோபிகைகள் ராமானுஜன் காட்டிய வழியில் வரும் துளசிதாஸர், தியாகராஜர் 'கலியில் ராமநாமமும் கிருஷ்ண நாமமும்தான் சிறந்தது, அவைகளை ஸதா தியானம் பண்ணவேண்டும் என்று தலைக்கட்டினுர்கள்.

காரிய காரணங்களுக்கு மேற்பட்ட பரமாத்மாவே சீதா தேவியே, ராமா, உங்களைத் தவிர வேறு தெய்வத்தை அறியாத வனும், அதுவே ஏகதர்மம், ஏகபராயணம் என்று தெரிந்து கொண்ட நானும் உங்களிடத்தில் கோபிகைகளைப் போல ஆசையை வைத்தேன். ராமன் மடியில் விளையாடும் சீதே, நீ தர்மத்தில் நியமம் கொண்டவள். பதிவிரதையாயிருத்தல், ராமனே காக்கும் தெய்வம் என்கிற விஸ்வாச நம்பிக்கையினுல் "என்னைக் காக்கும் தர்மம் ஸ்ரீராமனுடையது" என்று ராவணனை சாம்பலாகச் செய்யாமல் க்ஷமையுடன் கூடினவளாக "பதிவ்ரதாத்வம் விபலம் மமேதம் க்ருதம் க்ருதக்னேஷ்விவ மானுஷாணும்," என்கிறபடி புருஷனுடைய விரதமே என் விரதம் என்று நம்பியிருந்த பதிவிரதாதர்மமும், செய்நன்றி மறப்பவர்களிடம் மனிதர்கள் செய்யும் உபகாரம்போல வீணுய் போய்விடாமல், உங்களைப் பாராமல் என்னை நிராசையாகபோய் விடும்படி எண்ணுகிருயா ? ராமனும் ஏகபத்னி விரதன், என்று தெரிந்தும்கூட சீதே, நீயே உயிரைவிடத் துணிந்தாய். ஆனுல் ஆஞ்சநேயர் உனக்காகக் காத்துக்கொண்டிருந்தார். உன்னைப் போல நான் இல்லை. நான் இருக்க முடியுமா ? ஸ்வல்ப பாக்ய முள்ள எனக்கு ஆஞ்சநேயர் போல ஸத்குரு கிடைப்பாரா ! சீதாராமனைப் பஜித்து நாராயண பதமே பெரிது என்று நம்பி வாழ்ந்து வந்தவர்கள் அநேகம் பேர்கள் நல்ல கதியை அடைந் திருக்கிருர்கள். நான் ஒருவனே உங்களை நம்பி பஜித்துக் கெட்டவன் என்கிற பெயரை உங்களுக்கு நான் ஏன் கற்பிக்க வேண்டும் ? உங்கள் மனத்தையும் உங்கள் சொல்லையும் நீங்களே கேட்டுக் கொள்ளுங்களேன். என் சாக்ஷிக்கு ஆஞ்சநேயரும் நாரதரும் வியாஸரும் ராமானுஜரும் இருக்கிருர்கள். உமையும் சங்கரரும் நான் சொல்வதைக் கட்டாயம் ஆமோதிக்கத்தான் செய்வார்கள். அப்புறம் உங்கள் இஷ்டம்.]

அசோகமரமே, உன்னுடைய மென்மையானதும் புதிதாக துளிர்த்த இளம் இலைகள் எனக்கு அக்னியைப் போல விரகதாபத்தை அதிகப்படுத்துகின்றன. (உன் இலைகளின் நிறத்தைப் பார்த்தால் பொன் நிறமாகவிருக்கிறது.) ஆனால் என்னை தகிக்காமல் அவைகள் என் மனத்தை தகிக்கிறது. நீ இவ்விதம் செய்யலாமா? (அப்போது மலர்ந்த கமலதளத்தின் ஸ்பஷ்டமான காந்திலோசனங்களை உடைய என் பிரபு ஸ்ரீஹரியை, என் ராமனைப் பார்க்காமல், நான் எந்தவிதமாக உயிர்தரிப்பேன்? எங்கேயாவது ஜலமில்லாமல் ஸரஸானது (தாமரை ஓடை) அத்யந்த உபயோகமில்லாமல் பெயரையும் கெடுப்பதாகவுமிருக்கிறது. நீலகமலதளம் பூத்து விரிந்தாற் போல ஸ்யாமகாந்தியை உடைய என் பிரபு ராமன் இல்லாமல் எனக்கு வாழ்வதில் பிரியம் இருக்குமா? என்னைப் பார்த்துப் பேசும், மதுரமாக மனோஹரமாகப் பேசும் அந்த கிருபாளு, ஸம்பூர்ண மனோரதங்களைப் பூர்த்திசெய்யும் புண்டரீகாக்ஷனை விட்டுவிட்டு நான் அரை க்ஷணம் உயிர்தரிப்பேனா? கமலநயன ராமசந்திரனை விட்டு அயோத்தியின் போகங்கள் எனக்குப் பிடித்திருந்ததா? வெட்கத்தைவிட்டு அவ்வளவு பேர்களின் மத்தியில் தனுஷ் அரங்கத்தில் அந்த கம்பீரமான வக்ஷஸ்தலத்தைப் பார்த்த எனக்கு அரைக்ஷணம் ராமனைவிட்டு வாழமுடியுமா? மனுஷ்ய பாவத்தோடு கள்ளங்கபடமற்ற ஹ்ருதயத்துடன் "ராக்ஷஸ துஷ்டர்களை நான் ஸம்ஹரிப்பேன்" என்று சொல்லிய ராமன் என் வார்த்தைகளுக்கு அடங்கி "ஹிம்சை செய்கிறவர்களை மாத்திரம் அழிப்பேன்" என்று பிரதிக்ஞை செய்தவரும் அழகிய கண்களை உள்ளவரும் அழகுவாய்ந்ததும், கோவைப் பழம்போல உதடுகள் உள்ளவரும், அழகிய குண்டலங்களை தரிப்பவரும் உதித்த பூர்ணசந்திரனைப் போன்றவரும் ஆதித்யன் போல உக்ர தேஜஸ் உள்ள ஸ்ரீராமசந்திரனை, ரகுகுலஸோமனை விட்டுப் பிரிந்து ஒரு கணம் நான் வாழவிரும்புவேனா? ஹேமனமே, நீயே சொல். நான் பொன்னின் பிரபையைப்போல பொன்னில் அடங்கியவள். என் வியாகுலத்தை யார் அறிவார்கள்? அன்று கரதூஷணாதிகளை தனியாகவிருந்து வதைத்த சமயம் "சீதை நீ கவலைப்படாதே, இவர்களை அழித்துவிட்டு, உன்னை அழைத்துக் கொள்கிறேன்." என்று சொல்லிய ராகவசிம்மத்தை அணைத்து ஆஸ்வாசமடைந்த பின்பு எனக்கு அவரைவிட்டு ஒரு க்ஷணமாவது பிரிந்திருக்கமுடியுமா? சித்ரகூடத்தில் காகாசூரன் என்னை மீண்டும் தொந்தரவு செய்தசமயம், என்னுடைய அனன்

யகதியை ஸ்வரக்ஷணர்த்தம் செய்யப்படாத என் முயற்சி யின்மையையும் அழுதலையும் கண்டு நகைத்த பிரபு, நல்ல பல் வரிசைகளை உடைய என் ஸ்ரீராமனை மீண்டும் பாராத கண்கள் கண்களோ. ஹே அசோகமரத்தின் இலையே, என்னுடைய ராம ஸ்நேகம் கர்மவசத்தால் ஏற்பட்டதல்ல. நான் செய்த உபவாஸம் தபஸ், ராமஜபம் ஆகிய எல்லாம் காரியார்த்தமாகச் செய்யப்படவில்லை. நான் என்னையே ராமனுக்கு அர்ப்பித்து விட்டிருந்தபடியால், அனன்யார்ஹசேஷத்வம் பூண்டு, ஸர்வ சேஷியான பகவானை கிருபா மார்க்கமாக அடைய விரும்பி, இதுகாறும் காத்திருந்தேன். ராவணனின் வீட்டில் விஷத்தி ஞலோ, கூர்மையான கத்தியினுலோ அக்னியினுலோ ஜீவனை விடப்போகிறேன். ஐயோ, இங்கு நான் மரிப்பதற்கு அக்னியையோ, விஷத்தையோ, கத்தியையோ கொடுப்பவன் யாருமில்லை. என்கதியை ஹேமனமே, நீதான் உணருவாய்'' என்று தேம்பிதேம்பி அழுதுகொண்டு சொன்னுள் என் தேவி சீதை. சீதாபிராட்டியின் துக்கம் அளவிட முடியாதபடி யிருந்தது. ஸ்ரீராமனை நினைத்து பலவிதம் புலம்புகிறவளும், ஸர்வ இந்திரியங்கள் மனது புத்தி ஆகியவை ராமனிடமே லயித்திருந்த படியாலும் நெஞ்சு உலர்ந்து தேகம் நடுநடுங்குவதைக் கண்டு அந்த தர்மபராயணியாகவிருக்கும் சீதைக்கு ஆறுதல் அளிப்பது போலபுஷ்பித்துப் பூத்து ''சீதே, உனக்கு நல்லகாலம் காத்திருக் கிறது. நீ கட்டாயம் ராமனிடம் சேருவாய்'' என்று சொல்வது போல அந்த அசோகக்கொடி அவளைத் தாவி அணைத்தது.) அந்த ஒவ்வொரு புலம்பலையும் மரத்தின்மேலிருந்து கேட்டுக் கொண்டிருந்த பவனகுமாரன் ஹனுமான் ஒரு கல்பத்திற்கு சமமாகக் காலத்தைக் கழித்தார். (74)

''நான் இந்த சமயம் என்ன செய்யக்கூடும்? எவ்விதம் சீதைக்குப் பயத்தை உண்டு பண்ணுமல் ஆறுதல் அளிக்கக் கூடும்?'' என்று யோசனை பண்ணிக் கொண்டவராக, ஹனுமான் கடைசியில் சீதையின் முன்பு ஸ்ரீராமனுடைய கணையாழியை பூமியில் போட்டார். அச்சமயம் அந்த கணையாழியை அசோக மரம் கருணை மேலிட்டு அவள் பிரார்த்தனையை அங்கீகரிப்பது போலவிருந்தது. (ஒரே நிலையிலுள்ள சீதைக்கு சுபத்தைத் சூசிப்பிக்கின்றது போலவும், தைரியத்தைக் கொடுக்கக் கூடியதும், என் பிரபு ஹனுமார் அங்கு இருப்பதாலேயே அந்த சிறந்த மரம் சோகத்தைப் போக்கக்கூடிய அசோக மரம் என்று உலக பிரஸித்தி பெறவும், அந்த காரியத்தை புத்திமதாம்

வரிஷ்டரான ஆஞ்சநேயர் செய்தார்.) சீதை ஆனந்தம் மேலிட்டு அந்த ராம முத்திரை பொறித்துள்ள கணையாழியை தன் குசத்தில் வைத்துக்கொண்டு இன்பம் எய்தினள். (ஆம். பரம மங்கள மூர்த்தியின் க்ஷேமத்தை நினைத்த அந்த ஹனுமாரும் அசோக மரமும் கணையாழியும் அன்று முதல் உலகப் பெருமையை அடைந்தார்கள்.) (75)

(யாக்ஞ்யவல்கியரால் ஜனகருக்குக் கொடுக்கப்பட்ட மோதிரம்; அது மந்திரத்துடன் ஜனகரால் சீதா விவாஹ சமயத்தில் ராமசந்திரனுக்கு அளிக்கப்பட்ட மோதிரம். அன்று உமா தேவிக்கு சங்கரரால் குஹ்யமாக ராம நாமமே விஷ்ணுவின் ஆயிரம் நாமாக்களுள் சிறந்தது என்று போதிக்கப்பட்ட ராம நாமம் கொண்டுள்ள மோதிரம். சீதையையும் ராமனையும் பல பிரணய கலகங்களில் சேர்த்து வைத்த மோதிரம். தாமரை மலரின் அழகும் மணமும் சேர்ந்து விளங்குவதுபோல சீதையின் ஸ்வரூபத்தையும் கந்தத்தையும் சேர்த்துக் காட்டும், ஞாபகப் படுத்தும் பிரிவிலா மந்திர மோதிரம். இதே மோதிரம் இன்று என் கஷ்ட தசையைப் பார்த்து ராமனுல் அளிக்கப்பட்டது. யதிருச்சையாக லாபம் அடைபவன் சந்தோஷிப்பது போலவும், பகவானுடைய நிர்ஹேதுக கிருபையை அடைந்த சேதனன் ஆனந்திப்பதுபோலவும்) பிராட்டி சீதாதேவி அந்த அங்குலீயத்தை அடிக்கடி அடிக்கடி பார்க்கிறவளாக, (சிறு வயதுள்ள பாலை கல்யாணம் செய்துகொண்ட பெண்போல) ராமனை அடிக்கடி பார்க்கிறவளாக தழுவுவதாக ஆனந்தம் கொண்டாள். ஆச்சரியப்பட்டு விட்டாள். (தர்மம் ரக்ஷிக்கும், பதிதர்மம் எல்லா தர்மங்களையும் விடச் சிறந்தது, என்று அத்ரி அனுசூயா உபதேசித்தது அவளுடைய ஞாபகத்திற்கு வந்தது. அகஸ்திய ஆஸ்ரமத்தில் லோபா முத்திரையின் அனுபவங்களைக் கேட்ட சீதை, விசாலமான கண்களையும், சுபங்களையே அடையப்பெறும் மங்கள ஸாமுத்ரிகலக்ஷணங்களை உடைய ஜானகி, ஸத்யவிரதனை ராமன் எல்லோருக்கும் தனக்கும் நன்மை செய்பவன், ஸநாதனமான தர்மம் ரக்ஷிக்கும் என்கிற ஊர்ஜிதத்தை அடைந்தவளாக ஆச்சரியத்துடன் ராம முத்ரையைக் கொண்ட அங்குலியத்தை முத்தமிட்டாள்.) அவளுடைய துக்கம் அழிந்தது. உத்ஸாஹம் கரைகாணமல் பொங்கி வழிந்தது. அவளுடைய மனம் ராமனைக்காண ஆவல் கொண்டது. (அரவிந்தாக்ஷனும் பூர்ணசந்திரனுக்கு ஒப்பான திருமுகமண்டலத்தோனும் பிரியவாதியும் கிருதக்ஞனும்,

நறுந்துழாய்மாலை கொண்டவனும், பவளமணி மாயனும், என் அண்ணல் வேதியர் முழுவேதத்து அமுதத்தை, என் திருவேங் கடத்தானை) என்று நான் காண்பேன், என்று மையலுற்றாள் சீதை. (76)

[தியானம்

ராமாசீதா, மஹாலக்ஷ்மியுடன் கூடிய வரதவேங்கடேச நாராயணா, ஸ்ரீரமாசஹித ரங்கபதே, நீங்கள்தான் எனக்கு சரணம். மஹாவிபூதே, பரபிரும்மமே, நீங்கள்தான் எனக்கு கதி. உங்கள் திருநாமமே எனக்கு ஜீவனம். க்ஷமாதேவி, உன் கிருபையின்றி சிக்ஷைக்குரிய நான் பகவானிடம் நெருங்க முடியுமா? ஹரிதேவி, ஜகத்தாத்ரி, ஹரிவல்லபே, பூரிபீஜே, என்னை ரக்ஷிக்கவேண்டியது உன் பொறுப்பல்லவா? உங்க ளுடைய மிதுனம் என் மனத்தைவிட்டு என்றும் அகலாமல் இருக்கட்டும். நாராயணன் உன்னால் அல்லவா ஸ்ரீமதே என்கிற திருநாமத்தை அடைகிறான். அன்றொரு நாள் முதலியாண்டாள் வைஷ்ணவர்களுக்குச் சொல்லிய வார்த்தைகள் ஞாபகத்திற்கு வருகின்றன. பிராட்டி இளையபெருமாளைப் பற்றிப்பேசின வார்த்தைகளால் ராவணன் வீட்டில் வசிக்க நேர்ந்தது; பெருமாளைவிட்டுப் பிரியநேர்ந்தது. அதனால் பகவத் அபசாரத்தைவிட பாகவத அபசாரம் பெருமாளுக்கு அஸஹ்ய அபசாரமாகும். அந்த அபசாரத்தின் விளைவினால் ஈஸ்வர னுடைய திருவடிகளை அடையமுடியாமல் போய்விடும். பிராட்டிக்கு அசோக வனவாழ்வு இவனுக்கு பிரகிருதி சம்பந்த மான தேகத்துடன் ஸம்சாரவாழ்வை ஒத்ததாகும். அதனால் இவன் அற்ப ஆசாரங்கள் கொண்டவனாய் மெய்ஞானம் ஒன்றுமில்லாமல், ஒழிவில் காலமெல்லாம் உடனாய், ஜன்மச் சுழலில் அழுந்தி எழில்கொள் ஜோதிஸ்வரூபத்தை அடைகிறா னில்லை. அதனால் பிராட்டிக்குக் கிடைத்த ராக்ஷஸ ஸஹவாசம் போல இவனுக்கு துஷ்டஸ்திரிபுத்ர பந்துக்களின் ஸஹவாசம் போலவும், ஸாது ஜனங்களின் நிஸ்ஸங்கத்வம்போல ஒக்கும். பிராட்டிக்கு மாரீச தர்சனம்போல மஹாமாயா மோஹங்கள் ஏற்படும். ஞானம் பலம் ஐஸ்வர்யங்களால் ஏற்படும் கர்மாக் களும் கர்த்ருத்வமும், மமகார அஹங்காரங்களும் சித்திக்கும். அதனால் ஸ்வரூபமாகிற பாரதந்திரயத்வம் நஷ்டமாகிவிடும். விஷயப்பிராவாண்யம் அதிகம் விருத்தி அடையும். பிராட்டி திருவடியைக் கண்டால்போல, இவனுக்கு பூர்வபுண்யங்களின்



சீதாதேவி பூமியில் கிடந்த அங்குலீயத்தை எடுத்தாள். அந்த அங்குலீயத்தில் ராம நாமம் அழகாக எழுதப்பட்டிருந்தது. இந்த மோதிரம் ராமனுடைய மோதிரம் என்று அடையாளம் தெரிந்துகொண்டாள். ஆச்சர்யத்துடன் அந்த மோதிரத்தை மீண்டும் பார்த்தாள். அவளுக்கு மஹத்தான சந்தோஷம் யேற்பட்டது. அவளுடைய ஹ்ருதயத்திலிருந்து பொறுக்க முடியாத துக்கமும் விலகியது.

பலனாகவோ அல்லது பகவானின் நிர்ஹேதுகிருபையினாலோ ஸதாசார்யனால் ஸமாஸ்ரயணம் ஏற்படும். பிராட்டிக்கு திருவடிசொன்ன ஸ்ரீராம குணங்களைப்போல, இவனுக்கு ஸ்ரீமத் ராமாயண பாரதபாகவத புராண ரத்னங்களையும் ஆழ்வாராதிகள் அருளிச்செய்த திவ்யபிரபந்த ரஹஸ்யங்களைக் கேட்கும்படி செய்யும். பிராட்டிக்கு ஸ்ரீமுத்ரை கொடுத்து ரத்த அபிவிருத்தி அடைந்த நோயாளிக்கு உத்ஸாஹம் பொங்குவதுபோல, இவனுக்கு ஆசார்யன் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் சங்கிலித் தொடர்போல வரும் குரு பரம்பரையையும், அந்த சுக்ருதங்களையும் ஒக்கும். பிராட்டி திருவடிக்கு சூடாமணியைக் கொடுத்தது இவனுக்கு ஆசார்யன் சொன்ன திருமந்திரம்போல விருக்கும். பிராட்டிக்கு ஸ்ரீவிபீஷணன் புத்ரியினால் சொல்லப் பட்ட தைர்ய வார்த்தைகளும் ராமனுடைய பிரபாவங்களும் இவனுக்கு பாகவத ஸஹவாசத்தையும் அவர்கள் சொல்லும் திவ்யஸூக்திகளை ஒக்கும். பிராட்டிக்கு விரோதிகளான ராவண கும்பகர்ண இந்திரஜித் ஆகியவர்களை ஸம்ஹரித்தல் பெருமாள் பிராட்டியுடன் அயோத்திக்கு எழுந்தருளுதல், இவனுக்கு விரோதியான தேவதாந்திர மந்திரார்த்தங்களையும் பிரகிருதி ஸம்பந்தத்தையும் ஸம்ஹரிப்பதும், ஸ்வரூபலாபம், புருஷார்த்த லாபம், நித்யஸூரிகளோடு சேர்க்கை, இவன் பகவத்பாகவத நித்யானுபவம் கொள்ளுதல் ஆகியவைகளைப்போலிருக்கும். இவ்விதம் ராமசீதா கடாக்ஷம் ஸதாசார்யர்களாகிற ஆஞ்நேய ராமானுஜ முதலியாண்டான் பட்டர்தேசிகர் மணவாள மாமுனிகள் ஆகியவர்ளின் கிருபையைபோலேவிருக்கும். ஹேவானவர் ஈசனே, காரொழிவண்ணலே, பரம்சுடராகிய சீதைக்கு ஜோதியே, என்னை நீங்கள்தான் அனுக்ரஹம் செய்ய வேண்டும் ]

சீதை தனக்குள் யோசிக்க ஆரம்பித்தாள், "என் பிரபு ரகுராய் யாவராலும் ஜயிக்கப்பட முடியாத அபராஜிதர். அப்பேற்பட்ட பிரபு என்னிடம் கருணை கொண்டாரா? அல்லது அவருடைய மாயையாக விருக்குமோ? இப்பேற்பட்ட மகிமை யுள்ள மோதிரம் மாயையினால் ஏற்படக்கூடியதில்லை. இவ்விதம் சீதை தனக்குள் குழம்பிக்கொண்டிருக்கும்போது, ஹனுமார் மதுரமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். (77)

ஸ்ரீராமசந்திரனுடைய குணம்ருதங்களை ஹனுமார் வர்ணனை செய்ய ஆரம்பித்தார். அவைகளைக் கேட்ட சீதையின் மனம் சாந்தி அடைந்தது. துக்கம் ஒழிந்தது. வரண்ட

ஹ்ருதயத்தில் அம்ருதம் பொழிவது போலவிருந்தது. தன் மனத்தையும் இந்திரியங்களையும் ஒருங்கு படுத்திக்கொண்டு அவள் கேட்க ஆரம்பித்தாள். ஹனுமார் முதலிலிருந்து ஸ்ரீராமசந்திரனுனடய கதையைச் சொல்ல ஆரம்பித்தார். சீதை கேட்டுக்கொண்டிருந்தாள். (78)

சீதை சொல்ல ஆரம்பித்தாள். "என் காதுகளுக்கும் மனத்திற்கும் ஸ்ரவணும்ருதமாக விருக்கிறது. இந்த சுந்தரமான ராம கதை என்னை ஆனந்தப்படுத்துகிறது. (என் பிரபு பரதாக்ரஜனுடைய கதையும், என்னை மணம் செய்துகொண்ட விபரங்களும், மாமனுர் தசரதருடைய தர்மமான அரச வாழ்க்கையையும் கேட்க, கேட்க, ஸுதாரஸம்பானம் செய்வதுபோலிருக்கிறது. பிதாவின் கட்டளையினுல் புருஷோத்தமரான என் பிரபு இக்ஷ்வாகு குலத்தில் சிறந்தவரும் ஞானியும் மதுரமாகப் பேசுகிறவரும், பிதாவின் கட்டளைப்படி பொறுப்புடன் வனம் சென்று காட்டில் வசிக்கும் விரதத்தையும் பூர்த்தி செய்து வாழ்வதையும் கேட்டாள். பெருத்த கைகள் உள்ளவரும் பூர்ணசந்திரனுக்கு ஒப்பான முகமண்டலத்தை உடையவரும், தன் நாயகன் ஸ்ரீரகுராமன் தண்டகவனத்தில் புகுந்து ஒவ்வொரு ரிஷிமுனி ஆஸ்ரமங்களில் நுழைந்து அந்த புண்யவானுகிற ராமானுஜனுடன் சஞ்சரிக்கிறவராக, ஒவ்வொரு ஆஸ்ரம வாசிகளின் க்ஷேமத்தைக் குறித்து பாடுபடுகிறவராகவும் ராக்ஷஸர்களுக்கும் கடும் விரோதியான என் பிரபு அளவிட முடியாத மகிமைகள் ஸ்வரூபம் உடையவராயும், ஸர்வ பிராணிகளிடத்திலும் தயை உள்ளவராயும் என் மனக்கண் முன்பு காணப்படுகிருர். ஐயோ, நான் அல்ப பாக்கியம் படைத்தவள். அப்பேற்பட்ட அரவிந்தலோசனங்களை உடைய ரகுராமனை யிழந்துவிட்டேன். தூயமனமுடைய லக்ஷ்மணனை கடும் சொற்களால் நான் தகித்துவிட்டேன். என் துக்கத்தின் முடிவை நான் காண்கிறேனில்லை. பிரபோ, உங்களை விட்டுப் பிரிந்து பாக்யமற்றவளாய் பெரும் கடலில் பெரும் காற்றினுல் அடிபட்ட கப்பல்போல மடியப்போகிறேன். ராஜரிஷியும் பரமாத்மாவும் ராஜீவலோசனனும், புத்திமானும், தர்மத்திலும் லோகமரியாதைகளிலும் பற்றுதல் உள்ள ரகுநந்தனனை மீண்டும் பார்ப்பேனு? இனி என்னுல் அவனுக்கு என்ன பிரயோசனம்? மஹாபாக்ய ஹீனமுள்ள எனக்கு என் தோஷங்களை நசிக்கச் செய்கிறதும், அகில தர்மங்களின் பலனைக் கொடுப்பதாகவிருக்கும் புண்யஸ்ரவண கீர்த்தனமாகிற ராமசரிதம் எனக்குத் தைரியத்

தையும் சௌக்யநிகேதனம் மாதிரி அல்லவோ விளங்குகிறது. அந்த ஸத்யவிரதனுகிற தாசரதி அண்டினவர்களேயும் பக்தர் களேயும் காக்கும் பிரபு, பரமபாவனன் அல்லவோ. அவருடைய கதை கர்மபந்தங்களுடன் கூடிய ஸம்சார துக்கக்கடலேத் தாண்ட வைக்கும் புண்யமான தெப்பமாகவல்லவா காணப்படுகிறது. ஸுஸ்வரங்களுடனும் மதுரபாவங்களுடனும் அழகிய ஸாஹித்யங்களுடனும் பாடப்பட்ட ராமசரிதம் எனக்கு ஆச்சரியத்தையும் இன்பத்தையும் அளிக்கிறது. யதாரூபம், யதாவர்ணனே என்கிறபடி என் பிரபு ராகவனே உள்ளது உள்ளபடி விவரிக்கக் கேட்டேன். அகண்ட குணஸாந்திரனுக விளங்கும் ராமன், சௌமித்ரியாகவிருக்கும் ராமானுஜனேயும் வஸிஷ்ட விஸ்வாமித்திரரால் பழக்கப்பட்ட ஸ்ரீராமனேப்பற்றி நான் விவரிக்கக் கேட்டேன். என் பிரபு ஸகல லோகாதரன் நீரஜநயனன், பக்தி ஸாகரம்கொண்ட தியாகராஜ துளசி தாஸரால் ஆராதிக்கத் தகுந்தவன். ஸஜ்ஜன ஜீவனன் என்று பஹுவிதம் சுருண்ட கேசங்களின் நுனியை உடையவளும், கருத்த பின்னலுடன் கூடியவளும் ராமதியானத்தில் மனத்தைப் பறிகொடுத்தவளும் செந்தாமரை புஷ்பம் காம்புடன் விளங்குவது போல அழகிய திருக்கைகளே உடைய சீதை, மிக்க பயந்தவளாக மேலும் கீழும் பார்த்துவிட்டு, கடைசியில் முகத்தை நிமிர்த்தி ஸிம்சுபா அசோகவிருக்ஷத்தைப் பார்த்தாள். அவள் பார்த்த பார்வை, நினைத்த எண்ணங்கள், ஒன்றையே சொல்வதாக விருந்தன. அதாவது,) என்மீது தயைகொண்டு, நான் நம்பும்படி ஸுஸ்வரங்களுடனும் மதுரமாக ஸ்ரீராமசரிதத்தைக் கானம் செய்த வள்ளலும் சிரத்தையுடன் எனக்குப் பிரேமையை யும் மங்களங்களேயும் உண்டுபண்ணிய இந்த ராம கதையைப் பாடிக்காட்டி, கானம் செய்யும் முறையால் பயமின்றி யாவற்றை யும் நம்பும்படி செய்யும் உதார ஹ்ருதயம் படைத்த க்ருபாளு என் திருஷ்டி பதத்தில், கோசரமான கண்களுக்கு முன்பு தன்னேப் பிரகடனம் படுத்த மாட்டாரா? (மஹானுபாவரான அவர் என்னிடம் ப்ரீதி கிருதிக்ஞை கொண்டவராக எனக்கு முன்தோன்றி மதுரமான மொழிகளால் பூரணமான ராம லக்ஷ்மண க்ஷேமவிருத்தாந்தங்களேச் சொல்லமாட்டாரா? என்று வேண்டுபவளாகத் தோன்றினுள். அதே சமயம் உதய பர்வதத்தில் உதயமாகிற சூரியனேப்போல வாதாத்மஜனுகிற) ஹனுமான் சீதையிடம் நெருங்கினர். (தனக்குப் பிரியத்தைச் சொன்னவரும், பூத்த அசோகமரத்தின் பூங்கொத்துப் போன்ற

காந்தியுள்ளவரும் உருக்கிய தங்கம்போல கண்களுள்ளவரும், வணக்கத்துடன் கூடியவரும் மின்னல்போல பிரகாசிக்கும்) வாயுகுமாரனை சீதை கண்டாள். ஆச்சரியம் தாங்காமல் தன் தலையைத் திருப்பிக்கொண்டு உட்கார்ந்துகொண்டு திரும்பவும் திரும்பவும் அவள் அவரை நன்கு பார்த்தாள். (79)

(பயத்தினால் கலங்கியவளும் துக்கத்தினால் பீடிக்கப் பட்டவளும் அடிக்கடி "ஹேராம, ஹேராம, லக்ஷ்மணா," என்று புலம்புகிறவளுமான சீதை கருணை ததும்பும்படி புலம்பிக் கொண்டும் அழுதுகொண்டும் ஹனுமாரைப் பார்த்துக் கொண்டும் இருந்தாள்.) வினயத்துடன் அருகே வந்தவனும் (மஹா பண்டிதனும் மதுரமான குரலினால் ஸுஸ்வரங்களுடன் பாவராகதாளத்துடன் ராமசரிதம் பாடின) ஹனுமான்ஜி ஜானகி யிடம்வந்து "தாயே, நான் ராமதூதன். ஸத்யமாகவும் கருணா நிதி என்று சொல்லப்படும் பிரபு ஸ்ரீராமசந்திரனை அறுதி யிட்டு சபதம் செய்கிறேன். (செந்தாமரை போன்ற கண்களை உடையவளே, குற்றமற்றவளே,) இந்தக் கணையாழியை நான் ராமசந்திரனால் அடையாளமாகக் கொடுக்கப்பட்டு தங்களுக்கு நற்செய்தி கூற பிரபுவினால் அனுப்பப் பட்டிருக்கிறேன். (கல்யாணி, மஹாத்மாவரன ஜனகருடைய பெண்ணே,) அழிவற்ற பராக்ரமம் உள்ள ஸ்ரீராமனால் தங்களுக்கு க்ஷேமத்தைக் கூற இந்த அடையாள முத்திரையினால் அனுப்பப் பட்டேன். (80)

(கஷ்டம் வந்தபோதிலும் அதைப் பொறுத்துக்கொண்டு நூறு வர்ஷமானாலும் ஜீவித்திருந்தால், என்றாவது ஒருநாள் கஷ்டம்நீங்கி ஆனந்தம் உண்டாகும் என்கிற பெரியோர்களின் வசனம் ஸத்தியமான பொருள் உள்ளதே என்று தோன்றுகிறது. அவ்விதம் நினைக்கும் சீதைக்கு ஹனுமாரிடத்தில் ஆச்சரியமான பிரியம் உண்டாயிற்று. அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் நம்பிக்கைகொண்டு பேசத் தொடங்கினார்கள்.) சீதை பேசத் தொடங்கினாள். "மனுஷ்யர்களான ராம லக்ஷ்மணர்களுக்கும் வானரர்களுக்கும் சேர்க்கை எவ்விதம் உண்டாயிற்று?" அப்போது ஹனுமார் (சுக்ரீவ சந்திப்பு, வாலிவதம், சுக்ரீவ பட்டாபிஷேகம் ஆகிய விருத்தாந்தங்களையும், சீதையைத் தேடுவதற்கு அனுப்பப்பட்ட வானரர்களின் முயற்சியையும் தன்னுடைய லங்கா பிரவேசமாகிற சமுத்திரத்தைத் தாண்டுதல் ஆகிய) எல்லா விஷயங்களையும் சுருக்கமாகவும், நம்பிக்கை உண்டுபண்ணும்படி சொன்னார். (81)

கபியினுடைய வசனங்கள் அவளுக்குத் தைரியத்தைக் கொடுத்து பிரேமையை அதிகரித்தது. மனத்தில் பயம் நீங்கின வளாக அவளுக்கு பூர்ண விஸ்வாஸம் ஹனுமாரிடத்தில் ஏற்பட ஆரம்பித்தது. மனத்தில் நம்பிக்கையுடன் அவள் ஹனுமாரை மனம் கர்ம வசனங்களில் கிருபாஸாகரமாகிற ஸ்ரீராமசந்திர னுடைய தாஸன் என்று அறிந்துகொண்டாள். (82)

அது மாத்திரமில்லை. ராமனிடம் பூர்ணபக்தி கொண்ட ஹரிதாஸன், (பகவத்ப்ரீதியைப் போல, ராம பக்தர்களிடமும் அத்யந்தப்ரீதி உள்ளவன்) என்றும் ஹனுமாரை ஜானகி தெரிந்துகொண்டாள். அவளுடைய பத்ம நயனங்களிலிருந்து புளகாங்கித சரீர ஆனந்தத்தினுல் யேற்பட்ட ஆனந்தக் கண்ணீர்கள் உதிர ஆரம்பித்தன. (பகவானுடன் தான் அனுபவித்த காடோப கூடமான சேர்க்கையை அவள் நினைத்துப் பார்த்தாள். அவளுடைய ஆனந்த இன்பம் பெரும் பிரவாஹமாக வழிந்து ஓடியது. என் பிரியமான ராமனுடைய கல்யாண குணங்களைச் சொல்லும் அழகு வாய்ந்தவனே, நதியின் கரையை வெள்ளம் உடைப்பது போல என் மனதை அபஹரிக்கிருய். உன்னைக் கண்டதால் என் மனத்திற்கு சந்தோஷம் ஏற்பட்டதாயிற்று. ஸ்ரீராமனுடைய மஹத்தான சரித்திரமே சீதைக்கு நம்பிக்கை ஊட்டும், ஸ்ரீராமனுடைய ஆஸ்ரித வாத்ஸல்ய செளலப்ய செளசீல்ய, காருண்ய, மாதுர்ய, செளரிய தைரிய ஞானபல ஐஸ்வரிய சக்தி தேஜஸ், ஆர்ஜவ, ஸத்யஸங்கல்ப, ஸெளஹார்த்த, காம்பீர்ய, ஒளதார்ய, சாதுர்ய, வீர்ய, பராக்ரம, ஸத்யகாம, க்ருதக்ஞத்வ பிரகிருதித்வ மனுஷ்ய குணங்கள், தேவர்களிடமும் காணப்படாததும் கேட்கப் படாததும் கிடைக்கப்படாததுமான மஹார்ணவம் போல விருக்கும் கல்யாண குணவிசேஷங்களை, மஹாகீர்த்திமானுகிற மஹாவிஷ்ணுவைப் போன்ற என்பிரபு ஸ்ரீராமனை, நீ அடிக்கடி புகழ்கிருய். என்மனம் செந்தாமரை இதழ் போன்ற கண்களை உடைய என் நாயகனுடைய ரூபத்தையும், பரம மங்களத்தைத் தரும் லக்ஷ்மணனுடைய ரூபத்தையும் காணும்படி செய்கிருய். அவருடைய இன்பஸம்பந்தத்தை ஞாபக மூட்டுகிருய்.) ஹே ஹனுமான், என் பிள்ளாய் ராமனைவிட்டுப் பிரிந்து, அவருடைய ஸம்பந்த லாபத்தை இழந்த அபாக்யவதியான எனக்கு நடுக் கடலில் உதவியின்றி மூழ்கப்போகும் சமயம் கப்பல்போல வந்து எனக்கு உயிர் அளிக்கிருய். (என் உள்ளத்திற்கும் உயிர்பிச்சை யைக் கொடுத்து, ராமபிரேமை ஸாகரத்தில் ஆனந்தம் அளிப்பவ

ஞகத் தோன்றுகிருய். ஸத்யம், தர்மம், பந்து, ஸாது ஜனங்களைக் காப்பாற்றும் சீல விரதமுடைய ராகவனையும், என்னிடம் அன்பினுலும் உத்தம குணங்களாலும் சேவைசெய்த ராமானுஜனுகிற லக்ஷ்மணனை அடிக்கடி ஞாபகப்படுத்துகிருய். என் பயத்தைப் போக்கி, எனக்கு உயிரில் ஆசை வைக்கும்படி செய்கிருய். புருஷஸ்ரேஷ்டர்களான ராமலக்ஷ்மணர்களைச் சொல்லும் போது, கைகூப்பிக்கொண்டு உத்திர திசையைப் பார்த்து மஹா வினயத்துடன் என் சந்தேகங்கள் போகும்படி பதில் அளிக்கிருய். ஸதாசார்ய ஸம்பத்தினுல் மீண்டும் கிடைக்கப்பெறும் ஸ்வரூப ஞானத்தையும் பரம புருஷார்த்த லாபத்தையும் உன் சாதுர்ய மாதுர்ய செளசீல்ய வாத்ஸல்ய காருண்ய மொழிகளால் எனக்கு உபதேசிக்கிருய். உன்னுல் ஏற்படும் லாபம் எனக்கு பலவகைப் பட்டது. முதலில் உயிர் அளித்தாய். ராமனை மீண்டும் கிடைக்கப்பெறுவோம் என்கிற நம்பிக்கையை மஹா விஸ்வாசத்தைப் பெருக்குகிருய். ராமனுக்கும் ராமானுஜனுக்கும் நான் செய்த அஸஹ்ய அபசாரங்களைப் போக்கி, பகவானுக்கு என் மீது கருணை வரும்படி செய்யப்போவதால், எனக்கு அத்யந்த பரம உபகாரியாக ஆகிருய். ராமனே என் ஜீவனம், ராமனே எனது பரமபுருஷார்த்தம், ஸ்ரீராமனுடைய திருவடிகளே எனக்கு பரமார்த்தம் என்று காண்பிக்கும்போது, ராமனுடைய அஸங்க்யேய கல்யாண குணங்களை மீண்டும் மீண்டும் ஸதாசாரியன் பிணக்கும் சிஷ்யனுக்குச் சொல்வதுபோல எனக்குச் சொல்கிருய்.) (83)

[தியானம்

ஸ்ரீரங்கஸ்ரீ, ஸ்ரீரங்கதாம், ஸ்ரீசீதே, ஸ்ரீரங்கநாயகி, ஹே அலர் மேல் மங்கையே, நாராயணபிரியே, சீதாராமா, நாராயண மஹா லக்ஷ்மியே, உங்களை அடிக்கடி அடிக்கடி பிரதக்ஷணம் செய்து, ஆஞ்சநேயர், அர்ஜுனன் மாதிரி நமஸ்கரிக்கிறேன். அம்மா, தாயே, எனக்கு ஏகாம்ர ஈசரின் நாயகியாகிற காமாக்ஷியைப் போலத் தோற்றம் அளிக்கிருய். சிவே, பத்ரே, உன்னுடைய அவதார ரஹஸ்யத்தையும், உன்னுடைய சாரித்திரிய வாழ்க்கையில் எனக்கு சித்திரிக்கிருயே. பகவான் ஸாது ஜனஸம்ரக்ஷகன். நீ பதித பாமர ஜனஸம்ரக்ஷகி. பகவானை ஒரு சேதனன் நிஷித்த கர்மங்களைவிட்டு ஸத்கருமங்களைச் செய்கிறவனுகி, வேதத்தில் சொல்லியபடி அவனை ஆராதித்து, "நான் உன் ரக்ஷணத்தை, ஸ்வாமி, வேண்டுகிறேன்," என்று வாய்விட்டுக்

கேட்டால், அவன் கருணையின் வசம் அடைந்து ஸாது ஜனங்களைப் பரிபாலிக்கிறன். ஆனால் உன் ஸ்வரூபம் அவ்விதம் இல்லை. இயற்கையாகவே பகவானிடம் நீ அன்பு கொண்டவள். அதனால் இயற்கையாகவே உன்னை நம்பினவர்களிடமும் கருணை கொண்டவள். தியாகராஜர், நாரதர், வேதவியாஸர் சுகர் போன்ற ஸத்ஸங்கங்களை அடையாத ராக்ஷஸஸ்திரிகளையும் உன்னை அண்டிவாழ்கிற தேவமாதர்களையும் ராமனிடம் காட்டிய இயற்கையான அன்பின் பிரவிருத்தியினால், ஸத்பதாசாரம் இல்லாத போதிலும் சேஷதல்பசயனனுகிற நாராயணனிடம் என்ன காருண்ய மனஸால், அக்ஞானமயசேதனர்களை உய்விக்க எண்ணம் கொண்டு வாதாடுகிறாய். "நீலமேக ஸ்யாமள காத்ரனுகிற லக்ஷ்மி வராஹனே, இவனைப்பார். இவன் உன் காருண்ய விலாஸத்திற்கு இலக்கானவன்," என்று அரவிந்தாக்ஷனை பூர்ணகாமத்திற்கு இலக்காக்கி விடுகிறாய். "இந்த பிரபஞ்சம் முழுவதும் நானும் நீயும்தானே. இவனும் உன்னுடைய அம்சம்தானே. நீர்தானே ஸ்வாமி இவன் உள்ளத்திலும் உறை கொண்டிருக்கிறீர். உமக்கு ஏன் இந்த பேத புத்தி? இவன் நல்லவன், இவன் என் காருண்யத்திற்கு உரியவன்; இவன் கெட்டவன்; என் நிக்ரஹத்திற்கு உரியவன் என்று ஏன் பாகுபாடு உடையவராக இருக்கிறீர். நீரே அர்ஜுனனுக்கு புருஷோத்தமயோகத்தை உபதேசிக்கும்போது, சொன்ன சொல்லை நினைத்துப்பாரும்." "ஸம்சாரமாகிற விருக்ஷத்திற்கு தொடக்கம் நிலைமை முடிவு அறியத்தக்கது. எவனிடத்தினின்று வெளிவந்த இந்த ஸம்சார பிரவிருத்தியாகிற அஸ்வத்தவிருக்ஷம் முடிவு அடைகிறதோ, அந்த ஆதி புருஷனுகிய உம்மை சரணமடைய வேண்டும். அகங்காரத்தையும் விபரீத ஞானத்தையும் விட்டு, பற்றுதல் என்கிற தோஷம் நீங்கின வைராக்யத்தினால், உமது பாத சரணங்களாகிற ஞான மார்க்கத்தில் நிலைபெற்று, பரிசுத்தமான நம்முடைய ஆத்ம ஜ்யோதிசை, ஸர்வ வ்யாபகமும் ஸர்வ அந்தர்யாமியாக விருக்கும் உம்மோடு கூடிய என்னையும், (பிராட்டியையும்) இவன் உணருகிறன். க்ஷரமாயிருந்து கொண்டும் நாசமற்றதும் அவ்யயமான அக்ஷர பதங்களாகிற நம்முடைய சேர்க்கையை இவன் நாடுகிறன்; நம்மை ஆராதிக்கிறன். ஸாது கர்மத்தை செய்தவனுகி, நம்மைப்பற்றிய தியான யோகத்தைச் செய்கிறன். அன்று ஸாத்யர்கள் ஸர்வஹுத் என்று சொல்லப்படும் தயிருடன் நெய் கொண்ட யாகத்தில் மந்திரங்களுடன் பிராணிகளை ஆஹுதி செய்கிற கர்மத்தில், அவர்கள்

தியான யோகம், தியான யக்ஞம் செய்பவர்களாகி, அந்ருத்த நாராயணனுகிய அக்னியில் மனத்தையும் இந்திரியங்களையும் ஸ்ருஷ்டி யக்ஞ பிரகாரம் செய்தார்கள் என்று சொல்லுவீர்களே, அதுபோல இவன் நம்முடைய அபார காருண்யத்தை வேண்டு கிருன். உம்மால் ஸ்வாமி, பூர்வ திட்டமாக ஆலோசிக்கப்படாமல் எத்தனையோ பேர்களுக்கு விசேஷ கருணை காட்டப்பட வில்லையா? அசேஷ லோக சரண்யா, பிரணதார்த்தி ஹரா, ஆஸ்ரித வாத்ஸல்ய ஏக மஹோததே, அம்புஜாக்ஷா, ஸத்ய காம ஸத்யஸங்கல்பா, ஆபத்ஸகா, காகுத்ஸ ராமா, ஸ்ரீமந் நாராயணு, புருஷோத்தமனே, அகில்கிலலேன் இறையுமென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா, நிகரில் புகழாயுலகம் மூன்று டையாய் என்னையாள்வானே, நிகரிலமரர் முனிகணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே, புகல் ஒன்றில்லா வடியேன் உன்னடி கீழமர்ந்து புகுந்தேனே, என்கிறபடி தன் தோஷங்களை, குற்றங்களை அனுஸந்தித்து ஸதாசார்ய கிருபையாலே லப்த ஞான வான்களை புரம்கொண்டு எப்போதும் காருணிகஹித காம்யனுன உம்மை, உம்முடைய ஸ்ரீபாதத்தை, முனிவர்கள் ஸாது ஜனங்கள் ஆஸ்ரயிப்பதுபோல, அதே கிருபையாலே என்னை (பிராட்டியை) அடைந்து மஹாதோஷங்கள் நிறைந்த சேதனனைப்போல வேண்டுகிருன். உமக்குப் பத்னியும் இவனுக்கு மாதாவும் அத்துடன் நம் இருவர்களுக்கும் நித்யஸம்பந்தம் பெற்ற இவ னுக்கு என் பிரஸாதத்தாலே பயம் கெட்டு இவன் வாத்ஸல் யாதி சௌலப்யாதி ஸமஸ்த கல்யாண குணவிசேஷங்களின் விசிஷ்டனுன ஸ்ரீயப்பதியாகிற உம்முடைய திருவடிகளை தன் அநிஷ்ட நிவிருத்திக்கும் இஷ்டப்பிராப்திக்கும் உபாயமாக வரிக் கிருன். ஸ்ரீரங்கநாத தயாநிதே, வரதவாத்ஸல்ய பிரபோ, இவ னுக்கு அன்று ஆஞ்சநேய ராமானுஜாதிகளால் வேண்டப்பட்டும் அவ்விதமாக காருண்ய வாத்ஸல்ய ஆசார்யனுல் வேண்டப் பட்டும், உம்மாலும் என்னுலும் "தயைவ ஸர்வம்ஸம்பத்ஸ்யதே, கிங்கரோ பவிஷ்யஸி, மாதே பூதத்ர ஸம்சய:, மயைவ ஹித் யுக்தம், நிஸ்ஸம்சய: சுகமாஸ்வ, ஸ்ரீரங்கே சுகமாஸ்வ," என்கிற வசனங்களின்படி இவனும் உமது அருளுக்கு பாத்திரமானவன் அன்ருே? ஸ்ரீரங்க துர்யனே, ஜகத்பதே, தயாதனத்தை உடைய தயிதரங்கபதே, ஸ்ரீரங்க ஸ்ரீ, ஸ்ரீமந் ஸ்ரீரங்கஸ்ரியமனுபத்ரவாம் அனுதினம் ஸம்வர்த்தய, நமோ ராமானுஜார்ய திவ்யாக்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம், நமோ ராமானுஜார்யாய வேதாந் தார்த்தாரயத்ப்ரதாயினே என்கிறபடி இவனையும், அம்பரீஷனைக்

காத்ததுபோல, அதற்கு ஸத்ருசமாப்போலே சொல்லப்படும் உமது உள்ளத்தில் கருணை கொண்டு, என்னோடுகூட பிரார்த்திக்கும் பூமி பிராட்டியின் வசனங்களாலும், உமது சக்தியினுல், இவனைக் காத்திடுவீர்.'' என்று புருஷகாரம் செய்யும் சீதே, தயாநிதே, கருணு காமாக்ஷியே, நாராயணி கைங்கர்ய லக்ஷ்மியே, என்னை ஸதாரக்ஷி அம்மா. சீதே, ராமதியானத்திலிருக்கும் நீ சுத்த ஸத்வம். ஆஞ்சநேயரின் ஸந்நிதானத்தில் ரஜஸ்தமஸ் விலகியவளாய், அபார காருண்ய ஜலநிதியாகி, கர்மம் என்கிற ஸ்வ முயற்சியை தனது ரக்ஷணத்தை, பகவானிடம் ஒப்புவித்து சக்தியிருந்தும் அசக்தையாக ஸங்கல்பித்துக் கொண்டு பகவத் தர்மமாகிற ரக்ஷணத்திற்கு குறைவு வரக் கூடாது என்கிற பதிவிரதா தர்மத்துடனிருந்தாயே. உன்னுடைய சீலம் அடக்கம் க்ஷமை ஞானம் சக்தியாவற்றையும் நினைக்க, மஹாஸ்வதந்திரனுகிற பகவானுடைய குணவிசேஷங்களையும் ஸாதுஸம்ரக்ஷணர்த்தம் அவதாரம் செய்திருக்கிற அவருடைய ஸங்கல்பத்தையும் மற்றொரு பக்கம் நினைத்துப் பார்க்க, உன் அவதார ரஹஸ்யத்தையும் உன் மேன்மைகளையும் புரிந்தவன் புனர்பவம் என்கிற ஸம்சார சுழல்களில் அகப்படுகிறதில்லை. அம்மா, அகப்படுகிறதில்லை. மஹாதுர்லபனுகிற எம்பெருமான் ''மாம் ஏகம் சரணம் வ்ரஜ'' ''ஏஷ நாராயணர் ஶ்ரீமான்,'' என்கிற பதங்களை சொன்ன பிரபு, ஹ்ருதிவேத்யனுகிற வேத்யாகாரன், ஸர்வசேஷியாகவிருந்தும், அவசரம், காலம், நிஷ்டை நியமம் உள்ளவனு இவன் என்று பரிசோதித்து வேறு அபிப்ராயத்தில் அபிமுகனுக நிற்கிருன். அப்பேற்பட்ட பெருமானை, மாம்அஹம்—நான் ஸர்வஸௌலப்யன் நான் பரமாத்மா என்கிற ஸித்தோபாயத்தைக் காட்டும் பிராட்டியாகிய நீ பெரியவளன்றோ? அதனுல் என் போன்றவர்களின் புகழ்களை நீ நீலமேக ஸ்யாமளனைவிட அதிகம் பெறுகிருய் அல்லவோ? அப்பேற்பட்ட நாராயணரின் பத்னியே, ஸர்வக்ஞ ஸர்வஸக்தித்வ நாராயணரின் ஶ்ரீயே, சுப ஆஸ்ரயமான பரத்வ ஸௌலப்ய வ்யஞ்சகமான பார்த்தசாரதியுடைய ரூபத்தை, கோதண்டராமனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை, அந்த விசேஷ மூர்த்தியை, உன் பாதங்களைப்பற்றியவனுக நான் அடைய விரும்புகிறேன். சீதே, மஹாலக்ஷ்மி அம்மா, என் ரங்கதயிதே, நீயும் பகவானும் தானே எனக்கு பலன். ரங்கஶ்ரீ, ரங்கதாம்.)

''நீ பரம உபகாரி. (வாத்ஸல்யமுள்ள ஸதாசார்யன் சிஷ்யனுக்கு விளங்குவதுபோலத் தோன்றுகிருய்.) இப்போது

என் பிரபுவின் க்ஷேம குசலங்களைச் சொல். அவருடைய தம்பி யான லக்ஷ்மணனின் சுகக்ஷேம சமாசாரங்களையும் சொல். என் பிரபு, கராரி, தேக மனநோய் இன்றி சௌகியமாகவிருக்கிறரா? என் பிரபு ரகுராய் அதிகோமளமான மனத்தை உடைய கருணை காகுத்ஸன் என்னைப்பற்றி நினைக்கிறரா? என்னிடம் பிரியம் காண்பித்த பிரபு இப்போது பராங்முகமாக என்னிடம் என்ன காரணத்தால் கடூரமான நிஷ்டூரதையுடன் இருக்கிறர்?'' (84)

"அவருக்கு அவரை நம்பி வாழும் சேவகர்களுக்கு சுகத்தை வாரிக் கொடுப்பது இயற்கையான ஸ்வபாவம் ஆயிற்றே. என் விஷயத்தில் மாத்திரம் இந்தமாதிரி சிரத்தை யில்லாதவராக ஏன் காணப்படுகிறர்? என் பிரபு ரகுநாத் என்னைப்பற்றி எப்பொழு தாவது சிந்திப்பது உண்டா? ஹனுமானே, என் கண்களுக்கு மீண்டும் அந்த சியாமநீல மிருதுகாத்ரனுகிற ரகுநந்தனைக் காணப்பெறும் பாக்யம் சீக்கிரம் கிடைக்குமா? (என் பரிபூர்ண லோசனங்களால் அந்த ஸ்யாமசுந்தராங்கதனைப் பார்ப்பதால் எனக்கு ஆனந்தம், சுகம், தாபங்களின் மறைதலால் யேற்படும் குளிர்ச்சி ஆகியவை எல்லாம் மீண்டும் கிடைக்குமா?'') (85)

(அவளுடைய உணர்ச்சியின் மிகுதியால் வார்த்தைகள் தொண்டையில் தடைப்பட்டன. கண்களிலிருந்து கண்ணீர்கள் பெருக்காக அவளுடைய ஸ்தனங்களை நனைத்தன.) அதிவிரக தாபத்தினுல் துடிக்கும் அவளுடைய நெஞ்சு மீண்டும் அவளை கதறச் சொல்லியது. "ஹே நாதா, தாங்கள் என்னை பூர்ண மாக மறந்து விட்டீர்கள்.'' (என் குற்றங்களை நினைத்து இவளுக் குப் பாடம் கற்பிப்பதற்காக சிரத்தையின்றி பராங்முகனுக தாங்கள் இருக்கிறீர்கள்'') என்று சொன்னுள். அவளுடைய சிநேக உள்ளத்தையும், தூய்மையான ஹ்ருதயத்தையும் ஆழ்ந்த அன்பினுல் ஏற்பட்ட விரகதாபங்களையும் கண்ட ஹனுமார் அவளுக்கு மன ஆறுதலை அளிக்கும் வசனங்களை கோமளமான வாணியினுல் வியைமாகச் சொல்ல ஆரம்பித்தார். (86)

"மாதா, தெய்வ வசமாக பிரபுவும் அவருடைய தம்பியும் சௌக்யமாக விருக்கிறர்கள். (உங்களைப்பற்றிய நினைவால் அவர் இளைத்தவராகத் தோன்றுகிறர். சரியாகச் சாப்பிடுகிறதும், நித்திரை செய்வதுமில்லை. ஸ்வப்னத்தில்கூட சீதே, சீதே என்று சொல்லிக்கொண்டும், உடம்பில் அழுக்குப் படிந்தவராகவும் பூச்சி எறும்பு ஊறினுல்கூட தெரிந்துகொள்ள மாட்டாதபடி தன் தேக சௌக்யத்தில் அசிரத்தையாக இருக்கிறர்.) மாதா, உங்களுடைய பிரிவினுல் அதிகமான துக்கத்தை அனுபவிக்கிறர்.

நீங்களும் அவருக்காகத் துக்கப்படுகிறீர்கள். அவருடைய அன்பும் நேசமும் தங்களுடைய ஸ்நேகத்தைவிட இருமடங்கு பெரியதாக விருக்கிறது.'' (87)

''மாதா, வருத்தத்தை அடக்கிக் கொள்ளுங்கள். ரகுபதி உங்களுக்கு ஸந்தேசம் சொல்லி அனுப்பியிருக்கிறார். அவர் சொல்லியபடி நான் சொல்லுகிறேன், கேளும்'', என்று அவர் வினயத்துடன் சொல்லும்போது, ஹனுமாருடைய கண்டம் தழு தழுத்தது. அழுகை பீறிட்டுக்கொண்டு, கண்களில் ஜலம் நிரம்பியவராக, ஜானகியின் முன்பு தோன்றினார். (88)

[தியானம்

அம்மா, பரமேஸ்வரி, கமலாம்பா, லலிதாதேவி, திரிபுர சுந்தரி, செந்தாமரை போன்ற உன் பாதங்களில் அடிக்கடி நமஸ்கரிக்கின்றேன். ஹ்ரீம் என்கிற பீஜாக்ஷரத்துடன் கூடிய புவனேஸ்வரி, மூன்று பதங்கள், ஐந்து ஆறு நான்கு அக்ஷ ரங்கள் கொண்ட பஞ்ச தசாக்ஷர மந்திரமாக விருப்பவளே, நான் உன் தயையின்றி ஒரு க்ஷணமும் வாழமுடியுமோ? பரமேஸ்வரி, நீதானே நாத ரூபமாக விருப்பவள். நீதானே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம், அனுக்ரஹம் திரோதானம் என்கிற ஐந்து கார்யங்களைச் செய்பவள். உன்னை அறிந்து அல்லவோ ஞானிகள் முக்தி அடையமுடியும். பிரும்மா விஷ்ணு மஹேஸ் வரர் ஆகியவர்களால் ஆராதிக்கப்படும் பிரும்மாணி, பார்க்கவி, பைரவி ரூபத்தில் இருக்கும் சீதே, ஸனகர் நாரதர் ஆஞ்சநேயர் போன்ற மஹான்களின் உள்ளத்தில் வசிக்கும் ஹம்ஸப்பேடே, அகஸ்தியர் லோபாமுத்ரை இந்திரன் இந்திராணி சுப்ரமண்யர் வள்ளி தேவயானை இவர்களால் பூஜிக்கப்படும் திரிபுரமாலினி, நீ தானே ஸர்வஸம்க்ஷோபண சக்தி. என் சோகங்களையும் வருத் தங்களையும் போக்கிடும் கமலாம்பா; உன் கடாக்ஷத்தை விரும்பு கிறேன். பரா என்கிற வாக்கு தேவதையே, நீதானே மூகனைக் கவியாக்கினாய். அனங்க குஸுமாத்யஷ்டசக்தி ஸேவிதே, அருணவர்ணே, சீதே, லக்ஷ்மி, அகிலாண்டகோடி பிரும் மாண்ட நாயகி, அஷ்டதள பீஜமாகிய நாராயண மந்திர ஆதாரமே, தயாஸீதா, உன் கருணை கடாக்ஷத்தினால் மஹா நாராயணரின் கிருபையாகிற ஸச்சிதானந்த பரிபூர்ண அனுபவ பிரம்மத்திற்கு, ஸ்ருங்கார ரஸம் கொண்டு பகவானுடன் சேர்ந்து அனுபவிக்கும் ஆசையுள்ள அனுக்ரஹ சீதே, என்னை யும் ஆளாக்குவாய்.]

ஹனுமான்ஜி சொல்ல ஆரம்பித்தார். "சீதே, (என் பிரிய ரங்கநாயகி,) நீ என்னருகே இல்லாமல் சகல பிரபஞ்சமும் அதில் அடங்கியுள்ள வஸ்துக்களும் வெறுப்பாகி விட்டன. [என் அம்ருதமே, உன் பிரிவினுல் நான் சக்தி உத்ஸாஹம் யாவற்றையும் இழந்து, நடைப்பிணமாக ஆகிவிட்டேன். எனக்கு வாழ்வதில் ருசியே இல்லை. ஆதி சக்தி, நீதானே நிகர்ப்ப யோகினி, திரோதான சக்தி.) உனது விரகதாபத்தினுல் வாழும் எனக்கு மரத்தில் பொங்கி எழும் புதிய துளிர்களும் கோமளமான ஹ்ருதயம் கொண்டதும், உன்னைச் சித்திரித்துக் காட்டும் மென்மையான தளிர்களும், அக்னிக்குச் சமமாக உனது பிரிவினுல், தோற்றம் தருவதாகவிருக்கின்றன. நாம் இன்பமாகச் சேர்ந்து ரசிக்க வேண்டிய இரவு காளராத்திரியைப் போல இன்பமற்று பயத்தைத் தருவதாக விருக்கிறது. (ரமண லம்படா, ரதிபிரியே,) சந்திரன் உன் முகத்தைப்போல விருக்கும் குளிர்ச்சியை உடையவன்; நீ எனது பக்கத்தில் இல்லாமையால், உன் நினைவை ஞாபகப்படுதித்தி, அவன் என்னை சூரியனைப்போல தகிக்கிருன். (89)

தாமரைக் காடு சூலங்கள் நிறைந்த முள் வனமாகத் தோன்றுகிறது, என் நாயகி. மேகவர்ஷங்கள் (என் அந்தரங்கமான ரங்கநாயகி,) கொதிக்கும் எண்ணெய்த் தாரைகளைப்போல என் மீது விழுகின்றன. (ரமாதேவி, எனக்கு மனம் ஆறுதல் அளிக்கும் ஹிதை க்ஷிணி) எனக்கு கடும் தாபத்தை விரோதிகளைப் போல அளிக்கின்றன. (ரங்கதயிதே,) சீதளமந்த ஸுகந்த மலயமாருதம் சர்ப்பத்தின் விஷத்துடன் கொதிக்கும் மூச்சுக்காற்றுப்போல என் மீது வீசுகிறதம்மா. (90)

அம்மா, (ராஜராஜேஸ்வரி,) நீயே சொல். நான் யாரிடம் எனது விரஹதாபங்களைச் சொல்லி முறையிடுவேன்? என் மனத்தைத் தேற்றுவதற்கோ, எனக்கு ஆறுதல் சொல்லுவதற்கோ லக்ஷ்மணனைத் தவிர வேறு யாவரும் கிடையாது. அவனிடமும் லஜ்ஜையை விட்டு எவ்வளவு சொல்ல முடியும்? என் மனம் சாந்தியை அடையவில்லை. யாரிடமாவது நான் எனது கஷ்டங்களைச் சொல்லித் தீர்த்து அனுதாபம் பெற்ருல், ஒரு வேளை எனது துக்கம் குறையலாம். ஆனுல் அந்த மனிதனை நான் இன்னும் காணவில்லை. உன்னேடு ரமித்துவிட்டு, உனது ஹ்ருதயபாசத்தை நான் அறிந்து பின்பு, என் துக்கத்தை யாவராலும் அறியமுடியாது. (எனது ஸ்ரீதேவியே. மஹாலக்ஷ்மியே, கமலா உனது கிருபையினுல் அல்லவோ நான்

என்னைக் காப்பாற்றக்கூடும். பத்ரே, பிரியே, பிருந்தே, பங்கஜ வாஸினி, ப்ருத்வி முதல் உன் வரையுள்ள முப்பத்தாறு தத்வங்கள் அதில் அடங்கிய பிரேமை ரஹஸ்யங்கள், குப்தமான காமவிலாஸங்கள், நமக்குள் விளையாடும், ரமிக்கப்படும் பிம்பாதார விளையாட்டுக்களும் உனக்கும் எனக்கும் அந்தரங்கமாகவல்லவோ தெரியும். கஸ்தூரி காந்த திலகம், எனது விசால வக்ஷஸ்தலத்தின் மீது படிந்துள்ள சந்தனப் பூச்சுகளில் அடையாளம் செய்யப்பட்ட உனது திருமுலைத்தடங்கள், அடிக்கடி அடிக்கடி அவிழும் கச்சைகள், அவைகளை நீ வற்புறுத்தி சீரமைக்கும் பிடிவாதமானதும் ரஸமானதுமான) காதலை, பக்தி லஜ்ஜையுள்ள பிரேமையை நானும் நீயுமல்லவோ பூர்ணமாக அறிவோம்.'' (91)

(என் ரங்கஶ்ரீ, பலஶ்ரீ, பிம்பஶ்ரீ, நாதஶ்ரீ,) உனக்குத் தெரியும். எனது பக்தி, உன் மீது கொண்ட என் காதல், என் பத்னிவிரதம், எனது ஸத்ய வசனங்கள். கமலே, உன் மதுர பேச்சுக்களை ஆசையுடன் கேட்க விரும்பும் என் மனம், மதனனுடைய சேஷ்டிதங்களால் உன்னருகே இருக்க விருப்பம் கொண்டதாகவிருக்கிறது. (பாமினி, காமேஸ்வரி, கஞ்சதளாய தாக்ஷி, பத்மலோசனி, உன்னுடைய பத்மகந்தத்தை முகராமல் நான் எவ்வளவு நாள் வாழமுடியும்? நீயே சொல். (நீதானே எனது அகண்டமானதும் ஏகமானதுமான ப்ரேமை ரஸம். கனக பூஷணி, தேவி என்னிடம் கருணை செய்யமாட்டாயா? உன் பிரியனாகிய என்னிடம் வலுவில் தோன்றி பிரகடனப் படுத்திக்கொள்ளமாட்டாயா? ஜ்வாலாமாலினி, சிவே, உன் பிரிவு ஒருக்ஷணம் ஏற்பட்டாலும், ஒரு கல்பகோடி பிரிவுமாதிரி எனக்கு இருக்கிறதே. சரி, இதிலிருந்து நான் உன்மீது கொண்ட ப்ரேமை, அதன் ரஹஸ்யம், மூலம் எல்லாம் உனக்கு சரிவர விளங்கும். மேலும் நம்முடைய ஸ்நேகம் ஸநாதனமானது. உமாசங்கர ஸ்நேக பிரவிருத்திபோல, காடோபகூடமாகவும், அழிவில்லாததாயும், அப்ராகிருதமாகவும் உளது. ஜகதம்பா, நளினாக்ஷி, எனது காமத்துக்கு ஆதார ஸ்வரூபமாயுள்ள லக்ஷ்மி, அப்ஜமுகி, உனது பதாப்ஜங்களை மூன்று லோகங்களிலும் பொதுஜனங்கள் விரும்புகிறமாதிரி, நான் உனது பிரிய தர்சனத்தை விரும்பித் தவம் கிடக்கிறேன். பிராணேஸ்வரி, என்னிடம் நீ சாதிக்கும் மௌனத்திற்கு காரணம் தெரியவில்லை. உன் அடக்கமும், இந்திரிய நிக்ரஹமும், பதி தர்மமும் நியமங்களும், நமக்குள் அத்யந்தப் பிரியத்தினால் ஏற்படும் ஸம்வாதங்

களும், மிக்க மிக்கப் பிரியகரமானவை அல்லவா. அதை நினைத்துக்கொண்டு, விசாலாக்ஷி, ஹ்ரீங்காரிணி, நாதயோகினி, கரத்ருதஸீக ஸாரிகே, லோகபாலினி, ஸர்வபாவனி, திரிபுராம்பிகே, பாலாம்பிகே, ஸதா அகண்டைக ரஸபிரவாஹே, ஸ்ருங்கார நாயகி, எனது ஸந்தாபங்களைப் போக்கும் ராஜ யோகினி, ஸந்ததம் முக்தி கண்டாமணி கோஷாயமான கவாடத்வாரே, அனந்த குருகுஹனல் சேவிக்கப்படும் தாயே, பஞ்சதன் மாத்ரையே, நிரஞ்சனு, அதிரஹஸ்யயோகினி, பரே, உனக்கு சதா ஜயங்கள் ஏற்படட்டும். உன் மங்கள விக்ரஹத் திற்கு சதா ஜயமங்களங்கள் ஏற்படட்டும். ஸௌந்தரி, ராஜ ராஜேஸ்வரி, ஸுவாஸினி, திவாகர ஸீதகிரண பாவகாதி விகாஸ காரிணி, தயாகரி, பரபரா, கிருபையுடன் என் முன் பிரகடனப் படுத்திக்கொள்ளமாட்டாயா?) இதுதான் தேவி (லோக பாவனி,) பிரபுவின் ஸந்தேசம். நான் தங்களுக்கு உள்ளது உள்ளபடி சொல்லிவிட்டேன். (எனக்கு அவருடைய ஸ்த்தியையும் உங்களுடைய நிலையையும் நினைத்துப் பார்க்கும்போது, என் மனம் பிரேமை வெள்ளத்தில் துடித்துக்கொண்டிருக்கிறது'' என்று கண்களில் பிரேமை கண்ணீர்கள் விட்டுக்கொண்டு ஹனுமார் மனப்பூர்வமாக அழுதார்.) சீதை அம்ருதரஸ பிரவாஹத்தால் மனம் தேகம் குளிர ஆஞ்சநேயரைக் கண்டாள்; தன் நாயகனுடைய நினைவு அவளுக்கு வந்தது. அவளும் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். (என் தாய் அழ ஆரம்பித்தாள்.) (92)

கபிஸ்ரேஷ்டரான ஹனுமான் மீண்டும் சொல்ல ஆரம்பித் தார். ''மாதா, (கவலைப்படாதீர்கள். செந்தாமரை இதழ் போன்ற கண்களை உடையவளே,) உங்களுக்கு நல்லகாலம் வந்து விட்டதம்மா. பொறுமையுடன் கொஞ்சகாலம் இருங்கள். ராஜீவலோசனுன ஸ்ரீராமனை நீங்கள் கூடியசீக்கிரம் காண்பீர்கள். என் பிரபு ஸ்ரீராமசந்திரன் தன்னை நம்பினவர்களுக்கு சுகத்தை வாரி அளிப்பதில் வள்ளல். (சூரியனைப்போல் அவர் கருணை மேகங்களை வர்ஷிப்பவர்.) பிரபு ரகுபதியினுடைய பிரபாவங்களை ஸ்மரிப்பதே சுகங்களைத் தருமே. என் வார்த்தைகளில் நம் பிக்கை வையுங்கள் அம்மா. அதைரியத்தை அடையாதீர்கள்.'' (ராமனை நம்பிக் கெட்டுப்போனவன் ஜகத்தில் யாரும் இருக்க முடியாது. எக்காலத்திலும் இருக்கமுடியாது.) (93)

''ராக்ஷஸ கூட்டங்களாகிற விட்டில் பூச்சிகளுக்கு ஸ்ரீரகுபதி யின் பாணக்கூட்டங்கள் அக்னிக்கு சமானமாகவிருக்கப்

போகின்றன. தைரியமாகவிருங்கள். என்வார்த்தைகளை நம்புங்கள். இந்த ராக்ஷஸர்கள் எரிக்கப்பட்டார்கள் என்று நினைத்துக் கொள்ளுங்கள்.'' (பாமினி, என் பிரபு லோகரக்ஷகன், ஸ்வஜனங்களைப் பரிபாலிக்கிறவன். சதாசாரம் கொண்டவன். தனது பந்துக்களை ரக்ஷிக்கிறவன்; ஸகல வர்ணத்தாரையும், அவர்கள் அனுஷ்டிக்கும் வர்ணாஸ்ரம தர்மங்களையும் ரக்ஷிக்கிறவன்; உலகத்தில் மரியாதையாகிற தர்ம வியவஸ்தையே நிலைபெறச் செய்கிறவன். நியாயமான மார்க்கத்தையும் உலகத்தினர் நியாயமான வழியில் செல்லும்படி நியமிக்கிறவன். அவனே மரியாதைகளுக்கு கர்த்தா, காரயிதா, அவனே ஏகபத்னிவிரதமுள்ளபடியால், பிரும்மசரிய விரதமுள்ளவன். புண்ணிய கர்மங்களை உலகத்தில் பரப்புவதற்குத் தெரிந்தவன்.) (94)

"அது மாத்திரமில்லை. தாயே. (அவன் மஹாகிருதக்ஞன். தன்னிடம் பிரியமுள்ள உங்களை நல்ல ஆசாரம் உடையவளாக அறிந்து, உங்களை உபகரிக்கும் வழியை அறிந்தவன். ஆதலால்) தங்களைப்பற்றிய விவரம் அறியக்கூடாமையால் இந்த விஷயத்தில் கால விளம்பம் கொஞ்சம் ஆகிவிட்டது. (ராஜவித்யையாகிற அர்த்த சாஸ்திரத்தில் பெரியோர்களால் பழக்கப்பட்டவனுைபடியால், தனக்கும் உங்களுக்கும் பிறரால் இழைக்கப்பட்ட அவமரியாதையை அரைக்ஷணமும் பொறுக்கமாட்டான்.) ஜானகி தேவி, தாயே, ராமபாணங்கள் என்கிற சூரியன் உதயமானவுடனே ராக்ஷஸசேனைகளாகிற தமஸ் எனப்படும் இருள் கும்பங்கள் நாசமடையப்போகின்றன.'' (95)

"ஜகஜ்ஜனனி, ஜகதம்பா, நான் தங்களை இந்தக்ஷணத்தில் கரையேற்றிக்கொண்டு போய்விடுவேன். ஆனால் பிரபு ஸ்ரீராமசந்திரன் எனக்கு அவ்விதமான ஆக்ஞையைக் கொடுக்கவில்லை. ஆகையால் உறுதியுடன் இருங்கள். சில நாட்களுக்குள் ரகுபதி வானர வீரர்களுடன் இவ்விடம் வந்து சேருவார்.'' (96)

"ராக்ஷஸர்களை வதைத்து, தங்களை மீட்டுக்கொண்டு அயோத்தி செல்வார். அவருடைய புகழ்பெற்ற செய்கைகளை நாரதாதி முனிவர்கள் கானம் செய்வார்கள். தங்களுடைய பாதிவிரத்ய மகிமைகளையும், புருஷோத்தமராகிய ஸ்ரீராமனுடைய தர்மசித்தத்தையும் யாவரும் புகழ்வார்கள்.'' சீதை தொடர்ந்து கேள்வி கேட்டாள். "என் புத்ர, ராக்ஷஸர்கள் மஹா பலம் கொண்டவர்கள். வானர சைன்யங்கள் உன்னைப்போல அல்ப சரீரம் படைத்தவர்களாயிற்றே? எவ்விதம் சண்டையில் ராக்ஷஸ வீரர்களை ஜயிக்க வல்லவர்கள்?'' (97)

"இந்தப் பெரிய சந்தேகத்தை நீ நிவர்த்திசெய். எனக்கு மிக்க கவலையாகவிருக்கிறது. லக்ஷ்மிவானுகிற ஹனுமான் இந்த வார்த்தைகளைக் கேட்டதும், கருத்த கண்களுள்ள சீதையின் பயத்தைப் போக்குவதற்காக தன்னுடைய நிஜஸ்வரூபமாகிற காமரூபத்தை மிக்க தயையுடன் பிரகடனப்படுத்தினர். தங்கபர்வதமாகிற மேருபர்வதம்போல் உருவத்துடன் கூடியவராகவும், அத்யந்த விசாலமானதும், அக்னியின் காந்தியுடன் கூடியதும், பருத்த பர்வதாகார சரீரத்துடன் விஸ்வ சக்தி வாய்ந்த ஸ்வரூபத்துடன், வாயுபகவானுடைய பயங்கரரூபமுள்ள ஔரஸபுத்ரனை, பத்மபத்ர விசாலாக்ஷியான ஜனகாத்மஜா கண்டாள். அந்த பீமரூபத்தையும், கர்ஜனைகளையும் கேட்ட சத்ருக்கள் யுத்தத்தில் சண்டைசெய்யாமலே உயிரை விட்டுவிடுவார்கள். (அக்னி சூர்யன் வாயு ஆகியவர்களின் ஆச்சர்யமான உக்ரமும் தேஜஸ்ஸும் பலத்தையும் ஒருங்கே சீதை ஹனுமாரின் உருவில் கண்டாள்.) (98)

அந்த விஸ்வரூபத்தைக் கண்டதும் சீதையின் நம்பிக்கை வளர ஆரம்பித்தது. சந்தேகங்கள் அழிந்தன. ஹனுமான்ஜியும் மீண்டும் தனது ஸ்வயரூபத்தை எடுத்துக்கொண்டார். (அப்பேற்பட்ட ஹனுமார் என் குருநாதர், என் கிருபாளு, பாகு பல பராக்ரமன், என்னை ஸர்வ பயங்களிலிருந்தும் ஸர்வ ஆபத்துக்களிலிருந்தும் தயையுடன் காப்பாற்றவேண்டும்.) (99)

[தியானம்

ஹே லக்ஷ்மீ, மஹாதுர்க்கே, ஸர்வ வியாதி நாஸினி, ஸர்வ ஆபத் நிவாரணி, ஸர்வசக்தி பிரதாயிணி, ஸர்வ சௌபாக்யதாயினி, சீதே, உன் திருஷ்டிபதம் ராமனிடமும், உன் மனோவீக்ஷண்யம் சேதனுசேதனங்களாகிற பிரபஞ்சத்திலுமிருக்கிறது. உன் நாயகனுகிற ராமனோ பிரபஞ்சத்தில் வீக்ஷணயமும், தர்மத்தில் நிலைத்த திருஷ்டிபதமும் உனது ஸ்வரூபத்தில் மனத்துடனுமிருக்கிறுன். அவருக்கு கர்மமாகிற பிரபஞ்சமும் தர்மமாகிற பக்தியும், உனது ஸ்வரூபமாகிற கருணையும் சேர்ந்து உன்னுடன் லீலாகரணங்களையும் போகோபகரணங்களையும் செய்ய அவைகள் ஹேதுவாகவிருக்கின்றன. ஆனுல் தேவி, உன்னுடைய ஸ்வரூபமோ ஞானமயமாகவும், கர்மமயமாகவும், கருணைமயமாகவுமிருக்கிறது. யாரெனக்கு நின் பாதமே சரணுகதி தந்தொழிந்தாய், உனக்கு ஒரு கைம்மாறு நான் ஒன்றிலேன் எனது ஆவியும்

உனதே, தெய்வ நாயகனே, உன் திருவடிகளை உபாயமாகவும் பலனாகவும் அளிக்கிற உறுதியை எனக்கு இயற்கையான ஸ்வபாவ மாகும்படி கொடுத்தருளினாய். இந்த ஞானமயத்தோடு விளங்கிய சீதை, இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழ் இருத்துமம்மானே, அசைவில் அமரர் தலைவர் தலைவா, ஆதிப் பெருமூர்த்தி, இவ்வாத்மா உனக்கு அடிமை என்று என்னை அங்கீகரிக்கச் செய்து உன் திருவடித்தாமரைகளை அடைவதையே எனக்கு சுகமாகவும், பிரிவதையே துக்கமாகவும் ஆக்கினவனே; உபாயபூதனான ராமனை, "மாம் ஏகம் சரணம் வ்ரஜ," என்று காட்டிய உபாயபூதனான நாராயணனை, என் உணர்வினுள்ளே யிருத்தினன் அதுவும் அவனதின் இன்னருளே, உணர்வுமுயிரு முடம்பும் மற்றுலப்பினவும் பழுதேயாம், என்கிறபடி ஸித்த உபாயத்தை ஸாத்யோபாயமாகப் பண்ணுவது, அம்மா உனது கருணையே இன்றி வேறு எது இருக்கமுடியும்? ஸம்பந்த ஞான மாகிற கர்ம பக்தி விசேஷங்களும், ஸித்த ஸாத்ய உபாய பிரதிபாத்யமாகிற கருணையும், உனது ஞான விசேஷமாகிற பரமாத்மா, பகவான், ஞானசக்தி பலம் தேஜஸ் ஐஸ்வர்யவீர்ய ஸம்பன்னரான ஈஸ்வரன், ஸமஸ்த பூதங்களிலும் பிரபஞ்சங் களிலும் நித்ய வாஸம் செய்யும் வாஸுதேவன், ப்ரகிருதி, முக்குணங்கள் ஆகியவைகளின் கார்யங்கள், தோஷங்கள் யாவற்றிற்கும் விலக்ஷணமாகவும், கல்யாண குணங்களின் குணாத்மனாகவும், ஸ்வசங்கல்ப மாத்திரத்தில் உன்னுடன்கூடச் சேர்ந்து ஸகல பிரபஞ்சங்களுக்கும் மங்களங்களை உண்டுபண் ணும் ஸர்வேஸ்வரன், ஸர்வத்ருக், அப்பேற்பட்ட பரம்பொரு ளுக்கு, மஹாலக்ஷ்மி அம்மா, நீ சுத்தஸத்வமாகவும் விமலையாக வும், நிர்மலமாகவும், குற்றமற்றவளாகவும், பரமாகவும், ஞானி களின் தத்வஞான மென்றும், முக்தாத்மாக்கள் சொல்லும் மோக்ஷம் என்றும், என்னைப்போல பதிதர்கள் பரமபாவன ரூபம் என்றும் சொல்லும்படி உன்னை ஏகரூபமாக பார்க்கிறார்கள். அகிஞ்சனான நான், திரௌபதி, நளன், தமயந்தி, ராக்ஷஸிகள், விபீஷணன், க்ஷத்திரபந்து, முசுகுந்தன், கஜேந்திரன், பாண்டவர்கள், தேவர்கள், ஸுமுகன் என்கிற நாகன், திரிசங்கு, பிரஹ்லாதன், சுனஸ்சேபன், வேடன், புருக்கள், காகாசுரன் காளிங்கன், சரணாகதம் என்கிற பிரபத்தியோகத்தால் உன்னை அடைந்தல்லவோ, உன் கருணையை நம்பி அல்லவோ, பகவான் பலசித்தமான மாசுசஃ என்று ஸ்ரீபிரஸாதமாக அருளினார். ஆகவே நான் செய்வது என்ன உபாயம் என்று தெரியாமல் உனது பாதங்

களையே பற்றினேன். கோவிந்தனை மாதவனை அன்றி வேறொருவனை நான் பூஜிக்கமாட்டேன். அவனை, தேவி, உன்னுடைய வாத்ஸல்யத்தினால் அடைய விரும்புகிறேன். பக்தியா, பரமயாவாபி, பிரபத்யாவா மஹாமதே, என்கிறபடி சரணாகதி செய்த எனது பிரபத்தியை ஸ்வீகரித்துக்கொள். எம்பெருமானுடைய ஸர்வசேஷித்வமும், ஸர்வ கல்யாண குணங்களும், குணவிக்ரஹம்கொண்ட திருமேனியும் ஒருபுறம் இருக்கட்டும். ஸர்வ ஈஸ்வரி, ஸர்வபூதானமியம் பகவதஃப்ரியா ஸம்ஸ்ரிதத்ராண தீக்ஷாயாம் என்கிறபடி, ஆஸ்ரிதர்களைக் காக்கும் விஷயத்தில் ஸஹதர்மசாரிஸ்மருதா, உடன் இருந்து எந்த தர்மத்தையும் செய்பவளாக நீயும் பிரமாணங்களால் சொல்லப்படுகிறாய். ஆகையால் சீதே, மஹாலக்ஷ்மி, ரங்கதயிதே, வேங்கடநாயகி, அலர்மேல்மங்கையே, பத்மாஸனி, வேதவல்லி, காஞ்சிகாமகோடி தயிதே, ஏகரூபமாகிறதும், உன்னுடன் கூடியதுமான ஐக்ய பிரும்மம் எவ்விதம் சேதனாசேதன வஸ்துக்களை ஸூக்ஷ்மமாக தரித்திருக்கிறதோ, அதுபோல நீயும் பகவானும் உபாஸிக்க வேண்டியவர்களாகவும், ப்ரபாப்ரபாவதோ, எப்படி ஒன்றாகச் சொன்னால் மற்றொன்றுக்கும் ஸம்பந்தம் வெளியாகின்றதோ, அதுபோலவும், உன்னை சம்சார ஆர்ணவதாரிணி என்று ஸ்மிருதிகளும் சொல்லுகின்றன. ஸாத்வதாம்பதியே, த்வய மந்திரத்தில் சேஷிகளாகிய உங்கள் இருவர்களிடத்திலும் ஆஞ்சநேயர்போல கைங்கர்யம் செய்திடல் எவ்விதம் ஏற்றுக் கொள்ளப்பட்டதோ அதுபோல நான் செய்யும் பிரபத்திகளை ஏற்று. ரெங்கநாச்சியாரே, ஸ்ரீரங்கநாதரே, அலர்மேல்மங்கை உறை மார்பா, உங்கள் இருவர்களுடைய சேர்க்கையாகிற மாதவத்வம், ஸ்ரீபதித்வம் என்னை ஆட்கொள்ளட்டும். அனாலோசித விசேஷ அசேஷ லோகசரண்ய, ரங்கதயிதே, சீதாராமா என்னைக் காப்பாற்று.]

"மாதா, தயவு செய்து கேளுங்கள். சாகா மிருகங்களாகிய வானரர்களில் அநேகர் புத்தி பலத்துடன் விக்ரமம் கொண்டவர்களாகவும் விசாலமான அறிவுடையவர்களாகவுமிருக்கிறார்கள். ஆனால் இவர்களைக் காட்டிலும் பிரபுவின் பிரதாபங்கள் இன்னும் அதிகம். எங்கேயாவது சிறிய அற்ப பலமுள்ள ஸர்ப்பம் கருடனை முழுங்கி விடக்கூடுமா?" (100)

"பக்தி, பிரதாபங்கள், தேஜஸ் பலம் இவைகளில் ராமனுடைய விசேஷங்களை ஹனுமார் மஹாவினயத்துடன் சொல்லக் கேட்க, சீதை மனத்தில் ஸந்தோஷமடைந்தாள். இவன்

நிஜமாகவே ராமதாஸன் என்று நம்பினுள். (இவன் பரம உபகாரி. ராமவிஸ்வாசம் கொண்டவன். என்னை துக்கங்களி லிருந்து கரையேற்றியவன்.) இவனுக்கு நான் சரியாக வெகு மானம் செய்ய வேண்டும்.'' என்று சீதை தனக்குள் நினைத்து, ஹனுமாரை ஆசீர்வாதங்களைச் செய்து, மங்களகரமாக வாழ்த்தி, புகழ் உரைத்தாள். ''ஹனுமானே, சீலவிநய நடத்தை, புத்தி, உதாரஹ்ருதயம், அமித பலம் எல்லாவற்றிற்கும் நீ ஸதா பொக்கிஷமாக விளங்கக்கடவாய்.'' (101)

''புத்ர, உனக்கு கிழத்தனம் வராது. சிரஞ்சீவியாக வாழ்வாய். ஸமஸ்த கல்யாண குணங்களுக்குச் சிறந்த பொக்கிஷமாகவும், அதைக் கண்டு ரகுநாயகன் உன்னிடம் பரி பூர்ண கிருபையுடன் அனுக்ரஹம் செய்வார்.'' ''பிரபு ரகுநாயகன் உனக்கு ஸதாபரிபூர்ண கிருபையுடன் அனுக்ரஹம் செய்வார்,'' என்கிற மங்கள ஆசீர்வாதத்தைப் பெரிய பிராட்டி அனுக்ரஹம் செய்ததைக் கண்டு, ஹனுமார் தனது கவலைகள் எல்லாம் தீர்ந்து, (பரநியாஸம் என்கிற பிரபத்தி யோகம் செய்த வைஷ்ணவன் ஸதாசாரியர்களால் உபதேசிக்கப்பட்டு நிர்பரனுகவும், பகவத் பிரேமையுடனும் கிருதக்ஞனுகவும் எவ்விதம் விளங்குவானே, அதுபோல) ஆஞ்சநேயர் நிர்பரனுகவும், சுகம் சாந்தி உள்ளவ ராகவும் (ராமபக்தி ஸாம்ராஜ்யத்தில் அக்ரகண்யராகவும்) விளங்கினுர். (102)

(அவருடைய மனம் அதிசந்தோஷத்தினுல் துடித்தது.) மஹாகிருபாளு, அந்த வானர ஸ்ரேஷ்டர் அடிக்கடி அடிக்கடி சீதையின் பாத சரணங்களில் விழுந்து நமஸ்கரிப்பவராக காணப்பட்டார். (கைகளை உயரத் தூக்கிக் கொண்டு, சீதையை பிரதக்ஷிணம் செய்தார். மங்களம் மங்களாநாம் ஸர்வலோக சரண்யரான பெருமாள் கைவிடினும் பிராட்டி நம்மைக் காப்பாற்றுவாள், ப்ரணிபாத ப்ரஸன்னுஹி மைதிலி ஜனகாத் மஜா, அலமேஷாபரித்ராதும், என்கிறபடி கருணையும் ஸாமர்த் தியமும் வாய்ந்த சரண்யை எனப்படும் சீதை எனக்கு அசரண: புகலில்லாதவனுக்கும், தாயாராகிய திருவே ஸித்தோபாயம், புருஷகார பூதையுமாய், விசேஷ அன்பு கொண்டவளாக காணப் படுகிருள். அவளுடைய ஸம்பந்தத்தால் என் குணங்களையும் பெருக்குகிருள். என்னிடம் ஸ்ரேயோ மூர்த்தியாக (நலமே வடிவா கக் கொண்ட) கற்பகமாக விளங்குகிருள். இவளையும் அல்லவோ நான் சரணம் அடைவதற்கு, என்னை பிரபு ஸ்ரீராமன், இவ்விடம் தன் காரிய வியாஜமாக இக்கார்யத்தில் நியமித்தார்.)

அவ்வித மனப் பெருக்குடன்கூடிய ஆஞ்சநேயர் பதில் சொல்ல ஆரம்பித்தார். "அம்மா, தங்கள் கிருபையினுல் என் ஜன்மம் இன்று சாபல்யமடைந்தது. (நான் தங்கள் கிருபையினுல் கிருதார்த்தனுக ஆக்கப்பட்டேன்.) தங்களுடைய ஔதார்யமும் மங்கள ஆசீர்வாதங்களும் எனக்கு அமோகமாக ராமனுடைய திருவருளால் கிடைக்கப் பெற்றன. தங்களுடைய வசனங்களும் ஆசீர்வாதங்களும் ஸத்யமானவை, இது உலக பிரஸித்தமானது. (103)

"மாதா, நான் ஒரு விக்ஞாபனம் செய்கிறேன். தயவு செய்து அங்கீகரிக்கவேண்டும். இந்த அழகான விருக்ஷங்கள் மதுரமான பழங்களைத் தாங்கிக்கொண்டு நிற்கின்றன. எனக்கு பசியாகவிருக்கிறது. உங்களுடைய உத்தரவு வேண்டும்" என்று சொன்னுர். இதைக்கேட்ட சீதை "சரி, வேணும்கிறதை சாப்பிடு, குழந்தாய். சீக்கிரம் ரஸம் பொருந்திய பழங்களையும் (பாயாஸான்னம் போல) தித்திக்கும் ரஸங்களையும் பானம் செய். ராக்ஷஸர்கள் இந்த வனத்தைக் காத்துக்கொண்டிருக்கிறுர்கள். அவர்கள் சண்டைசெய்ய வந்துவிடுவார்கள்." (104)

"மாதா, தாங்கள் மனத்தில் சுகத்தை அடைந்து எனக்கு உத்தரவு கொடுத்தால் போதும். அதன் பிறகு எனக்கு அவர்களிடம் பயம் கிடையாது." (105)

ஜானகி ஹனுமான்ஜியின் புத்தி பலத்தையும், நிபுணத்வத்தையும் கண்டு சந்தோஷமுள்ளவளாகச் சொன்னுள். "புத்ர, சாப்பிடு. ரகுபதியின் சரணங்களை ஹ்ருதயத்தில் தரித்துக் கொண்டு மதுரமான பழங்களை (பாயாஸான்னம்போல ருசியுள்ளவைகளைச்) சாப்பிடு." (106)

ஹனுமான் சீதையை நமஸ்கரித்துவிட்டு அந்தவனத்தை விட்டு வெளியில் வந்தார். பழங்களைச் சாப்பிட்டார். அதன் பிறகு விருக்ஷங்களை ஒடிக்க ஆரம்பித்தார். அங்கே அநேக யுத்த வீரர்கள் இருந்தார்கள். அவர்களில் சிலரை அடித்தார். சிலரைக்கொன்றுர். அலறி அடித்துக்கொண்டு சில வீரர்கள் ராவணனிடம் சென்று முறையிட்டார்கள். (107)

[தியானம்

ராமாசீதா, சீதாலக்ஷ்மி, மஹாநாராயணு, உங்களுடைய ரஹஸ்யங்கள்தான் என்ன? ஆஞ்சநேயர் சீதையைக் கண்ட பின்பு எந்த மாதிரி தனது அனுபவங்களை உணர்ந்தார்? முதலில் திருமந்திரமாகிய ராமநாராயண மந்திரங்களையும்,

பிறகு தேவியினுடைய மந்திரத்தையும் அடைந்தார். அதன் பிறகு ஸர்வகாலங்களிலும், ராமசீதா, லக்ஷ்மிநாராயண பதங்களை சரணபாதங்களாக அறிந்தார். மூன்ருவதாக கிருஷ்ணன் தேர்த்தட்டில் மாம் ஏகம் சரணம் வ்ர்ஜ, என்கிறபடி "ஏக" பதத்தின் பரத்வ ஸௌலப்யாதி குணவிசேஷங்களை உடைய எம்பெருமான் நாராயணனை, மஹாஆசார்யரை, அவருடைய தாத்பர்யத்தை உணர்ந்தார். அதுபோல நாராயணு, சேதனு சேதனங்கள் நாரபதத்தால் அறியப்படுகிறது. சேதனம் என்கிறது நம்மாழ்வாரையும், அசேதனம் பரத்வாதிகளால் நாராயணன் பரிகிரஹித்த திவ்யமங்கள தேஹங்களையும் சொல்லு கிறதென்று பூர்வாசாரியர்கள் சொல்லுவார்கள். அதுமாத்திர மின்றி ஆனந்தம், சேதன அசேதனங்களுக்கும் உண்டு என்பார்கள். "அரிவாருயிராளுய்" என்கிறபடி ஆழ்வாரை ஈஸ்வரனுக்கு திருமேனியாகவும், அப்பேற்பட்ட சரீரஆத்மா சம்பந்தம்போல, ஆழ்வாருக்கும் நம்போன்றவர்களுக்கும் ஏற்பட்ட ஸம்பந்தம் த்வயத்திற்கு தாத்பர்யமான நாராயண சரண பதங்களே. ஹே ராமாசீதா, உன்னைத்தேடி அலைந்து திரிய எண்ணமுடையவர்கள் முதலில் உன் பக்தர்கள் மூலமாக உங்களை அடைகிருர்கள். அதன் பிறகும்கூட அந்த பக்தர் களின் ஸம்பந்தத்திஞல் உங்கள் ஞானத்தையும், பேறு ஆகிற ஆனந்தத்தையும் நிலைக்கச் செய்கிருர்கள். நம்மாழ்வாரை ஈஸ்வரனுக்கு திருவடிகளாக அனுஸந்திக்கும் வைஷ்ணவர்கள், அந்த திருவடிகளாகிய ஆழ்வாரையே உபாயமாக அனுஸந்தித்து பற்றவேண்டும் என்று சொல்லுகிருர்கள். அன்று தேர்தட்டில் பார்த்தஸாரதி "மாம்" என்று தன்னைச் சுட்டிக்காட்டி, ஏகம் என்கிற ஞானமுத்ரை உருவமாய் ஆசார்யபதத்தை ஏறிட்டுக் கொண்டிருந்தார். அர்ஜுனனுக்கு அன்று கிருஷ்ணன் உபாயமாகவும் உபேயமாகவும் விளங்கினுர். அதுபோல நாம் இன்று நம்மாழ்வாரை நாராயணருக்கும், ஆஞ்நேயரை சீதா ராமனுக்கும் உபாயமாகப் பற்றவேண்டும். ஆசார்யர்களான நம்மாழ்வாரை, ஹனுமாரைப் பற்றும்போது அவர்களுடைய சரணங்களைப் பற்றவேண்டுதையாளுலும், அவர் சரணங்களைப் பற்றிய ராமானுஜர் ஸம்பந்தம் பெற்ற, துளசிதாஸர் தியாகராஜர் ஸம்பந்தம் பெற்ற, எனக்கு அவர்களே ஆத்ம உஜ்ஜீவனம். ஆஞ்சநேயா, நம்மாழ்வாரே, உங்கள் இருவர்களையும் அன்று மதுரகவியாழ்வார் கண்ணிநுண் சிறுத்தாம்பில் சொல்லியபடி, அருள்கொண்டு ஆயிரம் என்கிற தமிழ் பாடினுன், அருள்

கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே, மிக்கவேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப்பாடி என் நெஞ்சினுள் நிறுத்தினன், தக்கசீர்சடகோபன் என் நம்பிக்கு, ஆட்டிக்கக் காதல் அடிமைப் பயனென்றே, என்றும்; பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த பாமன்னுமாறனடி பணிந்துய்ந்தவன், பல்கலை யோர் தாம் மன்வைந்த விராமானுஜன் சரணரவிந்தம் நாம் மன்னிவாழ, நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே, என்கிறபடி, ஆஞ்சநேயா, உன்னை துளசிதாஸர், கம்பன், தியாகராஜர் போன்ற ராமபக்தர்களை முன்னிட்டு, சீதாராம தியானத்தினால், நமஸ்காரம் செய்து, உன்னுடைய குஞ்சித சரணபாதங்களில் என்மதியை வைத்தேன். எனது உள்ளத்தை வைத்தேன். கோயில்கொள் தெய்வமெல்லாந்தொழ, வைகுந்தம் என்று கொண்டுகோயில் கொள், கற்பகச்சோலையே, நெடுமாற் கடிமை செய்வேன், என்கொடும் வினைகள் அகல, அவன் அடியார் அடியே கூடுவேன், கண்ணன், ராமன் அல்லால் இவ்வுலகம் இல்லை என்று கண்டுகொண்ட பக்தகோடிகளின் சரண்புகுவேன். நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு உங்கள் தாமரைக் கண்களால் நோக்கல்பெற்று தொழுது மாமலர் தூவி, நீர்பால் சுடர் தூபம்கொண்டு, பாம்பணை பள்ளியாய் விளங்கும் 'லக்ஷ்மிநாராயணா, சீதாராமா, உங்கள் தாள்களைத்தவிர ஒன்றும் அறியேனே.)

"ஹே நாத ஒரு பெரிய குரங்கு லங்கைக்கு வந்திருக்கிறது. அது அசோகவனத்தின் செடிகொடிகளை ஒடித்து நாசமாக்கு கிறது. பழங்களைச் சாப்பிடுகிறது. விருக்ஷங்களைப் பெயர்த்து எறிகிறது. காவற்காரர்களை அடித்து பூமியில் தள்ளி ஓடச் செய்யும்படி செய்கிறது." (108)

இந்த வார்த்தைகளைக்கேட்ட ராவணனுக்கு கோபம் வந்தது. அநேக யுத்த வீரர்களை அவன் அனுப்பினான். அவர்களைக் கண்டதும் ஹனுமார் கர்ஜனை செய்து யுத்தத்திற்கு அழைத்தார். சிலபேர்களைக் கொன்றார். அதைக்கண்டதும் மற்றவர்கள் பயந்துகொண்டு ஓட ஆரம்பித்தார்கள். (109)

அதன்பிறகு ராவணன் தன் புத்திரனாகிற அக்ஷயகுமாரனை அனுப்பினான். அவன் ஸ்ரேஷ்டமான யுத்த வீரர்களுடன் ஹனுமாரிடம் சண்டை செய்வதற்குச் சென்றான். அவர்கள் வருவதை அறிந்து, ஹனுமார் ஒரு பெரிய விருக்ஷத்தைப் பிடுங்கி அவர்கள்மேல் எறிந்து அவர்களைக் கொன்றார்.

அதன்பிறகு சந்தோஷத்தினுல் மஹாத்வனிகொண்டு கர்ஜனை செய்தார். (110)

ஹனுமார் சிலர்களைக் கொன்ருர். சிலபேர்களை அடித்துக் காயமாக்கினுர். இன்னும் சிலபேர்களைப் பிடித்துச் சுழற்றினுர். தரையிலும் ஆகாயத்திலும் வீசி எறிந்தார். அவர்களில் தப்பின சிலபேர்கள் ராவணனிடம் சென்று நடந்ததைக் கூறி ''பிரபு, இந்த வானரம் மஹத்தான பலம் கொண்டதாக விருக்கிறது'' என்று நிவேதனம் செய்தார்கள். (ஆஞ்சநேயா, நீதான் என்னை சதா ரக்ஷிக்கவேண்டும்.) (110)

[தியானம்

ராமா சீதா, நாராயணு, லக்ஷ்மி பிரியா, என்னிடம் தோஷங்கள் அதிகம் இருக்கின்றன. நான் உங்களைத் தவிர மற்றவர்களைத் தெய்வமாக உபாஸிக்கிறேன், என் மனதும் குற்றமுள்ளது, என்று நீயாக கற்பிக்கிற தோஷங்களால் என்னுடன் பேசமாட்டேனென்கிருயா? நான் நிஜமாகவே மஹத்தான பாபத்தைச் செய்திருக்கவேண்டும். ராமா, உன்னைத்தானே பெரிதாக மதித்து, நாரதர், ஆஞ்சநேயர், தியாகராஜர், துளஸிதாஸர் ஆகியவர்களால் உபதேசிக்கப்பெற்று, அகஸ்திய வசனங்களாலும், அர்ஜுனனுடைய விஸ்வாசத்துடனும் ஆராதித்தேனே. சீதே, தயாபரி, கருணுரஸபூர்ண கடாக்ஷி, நீதானே என்னையும் பார்த்துக்கொண்டிருக்கிருய். ஸர்வவியாபகமான இந்த ரஞ்சிதம் செய்யும் ராமன், கிருஷ்ணன் என் கண்களுக்கு மாத்திரம் தோன்ருமல் ஜாரசோரனுகவிருக்கிருனே. கமலாம்பா, ஸர்வார்த்த ஸித்திப்ரதா, என்று உன்னைக் கூப்பிடுகிருர்களே, மங்களத்தைச் செய்யக்கூடிய பஹிர்தசார சக்ரத்தில் இருப்பவளே, பாவராக தாளங்களுடன் நாதரூபமாக விருப்பவளே, அபேத நித்ய சுத்த புத்த முக்த ஸச்சிதானந்தமய பரமாத்வைதஸ்பூர்த்தே, மூலாதாரத்திலிருந்து ஒன்பது ஆதாரங்களில் சஞ்சரிக்கின்ற பத்து விதமான கமக சப்தங்களின் வேறுபாட்டை அறிகின்ற நாதயோகிகளான தீக்ஷதர், ஸ்யாமா சாஸ்திரி, நாரத தியாகராஜ ஆஞ்சநேயர் போன்ற யோகிகளின் சமூஹத்தைக் காப்பவளே, நாத பிரும்மமய சச்சிதாநந்த ஸ்வரூபிணி, என்னையும் எனக்குள்ளதையும் ரக்ஷிக்கமாட்டாயா? ஆதிசக்தியாகிற பராசக்தியே, மாயா, காரிய காரணமாக பல விநோதங்களைச் செய்யும் ஆனந்த பைரவி, உன் கடாக்ஷ கண் பார்வைகளைச் செலுத்தமாட்டாயா? கமலாம்பிகே, உன்னையும் உனது

மனத்தை அபஹரித்த உன் பதியையும் ஸதா எல்லாவற்றையும் நினைத்து, உங்களுக்கு மேல் பரம் ஒன்றுமில்லை என்று மனோ பாவத்துடன் பாவராக தாளத்துடன் கீர்த்தனம் செய்யும் எனக்கு எவ்வளவு காலம் பொறுத்து ஸம்பாஷிப்பீர்கள்? மிருதசஞ்சீவினி, சுபமானவளே, சந்திரிகையே, ஸர்வதோமுகி, ஸர்வோத்தமரான ராகவனுடைய மித்ரன் என்று தெரிந்தும்கூட, மைதிலி, என்னிடம் பராங்முகமாகவிருக்கலாமா? நீங்கள்தானே என் பிரிய தர்சனர்கள். மாதவி, நித்யகல்யாணி, கமலா, தயை செய் அம்மா. உன் பதியை எனக்குக் காட்டிக்கொடு.)

புத்ரனாகிற அக்ஷய குமாரன் வதம் செய்யப்பட்டதை அறிந்த ராவணன் இதுவரை தலைமேலிருந்த வானரம் தனது நெஞ்சின் மேல் கால்வைத்து அவனுடைய புராணமான புகழ் கீர்த்திகளைப் பானம் செய்வதுபோலத் தோன்றியது. எத்தனை காலம் செய்த தவத்தின் பலன் தன் கண்முன்பே அழிய ஆரம்பமாயிற்று. அவனுக்கு வருத்தம் வரத் தொடங்கியது. சிம்மாஸனத்திலிருந்து வருத்தத்துடன் ராவணன் எழுந்திருந்தான். பலவானானவனும், தனது புத்ரனுமாகிற மேகநாதனைப் பார்த்து ராவணன் கட்டளையிட்டான், ''புத்ர, நீபோய், அந்த வானரத்தைக் கொன்று விடாமல், கட்டி இழுத்துக்கொண்டுவா. இந்த வானரம் எங்கிருந்து வந்திருக்கிறது என்று நாம் பார்க்கலாம்.'' (111)

அதுளித பலமுள்ள இந்திரஜித் (இந்திரனை ஜயித்தவன்) பிதாவின் கட்டளையைப் பெற்றுப் புறப்பட்டான். தன் தம்பியைக் கொன்றுவிட்ட காரணத்தால் அதிக்ரோதமடைந்திருந்தான். கபிஸ்ரேஷ்டரான ஹனுமார் தன்னுடன் யுத்தம் செய்வதற்காக பயங்கரமாயுள்ள யுத்தவீரனான மேகநாதன் வந்திருப்பதை அறிந்து, அவனுக்கும் பயத்தை உண்டுபண்ணுவதற்கு தன்னுடைய கோரமான பற்களைக் காட்டிக்கொண்டு, கர்ஜனை செய்துகொண்டும் அவன்மீது தாவினார். (112)

ஒரு பெரிய விசாலமான விருக்ஷத்தைப் பிடுங்கினார். அதை லங்கேச ராஜாவின் குமாரனான இந்திரஜித்தின்மீது எறிந்தார். ரதத்தை உடைத்தார். அவனைக் கீழே தள்ளினார். அவனுக்கு சகாயமாகவிருந்த யுத்தவீரர்களை ஒவ்வொருவராகப் பிடித்து தன் உடம்பில்த் வைத்து தேய்த்துக் கொன்றார். (113)

அதற்குப் பின் ஹனுமான் மேகநாதனுடன் சண்டை செய்ய ஆரம்பித்தார். அவர்கள் இருவர்களும் சண்டை செய்வதைப் பார்த்தால் இரு கஜராஜர்கள் பரஸ்பரம் சண்டை செய்வது போல விருந்தது. தனது முஷ்டியினால் அவனை ஒரு குத்து விட்டு

அடித்து, பக்கத்திலிருந்த மரத்தின் மேலே தாவினர். மேகநாதன் அந்த குத்துப் பொறுக்கமுடியாமல் ஒரு க்ஷணநேரம் மூர்ச்சையாக விருந்தான். (114)

மூர்ச்சை தெளிந்து அவன் எழுந்திருந்தான். பலவித மாயைகளைச் செய்து அவன் யுத்தம் செய்தான். அவைகளினால் பவன புத்ரனாகிற ஆஞ்சநேயரை அவனால் ஜயிக்க முடியவில்லை. (115)

கடைசியில் பிரும்மாஸ்திரத்தை இந்திரஜித் பிரயோகம் செய்தான். அப்போது ஹனுமார் மனத்திற்குள் ஆலோசனை செய்தார். "நான் பிரும்மாஸ்திரத்தை மதிக்கவேண்டும். இல்லாவிடில் அதன் மகிமையும் அபாரமான சக்தி தேஜஸ்ஸும் அழிந்துவிடும்." (116)

இந்திரஜித் அபாரமான பிரம்மாஸ்த்ரத்தை ஏவி, ஹனுமாரை விருக்ஷத்திலிருந்து கீழே தள்ளி, பிடிக்க விரும்பினான். ஹனுமார் கீழே விழும்போது அநேக ராக்ஷஸர்களின்மேல் விழுந்து அவர்களைக் கொன்றார். கபிஸ்ரேஷ்டர் மூர்ச்சித்திருப்பதைக் கண்டு, இந்திரஜித் அவரை மீண்டும் நாகபாசத்தினால் கட்டினான். (117)

சிவன் பார்வதியிடம் சொல்லுகிறார், "பவானி, ராமனுடைய திவ்ய நாமத்தை ஒரு தடவை மனப்பூர்வமாகச் சொன்னால், (அவனை ஒருக்கால் சரணம் என்று அடைந்தால்,) பவபந்தங்களாகிற அனாதிகாலமாக வரும் கர்ம பிரவாஹங்கள் ஸம்சார பந்தங்கள் எல்லாம் போகிவிடுமே. ஞானிகள் எவனை அடிக்கடி சொல்லி தங்கள் பந்தங்களை அறுத்துக்கொள்கிறார்களோ, அந்த பிரபு ராமனுடைய தூதன், ராமனுடைய பக்தன் மீண்டும் கட்டப்படுவானோ? அவனுக்கு பந்தங்கள்தான் ஏற்படுமோ? (அப்பேற்பட்ட நித்ய சுத்த புத்த முக்த சச்சிதானந்தமய பரமாத்மாவின் தோற்றத்தை ஸ்வரூபமாகக் கொண்டவரும் சிவ சக்தியின் ஐக்ய ஸ்வரூபமாகிற என் பிரபு ஆஞ்சநேயர் ராமசீதா கிருபாபாத்ரமாகிய என் ஆசார்யர், தியாகராஜ துளசிதாஸ நாரதாதிகளால் நாதரூபமாக உபாஸிக்கப்படும் நாதபிரும்ம யோகியாகிற) ஹனுமார் தனது ஸ்வய இச்சையினால் (பிரும்மாஸ்திரத்திற்கும் படைப்பு கடவுளான பிரும்மாவிற்கும் மரியாதை செய்யவேண்டும் என்கிற எண்ணமுள்ளவராகவும்) பிரபுவின் காரியத்தை நிறைவேற்றுவதற்கு தன்னை கட்டுப்படுத்திக் கொண்டார்." (118)

ராக்ஷஸிகள் கபிஸ்ரேஷ்ர் பந்தனம் பசெய்யப்பட்டதை அறிந்துகொண்டு கௌதூகலத்துடன் ராவணனிடம் ஓடிச்

சென்று செய்தியைத் தெரிவித்தார்கள். தசமுகனும் அவனுடைய சபையினர்களும் இந்த தமாஷாவைப் பார்ப்பதற்கு ஆவலுடன் இருந்தார்கள். ஹனுமாரும் ராவண சபைக்கு இழுத்துச் செல்லப்பட்டார். "அஹோ ஆச்சரியம், ஆச்சரியம்" இவ்வளவு மஹத்தான ஐஸ்வர்யங்களைக்கொண்ட ராக்ஷஸ ராஜனுகிற ராவணனுடைய பிரபுத்வ மகிமைகளும், ஐஸ்வர்ய ஸம்பத்துக்களையும், பிரபல ஸம்பத்துக்களையும் பார்த்து, ஹனுமார் ஆச்சர்யப்பட்டார். (119)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி பிரியா, ராமசீதா, உன் சுபமான தர்சனம் எப்போது கிடைக்கும்? ஆஞ்சநேயர் ராமநாம மகிமையினுல் தன்னை அண்டினவர்களுக்கு உன் சுபமான தர்சனத்தை உதாரஹ்ருதயத்துடன் காண்பித்து தானும் சேர்ந்துதானே அனுபவிக்கிறுர். நம்மாழ்வார் உன்னைப் பக்தி யோகத்தினுல் அம்ருதமயமாகச் சொல்லி வாயாரப் பாடி எம்பெருமான் தனது கருணை ஸ்வரூபத்திற்கு உகந்து, என் மனக்கே வந்து இடைவீடின்றி மன்னி, தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே, எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே என்கிறபடி தன் பலனுக்காகவே என்னை அடிமை கொள்ளலாகிய இதுவே யான் வேண்டும் பயன் என்று ஸமஸ்த விரோதி நிவிருத்தி பரியந்தம் நாரணு, கல்யாணராமா, லக்ஷ்மிநரசிம்மா, உங்களை அனன்ய பிரயோசனமாக வேண்டினுர். தியாகராஜர் தன்னிடம் பரிபூர்ண தோஷங்களை ஆரோபித்துக்கொண்டு, சரதாபதரா, யோகிவரனுதா, பரிபூர்ணு, நரரூபா, உன்னை ஸதா நான் பஜிக்கிறேன். ஸுரபூஸுரர்கள் உங்களை ஸதா பஜித்தவண்ணமிருக்கிறுர்கள். உங்களுக்கோ சரணுகதர்களை ரக்ஷிப்பவர்கள் என்கிற புகழ் பெருமைகள் அழியாதபடி விருக்கிறதென்று ஸாது ஜனங்கள் ஸதா கீர்த்தனம் செய்கிறுர்கள். அதற்குக் காரணம் உங்கள் கருணைதான் என்கிறுர்கள். அப்படிப்பட்ட கருணையை என்னிடம் காட்டமாட்டீர்களா என்கிறுர் தியாகராஜர். வேதாந்த தேசிகர், உங்களை அனுபவிக்கும்போது, "ரங்கதுர்ய பிரபோ, நீயே உனது கருணையால் நான் செய்த பாபங்களுக்கும் கர்மயக்ஞங்களுக்கும் பிராய சித்தமாகவும் அதிசயமான புத்தியுடனும் கருணையுடனும் என்னை ஏற்காவிட்டால், என்னுல் இப்பாபக் கடலைத் தாண்டமுடியாது. ஓட்டைகள் நிறம்பின ஓடத்தினுல் வெள்ளம் கொண்ட நதியைத் தாண்டுபவனின் முயற்சியைப்

போலவிருக்கும். அவ்விதம் அனன்யகதியாக உடைய அகதியாகிற என்னை, என் தோஷங்களை பாபங்களைப் பாராமல், என் விஷயத்தில் உனது ஸ்வாபாவிகமான கருணை சங்கல்பத்தினால் ஒரு வழியைச் செய்துவிட வேண்டும். தயாதன, ஜகத்பதே, தயிதரங்க என்று சொல்லுகிறார். சீதாராமா, லக்ஷ்மிநாதா, உங்கள் கருணை, அருள், ஸங்கல்பம் இவைகளைப்பற்றிக் கூறும் எனக்கு, சரணாகதி செய்த எனக்கு, தாய்தந்தை உள்ளத்தின்படி விமலமனத்துடன், காமக்ரோதங்கள் ஒழிந்ததும், என் அக்ஞானம், பிரகிருதிகளின் சேஷ்டிதங்கள், அவித்யை முதலாவதான தோஷங்களை விலக்கி விட்டவனாய், பகவத்பிராப்தி ரூபமாகிறதும், ஸகல ஐஸ்வர்ய கைவல்யங்களை திருணமாக மதிக்கும் ஸ்வரூபமுடையதும் அன்று காமதேனு பிரும்மாவைப் பிரார்த்தித்தது போலவும் நம்மாழ்வார் ஸ்வயம்பிரயோசனமாக தன் பக்தியை அர்ப்பித்தது போலவும், சுத்தமான மனத்தினால் நித்ய தம்பதிகளாகிற உங்களுடைய ப்ரீதி ஒன்றையே உத்தேசித்து உங்களது அனுபவத்தையும் உங்களுடைய ஸ்வீக்ரித்தல் ஆகிய தயையையே நான் வேண்டுகிறேன். யானே நீ, என்னுடைமையும் நீ, வானே யேத்தும் எம் வானவரேறே.]

(ராவணனுடைய ஐஸ்வரிய கைவல்ய ஸம்பத்துக்கள் ஆத்மானுபவம் என்கிற ஞானம் சித்தி ஆகிய எல்லாவற்றையும் பார்த்துவிட்டு ஹனுமார் ஆச்சர்யப்பட்டார்.) ஸுரர்கள், திக்பாலர்கள் கைகளைக் கட்டிக்கொண்டு, அதிவினயத்துடனும் பயம்கொண்டவர்களாகவும் காணப்பட்டார்கள். அவன் பக்கம் பார்ப்பதற்கே அவர்கள் பயந்து நடுநடுங்கிக்கொண்டு காணப்பட்டார்கள். அவனுடைய புருவநெறித்தலால் எவ்விதமான கட்டளையை இடுவானோ, என்று தங்களைத் தயார் செய்துகொண்டு ஆக்ஞையை எதிர்பார்த்த வண்ணமிருந்தார்கள். (ஹா, என்ன ரூபம், என்ன தைர்யம், என்ன பலம், என்ன த்யுதி, ராக்ஷஸ ராஜனுடைய லக்ஷணங்களும் பிரதாபங்களும் ஆச்சரியகரமாகவும், அவனுக்கே பொறுத்தமாயும் இருந்ததைக் கண்டார் ஹனுமார். அவனுடைய தேஜஸினால் மோஹப்பட்டவராக ஆனார். ஆனால் அதேசமயத்தில் அவனிடமும் கருணையும் அசுசியும் அவருக்கு ஏற்பட்டது. பயமற்றவராய், இவனுடைய கடூரங்களையும் தயையற்ற ஸ்வபாவங்களையும், உலகம் நிந்திக்கக் கூடிய செய்கைகளையும் நினைத்துப் பார்த்தார். அதர்மத்தினால் லோகமாதாவான சீதையை கவர்ந்து செல்லப்பட்டதையும் நினைவில் வைத்துக்கொண்டவராகவும்,) இவனுடைய பிர

பாவத்தைக் கண்டு கலக்கமற்றவராய், மஹாகோபத்துடன் ஹனுமரர் விளங்கினுர். அவரைப் பார்த்தால் கொடிய சித்த முள்ளதும் கபட எண்ணங்கள் கொண்ட நாகங்களின் நடுவில் கருடன் நிர்பயமாக எவ்விதம் விளங்குவாரோ, அதுபோல ராவணன் முன்பு காக்ஷி அளித்தார். (120)

ராவணன் மாருதியின் அட்டஹாஸப் பார்வைகளைப் பார்த்து பரிஹாஸம் செய்து, பிறகு கோபித்துக்கொண்டு, பொருமை யினுலும் லோபத்தாலும் கவரப்பட்டவனுய், அவரை துச்சமான வார்த்தைகளால் தூஷித்தான். தன் புத்ரனுடைய வதத்தை நினைப்பவனுக, க்ரோத மூர்ச்சிதனுக, அதனுல் வருத்தமடைந்த வனுக ராவணன் காக்ஷி அளித்தான். (நந்தி போலிருக்குமோ, என்னை சிக்ஷிப்பதற்கு அவரே வந்திருக்கிருரோ) என்றுகூட மனம் கலங்கினுன் இலங்கை வேந்தன். (121)

லங்கேசனுன ராவணன் சொன்னுன், "வானரா, நீ யாருடைய பலத்தினுல் என் வனங்களையும், தோட்டங்களையும் அழித்தாய்? என் பெயரை நீ கேட்டதில்லையா? என் வீரர்களை ஏன் கொன்ருய்? அவர்கள் உனக்கு என்ன கஷ்டம் விளை வித்தார்கள்? துஷ்டா, பயப்படாமல் இருக்கிருயே." (122)

"ஒரு குற்றமும் செய்யாத ராக்ஷஸவீரர்களை வதைத்திருக் கிருய். உனக்கு உன் உயிர்மேல் ஆசை இல்லையா? என்னை விரோதித்துக்கொண்டால், உன் உயிர் நிச்சயமாகப் போகும் என்பது உனக்குத் தெரியுமா?" ஹனுமார் பதில் சொல்ல ஆரம்பித்தார். "ராவணு, எவருடைய பாஹுபல பராக்ரமத் தினுல் ஸகல பிரும்மாண்டங்களும் ஸ்ருஷ்டி செய்யப்பட்டு தாங்கப்படுகின்றனவோ." (123)

"எவருடைய வீர்யத்தினுல், தசசீசா, பிரும்மா விஷ்ணு மஹேசர் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் ஆகிய கார்யங்களைச் செய்கிருர்களோ; எவருடைய அனுக்ரஹத்தால் ஆயிரம் தலைகளுள்ள ஆதிசேஷன், பர்வதங்கள் வனங்கள் கொண்ட ஸமஸ்த பிரும்மாண்டங்களைத் தலையில் வைத்துச் சுமந்து தாரணம் செய்கிருரோ, அந்த ஆதிதேவர், (கரிவரதர், சரசாபதரர்,) (124)

எந்த தண்டபாணியை அஜருத்ரஸுரேசர்களான இந்திரன், அவனை அண்டிவாழும் தேவதைகள் மிக்க பயத்துடன் அவரிட்ட கார்யங்களை சரிவரச் செய்துகொண்டு மிக்க ஆனந்தத்துடன் ("பிரபு அண்டகோட்லங்களை ஆளும் பிரபு நாராயணு, புண்டரீகாக்ஷா, "உன்னுடைய புண்டரீக பாதங்களை எங்க

ளுடைய நிஷ்காம பூஜைகளுக்கும், எங்களை ஸதா வாழவைக்கும் தங்களுடைய ப்ரீதியை வளர்ப்பதற்காகச் செய்யப்படும் எங்கள் ஆராதனைகளுக்கும் கஜரக்ஷகா, மனம் உவந்துகொடு,'' என்று) சதா ரக்ஷணத்தை அபேக்ஷித்த வண்ணமாக விருக்கிறார்களோ, அப்பேற்பட்ட பிரபு அமரர்களுக்காக பலவிதமான அவதாரங்கள் செய்கிறார். (உன்னைப்போல் நல்ல குலத்தில் பிறந்தும், தெய்வ கடாக்ஷம் பெற்றும் தபஸ்ஸினால் இறுமாந்து தர்மபலமான சுகத்தை அதர்மமாகவும் பாபங்களை வளர்க்கக் கூடியதுமான ஹிம்சைகளை லோபத்தினால் செய்திருக்கிற) உன்னைப்போன்ற ஆத்மனஸ் ஸுகம், என்று நம்பிவாழும் துஷ்டர்களையும், பாபிகளையும் கொல்லுவதற்காகவும் பாடம் கற்பிப்பதற்காகவும் அவதரித்திருக்கிற கோதண்டபாணியும், எவருடைய மென்மையான திருக்கரங்களால் மஹாக் கடினமான சிவதனுஷ் ஒடிக்கப்பட்டதோ, அப்பேற்பட்ட விஷ்ணுதுல்ய பராக்ரமரும், எவரைக் கண்டு ஸர்வ அரசர்களின் கர்வமும் புகழ் கீர்த்திகளும் மமதைகளும் ஜனகசபையில் சீதா சுயம்வரத்தின் சமயத்தில் தூள் தூளாக சிதறி, ஒன்றுமில்லாமல் போய்விட்டதோ, அப்பேற்பட்ட ஸர்வ லோகேஸ்வரன், ராஜசிம்மம் (125)

'' எவருடைய பல பராக்ரமத்தினால் அதுளித பலம்கொண்ட கரன், தூஷணன், திரிசரஸ் முதலியவர்களும், உன்னை அடக்கிப் பயப்படும்படி செய்த வாலியும் அழிந்தார்களோ, (இவர்கள் அழிந்ததினால் அவருக்கு முன் யுத்தத்திற்கு நிற்பதற்கு தேவர்களும் அசுரர்களும் கந்தர்வ வித்யாதர நாக யக்ஷர்களும் சேர்ந்துவந்தாலும் சக்தியற்றவர்களோ ;'') (126)

''எவருடைய ஒரு துளி அனுக்ரஹ பிரஸாதத்தினால் நீ இன்று ராஜ்யம், ஐஸ்வர்ய ஸம்பத்துக்கள், புத்ரமித்ர பந்துக்கள் முதலிய வற்றையும் உனது ஆயசையும் காத்துக்கொண்டு வருகிறாயோ, அப்பேற்பட்ட தர்ம கருணாமூர்த்தி ; (தபஸிற்கும் தர்மத்திற்கும் சுகத்தைக் கொடுக்கவேண்டும் என்று நினைத்து ஸங்கல்பித்து உனக்கு ஐஸ்வர்யங்களைக் கொடுத்த உதாரமான பிரபு உன்னை நோக்கி இருக்கிறார். இப்பொழுது அந்த பிரபுவின் கருணையை மறந்து காலபாசத்திற்கு வசப்பட்டவன் போல அதர்ம வழியில் புத்திஉள்ளவனாய், '' நான் ஒருவன் என் இஷ்டப்படி செல்வேன் '' என்று மமகாரம் கொண்டவனாய் வரப்போகும் குலநாசத்தையும் உனது நாசத்தையும் உன் ஐஸ்வர்யங்களின் நாசத்தையும் ஆலோசனை செய்யாமல் இருக்கிறாய். பிரும்மாவாகிற ஸ்வயம்பு ருத்ரர் எனப்படும்

திரிநேத்ரர் ஸூரநாயகனுகிற மஹேந்திரன் இவர்களுக்குப் பிரபிதாமஹரான பிரபு ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை தாசரதியை அலக்ஷ்யம் செய்துவிட்டு,) அவருடைய பாரியையான மைதிலியை கள்ளத்தனத்தால் நீ அபஹரித்திருக்கிருய். (அந்த கோதண்டராமன் நாராயணமூர்த்தியின் அம்சமானவன் என்று நினைத்துக்கொள். அப்பேற்பட்ட) தசரத ராமனுல் அனுப்பப் பட்ட தூதன் நான் என்று அறிந்துகொள்.'' (127)

''ராவணு, உன்னுடைய பிரபுத்வம், போர் புரியும் சக்தி, தபஸ் ஆகிற மகிமைகளை நான் நன்கு அறிவேன். ஸஹஸ்ர பானுவாகிற கார்த்திய வீர்யார்ஜுனன், யுத்தத்தில் புகழ் பெற்ற வாலி இவர்களுடன் நீ சண்டை செய்திருக்கிருய், அதனுல் கீர்த்திகளை அடைந்தது பற்றியும் எனக்கு நன்ருகத்தெரியும்.'' (ஆறு மாதங்கள் ராவணன் வாலியின் கையில் அகப்பட்டுச் சிறைபட்டிருந்தான்). அப்பொழுது ராவணன் இந்த மர்ம வார்த்தைகளைக் கேட்டு பரிஹாஸம் செய்தான். (128)

ஹனுமார் மீண்டும் சொன்னுர். ''ராக்ஷஸ பிரபுவே, எனக்குப் பசித்தபடியால், என் ஸ்வபாவப்பிரகாரம் பழங்களைச் சாப்பிட்டேன். சில விருக்ஷங்களையும் ஒடித்தேன். ஸ்வாமி, எல்லோருக்கும் தேகத்தை பசியிலிருந்து காப்பாற்றிக்கொள்ள வேண்டிய பிரியமான தர்மமும் ஸர்வ ஸம்மதமாகவுள்ள தர்ம மாயும் உள்ளதன்ருே? அப்போது அதைப் பொறுக்கமுடியாத ராக்ஷஸர்கள் என்னைத் துன்புறுத்திஞர்கள். அடிக்க வந்தார்கள். (129)

[தியானம்

ஹே சீதே, புவனேஸ்வரி, மஹாதிரிபுரசுந்தரி, நாராயணி, ஜானகி, நீ தானே சிறந்த தத்வம். நீதானே பிரளயம் வரை இருப்பவள். பிரக்ருதி, மஹத்தத்வம், அஹங்காரம் ஆகியவை நீதானே அம்மா. பரமேஸ்வரி, லலிதாபரமேஸ்வரி, நீதானே தத் என்கிற ஜீவனுகவும், த்வம் என்கிற பிரும்மமாகவு மிருக்கிருய். அதனுல்தான் நீ பகவானுடன் ரமிக்கும்போது பாதி சரீரமாக விருக்கிருய். ஸாமகான பிரியே, உன்னைத் தானே திரோதானகரீஸ்வரி என்று உபாஸிக்கிருர்கள். பிரளய காலத்தில் ஸூக்ஷ்ம அவஸ்தையில் பரமாணுக்களாகச் செய்யப் பட்ட உலகத்தை மறுபடியும் வெளியில் வரும்படி செய்கிறவள் நீதானே. உன்னை விப்ரபிரியா என்றும், ஸர்வவியாதி ப்ரஸமனி என்றும், ஸர்வ ம்ருத்தியு நிவாரணி என்றும் சொல்லுகிருர்கள்.

ராகிணி, நீதானே சத் என்கிற நித்யம் என்பதையும், சித் என்கிற ஞானத்தையும், ஆனந்தம் எனப்படும் துக்க ஸம்பந்த மற்ற ஆனந்தத்தையும் பரமசுகத்தையும் கொடுக்கிருய். ஜ்யேஷ்ட ஸாமம் உன்னைத்தானே புகழ்கிறது. பரா என்கிற வாக்காக விருப்பவள் நீதானே. நாதமாகிற காரண பிந்து என்றும் சொல்லப்படுகிருய். நாதபிரும்மத்திஞல் அனுமான பிரும்மம் அறியப்படுவதுபோல, உன் பாதங்களை அடைந்தால் அல்லவோ, நாராயணரின் பாதங்களை அடைய முடியும். பஞ்சதசாக்ஷரி, ஷோடதசாக்ஷரி, ஹ்ரீம் என்கிற பீஜமந்திரத்தை உடைய கமலாம்பிகே, ஸஹஸ்ராரம் என்கிற சக்கிரத்தில் பகவானுடன் சேர்ந்து அனுபவிக்கும் கேவலம் சுத்தஸ்வரூபமே, குருகுஹஸம் பிரதாயம், வாமமார்க்கம், காதிவித்யை, புவனேஸ் வரி வித்யை யாகிற ஸ்ரீவித்யை என்கிற முறைகளால் ஆராதிக்கத் தகுந்தவளே, ராமபிரியே, அபர்ணு ஸுபர்ணு, மங்களத்தைச் செய்யும் அஷ்டதள, அஷ்ட கோணங்களை உடையவளே, கிளியை வைத்துக்கொண்டிருக்கும் என் பைங் கிளியே, என் ஹ்ருதயமான ஸரோவரில் ஸதா நீ ஆனந்த மயமாக, முனிமானஸ ஹம்ஸப்பேடுபோல சஞ்சரிப்பாய். சரா சராதி கல்பனு, என் சித்தத்தை பூர்ணமாக ஆனந்தப்படுத்து. ராமதயிதே, நாராயணபிரியே, ராஜராஜேஸ்வரி, கமனீய ரத்னஹார பூஷிதையே, வாக்பீஜம் காமபீஜம், சக்தி மந்திர பீஜமாகவும் அபேதமாகவும் விளங்கும் மூன்று மந்திர பாதங்களை உடையவளே, அகசட தபாதிவர்ணே, எனது அகண்டைக ரஸபூர்ணே, என்னிடம் ஸதா கருணையுடன் வசித்து வா. அம்மா, என் சித்தத்தை உன்னையும் உன் நாதனையுமன்றி வேறுபடாமலிருக்கச் செய்வாய். அபமிருத்யு காலமிருத்யுவை நடுங்கச் செய்யும் தயாபூர்ணி, அனுக்ரஹம் செய்வாய் அம்மா. அனுக்ரஹம் செய்.]

''யார் என்னை அடித்து ஹிம்சை செய்தார்களோ, அவர்களை நான் பதிலுக்குத் திருப்பி அடித்தேன். அவர்கள் இறந்து விட்டார்கள். அதன் பிறகு உனது புத்ரன் அனுப்பப்பட்டான். அவன் என்னை கட்டியிழுத்துக் கொண்டுவந்திருக்கிருன். எனக்கு இந்த அவமானத்திஞல் வருத்தம் கிடையாது. நான் என் பிரபு ஸ்ரீராம சந்திரனுடைய தாஸனுனபடியால் அவருடைய காரியத்தைச் செய்ய விரும்பினேன்.'' (130)

''ராவணு, நான் உனக்கு மிகுந்த வணக்கத்துடன் நமஸ் கரிக்கிறேன். மதம், அஹங்காரம், ஐஸ்வரியம், குலம், ஞான

அபிமானங்களை விட்டுவிட்டு, எனது வார்த்தைகளை மனம் கொண்டு கேள். உன்னுடைய தபஸ்ஸும் பிராம்மணகுலமும், நீ விஸ்ரவசின்புத்ரனாயிருப்பதையும் யோசித்துப்பார். மஹா மோகங்களை விடு. விஷயப் பற்றுதல்களிலிருந்து விடுபட முயற்சி செய். உனது அக்ஞானமாகிற "நான்" என்கிற மமதையையும், ("நான் பலவான், தர்மிஷ்டன், ஸ்வதர்ம ஆசார முள்ளவன்", நான் நினைப்பது, செய்வது பேசுவதுதான் ஆசாரம், நியமம், உலக ஸம்மதம் என்று நினைக்காதே. உன் ஸ்வரூப நாசத்தை அடையாதே." நீ பகவானைப்போல ஸர்வ ஸ்வதந்திரனல்ல. அவனால் நீ கார்ய விசேஷத்தால் நியமிக்கப் படுகிறாய்.) அப்பேற்பட்ட ஸகலலோக ஈஸ்வரனும் நியந்தாவும் கருணாரஸம் ததும்பும் ஆஸ்ரித வாத்ஸல்யனாகிற பகவானை, ராமனை, (நாராயணனை, மோக்ஷமார்க்கத்தில் ஈடுபட்டவனாக,) பஜி. (பக்தபய அபஹாரியான பிரபு உன்னை ரக்ஷிப்பார். உன் பாபமும், பயங்களும் தீரும். உனக்கும் சுத்தமான யசஸ்ஸும் கிடைக்கும்.") (131)

"அவனே கால மிருத்யுவுக்கும் அப மிருத்யுவுக்கும் ஈஸ்வரன். தேவதைகள், ராக்ஷஸர்கள், ஸமஸ்த சராசரங்களும் எதில் லயமடைகிறார்களோ, அந்த காலமிருத்யுவும் அவரிடம் பயப்படுகிறது. அப்பொழுது அபமிருத்யுவைப் பற்றிச் சொல்வானேன்? அதுவும் பயந்து நடுங்குகிறது. அப்பேற்பட்ட ஸர்வ ம்ருதியு நிவாரணியாகிற பரபிரும்மத்தினிடம் "நான் பெரியவன், பலிஷ்டன்" என்கிற அஹங்காரத்தால் வைரம் செய்யாதே. (அவரிடம் மித்ர பாவத்துடன் இருந்து அவருக்கு உவந்த கைங்கர்யங்களைச் செய். சுத்த ஸத்வஸ்வரூபமாகிற சிந்தாமணி என்கிற) ஜானகியை ஸ்ரீராமரிடம் ஒப்பிவை." (132)

"என் பிரபு கரதூஷணாதிகளை வதம்செய்த கராரி ரகுநாயகர், பிரணதபால, தப்பு செய்தவர்களையும் பாதகங்களைச் செய்தவர்களையும் "தன்னை ஆஸ்ரயம் செய்திருக்கிறான்" என்கிற வாத்ஸல்யத்தினால் மஹாகிருதக்ஞராக, உன்னை மன்னித்து விடுவார். (கரிய கோலத்திருவுருக் காண்பன் நான், எண்டிசையும் அறிய வியம்புகேன், திருவரங்கத்து அம்மானுக்கே காதல் செய்து, அருள் கொண்டு பாடினான் அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே, என்கிறபடி பகவத்கிருபையையும் ஆசார்ய கிருபையையும் அடைந்த சேதனன் எங்கே பகவத் கிருபை நழுவி விடுமோ என்கிற பயத்தால், எங்கேஸ்வரூப நாசம் அடைந்து மதம் பிடித்தவனாக, கிருதக்னையை

மறந்தவனாக, ஆசாரிய திருவடிகளின் ஸம்பந்தத்தை தஞ்சமாக நினைத்து அதனாலே ஈஸ்வர ஸம்பந்தம், பந்தமோக்ஷங்களில் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருத்தல், அந்த ஆசார்ய ஞானப் பிரானை விட்டு எனக்கு வேறு ஒன்றுமில்லை, ஆசார்யருக்கே, ஆசார்யருடைய திருவடிகளையே தஞ்சம் என்று நம்பி வாழ்ந்த வடுக நம்பியைப்போல, என்வார்த்தையை கவனித்துக்கேள்: '' நான் சீதாராமானுக்கு அடிமை; என்னோடு ஸம்பந்தம்பெற்ற நீ பாபங்கள் குற்றங்கள் அழிந்தவனாக, உனக்கு அநிஷ்டமானதும் உன்னுடன்கூட சேர்ந்த, குலநாசத்தையும் ஸம்சார நிவ்ருத்தி யையும், இஷ்டமாகிற ராமசீதா பாதாப்ஜங்களின் பகவத் ப்ராப்திகத்தையும் அடைவாயாக.)'' (உனது ஸ்வரூபத்திற்கும் ப்ராப்யத்திற்கும் உவந்த பரதந்திரனாக உன்னைக் கருதி, அநாதிகாலம் ஸ்வாபி மானத்தாலே ஊறிப்போனபடியால், ஈஸ்வர அபிமானத்தைக் குலைத்துக் கொள்ளாதே. என்னைப் போல ஆசாரியனும் உனக்குக் கிடைப்பது அரிது. என் பிரபு சீதாராமன் கருணா ஸமுத்திரம். சரணாகத ரக்ஷகன். அவனுடன் சண்டை செய்தாயாகில் கரதூஷணாதிகளின் கதியை நீயும் அடைவாய். ஆனால் என் பிரபுவினிடம் மித்ர பாவத் துடன் இருந்தாயாகில், பரம அபராதங்களின் பயங்களை நீ மறந்துவிடலாம். அவர் ஸத்திய ஸந்தரானபடியால், தான் பரப்பிய இப்பிரபஞ்ச மனைத்தையும் வாழவைக்கவேண்டும் என்கிற நியதியினால் நிரூபாதிக கிருபை கொண்டுஸர்வலோக சரண்யனான ராகவன் உன் குற்றங்களைப் பாரான், அவைகளை மறந்து உன்னை ரக்ஷிப்பார்.'') (133)

'' (பங்கஜ லோசனான) ஶ்ரீராமனுடைய பங்கஜ சரணங்களை, (அஷ்டதளமுள்ள அஷ்டாக்ஷரத்தையோ ஷடாக்ஷரத்தையோ) உன் ஹ்ருதயத்தில் தாரணம் செய்துகொள். சீதாராமனைப் பஜி. லங்காராஜ்ய ஸம்பத்துக்கள் நீடூழிகாலம் உன்வச மிருக்கும். ரிஷிபுலஸ்திய வம்சத்தின் களங்கமற்ற கீர்த்திகள் பூர்ணசந்திரனைப்போல நிர்மலமானது. அந்தப் புனித சந்திர மண்டலத்திற்கு களங்கம் செய்யாதே.'' (உனக்கு உன் வம்ச கீர்த்திகளைக் காப்பதற்கு பெரிய பொறுப்பு இருக்கிறது. பகவான் விப்ரபிரியர் அல்லவோ. அதனால் மாருதி புலஸ்தியரைப் பற்றிச் சொன்னார்.) (134)

'' உன் மனத்திற்கும் நாவுக்கும் இனியது ராம நாமமே. (அந்த சப்த பிரும்மத்தைத்தவிர தித்திக்கும் சோபைகொண்ட சப்தம் வேறு ஒன்றுமில்லை, அந்த ஊழி முதல்வன், உள்ளம்

துளங்கா நிற்பன். ஐவாய்பாம்பினனைப் பள்ளிகொண்டாய் பரஞ்சோதி தாமரைக் கண்ணன். தொண்டரானவர்க்கு இன்னருள் செய்வான். குன்றமெடுத்து ஆநிரைகாத்தவன், அகலிகையின் பாதகங்களைத் தீர்ந்த மணி மாணிக்கம், மதுசூதனன்,) உன் மமதைகளை விடு. தீர்க்கமாக விசாரித்து உனக்கு ஹிதம் எதுவோ அதைச் செய்துகொள். தேவதைகளின் சத்ருவே, மிக்க அழகு ஸம்பத்துக்கள் கொண்ட நாரி ஸகல பூஷணங்களுடன் அலங்கரிக்கப்பட்டாலும் வஸ்திரமில்லாமல் நிர்மாணமாகவிருந்தால் சோபையைத் தருகிறாளா?'' (காம மார்க்கத்தில் ஊறிப்போன உனக்கு தகாதவிடத்தில் காமம் செய்வது ஸ்ரேயஸையும் புண்யத்தையும் தருமா? உன் ஜீவனால் ஊர்த்வகதியைத்தான் அடைய முடியுமா?) (135)

''ஸ்ரீராமனிடமோ, அவனைச் சார்ந்த சீதையிடமோ (அவர்களின் பக்தர்களிடமோ,) பராங்முகமாகவிருந்தால், நீ எவ்வளவு காலம் ஐஸ்வர்ய ஸம்பத்துக்களையும், பிரபுத்வங்களையும் அனுபவிக்க முடியும்? (ராமவிமுகனின் ஸம்பத்துக்கள், நீடித்து நிற்காது. ஸகல போகங்களுக்கும் பிரபுத்வங்களுக்கும் மூல காரணம் ஈஸ்வர ஸங்கல்பம் அல்லவோ. அந்த ஈஸ்வர சங்கல்பத்திற்கு விரோதமாக நடப்பவன், ஸ்வாபிமதத்தாலே தர்ம விரோதமாக நடப்பவன்; என்போன்ற உத்தம ஆசாரியர்களான பேச்சைக் கேட்காதவன்; ஆசார்ய ஸம்பந்தமற்ற சிஷ்யன் பகவத் ஸம்பந்தத்தை சீக்கிரத்தில் இழப்பதுபோல, அந்த பகவக்கிருபையால் ஏற்பட்ட ஸம்பத்துக்களும், தர்மத்திலிருந்து விலகுபவனாயிருப்பதாலும், உன்னைவிட்டு சீக்கிரமே அழிந்து போய்விடும்.) அவைகள் மீண்டும் அடையப்பட்டாலும் நஷ்டமானவைகளே. மழை ஜலத்தினால் பெருகும் நதிகளைப்போல சீக்கிரமாக அவைகளும் வற்றிப்போய்விடும். (ராமநாமமே உனக்கு சிறந்த ஔஷதம். எந்த உபாயத்தினாலும் அடைய முடியாத மோக்ஷத்தை அடையும்படி செய்துகொள். வினைகள் எல்லாம் போம். அஞ்சேல், கலங்கா நிலைபெறு, இந்திரன் முதலிய தேவர்களும் ஆசார்ய கடாக்ஷத்தால் தேன் தோய்ந்த ஸ்ரீராமனின் திருவடிகளை அடைந்து மீண்டும் அவர்கள் இழந்த ஐஸ்வரியங்களைப் பெற்றார்கள். இதில் உனக்கு சந்தேகம் வேண்டாம்'' என்றார்.) (136)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி நாதா, பிருஸ்னி கர்ப்பா, மாதவா, மௌனம், தியானம், யோகம் ஆகிய மூன்றும் கொண்ட ஆதிதேவா, உலகத்தைப் படைப்பது காப்பது அழிப்பது ஆகிய முதலிய விளையாட்டுக்களில் மகிழ்ந்திருக்கும் பிரபோ, என்னை பஞ்சஸம்ஸ்காரம் என்று சொல்லக்கூடிய அஞ்சுக்கு இலக்கிய நாரணு, என் கதியே, என் ராமானுஜ முனியே, மாயோனை வணங்கி, மந்திரமாகிய அஷ்டாக்ஷரத்தைக் கொண்ட திருமங்கை யாழ்வாரைப்போல, நான் உன்னை நமஸ்காரம் செய்கிறேன். இன்று ராவணனிடம் மஹா ஆசாரியரான திருமங்கை ஆழ்வாரைப்போல உறைந்திருக்கும் ஆஞ்சநேயா, சிவசக்தியின் ஐக்யஸ்வரூபமே, உன் புகழை கம்பநாட்டாழ்வரும் நானும் அறிவோம். உன் உபதேசம் இந்திரனுக்கு பிரஹ்லாதன் அருள் செய்ததுபோல அல்லவா இருக்கிறது. பிரஹஸ்பதியினுல் தூண்டப்பட்ட மஹேந்திரன் சுக்ராசாரியாரை அடைந்து, அவரிடம் மோக்ஷஞானமே சிறந்தது என்றும்; அதற்கு ஸாதனமான ஆத்மஞானத்தையும் உபதேசித்தார். அதற்குப் பிறகு "இதற்கு மேலான ஸ்ரேயஸ் உண்டா?" என்று இந்திரன் கேட்க, சுக்ராசாரியர் இதைவிட விசேஷமான அறிவும் ஆசாரமும் உண்டு என்று சொல்லி பிரஹ்லாதனிடம் இந்திரனைப் போகச் சொன்னுர். பிரஹ்லாதனிடம் பிராம்மண ரூபமாகப் போன இந்திரன் பொறுமையுடன் சிஷ்யனுகி, எல்லாவற்றையும் கற்றுக்கொண்டான். அதனுல், காலவசத்தினுல் அகப்பட்ட பிரஹ்லாதன், "பிராம்மணு வரத்தைப் பெற்றுக்கொள்ளும். உம்மிடம் திருப்தி அடைகிறேன்," என்று கேட்க இந்திரனுகிற பிராம்மணன் பிரஹ்லாதனுடைய சீலத்தை வரமாகக் கேட்டான். "ஆகட்டும்" என்று சொல்லி, பிராம்மணனுக்கு பிரஹ்லாதன் தனது சீலத்தைக் கொடுத்து, மஹாதுக்கத்தை அனுபவித்தான். அந்த வரத்தைக் கொடுத்த பின்பு, பிரஹ்லாதனிடமிருந்து சீலம் என்கிற தேஜஸ் வெளிவந்து, சாயை போன்றதும் தேஜோமயமான சரீரமுள்ளதும் இந்திரனை நோக்கிச் சென்று அவனை அடைந்தது. அதற்குப் பின்பு தர்மம், ஸத்யம், ஒழுக்கம், பலம் எல்லாம் ஒவ்வொன்ருக தேஜோமய சரீரத்துடன் பிரஹ்லாதனை விட்டு வெளிவந்து மஹேந்திரனை அடைந்தன. அதற்குப் பிறகு தேஜோமயமான தேவஸ்திரீயைப்போல லக்ஷ்மியும் பிரஹ்லாதனைவிட்டு வெளிவந்து, "பிரஹ்லாதா, நான் பலத்தை அனுசரித்திருப்பவள். உலகத்திற்கு உத்தமமான ஈஸ்வரி.

எவன் பிரும்மசாரியாக உன்னிடமிருந்து ஆத்மவிதியைக் கற்றுக்கொண்டானே, அந்த மஹேந்திரனிடம் நான் செல்லு கிறேன். மூன்று உலகங்களிலும் உள்ள உன் ஐஸ்வரியம் அந்த சீலஸ்ரேஷ்டனுன மஹேந்திரனால் அபகரிக்கப்பட்டுவிட்டது. தர்மமும் ஸத்யமும் ஒழுக்கமும் பலமும் நானே. நான் எப்பொழுதும் சீலத்தை காரணமாகக் கொண்டவள்'' என்று மஹாலக்ஷ்மி சொன்னாள். ஆகவே சீலத்தைக் காரணமாகக் கொண்டவள் லக்ஷ்மிதேவி. அப்பேற்பட்ட சீலத்தை ராவண னுக்கு உபதேசித்த சீதா, ஆஞ்சநேயா, உங்கள் பாதங்களை நான் நமஸ்கரிக்கிறேன். பகவானே, நரசிம்மா, பிரஹ்லாத பிரியா, ஸுகுணார்ணவ ஸர்வபோக்ய லக்ஷ்மி நரசிம்மா, பத்மதல்ப லக்ஷ்மி நரசிம்மா, ஸர்வதோமுகரே, உம்முடைய சிஷ்யனுன பிரஹ்லாதன் சீலத்தை அடையும் வழியை எல்லோருக்கும் சொல்லியிருக்கிறான். மஹா உக்ரரே, பத்ரரே, செய்கையாலும் மனத்தாலும் வாக்காலும் எல்லா பிராணிகளிடத் திலும் துரோகமில்லாமல் வசிப்பதும், அனுக்ரஹமும், தானமு மாகிய மூன்றும் சீலமென்று கொண்டாடப்படுகிறது. எது மற்றவர்களுக்கு ஹிதமாகவிராதோ, வெட்கப்படக் காரணமோ, அவ்விதமான செய்கையையும் பராக்ரமத்தையும் செய்யக் கூடாது. எதைச் செய்வதால் ஸர்வஸம்மதமாக ஸதஸில் கொண்டாடப்படுமோ, அந்தக் காரியத்தைச் செய்யவேண்டும் என்று பிரஹ்லாதன் சொன்னான். சீலமில்லாதவர்களும் சில சமயத்தில் ஸம்பத்தை அடைகிறார்கள். ஆகிலும் அவர்கள் நெடுங்காலம் அனுபவிக்கமாட்டார்கள். வேருடன் கீழே விழுவார்கள். இந்த உண்மையைத் தெரிந்துகொண்டு யுதிஷ்டிரரைப்போல சீலமாயிருக்கவேண்டும். இதைத்தானே பிரஹ்லாத பிரியரான லக்ஷ்மி நரசிம்மர் எனக்கு உபதேசித்தார். அதேபடி, கம்பநாட்டாழ்வாரும், சடகோபரும், வேதாந்த தேசிகரும் லக்ஷ்மி நரசிம்மனே சேதனனை கராவலம்பம் செய்வார் என்று நம்பி சீலமாய் வாழ்ந்தவர்கள். அவர்கள், பகவானிடம் நமது ஸ்வரூபத்தை ஸமர்ப்பித்தல், நம்மை ரக்ஷிக்க வேண்டிய கடமையை ஸமர்ப்பித்தல், ரக்ஷித்தலின் பலனை ஸமர்ப் பித்தல், பகவத் சரணங்களாகிற ராமசீதா, லக்ஷ்மி நாராயண சரணங்களை உபாயமாகவும் பலனுகவும் ஸ்வீகரித்தல், அதற்கு விரோதிகளான யாவையும் ஒழித்தல், சரணமடையும்போது செய்யவேண்டிய காரியங்கள், சரணமடைந்தவனுக்கு எம்பெரு மான் செய்யும் காரியம், சரணடைந்த பின்பு சேதனன் இருக்க

வேண்டிய சீல ஆசாரநடத்தை எல்லாவற்றையும் உபதேசித்தார்கள். அவர்களை வணங்கி, ஆஞ்சநேயா, உன்னை மனதில் தரித்து ராமசீதாபாதங்களில், நாரதர் நாராயணரை ஆஸ்ரயித்ததுபோல நான் ஆஸ்ரயிக்கிறேன். தேவதேவ குரோ, சரணம் என்று சொல்லுகிறேன்.]

"ராவணு, தசகண்டனே, (பத்துதலைகளிலும் உள்ள காதுகளால்) என் வார்த்தைகளை நீ கேள், நான் ஸத்யமாக பிரதிக்ஞை செய்கிறேன். (நாராயணனுகிற) ராமனிடம் விமுசனுகவிருக்கும் துஷ்டனை யாவரும் காப்பாற்ற சக்தி உள்ளவர்களல்ல. ஆயிரம் சங்கரர்களும் ஆயிரம் விஷ்ணுவும் ஆயிரம் பிரும்மாவும் சேர்ந்து யத்தனித்தாலும் சீதாராமனுக்கு துரோஹம் நினைப்பவனைக் காப்பாற்ற முடியாது." (அண்டகடாஹங்களை தனது கர்ஜனையால் கலக்கி, மஹா அட்டகாசம் செய்த லக்ஷ்மி நரசிம்மனை நினைத்துக்கொள். ஹிரணியாக்ஷன் போனகதிதான் உனக்கு நேரிடும். மதுகைடபர்களை வதைத்த மதுசூதனனை நினைத்துக்கொள்.) (137)

"அப்பா, ராவணு, ஸ்வாபிமானம் என்கிற அஹங்காரம் தானே மஹாமோகத்திற்கு மூலகாரணம் என்பதை அறியாயோ? (மஹாமோகத்தினுல் எதைத் தள்ளவேண்டும், எதைப்பற்ற வேண்டும் என்கிற ஞான வியவஸ்தை அழிந்துபோகிறது. அதனுல் கிலேசங்களும் ஆபத்துக்களும் அதிகமாக ஏற்படுகின்றன. அப்பேற்பட்ட அஹங்காரத்தை ஒழிக்கவும், ஸ்வரூப லாபம் ஏற்படுவதற்கும், அகிலஹேய ப்ரத்ய நீகைக கல்யாணைக தானமாய், ஸதைகாஸமாய், விபுவாய், ஞானசக்தியாத்ய அனந்தகுண கணபூஷித்ராய், ஸர்வ விசேஷமாக லக்ஷ்மி பூமி நீளா ஸமேதராய் நித்யமுக்தானுபவமாய் சகல ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹார கர்த்தாவாய், ஸர்வலோக சரண்யமாகவிருக்கும் ஆதிப்பிரானை,) உன் அபிமானம் அஹங்காரம் மதம் யாவற்றையும் தியாஜ்யம் செய்துவிட்டு என் பிரபு ரகுநாயகன், ஆஸ்ரித வாத்ஸல்யன், கிருபாஸிந்து, பகவான் ஸ்ரீராமசந்திர மூர்த்தியைப் பஜித்து (மணி மாடக்கோயில் வணங்கென் மனனே, அமரர்க்கும் பிரானுரைக்கண்ட தென்னரங்கத்தே," என்று சொல்லி), அவனை சரணம் அடை." (138)

எவ்வளவு நியாயத்துடனும் அறிவுடனும் பச்சாதாபத்துடனும் பக்தி ஞான வைராக்ய பிரபத்தியோகங்களின் பெருமையைச் சொன்னபோதிலும், ஹனுமாருடைய வார்த்தைகள் ஹிதத்தைச் செய்யும் புருஷார்த்தமாகவிருந்தபோதிலும்,

அவைகள் கல்லில் வைக்கப்பட்ட பீஜங்கள்போல ராவணனிடம் பலனைத் தரவில்லை. மஹாஅபிமானம் கொண்ட ராவணன் சிரித்துக்கொண்டான். அவரை பரிஹாசம் செய்தான். "எனக்குப் பெரிய ஞானியாகிற குரு வந்திருக்கிறார். இந்த வானரத்தின் உபதேசத்தைக் கேட்டு நான் ஞானத்தை அடைய வேண்டும்," என்று பரிஹாஸமாகச் சொன்னான். (139)

"துஷ்டா, உன்னுடைய மிருத்யு உன் சமீபத்தில் இருக்கிறது. அதமனே, நீ எனக்கா உபதேசம் செய்கிறாய்" என்று ஹனுமாரை அதட்டினான். அதற்கு ஹனுமான் பயமின்றி சொன்னார். "மூர்க்கா, நீ சொல்வதில் திருப்பித்தான் நடக்கப் போகிறது. உனக்குத்தான் மிருத்யு சமீபத்தில் இருக்கிறான். நீதான் கூடிய சீக்கிரம் உயிரை இழக்கப்போகிறாய். மதி பிரமையை அடைந்துவிட்டபடியால் உனக்கு நான் புத்தி புகட்ட வேண்டும். நன்றாகப் பிரத்யக்ஷமாக எது நடக்கப்போவது என்னவென்று எனக்குத் தெரியும்." (140)

ஹனுமான்ஜியின் வசனங்களைக் கேட்ட ராவணன் அதி கோபமடைந்தான். தனது ஆட்களைப் பார்த்து, "அடே, இந்த மூர்க்கனின் பிராணனை வாங்குவதற்கு ஏன் காலதாமதம் செய்கிறீர்கள்?" என்று கட்டளையிட்டான். உடனே அநேக ராக்ஷஸர்கள் ஆஞ்சநேயரைப் பிடிப்பதற்காக ஓடி வந்தார்கள். அந்த சமயம் மந்திரிகளின் சகிதம் விபீஷணன் அவ்விடம் வந்தான். (141)

[தியானம்

ராமா சீதா, நாராயணா, ஜயஜனக நந்தினி, ஜயசீதா, ஸகிகளுடன் கூடிய சீதே, என் பிரேமை நிலையே, என்னை வசம் செய்த தேவரிஷிஸ்துதா, உன் அரவணைப்பில் கிரீடிக்கும் ஸ்ரீராமனை, தாசரதி ராமனை, அயோத்யா ராமனை கனகபவன மணிமய சயனா குஞ்சபங்கஜநேத்ர கோமளபதி ராமனை எனக்கு தா அம்மா. கிருபாநிதி, பத்மபிரியே, சாருமதி, கனகபவனத்தில் ஜனகரின் பெண்ணாகிய சீதையுடன் ரமிக்கும் ரகுராஜா, "அடே ராமா," என்று கூவி அழைத்த இனகுலத்தோனே, உன் பிதா தசரதரை நீ எவ்விதம் சந்தோஷிப்பாயோ, அதுபோல அவனை அழைத்து கௌரவித்த பட்டாபிஷேக ராமா, கங்கா ஸரஸ்வதி ஸேவித கனகபவன் பிஹாரி, ஜகத்வந்தினி, ஜன ஆனந்தினி, ஜானகி, ரகுவீரநயனங்களைப் பார்க்கும் சகோரசந்தினி, வல்லபாப் பிரியப்ராண ராமா, திவ்யதம்பதிகளாகிற உங்க

ளுடைய பாதங்களில் படிந்திருக்கும் மகரந்தப் பொடிகளையே, யோகி ஜனங்களான விபீஷணர், கபிலர், நம்மாழ்வார். ஆஞ்சநேயர் அணிகிறார்கள். அந்த விபூஷணங்களை எனக்குத் தாருங்கள். வைதேஹி, என்ஸுரதரு, ஜயலக்ஷ்மி, உங்கள் சரணங்களைப் பற்றின எனக்கு உங்களுடைய சுக ஆனந்தங்களைத் தாருங்கள். பூபதிராம், ஸ்யாம சுந்தரவரனே, ஸ்ரீஜனக துலாரி, உன்னை பிரும்மன் வாக்காக கம்பர் சொல்லுகிறார். "உன்னைப் படைத்தாய் நீயென்றால் உயிர் படைப்பான் என்னைப் படைத்தாயெனு முறவு மேலாமே; என்கிறபடி, ஹே நரசிங்கா, நீ ஸ்தம்பத்தில் அழகிய சிங்கனாகி உன்னைப் படைத்துக்கொண்டதே பிரத்யக்ஷமாகக் காட்டுவதுபோலவும், வேதம் சொல்வதை அனாதியில் பரமாத்மன் தன்னைத் தானே படைத்துக் கொண்டான் என்கிறதை நிரூபிக்கிறது போலவும் விளங்கிற்று உன்னுடைய நரசிம்ம அவதாரம். இவ்வாறு தன்னைத்தானே படைத்துக் கொள்ளும் பிரபுவாகிய நீர், பரமசக்தியை உடைய நாராயணா, இந்த சராசரங்களடங்கிய உயிர்களைப் படைக்கின்ற சக்திதான் உனக்கில்லாமல் போயிற்றோ? இவைகளைப் படைப்பதற்காக, என்னை நீ படைத்தாய் என்று சொல்லப்படும் இந்தச் சொல் எத்தன்மைதாம்? பரம நாஸ்திகரான ராவணனையும் ஹிரண்ய கசிப்பையும் ஹிரண்யாக்ஷனையும் அடக்குவதற்காக மாத்திரமில்லை; என்னைப்போன்று கடவுள் இல்லை, என்று வாதிக்கும் துஷ்டர்களின் நாவுகளை அடக்குவதற்கல்லவா அவதரித்தீர்கள். பிரபோ, ஜனகரமணா, கண்ணன் கழலிணைகள் நண்ணு மனமுடையீர், எண்ணும் திருநாமம் திண்ண நாரணமே, என்று நம்மாழ்வார் வைஷ்ணவர்களுக்கும் சங்கப் புலவர்களுக்கும் ஒலித்த நாரண நாமம் என் நாவில் மணிபூஷணமாக விளங்காதா? அன்று நம்மாழ்வாரும் கம்பனும் பிரஹ்லாதனும் துருவனும் பரதனும் நாரதரும் செய்தபடி ஆடினான், அழுதான், பாடி அரற்றினான் சிரத்திற் செங்கை சூடினான் தொழுதானோடி யுலகெல்லாம் துகைத்தான் துள்ளி, ஜகத்ரக்ஷகன் சிங்கவடிவெடுத்து தூணைப் பிளந்து அதன் நடுவில் அவதரித்து பிரஸன்னமாய்ச் சிரித்துக்கொண்டிருக்கும்போது பிரஹ்லாதன் எவ்விதம் ஆனந்தித்தானோ, எவ்விதம் மேட்டழகியசிங்கர் தமது திருக்கரங்களை நீட்டி, திருமுடியைத் துளக்கி, பவளம்போலும் சிவந்த வாயைத் திறந்து, கடகடவென்று அந்த மண்டபமும் அதில் இருந்த நாதமுனிகள், தில்லை மூவாயிரம் பேர்கள் அதிசயிக்க, சிரித்து ஆர்பரித்தாரோ, அதுபோல ராமசீதா,

ஹரிவல்லபே, ரமாரமணு, நம்மாழ்வார் ஸம்பந்தம் கொண்ட என்னிடம் தயவு செய்து பேசமாட்டீர்களா? கருணை செய்ய மாட்டீர்களா? புருஷோத்தமா, முனிவர்களின் மானஸ ஸரோவரில் சஞ்சரிக்கும் பிரும்மஸ்வரூபமே, தேவர்களும் தொழும் நாதனே, பந்துவர்க்கங்கள் உம்மை ரகுநாதன் என்றும், உலகத்தோர் தாசரதி என்றும் சொல்லுகிருர்கள். ஜனகர் வீட்டில் சீதாபதி என்றும், சிநேகிதர்கள் ராமபத்ரன் ராமசந்திரன் என்றும், தசரதர் உன்னை "அடே ராமா" என்றும் அழைக்கிருர். பிராட்டியோ ராமாய ராமபத்திராய ராமசந்திராய வேதஸே, ரகுநாதாய சீதாயப்பதயே நமஃ என்று சொல்லியபடி நானும் சொல்லுகிறேன். எனக்கு அருள் தாருங்கள்.]

விபீஷணன் கரங்கள் குவித்து அதிவியைத்துடன் ராவண னிடம் நீதி சொல்ல ஆரம்பித்தான். "தூதர்களை வதம் செய்வது நீதிக்கு விருத்தம்" என்று வாதித்தான். "அவர்களை அவமானம் செய்யக்கூடாது. ஹே கோஸாயி, உமக்கு இஷ்டமிருந்தால் வேறு ஏதாவது தண்டனை கொடும்" என்று சொன்னதைக் கேட்ட மந்திரிகள் "இந்த நீதி உத்தமம்" என்று ஸ்லாகித் தார்கள்." (142)

இதைக்கேட்டு ராவணன் சிரித்துக்கொண்டு சொன்ஞன். "அப்படியாஞல் சரி, இந்த வானரத்தின் ஏதாவது ஒரு அங்கத்தை வெட்டி அனுப்பி விடுங்கள் என்று உத்திர விட்டான்." (143)

"எனக்கு நன்ருகத் தெரியும். இந்த வானரத்திற்கு அதன் வால் மிகப் பிடித்தமாயிருக்கும். இந்த வாலை துணியிஞல் சுற்றி அதற்கு எண்ணெய் வார்த்து, அதில் நெருப்பை வைத்து விடுங்கள்." (144)

"இந்த வானரம் வால் இழந்ததாக தன் எஜமானிடம்போய் அவனிடம் முறையிட்டு அவனை இங்கு அழைத்து வந்துவிடும். எவனுடைய பெருமையையும் கிர்த்தி பிரபாவங்களையும் இந்த வானரம் புகழ்ந்ததோ, அவனுடைய பிரபுத்வத்தை நாம் அப்போது நேரில் கண்டு விடலாம்." (145)

இந்த வசனங்களைக்கேட்ட ஹனுமார் மனத்திற்குள் சிரித் துக் கொண்டார். "தேவி சரஸ்வதி எனக்கு அனுகூலமாக இவனுடைய புத்தியைப் பிரேரணை செய்திருக்கிருள்," என்று எண்ணிஞர். இதற்குள் ராக்ஷஸர்கள் ராவணனுடைய வசனத் தைக் கேட்டு, மூர்க்கத்தனமாக ஹனுமாருடைய வாலில் நெருப்பை வைப்பதற்கு முனைந்தார்கள். (146)



ஹனுமான் பெரிய தேகத்தை எடுத்துக்கொண்டு, ஆகாயத்தின் மேலே பறப்பதற்கு இலேசாக தன்னை ஆக்கிக்கொண்டார். வெகு வேகத்துடன் அவர் இங்கு மங்கும் தாவி ஒவ்வொரு மஹலிலும் நெருப்பை வைத்து, லங்கை முழுவதையும் வெகு சீக்கிரத்தில் நெருப்பு மயமாக ஆக்கிவிட்டார்.

ஹனுமாருடைய வாலில் துணி கட்டக்கட்ட, அது பெரிதாகிக் கொண்டு போனபடியால், அதை முழுவதும் கட்டுவதற்கு துணியும் எண்ணெயும் அதிகமாகவேண்டியிருந்தது. லங்கையில் ஒரு துளி எண்ணெயையும் கந்தல் துணியையும் விட்டு வைக்காமல் எல்லாவற்றையும் உபயோகித்தார்கள். ஹனுமான் விளையாட்டாக தனது வாலைப் பெரிதாக்கிக் கொண்டிருந்தார். லங்கா நகரத்து ஜனங்கள் வேடிக்கை தமாஷா பார்ப்பதற்கு கூட்டம் கூட்டமாக வந்தார்கள். அவர்கள் எல்லோரும் ஹனுமாரை காலால் உதைத்து பரிகாசம் செய்து ஹிம்சித்தார்கள். (147)

டோலக் முதலிய பேரிக்கைகளை வைத்து, சகல ஜனங்களும் ஆரவாரத்துடன் கைகளைத் தட்டிக்கொண்டு நகர முழுவதையும் ஹனுமாரைச் சுற்றி காண்பித்தார்கள். அதன் பிறகு அவருடைய வாலில் நெருப்பு வைத்தார்கள். நெருப்பு உக்ரமாக எரிவதைக் கண்ட ஹனுமார் உடனேயே மிகச் சிறிய உருவத்தை எடுத்துக்கொண்டார். கட்டுக்களிலிருந்து விடுபட்டவராக தங்க மாளிகையின் கூரைமேல் ஏறித்தாவினார். ராக்ஷஸ ஸ்திரீகள் இதைக் கண்டு பயந்து போய் விட்டார்கள். (148)

அந்த வேளையில் ஹரிபகவானின் கட்டளையால் நாற்பத்தொன்பது மருத்கணங்கள் வேகமாக ஓடிவந்து பெரும் காற்றாக வீசினார்கள். ஹனுமார் தனது விஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு அண்டசராசரங்களை நடுங்கும்படி அட்டஹாஸ கர்ஜனைகள் செய்துகொண்டு, தனது சரீரத்தைப் பெரிதாக்கிக் கொண்டு ஆகாயமளவில் வளர்ந்து கொண்டு சென்றார். (14 )

அவருடைய பொன்மயமான ரூபம் மிக விசாலமாகவும் தேஜோ மயமாகவுமிருந்தது. அவர் எளிதில் பாய்வதற்கும் தாவுவதற்கும் எளியதாகவும் கனமில்லாமலும் இருந்தது. லேசாகவும் காணப்பட்டது. அவர் ஓடிப்பாய்ந்து ஒரு மஹல், இன்னொரு மஹல், இன்னொரு அரண்மனை என்று ஒவ்வொரு வீட்டிற்கும் ராக்ஷஸர்களுக்கும் ஸந்தாபம் உண்டுபண்ணுவதற்காக பாய்ந்து சென்றார். (150)

"ஆ கஷ்டம், அப்பா, அம்மா," என்று ராக்ஷஸ அழுகைக் குரல்கள் எங்கும் கேட்கப்பட்டன. (லக்ஷ்மிவானும் மஹா தேஜஸ்வியான) ஹனுமார் ஒவ்வொரு கட்டிடத்தையும் எரிக்க, லங்கை முழுவதிலும் நெருப்பு பரவியது. காற்றின் சேர்க்கையால் மிகுந்த வேகமுள்ளதாகவும், பலமுள்ளதாகவும் அக்னி ஜ்வலித்தது. எங்கு பார்த்தாலும் ராக்ஷஸர்களின் அழுகைக்

குரல்களும் விலலாபங்களும் கேட்கப்பட்டன. "இந்த சமயத்தில் நம்மை யார் காப்பாற்றுவார்கள்? இது சாதாரண வானரமல்ல. இதனுடைய வீர்யத்தையும் புத்தி சாதுர்யத்தையும், பயங்கரமான பராக்ரமத்தையும் கண்டால், யாரோ தேவன் வானர ரூபம் எடுத்து வந்திருப்பதாகத் தோன்றுகிறது. நான்கு புரங்களிலும் பிரளயகால அக்னி மாதிரி எரிந்து ஆகாயத்தைத் தொடுவதாகவிருக்கிறது" என்று ஸகல ஜனங்களும் கதறினார்கள். (151)

"ஸாதுக்களை அவமானம் செய்வதின் பலன் உடனேயே நமக்குக் கிடைத்துவிட்டது." லங்கா நகரம் அரசனில்லாத நகரம்போல காக்ஷி அளித்தது. ஹனுமார் ஒரு க்ஷணத்திற்குள் லங்கா நகர் பூராவையும் எரித்து விட்டார். ஆனால் விபீஷணனுடைய வீட்டை மாத்திரம் அவர் எரிக்கவில்லை. ஆச்சர்யம், என்று அவர்கள் சொன்னார்கள். (152)

[தியானம்

ராமசீதா நாரதரால் ஆஸ்ரயிக்கப்பட்ட ஸ்ரீசங்கர்ஷணரே திரிபுராந்தகரே, மஹாதேவரே, தேவதேவரே, உத்தவர், அக்ரூரர், அனந்தன், ஆங்கிரஸ்முனிவர், சித்ரகேது ஆகியவர்களால் ஆஸ்ரயிக்கப்பட்ட ஞான சக்தி வைராக்ய ஸம்பன்னரே, அஷ்டபாஹுக்களை உடைய ஹரிபகவானே, நீர்தானே ஸர்வ பூதங்களுக்கும் பூதாத்மா. பூதபாவனர். நீர்தான் ஹலாயுதர். உலகங்களைத் தாங்கி, போஷித்துப்போகங்களைக் கொடுத்து, எல்லாப் பொருள்களையும் விருத்தி செய்கிறவர். நீர்தான் வேதங்களாலும் நாதஸ்வரங்களாலும் ஸுஸ்வரமாக ராகதாள பாவத்துடன் கீர்த்தனங்களால் கீர்த்தனம் செய்யப்படும் சப்தபிரும்மம் என்றும், அதற்குமேல் உள்ள பரபிரும்மம் என்றும் சொல்லப்படுகிறீர். சாஸ்வதமான நீர் ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியாகவிருக்கிறீர். நீர்தான் ஸுஷுப்திஸ்வப்ன ஜாக்ரத துரியாவஸ்தைகளில் ஸர்வசாக்ஷியாக, ஜீவனுடைய சேஷ்டிதங்களைப் பார்த்து அனுபவிக்கிறீர். எந்த ஜீவன் உமது அருளால் ஞானவிக்ஞான ஸம்பத் உள்ளவனாய் பின்னமில்லாமல், மாயையாகிற குணங்கள் கார்யங்களைச் செய்கின்றன என்று தனது ஆத்மஸ்வரூபத்தில் ஈடுபட்டவர்களாக, உம்மிடம் பக்திகொண்டு, உமக்கு அடங்கியவர்களாக, சொல்லி ஞ்யோயத் பராத்மைகதர்சனம் என்றும் "சங்கர்வுணரே, ஓம் நமோபகவதே மஹாபுருஷாய மஹானுபாவாய மஹா விபூதிபதயே ஸகல ஸாத்வத பரிவ்ருட நிகர

கரகமல குடுமலோபலலித சரணுரவிந்தயுகள பரம பரமேஷ்டின் நமஸ்தே, என்கிற மந்திரத்தை அனுஷ்டிப்பவனுக, வாஸுதேவ ஸங்கர்ஷண பிரத்யும்ன அநிருத்த மூர்த்திகளை துர்யாவஸ்தை யில் (வாஸுதேவரூபத்தில்) ஷட்குணங்கள் (ஞானம் சக்தி பலம் ஐஸ்வர்யம் வீர்யம் தேஜஸ்) நிறம்பினவராயும், ஸுஷுப்தி அவஸ்தையில் (ஸங்கர்ஷணர்) ஞானம் பலம் நிரம்பியவராகவும் காணப்படுகிறீர். (ஞானமாவது ஜனன மரணங்களாகிய ஸம்சாரமார்க்கத்தில் வரும் ஜீவர்களுக்கு ஸ்ரமபரிகாரம் செய்வதற்காக அவர்களின் காரியங்களை தம்தம் காரணங்களில் அடக்குவதற்காக ஞானம் பலம் கொண்ட ஸர்வக்ஞத்வம் கொண்டவர்); ஸம்ஹரிக்கப்பட்ட ஜீவர்களை திரும்பவும் படைத்து ஐஸ்வர்யம் வீர்யம் என்கிற குணங்களால் காரியங்க ளாகிற பிரபஞ்சங்களனைத்தையும் தாங்குகிறவராகவும் ஜீவ னுக்கு ஸ்வப்னுவஸ்தையையும் (பிரத்யும்னர்) குறிப்பவராகவிருக் கிறீர். ஜாக்ரதா அவஸ்தையாகிற அநிருத்தர் ஸ்வரூபத்தில் மனஸ் தத்வமாயும், தேஜஸ்வீர்யத்துடன் இருக்கும் ஐஸ்வர் யங்கள் கொண்ட மூர்த்தியாகவும் விளங்குகிறீர். ஹே பிரபோ, சங்கர்ஷணரே, நீர்தானே மஹத்தாகவும், விக்ஞான மய பரமானந்த மூர்த்தியாக விளங்குகிறீர். ஆயிரம் தலைகள் கொண்ட ஆத்மாராமரே, சாந்த மூர்த்தியே, நிவிருத்தி தர்மத்தை உடையவரே, ஹ்ருஷீகேசரே, விஸ்வமூர்த்தியே, உம்மை ''மஹத்தே'' என்று சொல்லி நமஸ்கரிக்கிறேன். நீர் அனுமயர், ஸதஸத்பரர், அசிந்தநீயர், அவ்யயர், அக்ரர், புத்தி மனஸ் இந்திரியங்கள் யாவும் உம்மால் பிரேரணை செய்யப்படு கிறது. அதனுல் உமது மகிமையை யாரால் அறியமுடியும்? உமது வீர்யத்தினுல் நெருப்பு எரிகிறது. காற்று வீசுகிறது. உள்ளும் புரமும் வியாபித்திருக்கும் சங்கர்ஷண மூர்த்தியே, பிரும்ம மூர்த்தியே, உமக்கு ஆயிரம் நமஸ்காரங்கள். ஆகையால் ஜீவன் அனுபவிக்கும் ஸ்வப்ன ஜாக்ரத ஸுஷுப்தி அவஸ்தை களில் ஜீவன் மூலமாக நீர் அல்லவோ சகல ஆனந்தங்களை அடைகிறீர். அப்படியிருக்கும்போது, பரதந்திரனுன ஜீவன் உம்மையும் உமது மகிமைகளையும் எவ்விதம் தெரிந்துகொள்ள முடியும்? அதனுல்தான் உமது அருளாகிற பரஞான பரமபக்தி உமது அனுக்ரஹத்தால் ஏற்படவேண்டும் என்று அனந்த ஸ்வரூபியான ராமானுஜர் உம்மிடம் வரமாகக் கேட்டார். அப்பேற்பட்ட சேஷஸ்வரூபமாகிற வெள்ளைத்தாமரைத்தண்டு போல பிரகாசிப்பவரும், சுத்தஸத்வமும், நீலவர்ண ஆடை

உடுத்தியவரும் ஸ்புரத்கிரீட கேயூர கடித்ர கங்கணம், பிரஸன்ன வக்த்ர அருணலோசனம், ஸித்தேஸ்வரமண்டல பரிவ்ருதம், உத்தமஸ்லோகம், ஜகத்குரும், ஸாத்வத சாஸ்திர விக்ரஹம், நியமசாந்த மூர்த்தியுமானவரும், தேவதேவரும் அனந்த மூர்த்தியை நாரதரை முன்னிட்டு சரணம் அடைகிறேன். அவர்தான் என்னை ரக்ஷிக்கவேண்டும்.]

(திரிபுராரி, திரிபுராந்தகரான) சிவன் பார்வதிக்குச் சொல்லுகிறார். "கிரிஜா, எந்த (ஸங்கர்ஷண) பகவானால் சகல பிரபஞ்சங்களும் காரிய காரணங்களும் ஸங்கல்பிக்கப்படுகிறதோ, (பூதாத்மா, அஜிதர், ஸாதுக்களால் மாத்திரம் அடையப்படும் அதிகருணர், அப்பேற்பட்ட சதுர்மூர்த்தி ஸ்வரூபரான) ஸ்ரீராமனுடைய தூதன் ஆத்மராமனாகிற ஹனுமான். (பரமஹம்ஸர், ஸஹஸ்ரமூர்த்தியின் அந்தரங்க சிஷ்யன். பாகவத தர்மத்தைப் பரப்ப விருப்பமுள்ளவர். பரமகுரு. சுரரிஷி வந்திதர், அனந்தஸ்வரூபி. அப்பேற்பட்ட ஸவிதுவினிடம் மின்மினிப் பூச்சிகள் தங்கள் பிரபாவத்தைக் காட்டமுடியுமா? எவருடைய தரிசனத்தால் சகல மலங்களும் மஹாபாபபாதக கூட்டங்களும் ஜன்மாந்திரமாக வரும் கர்மபிரவாஹங்களும் வேறுடன் நாசமடைந்து பரபக்தி, பரஞான ஸம்பத்தை அடைவார்களோ, அப்பேற்பட்ட அனந்த மூர்த்தியாக விளங்கும்) ஆஞ்சநேயரிடம் நெருப்பு என்ன செய்ய முடியும்? அவருடைய இஷ்டப்படி லங்கா நகரம் முழுவதும் எரிக்கப்பட்டது. அதன் பிறகு அவர் சமுத்திரத்தில் குதித்தார்." (153)

தன்னுடைய வாலை ஜலத்தில் நனைத்தார். சிரமபரிகாரம் செய்துகொண்டு மறுபடியும் சிறிய உருவத்தை எடுத்துக் கொண்டு ஹனுமார் ஜனகரின் பெண்ணாகிய சீதையின் முன்பு தோன்றினார். (154)

ஹனுமார் கண்களில் பிரேமை கண்ணீர்களைச் சொரிந்து கொண்டு, தழுதழுத்தவராக, சொன்னார், "மாதா, நான் ரகுநாயகரிடம் செல்ல விரும்புகிறேன். அவருடைய மனம் சாந்திபெறுவதற்கு எனக்கு யோக்யமான அடையாளத்தைக் கொடும்." (எவ்விதம் பகவான் உமக்கு மோதிரத்தைக் கொடுத்தாரோ, அதுபோல எனக்கு, அவருடைய ப்ரீதிக்காக, அவர் எனது கைங்கர்யம், பரபக்தி, பரஞானம் பரமபக்தி ஆகியவைகளை ஸ்வீகரித்து, என்னை பரிபூர்ணனாகமாக்குவதும், அனன்ய பிரயோசனமாகவுள்ளதும், எனக்கு பரம அனுபவ ஆனந்தங்களை பிற்காலத்திலும் ஸ்மரிக்கும்போதே தரக்

கூடியதும் அம்மா, உனது ஸுப்ரஸாதத்தால், நான் ஸர்வகாலங்களிலும் நித்யகிங்கரனுக விருக்கக் கூடிய ஞானம் பலம் கொண்ட வீர்யமுள்ள ஐஸ்வர்யத்தை, ராமஜானகி ஸந்தேசமாக, (எனக்கு ராமானுஜன் அஷ்டாக்ஷரம் த்வயம், சர்மஸ்லோகம் ஆகிற மூன்றையும் கொடுத்தது போல,) எனக்கும் தாங்களும் ஒரு அடையாளத்தைப் பிரஸாதித்து அருளவேண்டும்'' என்று விண்ணப்பித்தார்.) அந்த சமயத்தில் தயா மூர்த்தியான சீதை சூடாமணியை அவிழ்த்து ராமனிடம் நிவேதிப்பதற்காக ஸமர்ப்பித்தாள். (ஹனுமாருடைய கரங்கள் தாமரைத் தண்டுகள் போல கீழே நீட்டப்பட்டன. மேலே தூக்கிய சீதையின் கரங்களிலிருந்து வானர ஸ்ரேஷ்டரான ஹனுமார் மணிரத்னமாகிற சூடாமணியைப் பிரதிகிருஹம் செய்துகொண்டார். அவர் சீதையை நமஸ்கரித்து, பிரதக்ஷிணம் செய்து மீண்டும் நமஸ்கரித்தார். சீதையை தர்சித்ததால், அவளிடம் ஏற்பட்ட ஆனந்தத்தால் அவர் மஹா அனுக்ரஹம் பெற்றவர் போல, மனத்தில் ஸ்ரீராமனை அடைந்து விட்டதாகவே நினைத்தார், அவருடைய சரீரம் மட்டிலும் சீதா ஸந்நிதானத்திலிருந்தது. மனக்கவலை நீங்கி, பெருமாள் பிராட்டி ஸம்பந்தம் பெற்ற சேதனன் திருமந்திரத்தை அடைந்த', அனன்ய சரணுன அதிகாரிக்கு திருமந்திரம் கை கூடுவது போல, ஞான ஆனந்தமயமான ஸ்வரூபத்தை அடைந்த பரம வைஷ்ணவன், ராமானுஜ நாதமுனி நம்மாழ்வார்களின் கிருபையால் ஸர்வ சேஷி, ஸர்வசரண்யன் ஸர்வ பிராப்யமான ஸ்ரீயப்பதியினுடைய திருவடிகளில் நித்யகைங்கர்ய ஆனந்த அனுபவத்தை பரம புருஷார்த்தமாகக் கேட்பானே, அதுபோல அன்று) ஹனுமார் பிராட்டி ஸந்நிதானத்தில் (திருமந்திர ரூபமாகிற) சூடாமணியைப் பிரதிகிருஹம் செய்து கொண்டு ஆனந்தித்தார். (தனது விஸ்வரூபத்தைக் காண்பித்து, சூடாமணியைப் பெற்றுக்கொண்ட ஹனுமார், தேவியின் ஸ்வரூபத்தையும் தயையும் பெற்றார். அவளுடைய மங்கள ஆசீர்வாதங்களையும் பெற்றார். அந்த சீதா ஆஞ்சநேய ராமனை லக்ஷ்மணபூர்வமாக நான் அடிக்கடிநமஸ்கரிக்கிறேன்.) (155)

[தியானம்

ஆஞ்சநேயா, நடேசா, ஆனந்த கந்தமூர்த்தி, உன் பாதங்களைப் பணிந்து, சீதாராம மூர்த்திகளை நான் நமஸ்கரிக்கிறேன். நாராயணு, சீதை உனக்கு பிரதான பூஷணமாக விருக்கிருள்.

அப்பேற்பட்ட பூஷணத்தை பூஷணம் பண்ணுவது போல அல்லவா என் ஆசாரியன் ஆஞ்சநேயர் விளங்கினர். ராமா, பூமலர்ந்த பின்புதான் மணம் வருகிறது என்கிறுப்போலே, இன்று என் தாய் சீதை பரம பாவனமாகவும் உன் விரதத்திற்கு பரமபூஷணமாகவும் விளங்குகிருள். அன்று ஸ்ரீமந் நாராயண கரகமலத்தில் வீற்றிருந்த சீதையின் கழுத்தில் ஆடகம், கிளிச் சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்கிற நால்வகைப் பொன்னுல் செய்யப்பட்ட மாசற்ற மணியாகிற சூடாமணி, பூஷணங் களுக்குள் உயர்ந்ததாகவிருந்தது. சீதை அதைக்கொடுக்கும் சமயம் அன்புடன் நோக்கும் ஆஞ்சநேயரை, புத்ரவாத்ஸல் யத்துடன் பார்த்தாள். லக்ஷ்மி விலாஸம் கொண்ட லக்ஷ்மிக்கும் திருவாக வல்லவோ இந்த ஹனுமார் விளங்கினர். அண்ட கடாகங்களை திருநாபி கமலத்தில் தாங்கும் பத்மநாபன் இன்று ஆஞ்சநேயரின் நற்செய்திக்காக ஒரு கற்பகாலமேயன்றி, அநேக கற்பகாலம் அல்லவா காத்துக்கிடக்கிருன். ஆஞ்சநேயா, மாருதி, உன் கடாக்ஷத்தால், உனது கல்யாண குணங்களை தானிய ராசிகளாகக்கொண்டு அளந்தால் அவற்றுள் ஒரு ராசியாயினும் மாளாது. அப்படி மாளாது காலம்தோறும் சந்தர்ப்பம்தோறும் உன் உதாரசக்தி ஐக்கிய ஆனந்த நடேசனுடைய பெருங் குணங்களை உடைத்த புருஷோத்தமனே, உனது நினைவினுல், அன்று ஆதிப்பிரானுகிற நாராயணன் தேவர்களுக்கும் தனக்கும் அம்ருதத்தையும் ஸ்ரீரத்னமாகிற மஹாலக்ஷ்மியையும் அடைய தனது திருக்கரங்களால் பாற்கடலைக் கடைந்தான். அதைப் போல் இன்றும் ஆஞ்சநேயா, நீ என்போன்ற ராமதாஸர்களுக்கு சீதாராம அமிர்தமாகிற பராமாத்மாவின் சுகுணங்களை தானிய ராசிகளாகவும், பல்லாயிரம் கோடி அண்டங்களுக்கு மாதாபிதாக் களானவர்களும் என் கீர்த்தி செல்வங்களுமாகிற மஹாலக்ஷ்மி நாராயணனை ராம சீதா தம்பதிகளை, உன் உதவியினுல் அளவுக் காரனகச் செய்கிருயே. அன்று கம்பர் பரம சந்துஷ்டி அடைந்து பரமாத்மாவின் சுகுணங்களை பிரம்மனை அளவுகாரனுக நியமித்து உருவப்படுத்தினர். அதுபோல அல்லவா, இன்று துளசிதாஸர் மாருதியின் உதவியினுலும் வாக்குக்களாலும் சீதா ராம குணங்களை அளப்பதற்கு அளவுகாரனுக நியமித்து எனக்கு உதவியளிக்கிருர். இப்பேற்பட்ட கருணுமூர்த்திகளுக்கு அடிமை பூண்டல்லவோ, பல நாட்கள் வாழவேண்டும். ஸ்ரீரங்கதயிதே, ரங்கநாதா, உன்னைத் துளசிதாஸர் கம்பர்

ஆகியவர்களை முன்னிட்டு, நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கின்றேன். இன்று எனக்கு அருள் தாரும்.]

ஜானகிதேவி [ரகுவீரனுடைய பூஷண நங்கையாக விளங்கும் மஹா உத்தமி, இன்று ஹனுமானை புத்ரனை ஆனந்த நடேசரைப்போல,] பூரணகாமராக விளங்கும் மாருதியைப் பார்த்து, மஹாகிருதக்ஞையுடன் சொல்ல ஆரம்பித்தாள். "பிள்ளாய், (அந்த ஸ்ரீதரனுகிற) ஸ்ரீராமனுக்கு என்னுடைய புனிதமான (பிரும்மநிஷ்டையுடன் கூடிய) வணக்கத்தை ஆயிரம் தடவைகள் ஸமர்ப்பித்து வை. (என் பிரபு எல்லா விதத்தாலும் கருணை உள்ளவர். உன்னை இவ்விடம் அனுப்பி வைத்து, என் கிலேசங்களை அறிந்துவரும்படி செய்ததயாளு. கிருதகிருத்யனுன உனக்கும், துக்கங்களிலிருந்து காப்பாற்றி பக்தர்களின் ஆசைகளை பரிபூர்ணம் செய்யும் ஆனந்த கந்த மூர்த்திக்கும் நான் எவ்வாறு கைம்மாறு செய்யமுடியும்?) நான் சொல்லியதாக அந்த தீனதயாளுவான ஸ்ரீராமனிடம் சொல்." "பிரபு, ஆஸ்ரிதவாத்ஸல்ய, கற்பதரு, உமக்கு சரணுகதர்களை ரக்ஷிப்பதே தர்மவ்ரத தீக்ஷை. இதை ஞாபகம் செய்துகொள்ளும். தயாநிதி, நான் உம்மை என் நாதர், எனது மஹத்தான கஷ்டங்களையும் போக்கும் பிரணதபாலர், பிரணதார்த்திஹரி என்று அறிந்துகொண்டு, எனது ஸ்வரூபத்துடன் உமது பாதாரவிந்தங்களை வந்து அடைந்து, உமது ரக்ஷணத்தை வாய்விட்டுக் கேட்டுப் பிரார்த்திக்கிறேன்." (156)

"புத்ர, பிரபுவுக்கு இந்திரபுத்ரனுகிற ஜயந்தனுடைய கதையைக் ஞாபகப்படுத்து. [அவர் என்னைப்பார்த்து பரிஹாஸித்ததை ஞாபகப்படுத்து.] அப்பொழுது அழுதுகொண்டிருந்த என்னைப்பார்த்த பிரபு தர்ப்பையினுல் பிரும்மாஸ்திரத்தை ஆரோபித்து எறிந்ததை, கோபாக்னியுடன் விருந்த காலாந்தகன்போல ஜ்வலித்ததை ஞாபகப்படுத்து. ஒரு மாதம் என்கிற தவணையில் நான் அவரை எதிர்பார்ப்பதாகச் சொல். அவர் என்மீது தயையுடன் பாராவிடில் நான் ஜீவித்திருப்பதை வீணுகக் கருதுவேன், என்று சொல்." (157)

"ஹனுமான், நீயோ எல்லாவற்றையும் பார்த்திருக்கிருய். நீயே சொல். அமித பராக்ரமமானவரும் மஹாத்மாவுமான ஸ்ரீராமனின் பெருமைக்கு தக்கவாறு, நான் இவ்விதம் கஷ்டப்படுவது எப்படி பொறுத்தமாயிருக்கும்? நீ போக விடை கேட்கிருய். உன் முகத்தைப்பார்த்து நான் மனம் ஆறுதலுடனிருந்தேன். புத்ர, நீ போனபின்பு மறுபடியும் இதே இருள்

சூழ்ந்த தினங்களும் பகலும்தானே என்னுடன் கூடவிருக்கும்? நான் எவ்விதம் இனி காலம் கழிப்பேன்?'' (158)

ஜனகரின் பெண்ணின் வணக்கத்தைக் காட்டுவதும் ராம பக்தியுள்ளதும் புத்திரவாஞ்சையுடன் கூடியதுமான வசனங்களை ஹனுமார் கேட்டு அவளுக்கு ஆறுதல் கொடுக்கும்படி வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தார். ''தாயே, ஸ்ரீராமன் சீக்கிரமாக வானரர்கள், கரடிகளால் சூழப்பட்டு இவ்விடம் வருவார். தைர்யமாக விருங்கள். நான் உடனே போய் உங்களுடைய கஷ்டங்களைப் போக்குவதற்கு ஸ்ரீராமனிடம் எல்லாம் சொல்லுகிறேன், கவலைப்படாதீர்கள்,'' என்று கூறி, ஹனுமார் பிராட்டியின் சரணகமலங்களில் விழுந்து நமஸ்கரித்து, ஸ்ரீராமசந்திரனிடம் திரும்பி வருவதற்கு முயற்சித்தார். (159)

புறப்படும்போது, அவர் மஹாத்வனியுடன் பெரிய கர்ஜனை ஒன்று செய்தார். அந்த பேரிரைச்சலைக் கேட்டு ராக்ஷஸசிசுக்கள் கர்ப்பத்திலிருந்து நழுவின. சமுத்திரக் கரையிலிருந்து புறப்பட்டு ஆகாயமார்க்கமாகச் சென்று அக்கரைக்கு வந்தபோது சீக்கிரமாகவே வந்துசேர்ந்தார். அங்கே அவருடைய சிநேகிதர் களான வானர சைன்யங்கள் ஆவலோடு சந்தோஷ கூக் குரலுடன் அவரை வரவேற்றன. அவர்களுடைய சப்தங்களை ஹனுமார் கேட்டார். (160)

ஹனுமார் சந்தோஷத்தினால் உத்ஸாஹம் பொங்க எல்லோரையும் கைகூப்பி வணங்கி, பிரஸன்ன முகத்துடன் காணப்பட்டார். அவருடைய முகத்தில் உள்ள சந்தோஷத் தைக் கண்டு, வானரர்கள் தங்களுக்கு புதிதாக உயிர் வந்தது போல களித்தார்கள். வானரர்கள் பரஸ்பரம் பேசிக்கொண்டார் கள். ''ஹனுமாருடைய முகம் பிரஸன்னமாக விருக்கிறது; தேஜஸ்ஸுடன் அவர் பிரகாசிக்கிறார்; அவரைப்பார்த்தால் ஸ்ரீராமசந்திரனுடைய காரியத்தை வெற்றிகரமாக முடித்து வந்திருக்கிறார் போலத் தோன்றுகிறது.'' (161)

ஹனுமாரும் அவர்களிடம் வந்துசேர்ந்தார். ஒவ்வொரு வரையும் கண்டு குசலபிரஸ்னம் செய்தார். அவர்களிடம் அவர் சகல விருத்தாந்தங்களையும் ஒன்றுவிடாமல் சொன்னார். அந்த விருத்தாந்தங்களைக்கேட்ட வானரங்கள் மழைஜலம் இல்லாமல் வாடிவருந்தும் மீன் குஞ்சுக்கள் முதல் மழை விருஷ்டியை அடைந்து எவ்விதம் சந்தோஷம், வருத்தம் இரண்டையும் ஏககாலத்தில் அனுபவிப்பார்களோ, அதுபோல எல்லோரும் மனத்தில் சந்தோஷமும் ஜானகியின் சொற்களால்

ஏற்பட்ட கவலைகளையும் கொண்டவர்களாகக் காணப்பட்டார்கள். (162)

[தியானம்

ஹே சீதே, ஸுரநாயகி உன்னுடைய பாதி விரத்யசீலமும் கண்கொள்ளாத ராமனிடமுள்ள பதிப்ரேமையையும் நினைத்துப் பார்த்தால், அன்று உமாதேவி சம்புவை ஆராதித்ததுபோலத் தோன்றுகிறது. ஹே உமாலக்ஷ்மி, ராமனுடைய கரபோருவே, உன்னைக் கீர்த்தனம் செய்து அல்லவோ, ஸந்துஷ்டி அடைய வேண்டும். ராமனுக்கு மணிபூஷணமாக விளங்கும் நாயகி, ஜகத்ஸர்வமும், கும்பஜரின் காவேரிக்கு நாயகியே, ரங்கநாயகி, என்று உன்னை வந்தனம் செய்கிறதல்லவா. ஸ்யாமா, ஹ்ரீங்கார மந்திரங்களால் உபாஸிக்கப்படும் லலிதையே, ஶ்ரீவத்ஸமார்பனுகிற ராமனுடையதயிதே, உன்னைப்பார்த்து அல்லவோ மேதாவியான ஆஞ்சநேயரும் ராமானுஜரும் வேதாந்த தேசிகரும் பட்டரும் கிருதகிருத்யர்களாக ஆனார்கள். சாவித்திரி, மஹேசரின் உமாலக்ஷ்மியே, ஸீமந்தனி, ஜயஜய ஜனகநந்தினி, ஜகத்வந்தினி, ஜனஜன ஆனந்தினி, ஜானகி, ரகுவீரனுடைய சந்திரவதனத்துக்கு சகோரபக்ஷிபோலவிருக்கும் ஸுநயனு, உன்னை மனத்தில் தரித்துக்கொண்டு என் அண்ணல் ஆஞ்சநேயர், "திருவேங்கட மலையில் வீற்று அமர்ந்திருக்கும் என் வேங்கடபிரானே, ராக்ஷஸர்களுக்கு அரியாய்த்தோன்றி இலங்கைபதியை விபீஷணனுக்கு ஈந்த கோமானே, எனது சிந்தாமணியே, திருவேங்கடமேய எந்தாய், இனியான் உன்னை என்றும் விடேனே, வேங்கடமாமலையே, வானவர் போற்றும் மணிவண்ணன் எம்மானே, அண்ணு, அலங்கல் துளபமுடியாய் அருளாய் நின்ற ஆராஅமுதமே, எனக்கு அருள் ஆனுயே" என்று சீதா தியானத்தினுல் ஆஞ்சநேயர் திருவேங்கட மாமலையில் வீற்றிருக்கும் சேஷநாயகனுகிற ஶ்ரீராமமூர்த்தியை மனத்தினுல் சரணம் அடைந்தார். அந்த வேங்கடமூர்த்திக்கு ஆஞ்சநேயரைப் புறமாக வைத்து, ஆற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே, பற்றேல் ஒன்றுமிலேன், நீங்கள்தான் என்னை ஆட்கொள்ளவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.]

ரகுநாதனைக் காணச்செல்லும் வானர வீரர்கள் போகும் வழியில் பெரும் காவலில் காக்கப்படும் பழங்கள் நிறைந்த மதுவனத்தைக் கண்டார்கள். அங்கதனுடைய ஸம்மதம்

பெற்று அவர்கள் தேனையும் பழங்களையும் உண்டு களித்தார்கள். அந்த மதுவனத்தைக் காக்கும் வீரர்கள் தடுக்கும் சமயம், அவர்களை வானர வீரர்கள் பயமுறுத்தி விரட்டினார்கள். (163)

பயமடைந்த வானர வீரர்கள் சுக்ரீவனிடம் சென்று "யுவராஜாவான அங்கதனின் உத்தரவுமேல் சகல வானர வீரர்களும் மதுவனத்தை நாசம் செய்கிறார்கள்" என்று விக்ஞாபித்தார்கள். இந்த விஷயத்தைக்கேட்ட சுக்ரீவ மஹாராஜர் மஹா ஆனந்தமடைந்தார். அவருடைய மனத்தில் ஸ்ரீராமகாரியம் இனிமையாகவும் ஸம்பூர்ணமாகவும் பூர்த்தி ஆக்கப்பட்டது என்று எண்ணம் எழுந்தது. பிரபுவிற்கு நாம் ஆனந்தம் செய்யும் கைங்கர்யம் இனிது செய்து முடிக்கப்பட்டது என்று அவன் நினைத்தான். (164)

சீதையைப் பற்றிய பரமமங்களச் செய்தியை அடைந்திரா விட்டால் இவர்கள் மதுவனத்தின் உயர்ந்த தேனையும் பழங்களையும் எவ்விதம் சாப்பிடத் துணிந்தார்கள்? இந்தவிதமாக சுக்ரீவன் யோசனை செய்துகொண்டிருக்கும்போதே, வானரக் கூட்டங்கள் வந்துசேர்ந்தன. (165)

சகலரும் சுக்ரீவ சரணங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். கபீஸ்வரரான சுக்ரீவன் அவர்களை மஹா பிரேமையுடன் [கிருத புண்யர்களை வரவேற்பதுபோல] வரவேற்றான். பரஸ்பரம் ஸ்நேககுசலங்களை விசாரித்த பின்பு வானரர்கள் சுக்ரீவனிடம் நிவேதனம் செய்தார்கள்: "ஸ்வாமி, ராமகிருபையினால் எங்களுக்குக் கொடுக்கப்பட்ட காரியம் ஜயகரமாகவும் விசேஷ அனுபவங்களுடனும் பூர்த்தி செய்யப்பட்டது." (166)

"நாதரே, இந்த காரியம் முழுவதும் ஹனுமாரால் செய்யப்பட்டது. அந்த மஹானுபாவரால் எங்கள் உயிர்கள் காப்பாற்றப்பட்டன." இதைக்கேட்ட சுக்ரீவன் மஹானந்தத்தை அடைந்து ஹனுமாரை ஸம்மானம் செய்தார். ஸகல வானரங்களுடனும் சுக்ரீவன் ரகுபதியினிடம் சென்றார். (167)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மிநிவாஸா, சீதாரமணா, ராமா, உன்னை ஆஞ்சநேயர், தியாகராஜர் சுக்ரீவன் வானராதிகளை முன்னிட்டு சரணமடைகிறேன். அவர்களுடைய மனோபாவம் "ஐயோ சீதை கஷ்டப்படுகிறாளே, இவளுக்கு இத்தனைகஷ்டமா" என்று இருந்தது. ராமா, கருணையுள்ள காகுத்ஸ குலத்தில் பிறந்த நீஸர்வஸங்கத்தியாகனாக வனம் சென்றாய். ஜடை

அணிந்த முனி ஆனாய். ஒருவேளை ராவணனிடம் கருணை கொண்டவனாய், சீதாதேவியைக் காப்பாற்றாமல் பேசாமலிருந்து விடுவாயோ, என்கிற பயத்தினால் சீதை அழுதாள். ஆனால் ராமா, உன்மனதில் யிருந்த எண்ணமோ "இந்த ராவணன் நம்மை அழைக்கிறான்; நாம் அவனிடம் போகுமுன் ஆஞ்சநேயரை விட்டு ஸாம உபாயத்தினால் திருத்திவிடலாம்" என்று நினைத்தாய் போலும். இந்த ராவணனோ பிராட்டியை ராமனிடமிருந்து பிரித்தால், பிராட்டி லோலனாக ராமன் எழுந்தருள்வான் என்று நினைத்தான். உனது அவதார ரஹஸ்யம், நீ மானிடனாக நடப்பது; தேவமாதர்களின் சிறையை விடுவிப்பது; ஹனுமத் பிரபாவத்தை வளரவைப்பது; ராமதாஸர்களிடம் அன்பு கொள்ளுவது; சகோதர வாஞ்சையும் மனைவியினிடம் உள்ள வாஞ்சையைப் போன்றது. அதுமாத்திரமில்லை. மனிதனாகப் பிறந்து ராஜதர்மத்தின்படி கௌரவமாகவாழ்வது; பிறர் கௌரவத்தையும் காப்பது; உன் மானத்தையும் சீதையின் கௌரவத்தையும் காப்பாற்றுவது ஆகியவை அல்லவா. சீதை சாமரி மானின் வால் வேண்டும் என்று சொன்னதற்காக அந்த வாலை மாத்திரம் அறுக்கச் செய்யும் ஒரு அஸ்திரத்தை ராமா, நீ வனத்திலிருக்கும்போது விட்டாய். அந்த வால்போனால் தனது கௌரவம் போய், தன்குலத்திலே தன்னைச் சேர்த்துக் கொள்ளமாட்டார்கள் என்று பயந்து அந்த மானமுள்ள சாமரி மான் தனது தலையை தன் முன்னிரு கால்களுக்கு நடுவே புகுத்தி தன் உயிர் இழந்தாலும் பரவாயில்லை வாலைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்று யத்தனித்தபோது, அதைப் பார்த்து வாசாமகோசர பலமுள்ள நீ இன்னொரு பாணத்தை வீசி முதல் பாணத்தின் எண்ணங்களை நடைபெறாதபடி வியர்த்தமாக்கினாய். நீலமேனி ஐயா, என் நெஞ்சில் நிறைகொண்டாயே, சரணாகத ரக்ஷக, உனக்கு விஸ்வஸ்ய மாதரம், காமதேனு என்று சொல்லக்கூடிய ஜகன்மாதாவை அதர்மமாக உன்னிடமிருந்து ராவணன் பிரித்து மோசம் போனான். ஆனால் இந்த ஆஞ்சநேயரும் சுக்ரீவனும் வானரர்களும் பிரிந்துபோன பிராட்டியை உன்னிடம் கூட்டிச் சேர்த்து வைத்தார்கள். அதனால் அவர்கள் மாதா பிதாக்களான உங்களின் கருணையையும் ஸ்ரேயசையும் எல்லாக் காலங்களிலும் அடைந்தார்கள். ராம சீதா, நீங்கள் நெஞ்சுக் கிருள்கடிதீபம் அடங்கா நெடும் பிறவி நஞ்சுக்கு நல்லமுதமாக ஆனீர்கள். ராவணன் கருக்கொண்டு உங்களை வஞ்சித்ததின் காரணமாக அழகனாகிற உன்னைக் கண்டு அஞ்சுபவன் ஆனானே!! ஹே

பகவதி உனது பவளவாய்ச் சொல்லையும் மீறிய ராவணன் திமிர் கொண்டு, ஆஞ்சநேயர் போல ஸதாசார்யன் சொன்னதைக் கேளாமல், அய்யன் கழற்களில் அடிபணியாமல், பேராதரவை இழந்தானே. என் ஆஞ்சநேயர் சேம நல் வீடும் பொருளும் தர்மமும் காமமும் என்றவைகளுள் நான்கிலும் ராமனுக்கே, என் கண்ணனுக்கே, ஆமது காமம் அறம் பொருள் வீடு என்று உரைத்தான் அந்த வானர வாமன சீலன். அவன் வழியில் நடந்துவரும் எனக்கு மாதவனே, எங்கள் மாமலராள் நாயகனே, அண்ணல் ராமானுஜனைப் போல, நல்ல ஞானம் தலைக்கொண்டு என்னையும் ஆள்வர், காக்கவர், நீதான் என்று ஆஞ்சநேய தியாகராஜ ராமானுஜர்களை சரணமிட்டு, சீதாராமா, நாராயணா, உங்களை சரணமடைகிறேன்.]

என் பிரபு ராமசந்திரன், (கருணா காகுத்ஸன், லக்ஷ்மணனிடம் உள்ள அன்பினால் சீதையைப்பற்றி கடும் நெஞ்சத்துடன் காத்துக் கிடக்கும் வீரன், தயாளன், மானத்தைப் பெரிதாகக் கருதுபவன்,) வானரர்கள் காரியத்தைச் சாதித்துவிட்டார்கள் என்று கண்டுகொண்டார். வானரர்கள் சந்தோஷத்துடன் வருவதைக் கண்டதிலிருந்து அவருடைய மனம் விசேஷ சந்தோஷத்துடன் விளங்கியது. அந்த சமயம் இரு சகோதரர்களும் ஸ்படிகச் சிலையின்மீது உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ஸகல வானரர்களும் பிரபுவினுடைய (அதிமானுஷ சேஷ்டிதங்களைச் செய்த வாமனன் மண் அளந்த) பாத சரோஜங்களில் பக்தியினால் ஈடுபட்டு சரணம் அடைந்தார்கள். (தேவர்களின் காரியத்தை ஸாதிக்கும் உபேந்திரனைப்போல, ஞானபக்தி வைராக்யம் கொண்ட மஹாத்மாவாகிய) ராமன், (பிராட்டியைப் பிரிந்து வற்றினதும் குளிர்ந்ததும் உதார மனத்தினால் ஏற்படும் வள்ளல் தன்மையை இழந்தவன்; இன்று மீண்டும் இந்த ஆஞ்சநேயாதி வானரங்களால் பிரபன்னர்களின் உபயோகத்திற்காக, மங்களனும் மங்களம் என்கிற சீலாமூர்த்தியாகிற) சீதையைப் பற்றி நினைத்தான். (168)

(ரகுபதி கருணையே உருக்கொண்டவன். பிராட்டியின் பிரிவினால் கருணை தன் குணத்தைக் காண்பிக்காமல் அடங்கியிருந்தது. காகாசுரனையும் ரக்ஷித்த பிராட்டி அவனிடம் இல்லாதபோது அவன் வாலியிடம் எவ்விதம் கருணை காண்பிப்பான்?) இன்று அவனுக்கு இந்த வானரர்கள் தீனர்களாகவும் ரக்ஷிக்கப்பட வேண்டியவர்களாகவும் தோன்றியது. ஆனால் அவர்கள் பெரும் கார்யம் செய்துவிட்டு அடங்கி, ராமனிடம்

அன்பையே வேண்டினுர்கள். ரகுவீரன் ஒவ்வொரு வானர வீரனையும் கண்டு குசல பிரஸ்னம் செய்தான். ஸகலரும் சொன்னுர்கள் "ஸ்வாமி, இப்போது குளிர்ந்த உதார மனத்தை உடைய உங்களுடைய தர்சனத்தைக் காண்கிறோம். எங்கள் க்ஷேமத்திற்கு என்ன குறைவு? (169)

ஜாம்பவான் சொன்னுர், "நாதா, ரகுராய், கேளுங்கள். ஸ்வாமி தாங்கள் யாரிடம் கருணை உள்ளத்துடன் இருக்கிறீர்களோ, அப்போது அவர்களுக்கு நிரந்தரமாக ஸகல கல்யாணங்களும் மங்களங்களும் ஏற்படுகின்றன. தேவதைகள் மனிதர்கள் முனி ஜனங்கள் ஸகலரும் தங்களுடைய கிருபையினுல் ஸந்துஷ்டி அடைகிருர்கள்." (170)

"அவர்களே உலக வாழ்வில் விஜயர்கள். அவர்களே மகத்தான தனம், சுகம் பெற்றவர்கள். அவர்கள் சீதாராம கிருபையினுல் சகல காரியங்களிலும் ஜயமடைந்து, ஸ்ரேயசை அடைகிருர்கள். (இங்கு தான், ஸ்வாமி, அந்த மஹாத்மாக்கள் "இது பகவத் திருவுள்ளம்" என்று அத்திகிரி அருளாளர்க்கு அடைக்கலம் நான் புகுந்தேன் அவன் அருளே இது; என்று அந்தரங்க ப்ரீதி கொண்டு வாழும் வைஷ்ணவன் போல, தன் நிலே ஸ்வஸ்வரூபம் உணர்ந்து, திருமகளும் திருவடியும் திருவருளும் தெள்ளறிவும் எல்லாம் அருள் வரதனே, என்று நினைப்பூண்டு, அருளாளன் அடியே ஆறு பயன் என்று வாழும் மஹாவினயமும் அவர்களிடம் குடிகொள்ளுகிறது.) பிரபு, அந்த வினயத்தினுல் அவர்கள் குண ஸமுத்திரம் என்று கல்யாண குணங்களின் இருப்பிடமாகச் சொல்லப்படுகிருர்கள். இந்த ராம சீதா தயையைப் பெற்றவர்கள் சிரஞ்சீவியாகப் புகழுடன் எங்கும் செல்வதற்கு தடைகள் ஒன்றுமில்லாமல் மூன்று லோகங்களிலும் மிக்க கீர்த்தியுடன் பிரகாஸிக்கிருர்கள். அவர்கள் தயை ஸம்பன்னர்களானபடியால் பயமற்றவர்கள். அப்பேற்பட்ட பகவத் கிருபையை இன்று ஸ்வாமி, தங்கள் கிருபையால் நாங்கள் அடைந்தோம். தங்களால் நியமிக்கப்பட்ட காரியத்தில் வெற்றி அடைந்தோம். எங்கள் ஜன்மத்தின் லாபத்தை தங்கள் கிருபையால் அடையப்பெற்றோம்." (171)

நாதா, எங்கள் குரு, பவனசுதனுகிற ஆஞ்சநேயர் செய்திருக்கும் காரியங்கள் ஆயிரக்கணக்கான முகங்களால் வர்ணிக்க முடியாது. நான் எவ்விதம் சொல்வேன்? (இந்த மஹா பாக்யவான், அடக்கசீலன், ராம சீதா தயாபரன் அன்று முக்காலமெல்லாம் முகில்வண்ணன், வைகுந்தன் என்று ராமானுஜனடிகீழ்

வாழ்ந்த கூரத்தாழ்வானைப்போல ராம சீதா அடியின்கீழ் வாழும்) இந்த ஹனுமான், மஹத்தான (குருவாகிய) உமக்குச் சேவை செய்தான்,'' என்று எல்லா விருத்தாந்தங்களையும் ஒன்றுவிடாமல் எடுத்துச் சொன்னார். ஹனுமாருடைய சுந்தரமானதும் அற்புதமான காரிய விசேஷங்களை ரகுபதி ஸ்வாரஸ்யமாகக் கேட்டார். (172)

கிருபாநிதி அவரைப்போல சொல்லத், ஸ்மரிக்கத் தகுமோ, அவர் மனம் வெகு சந்தோஷத்தை யடைந்தது. "நீங்கள் செய்தது சரி'' என்று ஆமோதித்து சந்தோஷப்பட்டார் பிரபு. (சீதையின் தரிசனம் பெற்ற அண்ணல் ஆஞ்சநேயர் சீதையின் அனன்யகதி, அனன்யார்ஹ சேஷத்வத்தை விளக்கிக் கூறும் சமயம், ரகுபதிக்கு மீண்டும் கருணை பொங்கி வழிந்தது. தன் மானத்தையும் ரகுகுலத்தின் பெருமையையும் காத்த உத்தமி என்று மனத்திற்குள் எண்ணமிட்டான்.) தயை பொங்கிப் பொங்கிவர, அவன் ஹனுமாரை தழுவினான். (பிராட்டியின் முலைத்தடங்கள் பதிந்த) தன் விசாலமான மார்பினால் அவன் ஹனுமாரைக் கட்டி அணைத்தான். (அன்று உமையினால் தழுவப்பட்ட பசுபதி இன்ப ஆனந்தமடைந்ததுபோல, பிராட்டி பெருமாள் ஸம்பந்தம் பெற்ற ஆஞ்சநேயர் இன்று ஆனந்தித்தான்.) அதன் பிறகு ஹனுமாரை மீண்டும் தழுவி, ரகுராய் சொல்லலானார், "பிள்ளாய், மீண்டும் சொல், விளக்கிச் சொல். என்னைவிட்டுப் பிரியாத சீதை, (க்ஷேத்ரக்ஞன் புத்திபோல ஐக்ய ஸ்வரூபத்தைக் கொண்ட என் சிதை,) எந்தவிதமாக வாழ்ந்து கொண்டு, என் பிரிவாற்றமையினால் ஏற்படும் தாபங்களை சகித்துக்கொண்டு, எவ்விதம் பிராணனை தரித்துக்கொண்டிருக்கிறாள்?'' (173)

[தியானம்

நாராயணா, ராஜகோபாலா, ஸ்ரீ கனகாங்கி, காவேரி ரங்கா, வைபோக ரங்கா, ஸ்ரீ தியாகராஜா, ஹனுமார், துளசிதாஸர் கதறுகிற மாதிரி உன் பாதங்களை, "மாம்'' என்று உன்னால் அர்ஜுனனுக்கு சுட்டிக் காண்பிக்கப்பட்ட உனது கிருஷ்ண ரம பாதங்களை எனக்கு தரமாட்டாயா? தேனு ரங்கா, உன்னையே ரமித்துப் பார்த்துக்கொண்டிருக்கும் பூமிபிராட்டியின் புதல்வியான மாதவியாகிற என் தாய், புவனேஸ்வரி, ஸர்வலோக ஜன ரக்ஷகி, பரம பவானி, ஆத்மா ராம தியான யோகேஸ்வரி, தன் பாதங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் அகிலாண்டேஸ்வரி,

எந்த பக்தர் எப்போது, எந்த க்ஷணம் பகவானிடம் நெருங்க பயப்பட்டு என் பாதங்களைச் சரணமடைகிருனே,' அவனை உஜ் ஜீவிப்பதற்காக, நான் காத்துக் கொண்டிருக்கிறேன் என்று விளங்கும் ராம தியான பரமேஸ்வரி, எனக்கு ராமனிடம் புருஷ காரம் செய்யமாட்டாயா? தாயே, உன்னிடமுள்ள ஞானம் என்னைப் பரவசப்படுத்துகிறது. பகவானிடம் தன்னை அர்ப் பித்துக் கொண்ட சேதனன் உன்னுல் அனுஷ்டிக்கப்பட்ட தர்ம பூதஞானம் எனப்படும் மஹா விஸ்வாசத்தைப் பூர்வமாக ஸங்கல் பித்து, தனது ஸ்வரூபமாகிற பரதந்திரத்தால் உனக்கு அடிமை யாகக் கடவேன் என்கிற ஞான பாவத்தால், ஸ்வாமி, உனது திருவடிகளையையே நான் தஞ்சமாகக் கொள்வேன்,'' என்று நம்மாழ்வார் காட்டிய அருள் பிரஸாதத்தினுல் கண்டு அறிந்து, ஜீவனுகிற நான் உன்னை பரதத்வமாக அறியும்போது, கர்மத் தால் எல்லாவற்றையும் அறிய முடியாது, முக்தி அடைய விரும்பும் சேதனனின் ஞானம் பெறுகுவதற்கு முன், எல்லாவித சக்தியை அடைவதற்கு முன், கர்மலோகத்தில் கர்மவசத்தில் சிக்கிய ஞானம் சுருங்கிப்போய் விகாஸத்தை அடைவதற்கு முன்பே, ஜீவன் உன் உதவியைத் தேடுகிருன். ஜீவாத்மா தன்னைத் தானே அறிந்துகொண்டு, தன் குணமாகவுள்ள ஞானத்தினுல் பரமாத்மாவை அறிய முயற்படுகிருன். இந்த ஞானம் எம்பெரு மான் விஷயத்தில் செலுத்தப்பட்டால் அவனுக்கு எதுஉயர்ந்தது என்கிற தத்வம் தெரியுமாயின், அப்போது எம்பெருமானுக்கு நான் அடியன் என்கிற நம்மாழ்வார் போதித்த விசேஷ ஞானம் உண்டாகிறது. அன்று வராஹப் பெருமாள் பூமிப்பிராட்டிக்கு உபதேசித்த தாத்பரியம் இதுதான். ''உலகம் முழுவதும் எனக்கு சரீரம்; எனக்குப் பிறவியும் மரணமும் இல்லை. என்னை திடமாக நம்பிச் சரணம் அடைந்தவன் மரணத் தருவாயில் என்னை நினைப்பான். அவனை, அந்த என் பக்தனை, பரமகதிக்கு அர்ச்சராதி மார்க்கத்தில் நான் அழைத்துச் செல்வேன். நான் எளியவனுயும் நாதனுகவும், என் ரக்ஷகத்தை வேண்டி நிற்கும் பக்தர்களுக்கு ஆவேன்.'' வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல் யம், ஸௌலப்யம் ஆகிற குணங்களால் சீதை ராமனை தன் கண வனை பரதத்வமாக வரித்தாள். இதனுல் அவதார ரஹஸ்யம் வெளிப்படுகிறது. வினதையின் புத்ரனை கருடனை வாஹன மாகக் கொண்ட என் பிரபு, ஸ்ரீராமன் மனிதனுக நடித்தபோதி லும், இந்த ஜனக குமாரி பகவானின் மணி மார்பில் வீற்றிருக் கின்ற பெரிய பிராட்டி, என் மஹாலக்ஷ்மி, இருவர்களும் ஸநா

தனமானவர்கள். உலகங்களும் கருவுற்று உற்பவிக்கின்ற அழகிய திருவயிற்றை உடைய இந்த சீதை மனம் நொந்து சீற்றம் செய்வாளாகில் உலகமெல்லாம் நிர்மூலமாகிவிடுமே, அல்லாது மழை பெய்யுமோ, இந்த செம்பஞ்சுக் குழம்பூட்டிய மிருதுவான பாத தாமரை மலர் பதங்கள் கொண்ட கற்புக்கரசியாகிய சீதை வெகுண்டால் அண்ட சராசரங்களும் தாங்குமோ; தர்மமானது நெறி தவராமல் செல்லுமோ? மூலத்தாமரையில் வசிக்கின்ற பிரமனும் மாண்டுபோவானே? இதென்ன விபரீதம்? என்று முறையிடுவதுபோல அல்லவா அவள் மெய்யாகத் தோன்றுகிருள். அப்போது ராகவா, நீ அவதார காலத்திலும் உன் இயற்கை குணங்களாகிற ஸௌலப்யத்தை மறந்துபோயின், அதை நினைத்து உனக்கு அவள் ஞாபகப்படுத்துகிருள். சீதையின் ரூபம், ரஜஸ் தமஸ்ஸில்லாத சுத்தஸத்வம், தனது சங்கல்பத்தையே கர்ம பூமியில் அவதரிப்பதற்காகக் கொண்ட அயோநிஜை. ஸாதுக்களாகிற தேவ மாதர்களை ரக்ஷிக்கும் வியாஜத்தினுல் அவள் ஸ்வதந்தரையாகி, அசோகவனம் சென்ருள். ஆகவே அவள் உன்னை ராமா, சௌலப்ய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ராமனுக எனக்கு காட்டுகிருள். வராஹ அவதாரத்தின் சமயம் நீ கொடுத்த வாக்குறுதியை உனக்கு ஞாபகப்படுத்துகிருள். மலர் மகளோடு சேர்ந்த மதுசூதனு, திருமகள் வருடும் உன் பாத மலர்களையும் திகழ்துளவு உத்தம மணம் கமழும் உங்கள் பாதங்களை தரவேண்டும். ஐயா, புருஷகாரியாகிய இந்த சீதை உம்மை விட்டு நீங்குவாளாகில் ஸ்ரீநிவாஸன் என்கிற பெயரும் தெய்வநாயகன் என்கிற காரணப் பெயரும் மாறிப்போம். மறுவற்ற மகோத்தமியாகிய இவள் விஷயத்தில் உமக்கு ஸௌலப்பயம் வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம் இல்லாவிடில், என்போன்ற பிணக்கும் ஜீவர்களுக்கு எப்படி உய்விக்கும் கதியேற்படும்? இவள் விஷயத்தில் ராகவா, எம்பெருமானே, நீர் கபட நாடகம் நடிக்கலாமா? அவள் அல்லவோ உமக்கு சூத்ரதாரி. நீர் அல்லவோ எனக்கு சூத்ரதாரி. இது ஸத்யம். உமக்கு தர்மம் உயிர்நிலை என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். அப்பேற்பட்ட ராகவ சிம்மமே, கற்புக்கரசியான சீதையை முன்னிட்டு வராஹ சர்ம ஸ்லோகத்தை அனுஸந்தித்து உன் பாதங்களை, ஆஞ்சநேயர் வரித்த திவ்ய பாதங்களை சரணமடைகிறேன். வேத புருஷனே, என் வரதனே அருள்தாரும்.]

ஹனுமார் சொல்ல ஆரம்பித்தார். "ஸ்வாமி, உம்முடைய திருமந்திரம் இரவு பகல் பாராமல், (நான் இப்பொழுது தெற்கு



ஹனுமார் பிரபு ராமனிடம் சொன்னர்: "நாதரே, நான் புறப்படும் சமயம், தேவிஜானகி இந்த சூடாமணியை என்னிடம் கொடுத்தாள்." அதைப் பெற்றுக் கொண்டு, ஸ்ரீ ரகுநாதன் கண்களில் நீர் பெருக, அந்தச் சிறந்த ரத்னத்தை ஹிருதயத்துடன் அணைத்துகொண்டார். அதைப் பார்த்த ஹனுமான் மீண்டும் சொன்னர்: "நாதா, இரு கண்களிலும், கண்ணீர் பெருக, தேவி ஜானகி தங்களுக்கு ஸந்தேசம் அனுப்பியிருக்கிருள்."

நோக்கித் தொழும்) அந்த கற்புக்கரசியாகிற சீதையைக் காத்து வருகிறது. அது அவளை சர்வ ஜாக்கிரதையாக, ஸ்வாமி, காத்துப் பரிபாலிக்கிறது. உம்முடைய நினைவுகள் தியானங்கள், (உத்தம ஸ்லோகனுகிற) உம்முடைய நாம கீர்த்தி பிரபாவங்கள் அந்தத் தியானக் கோவிலுக்கு வாயிற்காப்பாளர்களைப்போல விளங்கு கின்றன. அவளுடைய பரிபூர்ண லோசனங்கள், ராவணன் தன் பாதங்களில் பணிவானு, இல்லாவிடில் இவனை நோக்கி உற்றுப் பார்த்தால், இவனும் இவன் குலமும் ஐஸ்வர்யங்களும் நாசமாகி விடுமே என்கிற கருணையுடன் கூடிய ஸங்கல்பத்துடன் இருப்ப தால், அவள் சக்தியற்றவளாக காணப்படுகிருள். அதனால் அவ ளுடைய ரௌத்திரத்திற்கு தாழ்ப்பாள் போட்ட மாதிரி இருக் கிறது. இவ்விதம் உமது தியானமாக வாழும் அந்த பரம கருணு மூர்த்திக்கு உயிர் தப்பி ஓடாதபடி எல்லா த்வாரங்களும் அடை பட்டு, அவள் உமது வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண் டிருக்கிருள்.'' (174)

''ஸ்வாமி, நான் புறப்படும் சமயம் தேவி சூடாமணியைத் தங்களுக்கு அடையாளமாகக் கொடுத்தாள்'' என்று சொல்லி ஹனுமார் சூடாமணியை பிரபுவினிடம் ஸமர்ப்பித்தார். பிரபு அதைப் பெற்றுக்கொண்டு தன் ஹ்ருதயத்தோடு அதை அணைத் துக்கொண்டார். ஹனுமார் மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். ''நாதா, இரு நயனங்களிலும் அடர்த்தியான கண்ணீர்களை விட்டுக்கொண்டு, ஜனக குமாரி தங்களுக்குச் சில வார்த்தைகளை என்னை நிவேதனம் செய்யச் சொன்னுள்.'' (175)

''தம்பியுடன் கூடிய பிரபுவின் சரணங்களைப் பிடித்துக் கொண்டு, என்னை இந்த வார்த்தைகளை ஸமர்ப்பிக்கச் சொன் னுள்.'' தேவி சொல்கிருள்: ''ஸ்வாமி, தாங்கள் வேறு உதவி யின்றி தவிக்கும் தீனர்களுக்கு ஆபத்ஸகாயர் அல்லவா? சரணு கதர்களை ரக்ஷிக்கும் பிரபுவல்லவா தாங்கள். நான் மனத்தி னுலும் வார்த்தைகளாலும் கர்மங்களாலும் தங்களுடைய பாதங் களையே அனுராகம் கொண்டவளாக, தங்களையே என் ரக்ஷகத் திற்கு வேண்டுகிறேன். ஸ்வாமி, நான் செய்த என்ன அபராதத் தினுல் என்னை தியாகம் செய்து கைவிட்டு விட்டீர்? (176)

(லக்ஷ்மணனைக் குறித்துச் சொன்னதாலும், அவனைக் கடிந்து பேசியதாலும், தனக்கு துக்கம் வந்தது என்பதை சூசிப் பிக்கும்படி,) சீதை சொன்னுள், ''நான் என்னுடைய அவ குணத்தில் ஒன்றை நன்ருக அறிவேன். தங்களை விட்டுப் பிரிந்த க்ஷணத்திலே, என் பிராணனை நான் விட்டிருக்கவேண்டும்.

அப்படி விடாமல் என் உயிரை இதுகாறும் காத்து வந்தது என் மேல் தப்பிதம்தான். (ஆத்மஹத்தி தோஷம் தனக்கும் ஸ்ரீராம னுக்கும் ஏற்படும்; அதைவிட ஸ்ரீராமனுடைய முக தர்சனத்தை மீண்டும் அடையப் போகிறேம், அவனுடைய இன்சொற்களைக் கேட்கப் போகிறேம் என்று நினைத்துப் பொறுத்திருந்தாள் என்று கருத்து). ஆனல் நான் என்ன செய்வேன்? (கார்யம் செய் வதில் மிகுந்த ஆர்வமும், அதைச் செய்யும் திறமையும், சத்ருவை ஆக்ரமிப்பதும், திவ்யாஸ்திரங்களை அறிந்திருக்கும் என் பிரபு, பூர்ணசந்திரன் போன்ற முகத்தை உடையவரும், தீர்க்க பாஹுக்கள் உடையவரும், தர்மாத்மாவுமான) என் பிரபுவை நான் மீண்டும் காணப்போகிறேன் என்று என் லோசனங்கள் அபரா தம் செய்திருக்கின்றன. என் பிராணனைத் தேகத்திலிருந்து போகவொட்டாமல் அவைகள் தடுத்திருக்கின்றன.'' (177)

''உம்மை விட்டு அரை க்ஷணமும் இதுவரை பிரியாத நான் இப்போது பத்து மாதங்கள் பிரிந்த காலம் அக்னியைப்போல என்னை தகித்துக் கொண்டிருக்கிறது. சரீரம் பெருமூச்சு விடும் போது, அந்த அக்னி காற்றினுல் உதவப்பட்டு எரிகிறது. அவ் விதமிருக்கும்போது இந்த சரீரம் ஒரு க்ஷணத்தில் பொதிப்பஞ்சு போல எறிந்து போய்விடும். அந்த கஷ்டம் எனக்கு வரப் படாது என்று என் கண்கள் ''பிரபுவை நீ காண்பாய்; பிரபு உன்னிடம் தயை கொண்டு ஓடிவருவார்'' என்று என் தாபங் களை கண்ணீர்கள் அடக்கி, மழை பெய்தால் எவ்விதம் நெருப்பு அணையுமோ, அதுபோல குளிர்ந்த பாஷ்பங்களால் என் நெஞ் சின் தாபங்கள் அடங்குகின்றன.'' (178)

''பிரபு, சீதையின் விபத்து மஹத்தானது. தீனதயாளு. அதைச் சொல்வதற்கே எனக்கு நடுக்கம் ஏற்படுகிறது. ஸ்வாமி, தாங்களே அறிந்துகொள்ள வேண்டும்.'' (179)

''கருணுநிதி, ஒரு க்ஷணம் அவளுக்குக் கற்ப காலம்போலத் தோன்றுகிறது. சிக்கிரமே தாங்கள் லங்கைக்குச் சென்று புஜ பலத்தை உபயோகித்து அந்த துஷ்டனை சிக்ஷித்து, ஜானகி தேவியை மீட்க வேண்டும். கால தாமதம் செய்யக்கூடாது.'' (180)

பிரபு சீதையின் நிலையை உணர்ந்து அவளுடைய வசனங் களையும் கேட்டார். அந்த ராஜீவாக்ஷனுன ராமனின் கண்களி லிருந்து கண்ணீர் பெறுகியது. சீதையை விட்டு அரைக்ஷண மும் பிரியாத பிரபு, பிரிவு என்கிற வர்த்தையைக் கூட கேட்கச் சகிக்கமாட்டாத பிரபு, இன்று மஹத்தான துக்கத்தை அனுப

வித்தார். (தன் மனத்திற்குள் சீதையின் அந்தரங்க அன்பையும், வனம் புறப்படும் சமயம் அவள் சொல்லிய வார்த்தைகளையும், அவளைக் காட்டில் காலால் நடத்தி அழைத்துவரும் சமயம் "ராக்ஷஸர்களிடமும் கருணை காட்டவேண்டும்" என்று அவள் வாதாடியதும், கருணை நிரம்பிய வசனங்களும்; ஸ்ரீராமனுக்கு மனக்கலக்கம், பயம், சோகம் யாவும் வனவாச வாழ்க்கையில் ஏற்படக்கூடாது, தாமரையானது வெயிலில் ஒளிகுன்றும லிருப்பது போல, அந்த சீதை எனக்கு மன உத்ஸாஹத்தைச் செய்தாள், என்று நினைக்கும்போது அவருக்கு மஹா இரக்கம் வந்தது.) அவர் சொல்ல ஆரம்பித்தார். "என்னை மனம் கர்மம் வாக்கு இவைகளால் நானே கதி யென்று சரணமடைந்தவர்களுக்கு, ஸ்வப்னத்தில் கூட விபத்து எவ்விதம் வரும்?" (181)

அப்பொழுது ஹனுமான் சொன்னார். "பிரபு, விபத்து தங்களை ஸ்மரித்து ஜபம் செய்யாவிடில் மஹா ஆபத்தாக ஆகிவிடும். அப்பேர்பட்டவர்களை மீட்டுவது மிகக் கஷ்டம். ஸ்வாமி, ராக்ஷஸர்கள் தங்களுடைய பாஹு பலத்திற்கு முன்பு என்ன செய்யக்கூடும்? தாங்கள் சத்ருவை அழித்துவிட்டு ஜானகியை மீட்டுக்கொண்டு வாருங்கள்." (182)

[தியானம்

மாதவா, சீதாராமா, நீதானே எனக்கும் திராகராஜருக்கும் குலதனம். உன்னையல்லவோ ஸந்ததமும் ஜீவனமாகக் கருதி வாழவேண்டும். ராகவா, மங்களகர, ஸ்ரீகரா, பரமாத்புத சரித்திரம் உடையவனே, மாருதியினால் வணங்கப்பட்ட ராமசீதா, வரராமானுஜா, யக்ஞங்களையும் கர்மங்களையும் செய்து உன்னை அடைய முடியுமா? முடியவே முடியாது. ஸ்வயம்பிரகாசனே, சத்திய நம்பிக்கையினால் வாழவேண்டும். குஹனுடைய திருவுள்ளத்தில் அயோத்தி அரசராகவிருந்தாலும் நட்புப் பாராட்டிய ஸ்வாமி, உனது சௌலப்யம், சௌசீல்யம் எங்கே, என்தோஷங்கள் எங்கே? விஜய கோதண்டபாணி, மானிடவேஷம் பூண்டு கேவலம் சஞ்சிதம் ஆகாம்யம் பிராரப்தம் ஆகிற கர்ம வசனாய் பலகாலும் பிறந்து ஜன்மச் சுழலில் அகப்பட்டுத் தவிக்கும் என் போன்ற பந்த ஸம்சாரியைப் போல உன்னை மதிப்பிட்டுக் கொண்டு என்னை பிரமிக்கவைக்கிறாயே. நாராயணா, யக்ஞவராக, ஸகலமும் உன்னிடத்தில் தோன்ற, தான் ஒன்றிலும் தோன்றாத மஹா மகிமைகள் பொருந்திய மூலபிரக்ருதியானது செம்பில் களிம்பு போல, அனாதியே உன்னிடத்தில் தோன்றி நிற்கின்றது.

மகத்தும் அஹங்காரத்தை தோன்றுவிக்கிறது. அதிலிருந்து சூக்ஷ்மபூதமாகிய பஞ்சதன் மாத்திரை தோன்றி, ஸ்தூல பஞ்ச பூதங்களாகத் தோற்றுவித்து, பஞ்சீகரணப்பட்டு பிரபஞ்சம் தோற்றம் உண்டாகிறது. கால முடிவில் அனைத்தும் உம்மிடம் ஒடுங்கி லயமடைகின்றன. நீ மாத்திரம் எக்காலமும் மாருதிருக் கின்றாய். ஸத்யரே, அப்பேர்பட்ட நீ தேவர்கள், ராஜரிஷிகள் தேவரிஷிகள் பிரும்மரிஷிகள் யாவராலும் வணங்கப்படுகிறாய். அப்பேர்பட்ட புராதன சுடர் ஜோதியே, நீ எல்லாவற்றிற்கும் அதீதன். ஆனாலும் குற்றமற்ற ஞானத்தின் முடிவைக் கடந்து சென்றாலும், மூலப் பரஞ்சுடரே, ஞானக் கொழுந்து திருக்குரு கூரில் அவதரித்த புனிதனாகிற எங்கள் சடகோபன் அருளிச் செய்த பாதத்தின் முன் செல்லுமோ தொல்லை, கவியின் ஒரு பாதத்தை நீ கடந்து செல்வாயோ? அப்பேர்பட்ட ஸௌசீல்ய ஸாகரா, உனக்கு வேண்டியவள், உன் அரிய சிறிய வண்டு, மணவாளன் பணி ஒன்றே நான் அறிவேன். "நறுந்துளவம் கொண்ட பெருமார்பனே, மண்ணளந்த தோளாளா, என்குயிலே, உன் நினைவின்றி துயில் கொள்வேனா? உன் நிலையின்றி வாழ் வேனோ? என் முலையால் உன் அகலத் திருமார்பை விட்டுப் பிரிவேனோ? என் கள்வன் என்னைக் கொல்லாமல் காளை போல வந்து "மடமானே" என்று சொல்லி அணியாய் அணிந்தாயே;" கெண்டை மீன்போல கண்களை உடைய சீதே, கிளிபோல விருக்கிறாயே. மின்னையும் வஞ்சியையும் வெல்லும் இடையாளே, காவியத்தில் வரையப்படும் மாமலர் பாவையே, பூங்கொடியே, உனது தஞ்சம் எனது விண்ணுலகே, என்று தூது விட்டல்லவா என் மனம் கவர்ந்தாய்." அன்று ஹனுமானால் ராமனிடம் நிவேதிக்கப்பட்ட சீதையின் ஸந்தேசம் இன்று பூப்பிராட்டியின் ஓலமாக வராஹப் பெருமானின் முன்பு நின்றது போலிருக் கிறது. பெற்றதாயை விட்ட கன்றுபோல, என் மகள் தன் தொண்டையஞ் செங்கனி வாய் நுகர்ந்தானை யுகந்து, என்னை பெற்ற தாயெனை யென்றிரங்காள், மாயனை மாதவனை மதித்து என்னை அகன்ற இவள் மீண்டும் என்னிடம் வருவாளோ?" அப் பேர்பட்ட வசனங்களால் அல்லவோ ஹனுமார் சீதையின் ஓலத்தை சாமர்த்தியமாக ஓலமிட்டார். அப்பேர்பட்ட ராமன் சீதை ஆஞ்சநேயர், ராமானுஜன் எனக்கு அருள் தரமாட்டீர் களா? கம்பரே, நீரே எனக்காகச் சொல்லும்.]

பகவான் சொல்ல ஆரம்பித்தார். "ஹனுமான், கேள். (செறிந்த மணிமுடிச்சு ஜனகன் மகள் கொடுத்தனுப்பிய

கொணர்ந்த அடையாளமாக என்னிடம் ஸமர்ப்பித்த அண்ணலே,) நீ எனக்கும் இலக்குமணனுக்கும் வாரணிந்த முலைமடவாய் வைதேஹிக்கும், மானம் உயிர்காத்த வானரர் களுக்கும் சுக்ரீவ மஹாராஜருக்குப் பரம உபகாரியாக விளங்கு கிருய். உனக்குச் சமமான உபகாரி, ஹிதகாரி இல்லை. (என் பரத நம்பியைப் போல அல்லவா,) மஹாதியாக சீலனுக விளங்கு கிருய். ஆஞ்சநேயா, உனக்கு சமமாக ஸுரர்களும் இல்லை; நரர்களும் இல்லை. முனிகணங்களும் இல்லை. நீ செய்த பேருத விக்கு நானும் என் குடும்பத்தினரும், முலை மடவாள் மலர் குழலாள் சீதையுமே, உனக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும்? கதிரவன் ஆயிரம் முன்பே நிற்கக் கூசுவதுபோல, பரம உபகாரியாகிற உனக்கு நான் முன்பு நிற்க மனம் கூசுகிறேன். (ஆஞ்சநேயா, என்புத்ரா, மாருதி, திக்குநிறை புகழாளா, மிக்க பெருஞ்சபை நடுவே மோதிரம் கண்டு, ஒக்குமால் அடையாளம் கொண்டுவந்த அனுமானே, வா. என்னிடம் வா. உன் உச்சி முகற்கிறேன். உன்னை என்னிடம் வைத்துக்கொண்டு நானும் வைதேஹியும், பாராளும் புகழும் ஆண்டாளின் பிதாவான வில்லிறுத்தான் பட்டர்பிரான் போல, நாம் கூடியிருப்போம்'' என்று ஹனுமானை வாழ்த்தி, ஜனக ராஜனை மீண்டும் கண்டது போல ராமன் ஹனுமாரைக் கண்டார்.) (183)

''புத்ர, என் வார்த்தையைக் கேள். என் மனத்தில் நன்கு தீர விசாரித்துவிட்டேன். நீ எனக்கும் சீதைக்கும் செய்த பேருப காரத்திற்கும், தயையினுல் உண்டு பண்ணப்பட்ட நித்தியானந் தத்திற்கும், ஆஞ்சநேயா, (ம்ருது பாஷ, ஸுஸ் வரமய பூஷணு,) பிரும்மானந்தத்தின் ரஸமாக வல்லவோ, நீ விளங்குகிருய். உனக்கு நானும் தாமரையின் பூவில் வந்தவளும் எந்த விதத்தில் எங்கள் கடனை (ருணத்தை) தீர்ப்போம்? எனக்கு ஒரு வழியும் தெரியவில்லை; என் பிரபு, (சுரரிபு அடிக்கடி பரிபூர்ண லோச்சனங்களால் கருமேனியம்மான் சீர்மை கொண்டு,) ஆஞ்ச நேயரை அடிக்கடி அடிக்கடி பார்ப்பவராக விருக்கும்போது, அவருடைய கருமுகில் வண்ண பத்மலோசனங்களிலிருந்து கண்ணீர்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. அவரைப் பார்க்க பிரபுவின் சரீரம் புளகாங்கித மடைந்தது. (அப்பேர்பட்ட கிருத கிருத்யன், கிருத புண்யன் அல்லவா என் பிரபு ஆஞ்சநேயர், உமா சங்கரஸ்வரூபம்.) (184)

பிரபுவின் அத்யந்த அன்பினுலும் கிருதக்ஞையினுலும் சொல்லப்பட்ட வசனங்களை ஆஞ்சநேயர், வாயுகுமாரன் ஹனுமார் கேட்டார். (அவருடைய பத்மஹ்ருதயம் அந்த மென்மையான வசனங்களால் விகஸித்தது. "என் பிரபு என்னிடம் தயை செய்கிருர். ஸப்த ஸ்வரங்களாகிற நாதாசல மலைக்குத் தீபம் போல விளங்கும் சுதாமயர். என்னை ஸ்வீகரித்துக்கொண்டு மோஹனகரனுக ஸ்ரேயசை எனக்கு உண்டுபண்டுகிருர். என்னைப்போல வானர ஜாதியில் பிறந்தவனுக்கு, இந்த யோகி வரனுதர், சரசாபதரர், பரிபூர்ணர், நிரதமுத்யாகராஜ நாரத வால்மீகி பரிபாலர், என்னை அவர் பக்தி மார்க்கத்தில் நியமிக்கிருர். நான் அவரை விட்டுப் பிரிவேனு? ராமா, ஓங்காரதாமா, உன்னுடைய பிரேமையையும் எக்காலத்திலும் அழிவுற்றிராத உன் இன்ப கடாக்ஷத்தையும், பாத சரணங்களையும் எனக்குக் கொடு. ராஜீவாக்ஷா, உன்னையும் அன்னை சீதையையும் விட எனக்கு பெரும் பாக்கியம் கிடைக்குமா? எனக்கு உங்களை விட்டு வேறு புகல் ஏதாவது உண்டா? நீயோ சீதையோ என்னை நிராஹரித்து விட்டால், எனக்கு புகல் ஏது? என் வாழ்க்கையும் ஜன்மமும் மிக்க மிக்க கேவலமானது. ஸாகேத ராமா, நீதான் என்னை ரக்ஷிக்க வேண்டும்," என்று மனம் விட்டுப் பொங்கியவராக,) பிரேமை வெள்ளம் பொங்கிவர, ஆஞ்சநேயர், பவன குமாரன், பிரபுவின் பாத சரணங்களில், (நாமங்கள் ஆயிரம் பாடி நம்பெருமானது அடிமேல் சேமம் கொள் என்று வேதவியாஸரும் குருகூர் நம்பியும் செய்தது போல) "பிரபு நீர்தான் என்னை ரக்ஷிக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு கீழே சாஷ்டங்கமாக சுக்ருதபிரணுமம், பிரதக்ஷிணம் முதலியவைகளைச் செய்து கீழே அமர்ந்தார். (185)

பிரபு அடிக்கடி அடிக்கடி அவரை எழுப்ப முயன்ருர். அவருடைய புத்ரவாத்ஸல்யம் ஓங்கிமீற, செயலற்றுப் பேசாமலிருந்தார். ஹனுமாரும் ஸ்ரீராமனுடைய மெல்லிய பாதங்களைப் பிடித்துக்கொண்டு, ("கல்யாண சுந்தரராமா, கருணைசெய். என் சஞ்சீவினியே, பரமாத்மா ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தெரிந்த சேதனன், பொய் சொல்லமாட்டான், கீழானவர்களை லௌகிக புத்தியினுல் வரம் கேட்கமாட்டான்; ஸ்வாத்யாயம் இல்லாமல் இருக்கமாட்டான்; சூரியனை உபாஸிக்காமல் இருக்க மாட்டான், மனைவி மக்கள் தனம் இவைகளில் ஆசைவைக்க மாட்டான்; புகழ்ச்சி இகழ்ச்சி அடைந்தாலும் விகாரமற்றவன்; பிரும்மசரிய விரதத்துடனிருப்பவன்; துரோக சிந்தனையை

ஸர்வ பிராணிகளிடத்திலும் விட்டவன்; நிலைத்த புத்தியை உடையவன்; மனச் சோர்வு இல்லாதவன், பாபங்களுக்குப் பயப்படுபவன்; ஸர்வசாக்ஷியாக பகவான் தன்னை ஸதாப் பார்த்துக் கொண்டிருக்கிறுர் என்று நம்பிக்கை கொண்டவனுய், வைகாரி புருஷனைப் போல அகங்கார மமகாரமற்றவன்,) பகவத் கிருபையை ஸதா நாடும் ராம பக்தனைப் போல ஒன்றும் பேசாமல் வீற்றிருந்தார் என் பிரபு மாருதி. (அன்று லக்ஷ்மி நரசிம்மனின் சரகமலங்கள் பிராட்டியான மஹாலக்ஷ்மியின் புருஷகாரத்தினுல் குழந்தை பிரஹ்லாதனின் சிரத்தில் வைக்கப் பட்டு, தன் மடியில் கொஞ்சும் குழந்தையைப் போலக் கொஞ்சிய பிரபு, இன்று ஸ்ரீசீதா பிராட்டியின் அருள்பெற்ற குழந்தையை; சூடாமணியைக் கொணர்ந்து வந்த பக்தனை விடுவாரோ; அதே பாவனையால் அவனை பிரபு உச்சிமோந்து, "அன்று அசுர பாலகன் என் நிமித்தம் படாத பாடுபட்டனன். இன்று எங்கள் நிமித்தம் நீ பட்டபாடு சொல்வதற்கு அடங்கா. வேண்டிய வரத்தைக் கேள்" என்று சொல்லும்போது முன்பு பெறப் பெற்ற பேருே முடிவில்லை; பின்பு பெரும் பேறுமுண்டோ? பேறுவெனில் என்பு பெருத இழி பிறவி வந்திடினும், அன்பு பெறுகை அரும்பேறெனக் கென்றுன்—ஐயா, உன் திருவடிகள் மாருது அன்பு செலுத்தவேண்டும்; அப்பேறு பெற்ருல் சற்புத்தியை உண்டாக்கும்; சற்புத்தி சற்கருமத்தை உண்டாக் கும்; சற்கருமம் சற்போதத்தை உண்டாக்கும்; சற்போதம் வீட்டை அடைவிக்கும்; அதுபற்றி இயம நியமாதிகளாகிய அஷ்டாங்கயோகமும் அணிமாமகிமா முதலிய அஷ்டமாசித்தியும் மற்றுமுள்ள பன்வகை பேறுகளும் வேண்டுவனல்ல; அவ்வன் போன்றும் பெறுவதே நாயேனுக்கு அரிய பெரும்பேறும்; அதையே அருள் செய்யவேண்டும்" என்று பிரஹ்லாதன் பிரார்த்தித்தது போல்) ஆஞ்சநேயரும் பிரார்த்தித்தார். பிரபு வின் கரகமலங்கள் ஹனுமாரின் சிரத்தில் இருந்தன. அந்த ஸ்திதி யைக் கண்டு கௌரீஸ்வரராகிய சம்புவுக்கு ஸ்மரிக்கும் போதே பிரேமை வெள்ளம் பொங்கி வர ஆரம்பித்தது. (ஆஞ்சநேயர் சிவசக்தியின் அம்சம் என்று கருதப்படுகிறது) (186)

மறுபடி சிரமப்பட்டு சங்கரபகவான் தன் மனத்தை ஸாவ தானம் செய்துகொண்டு, உமாதேவியிடம் மிக்க அன்புடன் தனது சுந்தரமான கதையைத் தொடர்ந்து வர்ணிக்க ஆரம்பித்தார். பிரபு குனிந்து ஹனுமான்ஜியை தனது தீர்க்க பாஹுக்களால் வாரி எடுத்து, (உமையை சங்கரர் அணைப்பது

போல, பிராட்டி முலைத் தடங்கள் பதிந்த ஸ்ரீவத்ஸமார்புடன்) இருக அணைத்துக்கொண்டார். பிரபு தன் கரகமலங்களால் அவரை தன் அருகே அமர்த்திக் கொண்டார். (187)

“ஹே, ஹனுமான், இப்பொழுது சொல். ராவணன் அரசாட்சி செய்யும் லங்கை எவ்விதம் காக்கப்படுகிறது? அவ்வளவு கட்டுக் காவலுடன் இருந்த அந்த கோட்டைகளின் வாயிற்களைத் தாண்டி நீ எவ்விதம் லங்கையில் புகுந்து எவ்விதம் அவைகளை எரித்தாய்? அதை விபரமாகச் சொல்,” என்று பிரபு கேட்டார். ஹனுமார் (சாஷாத் சிவஸ்வரூபி,) பிரபு தன்னிடம் அபிமானமாக விருப்பதைக் கண்டு கரகமலங்களைக் குவித்து, அஹங்காரம் அபிமானம் யாதுமின்றி, வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தார். (188)

“பிரபு நான் வானர ஜாதியில் பிறந்தவன், சாகா மிருகம். அதனுடைய ஸ்வபாவப்படி நான் ஒரு கிளையிலிருந்து இன்னொரு கிளைக்கு தாவுவது போல, ஸமுத்திரத்தைத் தாண்டினேன். தங்கமயமான லங்கையை எரித்தேன். ராக்ஷஸர்களை வதம் செய்தேன். அசோக வனத்தையும் பாழ்பண்ணினேன். அவ்விதச் செய்கைகளுக்கு, பாக்யவசத்தால் எனக்கு ஏற்பட்ட புருஷார்த்தமாகிற (189)

ரகுராயின் திருவருள். ஸ்வாமி, இந்த பிரதாபங்கள் யாவும் உம்மைச் சேர்ந்தன. நாதரே, இதில் என்னுடைய சாமர்த்தியம் கெட்டிக்காரத்தனம் யாதுமில்லை, யாதுமில்லை.” (190)

“ஹே பிரபு தாங்கள் எவர்களிடம் பிரஸன்னமாகிறீரோ, அனுகூலமான ஸங்கல்பத்துடன் விளங்குகிறீரோ, அவனுக்கு சாதிக்க முடியாத காரியம் ஒன்றுமிருக்காது. ஸ்வாமி தீனதயாளு, பத்மபத்ராக்ஷா, உம்முடைய மகிமையினால் உமக்கு உள்ள வீரியத்திற்குப் பயந்து ஒரு பஞ்சுப்பொதி ஜலத்தில் மிதக்கும் வஸ்துவைக்கூட எரித்து விடுகிறது. நடக்க முடியாதது உமக்கு ஒன்றுமில்லை.” (191)

[தியானம்

மாருதி, திரியம்பகரே, சீதாபதியின் அத்யந்த விஸ்வாஸரே, உன்னைச் சரணமடைந்தல்லவோ, ராம சீதா லஷ்மணாதிகளை சரணம் அடையவேண்டும். உம்முடைய ஸ்வரூபலாபமாகிற ஞானத்தினால் ராம பக்தியைக் கதியாக அடைந்து ராமகிங்கரனாக ஆனீர். நம்மாழ்வார் அருளிச்செய்த ஸூக்தியாகிற “தாமனத் தனனாய்ப் பிறவித்துழதி நீங்க, என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கே என் சிரீதரனே, தாமோதரனாகிய தனி

முதல்வா, உன்னை நான் அடைந்துவிட்டு, நீ'' இவன் என்னைச் சேர்ந்தவன், இவனுக்கு நம்மைவிட்டால் வேறு நாதன் கிடையாது; தயாதனம் கொண்ட ஜகத்பதே, தயிதரங்கே, ஸம்ரக்ஷமாம் என்று சொல்லித் தாஸ்ய உள்ளம் படைத்த ஹனுமார் ஸ்வரூப விரோதியை மாத்திரமில்லாமல், பிராப்தமான எம்பொருமானின் திருவடிகளின் நிலைக்கும் விரோதிகளையும் கழித்து எறிந்தார். கர்த்ருவம் என்கிற விரோதியையும், ஈஸ்வராதீனம் என்கிற ஸ்வரூப ஞானத்தையும், அந்த ஞான விசேஷத்தினுல் அடையப் படும் சீதாராமனே நமது ஆஸ்ரயம் என்கிற விஸ்வாசத்தால், புருஷோத்தமனுகிற நாராயணன் ஸர்வாந்தர்யாமியாய் ஒரு காரியத்தை ஜீவனைப்ரேரணை செய்து செய்யச் செய்கிருன், அந்த ஈஸ்வரனே பிரவிர்த்திக்கும் பல பிரதானத்திலும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் ஆகிற முத்தொழில்களிலும் இசைந்திருக்கும் அனுத்தமன் என்றும், ஜீவனுக்கு எஜமானனுயும் ஸஹகாரியாயும், கருணை செய்யவேண்டிய நியமங்களையுடைய பரமாத்மாவாகிருன். அப்பேர்பட்ட பரமாத்மா ஜீவனிடம் '' தன்னுல் வரும் நன்மை விலைப்பால் போலவும், ஈஸ்வரனுல்வரும் நன்மை முலைப் பால் போலவும், பக்தி பிரபக்திகளுக்கு ஹேதுவாகிருன். அந்த பரமாத்மாவினுல் கடாக்ஷிக்கப்பட்ட ஜீவன் ராம சீதா கிருபையை ஆதாரமாக வைத்து, வாழ்ந்து, ஆளவந்தார் சொல்லியபடி '' ப்ரஸீதமத்பக்திம்சிந்தயித்வா,'' எம்பெருமானே, எனக்கு வேண்டியது உனக்குத் தெரியும். உனது திருவடித் தாமரைகளில் இயற்கையாக அமைந்த என் பக்தி பிரபத்திக்கு, கடைசி எல்லையாய் வேறு பயனில் செலுத்தவிடாமல், என்னை வென்று, அடியேனுக்கு ஞான பரம்பரையாலும், பிறவியாலும், பாட்டனுராகவுள்ள ஸ்ரீநாத முனிகளை நினைத்து, அடியேனுடைய தீய ஒழுக்கம், ஸ்திதி முதலிய யாவையும் பொறுட்படுத்தாது, ஸர்வவித கைங்கர்ய ஸாம்ராஜ்யமும் கிடைக்கும்படி அருள் புரியவேண்டும்.'' இவ்விதம் ஸாத்விக தியாக புத்தி உள்ள ஆஞ்சநேயர் கர்மங்களாகிற சீதா அன்வேஷணம் நிறைவேறிய பின்பும் பகவத் ப்ராப்தத்திற்கு விரோதியான மனேபிஷ்டங்களையும் விட்டு பராதீன கர்த்ருத்வம் கொண்டவராய், பலனிலும் ஆசையாகிற விஷத்தைத் த்யாஜ்யம் செய்து, ஸாத்விக தியாகத்துடன், மோக்ஷமாகிற சீதா ராம நிலை அடிகள் நிலைத்திருப்பதற்காக பரம ஹேதுவான கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை என் போன்றவர்களுக்கல்லவா பெற்ருர். எம்பெருமானுக்கு அடியனுயுள்ள ஆத்மாவை ராவணன் போன்ற

துஷ்டர்கள் ஸ்வதந்திரர்களாக எண்ணி, தன்னுடைய ஆத்மாவை அபஹரித்த கள்வனாகி விட்டார்கள். அதனால் ஸகல பாபங்களும் செய்ய அவர்கள் தயங்கார்கள். ஆனால் ஆஞ்சநேயரோ முமுக்ஷுக் களால் அனுஷ்டிக்கப்படுவதும் பரம்பரையான வைஷ்ணவ ரீதியில் வருவதுமாகிற நம்முடைய பெருமான் நிரதிசய போக்யனாய், ஸ்ரீயப்பதியாய், பிறந்த க்ஷணத்திலிருந்து அதிகாரி யாய் ஸ்வீகரித்து, விசேஷ அனுரூபமாக விதிக்கப்படும் ஞானேந் திரயங்களால் பக்தி பிரபத்தி அடைந்து சேஷனான இந்த ஜீவாத்மாவை ரக்ஷிக்கப்பட வேண்டியவனாக, அஹிர்புத்ன்யஸம் ஹிதையில் சொல்லப்பட்டபடி (52–35, 36) "यत् संरक्ष्य तया अर्प्यते"; கொடுப்பது "விஷ்ணவே ஸ இதீர்யதே," விஷ்ணு வுக்கு என்று அர்ப்பித்து, அதன்படி ஸ்வரக்ஷண பரஸமர்ப் பணம் என்கிற ஸம்பந்த அனுஸந்தான கர்ப்பமாக வேண்டு தலும், ஸம்பந்த ஞானம் என்கிற பிரபத்தி, பரன்நியாஸரூப பிரபத்தி, அது நிலைத்து நிற்க, ப்ராப்தக விரோதிகளை ஒழித்து, வேதனைக்கு இடமில்லாமல், மாசுச: என்கிறபடி வாழ்ந்து காண்பிக்கிறாரே, அந்த ஆஞ்சநேயருக்கும் பிரஹ்லாதனுக்கும் அம்பரீஷருக்கும் ஸஹஜகாருணிகராக விருந்த பெருமாளையும் பிராட்டியையும் அந்த பாகவத உத்தமர்களையும் இந்த பக்தி பிரபக்தி யோகத்தின் பெருமைகளையும் என்னவென்று சொல்வது? அபாரம், பாராபாரம்.]

"நாதரே, தீனரக்ஷகரே, பிரணதபால் எனக்கு அத்யந்த சுகத்தைத் தருவதும், நிரதிசய பக்தியையும் அசஞ்சலமான மனத்தையும், உம்முடைய கிருபாகடாக்ஷத்தினால் அவைகளை நிலைத்து நிற்கும்படியிருக்கும் நிலையையும் (விரோதிகளை அழித்து, என்னிடம் பூர்ணகாமராக விருக்கும் பாக்யத்தையும்) கொடுத்தருள்வீராக. (அதுமாத்திரமல்ல ஸ்வாமி. உமக்கும் அனபாயினியாகிற பிராட்டிக்கும் நான் எக்காலமும் எந்த அவஸ்தையிலும் அடிமை செய்யக்கடவேன். உங்களது திருவடி களை அடைந்து இன்புறுவேன். உங்களுடைய கதாம்ருதங்களைக் கேட்டு ஆனந்தமடைவேன். உங்களுடைய பாகவத ஸமுதாயத் திற்கு அனுகூலமாகவும் அனுகுணமாகவுமிருப்பேன். ஸ்வாமி, என் ஸ்வாசம், உலகம், கர்த்ருத்வம், ஞானம், போக்யம், போகத் வம் எல்லாம் தாங்களும் பிராட்டியாருமே" என்று அதிவினயத் துடன் ஸமர்ப்பிக்கப்பட்ட வசனங்களைக் கேட்ட ரகுபதி ஆச்சர் யப்பட்டுவிட்டார். என்ன மஹாவார்த்தைகள், சரளம், சுலபம், மதுரம். ஈஸ்வர ஸ்வரூபம்தான் பரதத்வம், வ்யூஹம், விபவம்,

அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம், ஆசார்யத்வம் என்கிற ஆறு பிரகாரங்களுடன் கூடியிருக்கும். அதில் பிரபு இன்று அர்ச்சாவ தாரமாகவும், ஆஞ்சநேயரை ஆசார்யனுக்கும் ஈஸ்வரனுக்கும் உண்டானதும் பிராட்டியின் கடாக்ஷத்தினுல் ஏற்பட்டதுமான அபூர்வ உறவை, தேவுமற்றறியேன், திருவரங்கத்து அம்மா னுக்கே காதல் செய்து வாழ்வேன், என்கிருப்போலே சித்தாந்தப் படுத்துகிறது. அவர் அன்று பண்ணின ஸம்பந்தம் அவரைப் பற்றிய என்போன்ற பிரபன்னர்களுக்கு பேருபகாரமாக விளங்கி, பகவத்கிருபையையும் ராமதர்சனத்தையும் சீதையின் அன்பையும் கிடைக்கச் செய்கிறது. ஆச்சர்யம்.) அதை உணர்ந்த பரமதயாளு சிவன் ஆசுதோஷி, மஹாகிருதக்ஞராக சொன்னுர், "பிரிய பவானி," "நீ கேட்கிறபடியே நடக்கட்டும் என்று வரதநம்பியாக என் பிரபு ஆஞ்சநேயருக்கு அருளி னுர்." (192)

"உமா, எந்த மஹானுபாவன் ஸ்ரீ ராமசந்திரனுடைய இயற்கையான ஸ்வாமித்வத்தையும், உதார ஹ்ருதயத்துடன் கூடிய ஔதாரிய ஸௌலப்ய ஸௌசீல்யங்களேயும் அறிகிருனே, (மின்னிடை சீதை பொருட்டு ஸேதுவைக் கட்டி கடல் தாண்டி லங்கை மன்னன் மணிமுடி பத்துமுடன் வீழ தனது வீர்யத்தைக் காண்பித்த மானியை, 'ஐயா உம்மை ஒருக்கால் சரணமடைந் தேன்' என்று சொன்னவனுக்கு, ஸர்வ பூதங்களுக்கும் அபயம் கொடுக்கும் நான் உன்னே கைவிடுவேனே, என்று அருள்வாரே, அந்த மஹனீயரின் அஞ்சன வண்ண மேனியை அந்த தித்திப்பு வாயை, இன்சொற்களே, கமல பத்ராக்ஷம்போலவிருக்கும் குளிர் புண்டரீகாக்ஷனே, ஒரு தடவை பார்த்தால், ஒரு தடவை அவ னிடம் ருசி கொண்டால், என் பிரிய உமா, அது மேன்மேலும் வளருமே ஒழிய, அவன் வேறு எதை நாடுவான்? மாயவனே மது சூதனனே ஒரு தடவை வாய்விட்டுக் கூப்பிட்டால் நினேத்த முலே வழியே நின்று பால் சொரக்கும் கனேத்திளங்கற்றெருமை கன்றுக்கு இரங்கி வருவதுபோல அல்லவா அவன் மனத்துக் கினியானுக வருவான். இறைவா, ஒற்றேமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம், மற்றை நங்காமங்கள் வேண்டாம் என்று சொல்லும் பக்தனே அந்த பிரபு விட்டுவிடுவாரோ? ஒரு அம்பு, ஒரு சொல், ஒரு பத்னி வ்ரததீக்ஷை கொண்ட என் பிரபு மாறு வாரா? மாட்டார். ஈரவாடையில் பட்டருக்கு அறுதியிட்டமாதிரி, "நீரா அகதி" ராமானுஜ சம்பந்தம் பெற்ற நீரா அகதி என்று அழகிய சுந்தரராஜன் கிடாம்பி ஆசார்யரைக் கேட்டதுபோல

அந்த மஹானுபாவனுகிற ஆஞ்சநேய ஸம்பந்தம் கொண்ட எவருக்கும் தேவுமற்றறியேன் என்கிறுப் போலே,) அவனுக்கு அந்த பரம காருணிகரனுன சீதாராமன் எளிதில் வசப்படுகிறுன்,'' என்று புளகாங்கிதமாக அருளினுர். மேலும் சங்கரபகவான் சொல்லுகிறுர், ''உமா, ரகுபதியினுடைய வரதானத்தையும் ஆஞ்சநேயருடைய புனிதமான நடத்தையையும் இருவர்களுக்கும் ஏற்பட்ட மங்களகரமான ஸம்வாதங்களேயும் எவர்கள் ஸ்மரிக்கிறுர்களோ அவர்களுக்கு நிச்சயமாக ரகுபதியின் சரணங்களில், பக்தியும் அனுராகமும் அதனுல் எற்படும் ரக்ஷகமும் மங்களங்களும் நிச்சயமாகக் கிடைக்கும்.'' (193)

பிரபுவின் வசனங்களேக் கேட்ட வானரக் கூட்டங்கள் ஏகோபித்து மங்கள கீர்த்தனம் செய்ய ஆரம்பித்தார்கள். ''ஜய ஜய, ஜயகிருபாளு ஶ்ரீ ராமச்சந்திர பிரபோ, எங்கள் ஆனந்த கந்த மூர்த்தியே, ஜய ஜய ஜய ஜய.'' அப்போது வானர ராஜனுன சுக்ரீவனே பிரபு அழைத்தார். அவனே ''சீக்கிரம் லங்கை போவதற்கு ஏற்பாடு செய்'' என்று உத்தரவிட்டார். (194)

''நாம் எதற்காக காலவிளம்பம் செய்யவேண்டும்? இப்போதே லங்கை போவதற்கு இந்த வானர ஸைனியர்களே உத்தரவிடு'' என்று பிரபு ஆக்ஞாபித்தார். அந்த சமயம் தேவ கணங்கள் புஷ்பவர்ஷங்களேச் செய்தார்கள். பகவானுடைய லீலேயாகிற ராவணவதம் ஆரம்பமாவதைக் கண்டு, ஆகாயத்தில் வீற்றிருந்த தேவர்கள் அத்யந்த சந்தோஷமடைந்தார்கள். மீண்டும் புஷ்பங்களே வர்ஷித்துவிட்டு தங்கள் லோகங்களுக்கு அவர்கள் சென்றுர்கள். (195)

[தியானம்

நாராயணு, வேங்கடபிரபோ, அலர்மேல்மங்கை உறைமார்பா, ராமசீதா, சீதாநாயகா, ஆஞ்சநேயரின் மனுேபாவமும் அந்த வானர்களின் சீதாராம லக்ஷ்மண கீதங்களும் என் ஸத்குரு தியாக ராஜரைச் சுற்றி, வலம் வந்துகொண்டிருக்கும் ராம நாம பஜனே கோஷ்டி மாதிரியாகவல்லவாவிருக்கிறது. எப்பேர்பட்ட அகண்ட மான ஸாம்ராஜ்யம். அனுதிகாலமாக வந்துகொண்டிருக்கிறது. என்ன பாவஸித்தி. சுத்த பக்தி. இந்த ஆனந்தஸத் கீர்த்தனுவளி அன்று தியாகராஜரால் இயற்றப்பட்ட ஆயிரம் நூறுயிரம் என்கிற புஷ்பமாலேகள் போல பிரகாசிக்கும் ரத்னராக கீர்த்தன மாலே களாக விளங்குகின்றனவே. இந்த பக்தி பாகவத ஜனங்களும், ஆனந்த கீர்த்தனங்களும் என் மனதைப் பரவசப்படுத்து

கின்றனவே. வினய ஸத்ஸம்பத், விவேக ஸத்ஸம்பத், ஶ்ரீஸ்ருதி ஸாகர சீதாராம கீர்த்திகள், அன்று நரசிம்மதாஸர் தியாகராஜ பக்தஜன கோஷ்டியைக் கண்டு, எவ்விதம் மெய்மறந்து ஆனந்தித்தாரோ, அதுபோலவல்லவா இந்த ஆஞ்சநேய மதுரகானம் இருக்கிறது. அவருடன் கூடவரும் வானரர்களின் ராமசீதா கானம், பிரும்மாவுக்கும் எட்டாத பேரானந்தத்தை மஹா முரடனாகிய எனக்கே கொடுத்தால், ராமசீதாவுக்கும் உத்தம பாகவதர்களாகிற ராமதாஸர்களுக்கும் எவ்வளவு மகத்தான பேரானந்தத்தைக் கொடுத்திருக்கவேண்டும். மேகரூபம் எழுந்து ஸ்ரவண புண்ணிய கீர்த்தனம் என்று சொல்லப்படும் நவ நவ ஆனந்தங்களைக் கொடுக்கும் ராமசீதா கிருஷ்ணும்ருதம் என்கிற கறுப்பஞ்சாற்று கடலினை ஆரமுகந்து மீண்டும் வந்து முழங்கி நின்றூர் போன்று, நின்ற ஐயன் செவியில், ராமலக்ஷ்மண ஸந்நிதானத்தில், அந்த கீதங்கள் பாடுதலும், என் ஐயன் ராமைய்யன், புளகங்கொண்டு அவைகளை ஸ்வீகர்ப்பதும் கவிமழையால், பிரேமை ராம சீதா பக்தி மழையால், ஜலாதாரங்கள் பொழிந்தால் எவ்விதம் இருக்கும்? காளிதாஸனுடைய நாக்கிலிருந்து ஊறும் தேனின்ப சுகத்திற்கு அல்லவோ ஈடாகும்? கலிசந்திரநோபநிஷத்தில் பிரும்மாவினுல் நாரதருக்குச் சொல்லப்பட்டதும், முக்தியை அளிக்கக் கூடியதுமான பரமரஹஸ்யம் பகவத் ஆதிபுருஷஸ்ய நாராயணஸ்ய நமோச்சாரண மாத்ரேன நிர்தூத கலிர்பவதி, என்கிற படி நாராயண நாமத்தை உச்சரித்தால், என் சிவே, சீதை, ஆஸ்ரித பலதாயகி, அம்பிகை, ஸகலலோக ஜனனி, பாலே, கனகபூஷணி, கன்னதல்லி, பாலேந்துவதனு. பாலலோசனி, தர்மஸம்வர்த்தினி, சீலேயான மஹாதிரிபுரசுந்தரி, ஜானகி, உமா தேவி, சியாமளா, பூர்ணசந்தோஷமடைவாளே. சுந்தரி, ஸுர லோகபூஜிதே, இந்த வானரக் கும்பலில் நானும் ஒருவன்; இந்த தியாகராஜ கோஷ்டியில் நானும் ஒருவனுக விருக்கிறேன் என்று உன் விசாலமான நேத்ரங்கள் கண்டுபிடிக்கவேண்டும். மனோஹரி, கௌரி, காமஜனகுளிஸோதரி, கமலநயனு, உன் மிருதுள பலுக சம்பாஷணைகளையும் உனது நவரத்ன குண்டலங்கள் நீ பேசும்போது ஆடும் அழகுகளையும், உனது முகவிலாஸத்தில் உள்ள ஆச்சர்யகரமான உல்லாஸங்களையும், மந்தகமனத்தில் ஏற்படும் கடாக்ஷ வீக்ஷணங்களும், கலியில் ஏற்படும் தோஷங்களை நாசம் செய்து, பாவபந்தங்கள் அறுபட்டு, உன்னிடமும் ராமனிடமும் ஸதிபக்தியை விளைவிக்கக்கூடியவை ஆகிய எல்லாம் உன்னுல் அல்லவோ ஏற்படுகின்றன. காமாக்ஷி, சியாம

கிருஷ்ணஸஹோதரி, தீனரக்ஷகி, ஆஞ்சநேய துளசிதாஸ தியாகராஜ நம்மாழ்வார் கம்பன்போல அனுதினமும் நான் செய்யும் ஸத்கிரியைகளை, உன்னுடைய பாதங்களுக்கு அர்ப்பணம் செய்து, ஸகல வஸ்துக்களையும் சேதனர்களையும் உன் மயமாகவும் வானரங்களாகிற தேவதைகளையும் உன் மயமாகப் பார்க்கிறேன். அம்மா, ஜகத்ரக்ஷகி, சுந்தரேஸ்வர ராமநாயகி, என்னை விட்டுவிடாதே அம்மா. துஷ்கர்மவிதாரி, தியாகராஜ வந்தித திரிபுரசுந்தரி, நித்யகல்யாணி, மாதுர்யவாணி, உன் பாதங்களை நம்பினேன் தாயே, அம்மா. அழகிய சரீரங்களை உடைய உங்களைக் காணுமல் வருந்துகிறேன். என் துயரம் நீங்க, நீங்கள் அருகில் வரமாட்டீர்களா? என்னைத் தழுவ மாட்டீர்களா? உங்கள் வெற்றியை வேண்டும் என்னிடம் அன்பு செய்ய மாட்டீர்களா?]

கபிகளின் பதியான சுக்ரீவன் சகல வானரர்களையும் அழைவித்தான். சேனுதிபதிகளின் சமூஹத்தையும் வரவழைத்தான். அவன் உத்தரவிற்குப் பயந்து பல தேசங்களிலிருந்து அநேக வர்ணங்கள் உடையதும் அதிபலம் கொண்ட வானர வீரர்கள் வந்து சேர்ந்தார்கள். (196)

அவர்கள் எல்லோரும் பிரபுவின் பங்கஜ பாதங்களில் நமஸ்கரித்தார்கள். மஹத்தான பலம் கொண்ட கரடிகள் வானரர்கள் கடல்போல கர்ஜித்துக்கொண்டு விளங்கினுர்கள். பிரபு ஸ்ரீராமன் சகல வானர கரடி சேனைகளையும் அதன் வீரர்களையும் கண்டார். அவர்களைப் பார்த்து ராஜீவநயனுன பிரபு அவர்களைப் பூர்ண கடாக்ஷத்துடன் அருள் நோக்கினுர். (197)

ராமகிருபையை அடைந்த வானர வீரர்கள், கரடி கூட்டங்கள் அதிஸ்ரேஷ்டமான பலத்தை அடைந்தார்கள். இரக்கைகள் கொண்டமலை, பர்வதங்கள் மாதிரி பலமடைந்தார்கள். ஒவ்வொரு வீரரும் மற்றவரைக் கண்டு அதி பலம் கொண்டு உத்ஸாஹமடைந்தவர்களானுர்கள். ராமர் அதைக் கண்டு சந்தோஷத்துடன் முன் நடந்து சென்றுர். அவர்கள் புறப்படும்போது நல்ல சகுணங்கள் ஏற்பட்டன. (198)

எந்த பரமாத்மா மங்களங்களுக்கு மங்களமாக விருக்கிருரோ, எவருடைய பவித்திரமான கீர்த்தியை கானம் செய்பவர்கள் சகல மங்களங்களையும் அடைவார்களோ, அந்த பிரபு புறப்படும் சமயம் மங்கள சகுணங்கள் ஏற்படாமல் என்ன செய்யும்? (அவைகள் அல்லவோ அதனுல் கீர்த்தியை அடைகின்றன.) அதனுல் அவ்விதம் அவைகள் ஏற்படுவதற்குச்

சரியான ரீதிதானே? பிரபு தன் மீட்சிக்காகப் புறப்பட்டுவிட்டார் என்று ஜானகிக்குத் தெரிய நேர்ந்தது. அவளுக்கும் (விவாஹ சமயத்தில் ஏற்பட்ட) மங்கள சகுனங்கள் அப்போது ஏற்பட்டன. இடது பக்கம் அங்கங்கள் (கரம், லோசனம்) துடிக்க ஆரம்பித்தன. (199)

எந்த எந்த நல்ல சகுனங்கள் ஜானகிக்கு ஏற்பட்டனவோ, அந்த மாதிரி ராவணனுக்கு அபசகுனங்கள் ஏற்பட்டு, அவனுக்கு பயத்தை உண்டுபண்ணின. ராம சைன்யம் புறப்பட்டுவிட்டது. அதனுடைய வரிசைகளைப்பற்றி என்ன சொல்லக்கூடும்? கணக்கற்ற வானர வீரர்கள் கணக்கற்ற கரடிகள் கர்ஜனைகளைச் செய்துகொண்டிருந்தனர். (200)

அவர்களில் சில பேர்களுக்கு நகங்கள் ஆயுதங்களாக விருந்தன. இன்னும் சில பேர்கள் மிகப் பெரிய பாறைகளையும், மரங்களையும் பிடிங்கி ஆயுதமாக உபயோகப்படுத்தினர்கள். இன்னும் சிலர் வானத்தில்தாவும் சக்தி உள்ளவர்கள். சில பேர்கள் தரையில் குதித்துத்தாவும் சக்தி உள்ளவர்கள். இன்னும் சில வீரர்கள் இஷ்டபிரகாரம் பாயும் சக்தி உள்ள வர்கள். அவர்கள் கர்ஜனை செய்யும் சப்தங்கள் சிம்ம கர்ஜனை கள் மாதிரி இருந்தன. அந்த சப்தங்களைக் கேட்டு திக்கஜங்கள் நடுங்கிப் பிளிரின. (201)

அந்த வானர கரடிப் படைகள் நடந்து செல்லும்போது, திக்கஜங்கள் பிளிர ஆரம்பித்தன. சமுத்திரங்கள் பொங்கி எழுந்தன. கந்தர்வர்கள் தேவதைகள் முனி ஜனங்கள், நாகர்கள், கின்னரர்கள், "நமது துக்கம் அழியும் காலம் வந்து விட்டது," என்று சந்தோஷப்பட்டார்கள். அநேக கோடி வீரர்கள் சண்டை செய்யும் விருப்பத்துடன் பயங்கரமாக கர்ஜித்துக்கொண்டு மிக்க உத்ஸாஹத்துடன் சென்ருர்கள். அவர்கள் செல்லும்போது யுத்த கீதங்களாகிற பிரபல பிரதாப கோஸலநாத ஸ்ரீராமசந்திரனுக்கு, சீதா நாயகனுக்கு ஜே, என்றும், ஜயமங்களங்கள் ஏற்படட்டும் என்று கோஷித்து, ஆரவாரம் செய்தனர். 'இந்தவிதமாக ஸ்ரீராமனுடைய பரந்த குணக் கீர்த்திகளை பாடிக்கொண்டு அவர்கள் சென்ருர்கள். (202)

[தியானம்

சீதாராமா, சந்திரன் ரோஹிணியுடன் கூடியிருந்து சுக்ரா சாரியாருடன் ஸாந்நித்யம் செய்தால் எவ்விதமிருக்குமோ அதுபோல எனக்கு காளி அளிக்கும் லக்ஷ்மண சேவித ராமா

சீதா, ஆஞ்சநேயர் உங்களை மூன்று விதங்களால் உபாஸிக்கிறார். உபாயம் என்கிற பரநியாஸம், அதாவது தீமை நீக்கி, எனக்கு நன்மை பயப்பது நின்பொறுப்பே என்று உங்கள் திருவடிகளை வேண்டுகிறார்; பிராட்டியிடம் புருஷகாரமாய் அவளுடைய பாதசரணங்களைப் பற்றி அம்மா, உன்னையும் உபாயமாகவும் நெடுங்காலம் பகவானுடன் சேர்ந்திருக்கும் உன்னையும் மறந்து பல அபராதங்களைச் செய்து, பகவான் குற்றம் கண்டு சீறும் போது, சீறும் இயல்பு சிறிதுமில்லாத உன் சரணங்களைப்பற்றி, உய்ய விரும்புகிறேன். நான் பகவானை அடைவதற்கு நீ துணை புரியவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். மூன்றாவதாக இத் துடன் இல்லாமல், தேவி, சந்திரனுடன் சேர்ந்த ரோஹிணியைப் போல, நீயும் சரண்யை என்று நினைக்கிறேன். பகவான் அருள் மட்டும் போதாது; உன்னுடைய துணையும் பகவானை நான் நிரந்தரமாக அனுபவிப்பதற்கு சதாகாலமும் வேண்டும். ஆகவே சீதே, ரங்கநாயகி, ரங்கநாத ஸமேத வேங்கட ரங்கபதே, ராமாசீதா, நீங்கள் இருவர்களும் ஒருக்காலும் அவதார காலங்களிலும் இறைவனை விடாது இறைவன் காரியங்களில் துணைவியாகவிருக்கிறீர்கள். அது மாதிரி, என் சரணாகதியிலும் ஆரம்பத்திலும் கடைசியிலும் நிரந்தரமும் துணையாக நிற்க வேண்டும். என் ஆதார சக்ரத்தில் திரிபுரா என்று விற்றிருக்கும் அம்மா, பஞ்ச சக்திகளாகிற பஞ்சபூதங்களை நடத்துகிறவளே, ஸமுத்திர ராஜதனயே, ரங்கராஜமஹிஷியே, உனது ஸங்கல்பத்தை என்னிடம் ஸதா அனுகூலமாக வைத்திருக்க வேண்டும். உனக்கு தேவமாதர்களின் சிறைவிடுவித்தல் ஒருபுறமிருக்கட்டும். ஒரு காலத்தில் வைகுண்டத்தில் நீயும் எம்பெருமானும் சேர்ந்து சுகமடையும்போது, அடிக்கடி மீசையை முறுக்கிக்கொண்டு, அழகில் நான் மன்மதன் என்று பெருமை கொண்டு, அதனால் பெரும் பொக்கிஷ நிதிக ளாகிற நராயண திவ்ய பதத்தைக் காக்கும் கர்வத்தினால் அதிசாந்திதம சீலர்களான ஸநகாதிகளைக் கோபிக்கச் செய்த, ஜய விஜயர்களான அவர்களிடம் என்ன காருண்யத்தினால் (இன்று ராவணன் கும்பகர்ணன் பிறப்பை அடைந்த) அவர் களின் ஹிம்சைகளைப் பொறுத்துக் கொண்டாய்? உன்னை பத்மா, பத்மாலயா, பத்மகரே, பத்மபத்ர நிபேக்ஷணே, பத்மமுகி, பத்மநாபபிரியா, பத்மபூஷிதே, பத்மகந்தினி, லோக பாவனி, விஷ்ணுவல்லபே, ஜனார்த்தனரின் அன்பாயினி, முகுந்த பிரியே, விஷ்ணு ஸஹாயனி, ஹரிலக்ஷ்மி, தரணி, ருக்மிணி,

உன்னை பல நாமங்களால் ஸ்துதி செய்து பகவானை அடைய விரும்புகிறேன். ஸ்தோத்திர பிரியா, தேவராஜனின் ஸ்தோத்திரத்திற்கு மயங்கினவளே, என்னிடம் ப்ரீதிகொள். அம்மா, அன்று வடவா முகமாகிற சங்கரரைத் தரித்துக் கொண்டிருக்கும் சமுத்திரராஜன் உனது கிருபையினுல் அல்லவோ, இன்று வானரர்களின் ஸம்பந்த உறவினுல் ராம ஸம்பந்தத்தைப் பெறுகிறுன். இந்த ராவணனும் உன்னுல் அல்லவோ ராமனின் பரதத்வத்தை அறிகிறுன். ஸம்சாரக் கடலாகிற இந்த சமுத்திரத்தில் ராம நாமத்தினுல் எழுதப்பட்ட கற்களைக்கொண்ட ஸேது அணை மிதந்தது. எங்கேயாவது கற்கள் ஜலத்தில் மிதக்குமா? இது நாராயணருடைய திவ்ய லீலை, இந்த சீதைக்காக ராமன் ஸ்திரிலோலனுக வருவான் என்று கணக்கிட்டுப் பார்த்து ராவணன் உன்னை லங்கைக்குக் கூட்டி வந்தானே? இதன் மர்மத்தை நீயும் பிரபுவுமாகிற ராமன்தான் அறிவார்கள். என் ஸுஷீம்ன நாடியில் வீற்றிருக்கும் மஹா திரிபுரசுந்தரி, சமுத்திர ராஜனுகிற வருணனை முன்னிட்டு, சீதாராமா, ரங்கநாத ரங்க நாயகி, உங்களை சரணமடைகிறேன்.]

அந்த வானரக் கூட்டங்களின் பிரயாணம் அதி அற்புதமாக நடந்துகொண்டிருந்தது. அவர்கள் போட்ட கூச்சல்கள், ஆரவாரங்கள், குதிப்பதினுல் யேற்படும் பூமியின் நடுக்கங்கள் உலகங்களைத் தாங்கும் பரம ஸ்ரேஷ்டமான சேஷ ராஜனை அசைத்தன. உதார குணத்தை உடைய அந்த ஆதிசேஷன் அடிக்கடி ராமகிருபையினுல் மோஹமடைந்த வானர வீரர்களைப் பார்த்து, தானும் மோஹத்தை அடைந்தார். அந்த பிரபு சில சமயங்களில் தன்னுடைய பற்களால் ஆதி கூர்மத்தின் முதுகு எலும்புகளைப் பற்றிக்கொண்டு தனக்கு ஆதாரத்தைத் தேடிக் கொள்வது போல காணப்பட்டார். அந்த சமயம் அவருடைய பற்களால் ஆதி கூர்மத்தின் பீடத்தின் மேல் அடையாளம் செய்யப்பட்ட முத்திரைகள் பகவானுடைய திக்விஜய, ராவண வதவிஜய யாத்ரைகளை, அந்த பவித்திரமான சீதா மீட்சிப் படலத்தை, கவிதைகளாக எழுதுவதுபோலவும், (ராமானுஜன் ரங்கநாயகி முன் கொலுவீற்றிருக்கும் ரங்கேசருடைய கீர்த்தி பிரபாவங்களை அழகிய ஸ்ரீ ஸுக்திகளால் பிரகாசப்படுத்துவது போலவும்) இருந்தன. (ராமானுஜா, உன் தயைதான் எனக்கு வேண்டும். உனது அருள் புரியும் வசனங்களும், மூச்சுக் காற்றும், சுத்த ஸத்வமும், கார்க்கோடகன் நளனுக்கு அனுக்ரஹித்த மாதிரி, என் துக்கங்களை விடுவித்து, பகவத் சேர்க்கை

யைக் கொடுக்கவேண்டும். ஓங்காரிணி, துரித நிவாரணி, சர்வாணி, கிருபை செய்.) (203)

இந்த பிரகாரம் கிருபாநிதான் (இருப்பிடம்) என்று சொல்லக் கூடிய பிரபு ஸ்ரீ ராமசந்திரன் சமுத்திரத்தின் வடகரையை வந்து அடைந்தார். அங்கு போகும் வழியில் கரடிகளும் வானரர்களும் பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டு வந்து சேர்ந்தார்கள். (204)

அங்கே லங்கையில், ஹனுமார் லங்கையை எரித்து விட்ட தினத்திலிருந்து ராக்ஷஸர்கள் பய பீதியுடன் வாழ்ந்து வந்தார்கள். ஒவ்வொருவரும் தங்கள் கிரஹத்தில் பேசிக்கொண்டார்கள். " நம்மையும் இந்த ராக்ஷஸ குலத்தையும் காப்பதற்கு உபாயம் ஒன்றும் காணப்படுவதாக இல்லை. நாம் என்ன செய்கிறது ?" (205)

[தியானம்

நாராயணா, ராமசீதா நாயகா, உன்னை மஹாபுருஷர் ஆதி தேவர், புராதனர் என்று சொல்லுகிறார்கள். அதுமாதிரி ஸ்ரீதேவியாகிற மஹாலக்ஷ்மியை மஹாபாக்யமுள்ளவளாகவும், ரூப ஸம்பத்துக்கள் உடையவளாகவும், லோககாந்தை, பத்ரை, பரிசுத்தமான ஸ்ரீதேவி, தர்மார்த்த காம சுகத்தைக் கொடுத்து ஞானத்தைப் ப்ரேரணை செய்பவளாகவும், யாவருக்கும் ஸர்வஸம்மதமானவளாகவும் சொல்லுகிறார்கள். மாதவா, புவனேஸ்வரி, ஸர்வ மங்களங்களுக்கு மூலகாரணமாக விளங்கும் நீங்கள் வாஸ்தவமாகவே திருஷ்டா திருஷ்ட பலத்தைக் கொடுப்பவர்கள் என்று ஒப்புக்கொள்கிறேன். அப்பேர்பட்ட ராமா, சீதாபதி, ஆசந்திரார்க்க வரை பூமியில் கீர்த்திகளை அடைந்தீர்கள். காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்த்தால், லோக கல்யாணார்த்தமாகவும், க்ஷேமஸந்துஷ்டிக்காகவும், ரகுகுலத்தில் உதித்து புருஷனாகிற அனந்தனாகிய லக்ஷ்மணன்கூட லோகத்தையும் திக்பாலர்களையும் தர்மத்தையும் காத்து ரக்ஷித்தீர்கள். உங்களுடைய பாதஸேவைகளை பூமியும், பூமியினுள்ள சகல சேதனர்களும், ஸத்வம் கொண்ட மனிதர்களும், இந்திரியங்களையும் மனத்தையும் செய்கைகளையும் உங்களுக்கு அர்ப்பித்து, வாழ்ந்து வருகிறார்கள். நீங்கள்தான் ஆதிபுருஷர்கள். பிரபோ, பிரபஞ்சங்களையும் ஐந்து பூதங்களையும் ஸ்ருஷ்டித்து, அவைகளில் தனது ஒரு அம்சத்தால் அந்தர்யாமியாகப் பிரவேசித்து, சகலத்தையும் நிமித்த காரணமாகவும், கர்த்தாவாகவும், மூல காரணமாகிற உபாதான காரணமாகவுமாகிறபடியால் புருஷர்

என்று சொல்லப்படுகிறீர். ஆதிதேவராகிய நீர் எல்லோருக்கும் முன் செல்லுகிறவர். புரம் எனப்படும் சரீரத்திலிருப்பவர். பிரளய காலத்தில் அநேக லோகங்களையும் ஸம்ஹரிப்பவர். உமக்கு உலகங்கள் தேகம். உம்முடைய இந்திரியங்கள், ஞானம், கர்மம், ஸ்வாஸம், சகல பிரபஞ்சங்களுக்கும் பலம். உமது ஸத்வாதி குணங்களே பிரபஞ்சங்களை வாழவைக்கின்றன. ஸ்திதி பிரளயம் ஆகியவைகளை உண்டுபண்ணுகின்றன. இவைகளில் நீர் விசிஷ்டனாக விருந்துகொண்டு ஜீவர்கள் எனப்படும் பத்தர் முக்தர் நித்யர் என்கிற மூவகை சேதனர்களையும் பார்க்கிலும் மிக்கச் சிறந்தவராகவும், தேகம் என்கிற பிரபஞ்சத்தில் ஆத்மா வாகவும் விளங்குகிறீர். அப்பேர்பட்ட புருஷோத்தமராகிய உம்மை மனத்தினாலும் கர்மங்களாலும் ஞானத்தினாலும் ஆராதனை செய்யாதவர்களை அவர்களின் தாய் அவர்களைப் பெற்றதைவிட மலடியாக விருக்கலாம். ராமா, லக்ஷ்மணா, நர நாராயணர்கள் போலவிருக்கும் ராஜ ரிஷிகளே, உங்களுடைய பாத பத்மங்களை வணங்கும் உத்தம சீலர்கள் லோபத்தை உதறித் தள்ளிவிட்டு, உங்களுடைய ஸமஸ்த பரிவாரங்களாகிற தேவதைகளுக்கும் அவர்களுடைய பாகங்களைக் கொடுக்கிறார்கள். அதனால் அவர்கள் தேவர்களுக்கும் கிடைக்கப்பெறாத உங்களுடைய உத்தம பாதங்களை அடையவிரும்பும்போது, தேவதைகள் விக்னங்களைச் செய்கிறார்கள். ஆனால் தேவர்களை உபாஸிக்கும் பக்தர்கள் அந்த கஷ்டங்களை சுலபமாகத் தாண்டுகிறார்கள். அவர்களில் சிலர் இந்திரிய நிக்ரஹம், பசி குறிகளை அடக்கி, தபஸ் தேவ ஆராதனைகளைச் செய்தும், லோபத்தினால் காம க்ரோதர்களாக ஆகிவிடுகிறார்கள். அதனால் அவர்கள் மிக்க சிரமத்துடன் ஸம்பாதிக்கப்பட்ட தபஸ்ஸுகளின் பலன்களை வெகு சீக்கிரத்தில் இழந்துவிடுகிறார்கள். ராவணன் மஹாதபஸ், மஹத்தான ஐஸ்வர்யங்கள், பெரும் குல கீர்த்திகள் யாவையும் அடைந்து மஹா லோபத்தினால், க்ரோதவசம் அடைந்து குலத்துடன் நாசமடைந்தான். அவன் ஜயிக்க முடியாத இந்திரியங்களைக் கொண்டவனாக, செய்ய முடியாத மஹா தபஸ்ஸுகள் செய்த போதிலும், அசூயைக் கொண்டவனாக, ராமனிடம் க்ரோதத்தைச் செலுத்தி அழிந்து போனான். அவனைப் பார்த்தால் மஹத்தான சமுத்திரத்தை தாண்டினவன், பசுவின் குளம்பில் தேக்கப்பட்ட ஜலத்தில் மூழ்கிப்போனவன் போலத் தோன்றுகிறது. அப்பேர் பட்ட காம க்ரோத ரஹித லக்ஷ்மண ராமா, சீதே, உங்களை நர நாராயணர்கள் கைங்கரிய லக்ஷ்மி என்று பாவனை செய்து,

எனது காமத்தையும் க்ரோதத்தையும் லோபத்தையும் அடக்கி, உங்களது மாயையிலிருந்து ரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன்.]

"எந்த பிரபுவின் தூதனுடைய பலம் வர்ணிக்க முடியாதபடி அமித பலமாக விளங்குகின்றதோ, அந்த பிரபு தானே ஸ்வயமாக லங்கைக்கு வந்தால், நமக்கு யார் துணை செய்யக் கூடும்? இந்த தூதனே இவ்விதம் அனர்த்தம் விளைவிப்பானுகில், அந்த தூதனின் பிரபு நிச்சயமாகவே அதிக பிரபாவம் உள்ளவர் அன்றோ? அவருடைய கோபத்திலிருந்து நாம் எவ்விதம் தப்புவோம்?" என்று லங்காபுரி வாசிகள் கவலையை அடைந்தார்கள். தூதன் வந்தது, அவனுடைய அட்டஹாஸச் செய்கைகள் ஆகிய எல்லாவற்றையும் ராவணனுடைய பத்னி மந்தோதரி அறிந்து, மிக்க வியாகுலப்பட்டாள். (206)

ஒரு நாள் அவள் ஏகாந்தத்தில் தன் பதியான ராவணனிடம் மிக்க வினயத்துடன் அவனுடையப் பாதங்களைப் பிடித்துக் கொண்டு அழகான ரீதியில் வார்த்தைகளைச் சொன்னுள். "பிரபு, பிரியதமரே, ஸ்ரீஹரி பகவானிடம் க்ரோதம் செய்யாதீர்கள். (அவர் நம்மால் மிக்க சிரத்தையோடு ஆராதிக்கத் தக்கவர். அனந்தருடைய குண விலாஸங்களைச் சொல்வது என்னுடைய பால புத்திக்கும் ஸ்திரி புத்திக்கும் முடியாத காரியம். தாங்கள் தபஸ், குலம் சித்தி, ஐஸ்வர்யங்கள் இவைகளில் மிக்க ஸ்ரேஷ்டரானபடியால், பரமாத்மாவாகிய நாராயணரைப் பற்றி தாங்கள் நன்கு அறிவீர்கள். இந்த நாராயணரே பிரபஞ்சத்தின் ஆதி கர்த்தா. பிரும்மாவுக்கும் முதல்வரான கேசவர், தேகம் கொண்ட சகல சராசரங்களும் அவரையே ஸ்திதி சம்ஹாரம் ஆகியவைகளுக்கு பற்றியிருக்கிறது. அவருடன் தாங்கள் க்ரோதம் கொள்வது சரியில்லை. தங்கள் ஹிதம், எங்கள் ஹிதம் ஆகியவற்றை மனதில் தரித்துக்கொண்டிருக்கும் ஸ்வாமி, குலநாதா, அவரை நினைத்தால் தானே "பயம் த்யஜத பத்ரம்வ:" என்கிறபடி தேவர்களிடையில் ஸகலாஸ்திர பூஷண பீதாம்பராதி பூஷிதராய் மந்தஹாஸத்துடன் விளங்கும் எம்பெருமான் (பாண்டவர்களுக்குச் சொன்ன மாதிரி), கிருஷ்ண கேசவராக நின்று பயத்தைப் போக்கி நம்மைக் காக்கும் தெய்வமல்லவோ, அப்பேர்பட்ட பிரபுவினிடம், பெரும் நெருப்பு முன்பே, நம் போன்ற அணுக்களின் அம்சங்களான நெருப்புப் பொரிகள் என்ன செய்யக் கூடும்?) கோபத்தையும் க்ரோதத்தையும் விட்டு விடுங்கள். என் வார்த்தையை லக்ஷியம் செய்யுங்கள்." (207)

"ஸ்வாமி, மிருத்யுவும் பயப்படக் கூடிய அவருடைய தூதனின் பெயரைக் கேட்டவுடனே, ஸ்மரித்தக்ஷணமே, ராக்ஷஸ ஸ்திரிகளின் கர்ப்பங்களிலிருந்து சிசுக்கள் நழுவி விடுகின்றன. பிரியோத்தமரே, அந்த தூதனுக்கு எஜமானரும் (ஸவிதாவின் பிரகாசத்தை உடைய பரபிரும்மத்துக்கு, ஸ்வாமி, நமது பிரபிதாமஹருக்கு, வாயு அக்னி சந்திரன் சூரியன் சந்திரன் வருணன் ஆகிய ஸகல தேவர்களுக்கு ஆதி பிதாவும், ஸர்வ சாக்ஷியுமான நாராயணருக்கு) நாம் துரோஹம் செய்யலாமா? நம் குலத்திற்கு ஹிதத்தை தாங்கள் விரும்பினால், தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள். அவருடைய ஸ்திரியை அவரிடம் சேர்ப்பதற்கும், உங்களுடைய அபராதங்களை மன்னிப்பதற்கும் மந்திரிகளுடன் யோசனை செய்யுங்கள்." (208)

"இந்த சீதை சாதாரண ஸ்திரி என்று நினைக்காதீர்கள். (மஹா காளியின் அம்சத்தை அடைந்திருக்கிறவள். காலபைரவி.) கமலவனம்போல செழிப்பாகவிருக்கும் உங்கள் குலத்தைக் கெடுப்பதற்கு வந்திருக்கும் குளிர் இரவில் தோன்றும் பனி போன்றவள். நாதா, (மமகாரங்களை விட்டு முயற்சியுடன் பரிவாரங்களுடன் கூடிய ஸ்ரீராமனை தாங்கள் கேசவன் என்று எண்ணி ஆராதியுங்கள். சீதையை தாய் என்று எண்ணுங்கள். அதர்மத்தைச் செய்யாதீர்கள். "ஆத்மானம் தன் மயம் த்யாயன் மூர்த்திம் ஸம்பூஜயே துஹரே:" என்கிறபடி சீதாராம மூர்த்திகளை ஸர்வஸுகந்த வஸ்துக்களால் ஆராதித்து அந்த மூர்த்தியின் பாதங்களை தலையில் தரிப்பதற்குப் பதிலாக, நாம் அவருடன் போட்டி போட்டுக்கொண்டு க்ரோதத்தினால் அவரிடம் விரோதத்தை அடையக்கூடாது.) இவ்விதம் சீதையை நாம் அவரிடம் திருப்பிச் சேர்க்காவிட்டால் நமக்கு ஹிதத்தைச் செய்யும் சம்புவும் பிரும்மாவும் நம்மை ரக்ஷிக்காமல், நமக்கு நன்மையைச் செய்யாமல், விட்டுவிடுவார்கள்." (209)

ஒரு ராமபாணம் ஆயிரக்கணக்கான நாகங்களின் கொடிய விஷத்திற்கு சமமானது. இந்த ராக்ஷஸக் கூட்டங்களோ ஸர்ப்பவாயிலில் அகப்பட்டுக்கொண்டு தவிக்கும் தவளைகளைப் போல விருக்கிறார்கள். உங்கள் பிடிவாதத்தை விடுங்கள். ஆபத்து முற்றிப்போவதற்கு முன்பு ஏதாவது உபாயம் செய்து, இந்த ராமபாண சர்ப்பங்கள் ராக்ஷஸர்களை முழுங்குவதற்கு முன் அவரை ஆஸ்ரயம் செய்யுங்கள். (பொறுமை குணமுள்ள சீதையை திருப்தி செய்து வைத்து அவளுடைய அனுக்ரஹ

கிருபா பாத்திரமாக அடைந்து கொள்ளுங்கள். எங்களையும் சுகத்தை அடையச் செய்யுங்கள்.'') (210)

[தியானம்

நாராயணு, விஸ்வதிருக், காலாத்மன், கிருஷ்ணு, விதுரர் பல காலம் யோசித்துப் பார்த்து, உன்னை தர்மத்திற்கும் மேலான பொருள் என்று கருதினுர். பிரஹஸ்பதியின் சிஷ்யரான உத்தவர் உன் பெயரைச் சொன்னவுடனேயே, மெய் சிலிர்த்து புளகாங்கிதமானுர். மைத்ரேயர் உன் குண விபவங்களைச் சொல்லும்போது பாகவத தர்மத்தை நிர்த்தாரணம் செய்வது போல பகவத் குணும்ருதத்தை ரசிப்பதில் இன்பமுற்றவர் ஆனுர். வேத கர்ப்பனுன பகவானே பிரும்மாவைப் பார்த்து ''ஸ்ருஷ்டித் தொழிலைக் கண்டு பயப்படாதே. நான் எங்கும் பரவியிருக்கிறேன். அக்னி விறகில் பதுங்கி யிருப்பதுபோல நான் சகல பிரபஞ்சத்திலும் வியாபித்திருக் கிறேன். எந்த நிமிஷம் ஜீவன் தன்னைத் தெரிந்து கொண்டு, அந்த நிஜ ஞானத்தினுல் என்னை குணரஹிதனுகப் பார்க் கிருனே, அவனுடைய இந்திரியங்களை என் கைங்கரியத்தில் அர்ப்பித்து, கர்த்ருவத்தைவிட்டு, என்னையே அடைக்கலமாக வந்து அடைந்து என் திருவுள்ளத்தின்படி ஸர்வசம்மதத்துடன் நடந்து வருகிருனே; அவனே கர்மபந்தங்களிலிருந்து விடுதலை அடைகிருன். அத்யந்த தவத்திற்குப் பின்பு இன்று இந்த பாவனையுடன் என்னைக் காணப்பெற்ருய். முதலில் என் நினைவை மறந்து, ஸ்ருஷ்டி செய்ய விரும்பினுய். அதன் பிறகு என் நினைவு வந்ததும், கமலாஸனு, உன் தாமரைப் பீடத்தின் வழியே உட்புகுந்து அந்த தாமரை எங்கு முளைத்திருக் கின்றது என்று அறிய முற்பட்டு பின்பு என்னைப் பார்த்தாய். இப்போது என்னை தத்வஞானத்தினுல் அறிந்து நிஷ்டை நியமங்களுடன் பூஜித்து அனுக்ரஹம் அடைந்தாய். இப் பொழுதுதாவது என்னைப்பற்றி நன்கு தெரிந்துகொள். எனக்கு ராகம் த்வேஷம் கிடையாது. நான் ஸ்துதி செய்யத் தகுந்தவன். நான் ஸர்வ காமேஸ்வரனுகிறபடியால் எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. என் ப்ரீதியைக் குறிக்கோளாகக்கொண்டு எவர்கள் வாழ்கிருர்களோ அவர்களிடம் நான் பரமஸந்துஷ்டி அடைகிறேன். நான் பூதாத்மாவானபடியால் சரீரங்களாயுள்ள சேதனு சேதனங்களின் குணதோஷங்கள் என்னிடம் பற்ருது. நீர் (பிரும்மா) முதற்கொண்டு என்னிடம் முடிவில் அடைகிறபடி

யால் காலாத்மனுகவும் ஸம்ஸ்தானராகவும் விளங்குகிறேன். உமக்கும் முந்தியிருந்ததால் அஜர் என்று சொல்லப்படுகிறேன். நான் யக்ஞதானயோக ஸமாதி ஸ்வரூபி. நானே ஆத்மயோனி. ஆகையால் சரீரத்திற்கு ஆத்மா எவ்விதம் பிரியமோ, அதுபோல ஆத்மாவாகிற நான் சரீரத்திடமும் பிரியமாகவிருக்கிறேன். எனக்கு பாரபக்ஷம் கிடையாது. எல்லோரிடமும் ஒரேவிதமான கௌரவத்துடன் பழகுகிறேன். அதனுல் ஸமர் என்று அழைக்கப் படுகிறேன். மனிதனுகப் பிறந்த ஒருவன் எனக்குப் பிரியனுக இருக்க முயற்சிக்கவேண்டும். ஸகல பிரபஞ்சத்திலும் வியாபித் திருக்கும் எனக்கு ஸர்வஸம்மதமாக விருக்கவேண்டும். இதைத் தான் வேதங்கள் சொல்லுகின்றன. பிரும்மாவே, நான்தான் ஜீவர்களைப் பந்தப்படுத்தும் பிருகிருதியையும் அதில் பந்தப் பட்ட ஜீவர்களையும் நடத்தும் பிரதான புருஷேஸ்வரர்'' என்று அநிருத்த நாராயணராக உபதேசித்தார். அப்பேற்பட்ட பிரபு ஸர்வஸுகந்த பிரியன் கிருஷ்ணுவதாரத்தில் பூதனையின் கொடிய விஷத்தைச் சாப்பிட்டும் அவளை தன் வளர்ப்புத் தாயாக நினைத்து மோக்ஷத்தைக் கொடுத்த ஸாத்வதாம்பதி மாதிரி, சீதைக்காக ராக்ஷஸர்களையும் ராவணனையும் அவனுடைய பந்துக்களையும் அவர்கள் துரோக சிந்தனையுடன் இருந்தாலும், அனுகிரஹம் செய்வதற்காகவே தேவர்களாகிற வானரர்கள் சகிதம் லங்கை செல்கிருர். அப்பேற்பட்ட பிரபு, மாயாதீதர், உத்தவரிடமும் விதுரரிடமும் மைத்ரேயரிடமும் கருணை காட்டியது மாதிரி, என்னையும் ஸம்ரக்ஷிப்பாரா? எவ்வளவு காலம் துர்யோதனுதிகளிடம் பொறுமைகாட்டி அவர்களின் குற்றங்களை மறந்து, பீஷ்மதுரோணுதிகளுக்காக, நிலையாக நின்ருரே, அந்த பிரபு, பிரபன்னுர்த்திஹரன், மஹாபுருஷன் அவ்யய ஆத்மா, துஷ்டர்களை ஸம்ஹரிப்பதற்கும் ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும் அவதரிக்கும் ராமகிருஷ்ணர், அகிலலோக காரகன், அகிலலோக ஸ்திதிஸம்ஹாரம் ஆகியவைகளைச் செய்கிற பத்மநாபன், தன் கூடப் பிறந்த யதுக்களை பூபாரத்திற்காக ஸம்ஹரித்தவன், பக்த ஜனங்களுக்கு தாஸ்ய கிங்கரன்போல நடக்கும் ஸரள ஸலில ஸ்வபாவமுள்ளவன், ஹரிபகவான் என்னிடம் பிரஸன்ன மடைவாரா? மஹாரூபிணி, பிரும்ம ருத்ராதிகளால் ஆஸ்ர யிக்கப்படும் என் தேவி, மஹாலக்ஷ்மி லீலாம்புஜத்தை தரித்துக் கொண்டிருக்கும் பத்மமாலினி, ஹரியினிடம் சாக்ஷாத் கரித்திருக்கும்போது அசஞ்சல புத்தியுடன், துளசிதளங்களால் பகவானை அர்ச்சித்து அதிபிரேமையுடன் விளங்குகிருளே,

அந்த மூர்த்தி என்னிடம் தயைகொண்டு, என் ஸ்துதிகளைக் கேட்கமாட்டாளா? யாவரிடமும் மித்ரபாவத்துடன் இருக்கும் விஷ்ணுபகவான், சாந்தஸ்வரூபி, ஸமஸ்த சேதன சேதனங்களை குக்ஷியில் வைத்துக் காப்பாற்றும் தாமோதரன், ஆத்மானம் ஆத்மனிநமோ நபஸீவதீரா:, வைகுண்டபந்து:, அபேத ஸ்வரூபத்துடன் யாவரையும் பார்க்கும் என்னிடம், காமம் க்ரோதம் லோபம் ஆகியவைகளை ஒழித்த என்னிடம் கருணை செய்யமாட்டீர்களா?]

மூர்க்க ஸ்வபாபமுள்ளவன், ஜகத்பிரஸித்த ஸ்வதேஹ அபிமானி, பரம ஐஸ்வரிய லாபாதிகளால் தன்னை ஞானபண்டிதனுகக் கருதியவன், அஹங்காரம் மதம் படைத்த ராவணன் மந்தோதரியின் புத்திமதிகளைக் கேட்டு, சிரித்துக்கொண்டான். மந்தோதரியிடம் பேச ஆரம்பித்தான், "தேவி, ஸ்திரி ஜாதிக்கே இயற்கை ஸ்வபாவமாகிற கோழத்தனத்தை விட்டுவிடு. மங்களத்தை தரும் சமயத்தில்கூட அவர்களுக்கு பயம் ஏற்படுகிறது. உன் மனம் கவலை பயங்களால் நொய்ந்து கலக்கம் அடைந்திருக்கிறது, பயத்தை விடு, கவலைப்படாதே." (211)

"வானர சைன்யங்களுக்கு நமது ராக்ஷஸ வீரர்கள் சரியான சவால் கொடுப்பார்கள். அவர்கள் நமது படைவீரர்களுக்கு ஆகாரமாவார்கள், உனக்குத் தெரியாதா? லோகபாலர்கள் முதற்கொண்டு அவர்களிடம் நடுங்குகிறுர்கள். என்னிடமுள்ள பயத்தினுல் திக்பாலர்களே நடுங்கும்போது என் மனைவியாகிய நீ ஏன் பயப்படவேண்டும்? நீ பயப்படுவது பரிகாசப்படக் கூடிய விஷயமாகவிருக்கிறது." (212)

இவ்விதம் சொல்லிவிட்டு ராவணன் மந்தோதரியை ஹ்ருதயத்தில் அணைத்துக்கொண்டான். மமதை நிரம்பினவனுக ராவணன் சிறிது நேரம் கழித்து அரச சபைக்குச் சென்றுன். மந்தோதரி தன் பதியின் புத்தி இவ்விதம் கடவுளினுல் பேதலிக்கப்பட்டிருக்கிறதே என்று நினைத்து அதிவியாகுலமடைந்தாள். அவளுக்குப் பயம் அதிகரித்தது. (213)

ராவணன் சபைக்குச் சென்று சிம்மாஸனத்தில் ஏறி உட்கார்ந்தான். அப்போது ராஜதூதர்கள் வானர ஸைன்யம் சமுத்திரத்தின் வடகரையில் வந்திருப்பதைப்பற்றி தகவல் சொன்னுர்கள். இதைக் கேட்டதும் ராவணன் மந்திரி சேனுதிபதிகளைக் கூப்பிட்டு "இப்போது நாம் என்ன செய்யலாம்? யோசித்துப் பதில் சொல்லுங்கள்" என்று வினவினுன். மந்திரிகள் இதைக்கேட்டு பரிஹாஸத்துடன் சிரித்தார்கள்.

''ஸ்வாமி, பேசாமல் இருங்கள், என்ன நடக்கிறது என்று நாம் பார்க்கலாம்,'' என்று பதில் சொன்னார்கள். (214)

''ஸ்வாமி, தாங்கள் தேவதைகளை ஜயித்தவர்கள். ராக்ஷஸர்களையும் ஜயித்து அவர்களின் அதிபதியாகவிருக்கிறீர்கள். அப்பேர்பட்ட பலவானாகிய தாங்கள் கேவலம் மனிதர்களையும் வானரர்களையும் ஜயிப்பதற்கு சிரமம் ஏதும் இருக்குமோ? கவலைப்படாதீர்கள்.'' (215)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி நிவாஸா, காளிந்திபிரியா, கருணாகரா, ராமாசீதா, நீதானே முதலில் இருந்தாய். நீதானே நான் கர்ப்பத்தில் சிசுவாகவிருந்தபொழுது என்னைக் காப்பாற்றினாய், நீதானே முதலில் அக்னி முதலிய பஞ்சபூதங்களை ஸ்ருஷ்டித்தாய். அதன் பிறகு பிரபஞ்சங்களைப் படைத்து அதில் ஊடுறிவினாய். ஆகையினால் ஒன்றாக இருந்து பலவாக உன் சங்கல்பத்தினால் மாறினாய். அதே சங்கல்பத்தினால் எல்லோரையும் போஷித்துக் காப்பாற்றினாய். உனக்கு எப்போது படைத்த பொருள்களை அழிக்கவேண்டும் என்கிற எண்ணம் எழுகிறதோ, அப்போது அவைகளை நீயேதான் ஸம்ஹரிக்கிறாய். இதிலிருந்து நாராயணனே பரபிரும்மம்; அவனே படைக்கிறான்; போஷிக்கிறான், அழிக்கிறான்; மறுபடியும் பிரபஞ்சங்களை உண்டாக்குகிறான் என்று தெரிகிறது. அதனால் ராமா உன்னை பரபிரும்மம் என்றும் மஹத் என்கிற பெரிய பொருளாகவும் புருஷனாகவும் சொல்லுகிறார்கள். உன்னைத்தான் ஸத்யம் ஞானம் அனந்தம் என்று சொல்லுகிறார்கள். ஸத்யம் என்கிற பதத்தினால் மாறாதரூபமுள்ளவர். ஸத் என்கிற பிராணனாகவும், த் எனப்படும் அன்னமாகவும், யம் எனப்படும் ஆதித்யனாகவுமிருப்பவர். எக்காலத்திலும் மேன்மையாகவிருப்பவர்; சேதனா சேதனா ரூபியாகவிருப்பவர். ஸத்யம் என்கிற சொல்லுக்கு நிரந்தரமாக எக்காலத்திலும் உண்மையாக விருப்பவர்; ஞானம் என்கிற சொல்லுக்கு மாறாத அறிவு உள்ளவர்; ஞானத்தினாலேயே அடையத்தக்கவர்; சிறந்த பாஞ்சராத்திர சாஸ்திரத்தைத் தெரிந்துகொள்ள காரணமாயிருப்பவர்; ஸர்வ ஸ்வதந்திரர் என்று பல அர்த்தங்கள் இருக்கின்றன. அனந்தம் என்கிற பதத்திற்கு தேசவரை, காலவரை, ஸ்வரூப அளவு, குணங்களின் கணக்கு இவைகள் அளவிடாதபடி பெரிதாக விளங்குபவர். அந்த அந்த பக்தர்களைக் காப்பதற்கு எண்ணிறந்த ரூபங்களை எடுப்பவர்

என்றும் அளவற்ற மஹாசக்திகளுடன் விளங்கும் பிரபு என்றும் சொல்லப்படுகிறது. அப்பேர்பட்ட ஸத்யஞான அனந்த பிரும்மமாகிற நீர் மங்கள லக்ஷணங்களாலும், கல்யாண குணங்களாலும் பிரமாணமாக அறியப்படுபவர். ஆகையினால் தான் எங்கு எங்கு அழகு, மங்கள கீர்த்திகள், உன்னத செய்கைகள், ஐயமற்ற சிறந்த ஞானம், இன்னும் எவ்வளவோ நல்ல விஷயங்கள், வஸ்துக்கள் காணப்படுகின்றதோ, கேட்கப் படுகின்றதோ, அவைகள் எல்லாம் நீர்தான் என்று பெரியோர்கள் அறுதியிட்டுச் சொல்கிறார்கள். அப்பேர்பட்ட ஆனந்தமய சீதா ராமா, உங்களை காளிந்தியை முன்னிட்டு சரணமடைகிறேன். நீங்கள்தான் என் பரபிரும்மம். என்னைக் காப்பாற்றவேண்டும். என்னை சுகமடையச் செய்யவேண்டும். உங்களைப்பற்றிய ஞானத்தை அருளவேண்டும். கோலத் திருமாமகளோடு உன்னைக் கூடாதே சாலப் பலநாள் அடியேனின்னும் தளர் வேனோ என்கிறபடி ராமா, உனக்கு ஏற்றவளாய் நிற்கும் சீதையோடு, என்னை ஸத்புருஷனாக ஆக்க மாட்டீர்களா? நல்ல குணங்களைக் கொடுத்து, எம்பெருமானை அடைய விரும்பும் என்னைக் காதுகொடுத்துக் கேட்கமாட்டீர்களா? உங்களுக்குச் செய்யவேண்டிய ஸர்வவித கைங்கரியத்திற்கும், அதனால் ஏற்படும் ஸம்பந்தகுண விபூதாதி பரிபூர்ண அனுபவங்களுக்கும் ''நாராயணாய'' என்கிற சதுர்த்தியினால் நான் சேஷன், பிராட்டியோடு கூடிய எம்பெருமானை சேஷியாக நான் நமஸ்கரிக் கிறேன். அஹம் நமமஸ்யாமி என்கிறபடி நமம கிஞ்சித்ஸ்யாத் என்று பட்டர் சொல்வதுபோல சொல்கிறேன். கருணை செய்ய மாட்டீர்களா?]

மந்திரி, வைத்யன், குரு ஆகிய மூவரும் தங்களுக்கு நஷ்டம் ஏற்படும் என்கிற பயத்தினாலே உண்மையை மறைத்து பிறர்களுக்கு ஹிதத்தைதரும் பொய் வார்த்தைகளையோ, செய்கைகளையோ செய்தால், நஷ்டம் அவர்களுக்குத்தானே ஏற்படும். எஜமானனுடைய ஸம்பத்தாகிற ராஜ்ய லக்ஷ்மியும் உயிரும் தர்மங்களும் நசித்துவிடுவதால் இவர்களும் சீக்கிர மாகவே நசித்துப்போவார்கள் அல்லவா. (216)

இந்தமாதிரி சந்தர்ப்பம்தான் இப்போது ராவணனுக்கு நேர்ந்திருக்கிறது. மந்திரிகள் அவனை நேரிடையாக வாய்விட்டுப் புகழ்ந்தார்கள். அவர்களுக்கு தர்மத்தில் புத்தி செல்லவில்லை. (மேலும் ஸ்ரீசீதா நாயகர் பரபிரும்ம, சத்சித் ஆனந்தம் என்று அவர்கள் அறியவில்லை. அப்பேற்பட்ட பரபிரும்மத்திற்கு நாம்

அடிமையாக வாழக் கடமைபெற்றிருக்கிருேம் என்கிற தர்மமும் ஏற்படவில்லே. சகல பிரபஞ்சங்களே ஸ்ருஷ்டித்த ஆதிகர்த்தா வாகிற நாராயணனிடம் விரோதம் செய்வதால் அழிவு ஏற்படும் என்கிற நினேவும் அவர்களுக்கு ஏற்படவில்லே. அதனுல் அவர் களும் ஸம்பத்திலிருந்து நழுவி, அழிந்துபோகப் போகிருர்கள் என்று கவி துளசிதாஸர் பிரமாணம் செய்கிருர்.) இந்த அசுப மான சந்தர்ப்பத்தில் மங்களகரனும் ஸ்ரீகரனுமாகிற விபீஷணர் வந்தார். அவர் தன் தமையனின் பாதசரணங்களில் விழுந்து நமஸ்கரித்தார். (217)

ராவணன் அவனே ஆசீர்வதித்து, ஆஸனத்தில் உட்காரச் செய்தான், (தர்மாத்மா, விவேகாத்மா, ஆனந்தாத்மா, ஸகல ஸ்ரேஷ்ட குணங்களேயும் ஒன்ருக அடைந்த) விபீஷணர் பயப்படாமல் (உள்ளதை உள்ளபடி சொல்லும் தத்வஹித ஸம்பிரதாய ஸதாசார்யன் போல) தனது தமையனுக்கு அனுசாஸனம் செய்தார். "அண்ணு உன் தயையினுல் நான் வினவப்பட்டதால் என் புத்திக்குத் தக்கபடி சொல்கிறேன். (கிருபாளு, உமது ஹிதத்தைத் தவிர என் மனதில் வேறு அபிப்ராயம் ஒன்றுமில்லே. என் வார்த்தைகளே தயவுசெய்து கேளும் பிரபு. உம்மைவிட எனக்கு பேருபகாரி இந்த பூமியில் யாருமில்லே.") (218)

"ஒரு மனிதன் இப்புவியில் வாழவிரும்பினுல் சுய சுஸ்ஸுடன் வாழவேண்டும்; அவன் இந்த ஸ்ரேயசை அடைய விரும்பினுல், லோக கல்யாணர்த்தம் செய்கைகளேயும் நினேவு களேயும் செலுத்தவேண்டும். அவ்விதம் செய்வானுகில் சுகந்த மான புகழ் அவனேத் தேடிவரும். அவன் ஸாதுக்களின் சங்கத் தினுல் ஸுமதியாகிற லோகஹிதத்தை நினேக்கிருன். அதனுல் அவனும் சுபமானதும் உத்தமமான கதியையும் அடைகிருன். (இவ்விதம் இகலோகத்தில் ஆனந்த சுகமும் அதற்குபின் நாராயணபதத்தையும் சுலபமாக அடைகிருன். இந்த விஷயம் உமக்குத் தெரிந்ததுதான்.) பரஸ்திரியை விரும்புகிறவன் உத்தம மான ஸ்ரேயசை ஒருக்காலும் அடைகிறதில்லே. நான்காவது பிறைச் சந்திரனே சுக்லபக்ஷத்தில் எவ்விதம் பார்க்கத்தகாதோ, அதுபோல பரஸ்திரியை மனத்தினுல் கூட ஸ்மரணே செய்யக் கூடாது. அவளுடைய முகம் அவ்வித பாபங்களேச் செய்யக் கூடியது." (219)

"பதினுன்கு லோகங்களுக்கும் ஏக சக்ரவர்த்தியாக விருப்பவன்கூட பூதத்ரோஹம் செய்தால் சீக்கிரமாகவே

நசித்துவிடுகிருன். ஸ்வல்பமாக லோபமிருந்தாலும், குணஸாக ரம்போலவிருக்கும் மனிதனை யாரும் புகழ்வதில்லை. அவனுக்கு ஸாமர்த்தியமிருந்தாலும் அவன் புகழை அடைகிறதில்லை. (220)

(உமக்கும் பிரும்மாவிற்கும், பதினுன்கு லோகங்களுக்கும் ஆதிகர்த்தாவும், அனந்தமான பிரபாவமுள்ளவரும் எல்லோருக்கும் பரமபுருஷனும் நம்போன்ற ஜீவர்களுக்கு யேற்படும் விகாரங்கள் ஒன்றையும் அடையாத ஸர்வசேஷியான பகவான் ஜகத்பதி ஒருவர்தான் இருக்கமுடியும். அப்பேற்பட்ட பஞ்ச பூதர்களை ஸ்ருஷ்டித்த ப்ராணத்ருக், கூட்டில் ஆத்மாக்களை தம்மிடம் அடங்கும்படி செய்யும் பிராணநிலையரிடம் விரோதம் செய்யலாமா? எக்காலமும் தரிசித்து ஆனந்த அனுபவத்துடன் நித்ய கைங்கரியம் செய்வதற்கு உரிய சக்திகிருதக்ஞதை அன்பு ஆகியவைகளைப் பெற்ற பிராணதரிடம் த்ரோஹம் நினைக்கலாமா?'' ''மஹாபுருஷ லக்ஷணங்கள் கொண்டவரும் கல்யாண குணங்களடங்கிய சேர்க்கைபெற்ற பரபிரும்மத்தினிடம் போட்டி போடலாமா? இதில் யாருக்கு நஷ்டம் ஏற்படும் என்கிற விஷயம் முன்பே தெரிந்த விஷயமாச்சுதே. ஸ்வாமி, குண ஸாகரம் என்று சொல்லக்கூடிய பிரபுவை அலக்ஷ்யம் செய்யலாமா? மஹார்ணவம் போல செளலப்யாதிவாத்ஸல்ய ஔதாரிய செளர்ய தைரியகாம்பீர்ய மாதுர்ய செளசீல்ய வீர்யசக்தி தேஜஸ் ஞானபல ஐஸ்வரிய அழகுமூர்த்தியுடன் விவாதிக்கலாமா? அவரிடம் லோபத்தைச் செலுத்தலாமா? ஸ்வரூப லாபமாகிற பாரதந்திரியத்தை உணராத சேஷன் ஸர்வ சேஷியான பகவானிடம் க்ரோதத்தையும் லோபத்தையும் செலுத்தினுல் அவனுக்கு அல்லவோ பரமநஷ்டம்.'')

[தியானம்

ஜயராமா, ஜயசீதாராமா, ராமசீதா, நாராயணு, என் வார்த்தைகளைக் கொஞ்சம் கேளு அப்பா. நான் உங்களிடம் நிரதிசயமான ப்ரீதியை வரமாகக் கேட்கிறேன். எனக்கு இருக்கும் அஹங்காரத்தில் நான் செய்யும் கர்மங்கள் வசனங்கள் எல்லாம் நாராயணருடைய ப்ரீதிக்காகச் செய்கிறேன் என்று ஸ்வபாவம் உள்ளவன் என்று தெரிந்துகொள்ளமாட்டாயா? நீ இந்திரனைக்கூட பிராம்மண வதத்தினுல் ஏற்பட்ட தோஷங்களிலிருந்து காப்பாற்றினவர் என்று எனக்குத் தெரியாதா? ஜனுர்த்தனரே, உமக்கு பெயருக்கு தக்கபடி விரோதிகளை பீடிப்பதில் தடுக்கமுடியாத வீர்யமுள்ள அப்ரதிரதர் என்று எனக்கு

தெரியாதா? அதுபோல பிரபு தர்மாத்மா விஸ்வாத்மா, திரிதேவா, மஹாபாஹுே, வீரபாஹுே, மோக்ஷதர்ம பராயணமாக வாழும் உம்மிடம், பிரும்ம பாரங்கதர்களாகவிருக்கும் நாராயணபரர்களிடம் எவ்விதம் அத்புதமானதும் விக்யாதமான செய்கைகளால் அவர்களை ஆட்கொள்ளுகிருயே, அப்பேர்பட்ட ஸதானந்தகரமான புண்யச்ரவண கீர்த்திகளை மஹதோமஹீயான் என்று அறிந்து நான் இன்ப ஆனந்தங்களை அடையவில்லையா? அம்புஜாக்ஷா சுரஸித்த கந்தர்வ நாகயக்ஷரகின்னர முனிஜன ஹ்ருதயா, மஹாத்மா, மஹா போக்யவானே, என்னிடம் பரம ப்ரீதிகொண்டு நான் உன் பக்தன் என்று தெரிந்துகொள்ள மாட்டாயா? இந்த மானிட ஜன்மம் ரொம்ப அரிது. அதில் க்ஷணம்கூட வ்யர்த்தமாக்காமல் வைகுண்டபதியாகிற உம்மை, என் பிரியதர்சனர்களை அடையாமல் வாழ்வது மோசம்போனது என்று அறிந்து உம்மை அடைந்திருக்கிறேன். இது, ராமாசீதா, உங்களுக்குத் தெரியாதா? ஸம்சாரக் கிணற்றில் விழுந்து ஸாது ஸங்கமின்றி வாழும் எனக்கு க்ஷமையைப் பாராட்டி என்னை தாஸ்ய பாவத்தோடு வந்திருக்கும் பிரபன்னன், உன்னுடைய மனசந்தோஷத்திற்கு பிரயத்னப்படுகிறேன்.'' என்று ஸ்வீகரித்துக்கொள்ள வேண்டும். அப்ரமத்தரே, கருணைசெய்யும்.]

அண்ணு, காமக்ரோதம் மதம் லோபம் ஆகிய எல்லாம் நரக வேதனையைத் தரும் என்று உமக்குத் தெரியாதா? (புலஸ்திய வம்சத்தில் பிறந்த நமக்கு ஶ்ரீமந் நாரயணனுடைய சரணங்களே பரம்தாம், அவைகள்தான் பிரும்மபாரமானது, அப்பேர்பட்ட ஹரிபகவான் பெரிய பிராட்டியுடன் பூமியில் எழுந்தருளியிருக்கும்போது மனம் இசைந்து காம்க்ரோத மதலோபாதிகளை ஒழித்துக்கட்டி, பரம துர்லபமான முக்தியை மஹத்தான ஆராதனையால் கிடைக்கக்கூடியதை, சுலபமாகக் கொடுக்கக்கூடிய ஹரி பகவானை ஆராதிப்பதால் அடையுங்கள். ஸ்வாமி, மோக்ஷ பாரங்கதர்களின் வாழ்க்கை மிக்க உயர்ந்தது என்று நமக்குத் தெரியுமே அப்பேற்பட்ட ஸுரநாயகர், யசஸ், ஆயுஸ், ஸுபுத்தி, பக்தி இவைகளைக் கொடுக்கும்) பிரபுவை இந்த மானிட சரீரம்கொண்டபோது ஏகாக்ர சித்தத்தினுல், (வரத்யாக ராஜர், துளசிதாஸர் போன்ற) மஹான்களால் சிரத்தையுடன் ஆராதிக்கப்படும் என் ரகுநாதனை, (சுத்தஸத்வ பக்தி பாவனையுடன் ஸ்வரராக ஸுதாவுடன், ஸர்வசுகந்த வஸ்துக்களால், புண்யஸ்ரவண கீர்த்தனங்களால், நமஸ்காராதிகளால்) ஆராதிக்கத் தகுந்தவர் என்று விஸ்வாஸம் கொண்டு ஆராதியுங்கள். (221)

(கருத்து: அப்பேர்பட்ட கேசவர், ஆதிபுருஷன் ஸத்ய த்ரேத த்வாபர கலியுகங்கள்தோறும் தோன்றும் மஹாபுருஷன், புருஷோத்தமன், ரதாங்கபாணி, பல ரூபங்கள், பல அவதாரங்கள் சக்ரம் கதை, சங்குநந்தகி, பத்மம் போன்ற ஆயுதங்களுடன் அவதாரம் செய்யும் தர்மபிரபு, தீப்தமூர்த்தியாக நம்மிடம் வரும்போது, மஹா கருணையுடன் நம்மை அணைக்க வரும் போது, நாம் பராங்முகர்களாக விருக்கலாமா? அந்த பிரபுவே ஸத்ய யுகத்தில் சுக்ல நிறத்துடன் ஜடாமுடியுடன் நான்கு புஜங்களுடன் மரவுரி, மான்தோல் உடுத்தி ருத்திராக்ஷம் கமண்டலம் கொண்டு சாந்தஸ்வரூபியாக நிர்வைரத்துடன், ஸமபுத்தி கொண்டு, ஸர்வ ஜனங்களுக்கும் ஸுஹ்ருத்தாக அவதரித்தார். அப்பேற்பட்ட பிரபுவை தபஸ்ஸினால் பக்தர்கள் ஆராதித்தார்கள். அவரை பக்தர்கள் ஹம்ஸர், ஸுபர்ணர், வைகுந்தர், புருஷர், அவ்யக்தர் பரமாத்மாவென்று பல பெயர்களால் உபாஸித்தார்கள். த்ரேதாயுகத்தில் அந்த ஹரிபகவான் ரக்த வர்ணத்துடன் சதுர்புஜங்களுடன், தங்ககேசங்களுடன், இடுப்பில் மூன்று மேகலைகளை அணிந்தவராக யக்ஞ புருஷனாக ஆவிர்பவித்தார். அவரே பேரருளாளர், அருள்வரதர், நாராயணர், அத்திகிரியருளாளப்பெருமாள்; ஆனைமேல் வரும் அழகர் கச்சிதனில் நம்போன்றவர்களுக்குக் கண் கொடுக்கும் புண்டரீகாக்ஷர். முக்தி மழை பெய்விக்கும் முகில்வண்ணன்; அஷ்டாக்ஷரம், த்வயம், சர்மஸலோகம், பிரபத்தியோகம், பிரபன்ன நியமங்கள், ஆசார்யஹ்ருதயம், ஸ்ரீஸூக்தி வசனங்கள் எம்பெருமானுடைய வைபவத்தை பறையடிக்கும் வைஷ்ணவ மந்திரத்தின் திருநாமமாக, கோவிந்தனாக அவதரித்தார். அன்று நம்மாழ்வார் பேசினதுபோல, "நான் சிசுவாக விருந்தபோது நானா என்னைக் காப்பாற்றிக்கொண்டேன், என் கோவலனாய் ஆநிரைமேய்த்த குழலூதி, மாவலனாய்க் கீண்டமணிவண்ணா, மின்னை உடையாகக் கொண்டு, அன்றுலகளந்தான் குன்றம்குடையாக ஆகாத்தகோ, உன் தயவின்றி என்னால் அரைக்ஷணம் வாழ முடியுமோ என்று எதிர்பார்க்கிறானே. ஸர்வபிராணிகளுக்கும் உயிர்ஸ்தானமாகிய ஸர்வாஸு நிலையரான நாராயணர், விஷ்ணு, யக்ஞபதி, பிருஸ்னிகர்ப்பர், ஸர்வதேவர், உருக்ரமர், விருஷாகபி, உருகாயர், தர்மிஷ்டர் என்று பலவிதங்களால் அழைக்கப்படுகிறார். அண்ணா, துவாபாரயுகத்தில் என்பிரபு நீலமேக ஸ்யாமளன், தமாலவிருக்ஷத்தின் நிறம்போல கருமாமுகில்வண்ணன் பீதவாடையுடன் சங்குசக்கரம், கோதண்டம்,

கருணை, ரௌத்ரம், கதையாகிறபுத்தி ஆகியதத்வங்களுடன் ஸ்ரீவத்ஸமாகிற கிருதலக்ஷணத்துடன் ரூபஸன்னிதராக பரம புருஷன் மஹாபுருஷ லக்ஷணங்களுடன் அவதரித்திருக்கிறார். வேதங்களால் புகழப்படும் ஆனந்த கந்தமூர்த்தி, உயர்வு தாழ்வு பாராது தன்னுடைய பரம பொக்கிஷமான சீதையுடன், ரகுநந்தனன், ரகுராமன், தாஸரதி, சீதாராமன், பிருஹ்லாத னுக்குக் கொடுத்த வாக்குதானத்தைப் பூர்த்திசெய்வதற்காக, நின்ற பெருமாள் நீரேற்று உலகமடியளந்தாய், உலகெல்லாம் சென்ற பெருமானே செங்கண்ணு, நீயன்றோ விஸ்வாமித்ர யாகத்தை ரக்ஷித்தாய், மிதிலை சென்று சிவதனுஷ்ஷை ஒடித்து சீதையை மணம் புரிந்தாய். முனிவர்களையும் அருள்மறையின் தத்வார்த்த அனுஷ்டானமாக விளங்கும் பரதநம்பியை அனுக் ரக்ஷித்து தந்தை தாய்ச்சொல்லை தலைமேல் தாங்கி வனம் சென் ருய், அகஸ்தியரைக்கண்டு வைஷ்ணவதனுஸ்ஸையும் ஸ்ரீவித்யை யாகிற பிராட்டியின் பெருமையை விளக்கும் பெருமறையை யும் அணிவித்தாய், தண்டகவனம் புகுந்தாய், சென்ற பேர் களுக்கு பெற்றதாய் மாதிரி, மாநிலம் பிள்ளை காப்பாய்போல, உம் முன் நிற்க வரும் மொய்த்த அருள் அழகுசுடான கருணமூர்த்தி ஸ்ரீராமசந்திரன் சீதையை மீட்பதற்காகவும், உங்கள் அஹங் காரத்தைத் தணிப்பதற்காகவும், லங்கை நோக்கி வருகிறுன். "அவனே யருவரையாகிற" தர்மானுஷ்டானங்களால் வேதங் களையும் ஆஸ்ரமதர்மங்களையும் காத்தான், அவனே கலங்காப் பெருங்கடலை ஸேதுவாக அணைகட்டி, நீர் அவனை அடயா விடில், உம்மை ஆட்கொள்ள முதலில் ஆஞ்சநேயரைத் தூதாக அனுப்பினுர். அவரே வாலியை வதைக்கு முன்பு எய்தான் மரா மரம் ஏழுமிராமனுய், எய்தான் மான் மறியை, சுக்ரீவனுக்கு ஈந்தான் அரசை, இன்று உமக்கு நல்ல பாடம் கற்பிக்க, தென் னிலங்கை சென்று குறளுருவாய் உம்மை முயன்று கைக்கொள்ள வருகிறுன். அண்ணு, அப்பேர்பட்ட ராமனிடம் சீதையை ஒப்பு வித்து, முயன்று தொழுது நெஞ்சம் உருகும் வரை பஜனை செய் யுங்கள். ஸாது ஜன பிரியனை மாயமாக தன்னை மறைத்து மானிடன்போல நடக்கும் புருஷோத்தம ராமனை ஆராதியுங்கள்). (அவருடைய அடையாளங்களையும் சொல்லுகிறேன். முதலில் பரமபத நாதனுடன் திருஉரு வெடுத்து அவருடைய ஸஹதர்ம சாரிணியாகிற மஹாலக்ஷ்மி, "பையார் கருங்கண்ணி கமலமலர் மேல் செய்யாள், திருமார்பினில் சேர் திருமாலே, வெய்யார் சுடராழி சுரி சங்கமேந்தும் கையா, நிறை புகழஞ் சிறைப்

புள்ளின் கொடி யானை,'' என்கிறுப்போல நீலகிருஷ்ண தேகத்துடன், ஸாங்கோபாங்கமாய் வேதங்களால் புகழப்படும் தர்மர், நியமர், நிஷ்டர், விரஜர், நேயர், ஸ்ரீராமனாக சீதையுடனும், பரத லக்ஷ்மண சத்ருக்னனாக அவதரித்திருக்கிறார். புள் அரையனாகிற பெரிய திருவடி கருடனையிட்டு, எம்பெருமானை நிரூபிப்பது போல, ராமம் லக்ஷ்மண பூர்வஜம் என்று இளைய பெருமானையிட்டு எம்பெருமானை அடியார் பக்கலில் கொண்டுவந்து கூட்டுமவன் போல ஆஞ்சநேயர் விளங்குகிறான். சீதையோ அந்த மஹாலக்ஷ்மி ; '' சுத்த ஸத்வத்தில் ஆத்மாக்களை நிலைக்கச்செய்து ஸத்காரியங்களை பிரேரணை செய்கிறாள். உன்னை ''ராமனை சரணமடை'' என்று சொன்னாளே, அந்த மாதவியாகிற சீதை, சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட யாகம், தவம் தானம் ஆகிய மூன்று கர்மாக்களை அனுஷ்டிப்பவர்களுக்கு ஸத்வம் போன்று முக்குணங்களை அழிப்பவளும், தவமே சரீரமெடுத்து வாக்கு மனம் முதலியவைகளை ஸாத்விகமான தியாக உள்ளத்துடன் ராமனை அனுஸரிப்பவளும், தர்ம வத்ஸலையும், ஓம் தத்ஸத், ஓம்—வேதங்களின் ஸம்பந்தத்தைப் பெற்றவர்கள் அடையும் மோக்ஷ பதம் ; தத்—பிரும்மத்தை அடைவதற்கு ஸாதன கர்மங்களாகிற யாகம், தவம், தானம், ஆகிய கர்மாக்களுக்கு ஸாதனமாகவும், ஸத்—சுத்த ஸத்வத்தில் ஆத்மாக்களை நிலைக்கச் செய்பவளும், மங்களங்களுக்கு மூலமான மஹாலக்ஷ்மி. இந்த பரந்தாமனை ஒரு மதியுடன் தரும நீதியுடன் பஜித்து வருகிறாள். அந்த திருமகள் சிவந்த கரங்களால் வருடும் திகழ்துளவ மாலையுடன் கூடிய அழகன் மணம் கமழும் செழுமணி கோஸல நாயகன் அன்று சிலைதனில் ஒரு அணங்கை (அஹல்யையை) உமிழச் செய்ததும், அருமறை அந்தம் அமர்ந்த அயன் முடிவுதன்னில் அமர்ந்து இன்னும் மேலே சென்று உயர்ந்தன வடியவர் மெய்யர் மலர்ப் பதங்களே என்று தெய்வ நாயகனாகிற சீதா ராம சரணங்களை அடிபணியுங்கள். திருப்பாற் கடலில் திருவனந்தாழ்வான் மீது திருக்கண்கள் வளர்ந்து அருளும் என் பிரபு. வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தன், ஸர்வக்ஞர், அவதார மூர்த்தியாகவும் திருவனந்தாழ்வானின் அம்சமாகிற லக்ஷ்மணனுக்குப் பிராதாவாகவும், தியான மூர்த்தியாகவும் இருக்கிறார். இந்த ஆஞ்சநேயரோ வெள்ளைவிளி சங்கின் பேரரவம் போல லங்கையில் ராமதூதனாக த்வனியிட்டான். இந்த சீதையை ஆராதிப்பதினால் ஏற்படும் சந்தோஷத்தினால் '' நானே ராம ஸம்ஸ்லேஷத்தளவில் நிற்கிறேன். உன் பேச்சுக்களைக் கேட்டு, பிள்ளை என்கிற ஸ்வபாவத்

துடன் உளம் கனிந்திருக்கிறேன் என்று சொல்லுவதற்கு பதிலாக "நீர் அந்த தாயின் வடிவழகைக் கண்டு அவளை ராமனிடமிருந்து பிரித்து வைத்து, பெருமாளுக்கும் பிராட்டிக்கும் உள்ள ஸம்ஸ்லேஷ ஸ்நேகத்தை நாசமாக்கி, அவளைக் கதறவிடுகிறீர். ஆஞ்சநேயரான ராம தூதனை நீர் அவமானப்படுத்தி லங்கையிலிருந்து அனுப்பினீர். சைதன்ய மஹாபிரபு சொன்னதுபோல், "யாருடைய அழகிய முகத்தைப் பார்த்ததும் ஸ்ரீராமகிருஷ்ணன் நினைவு நமக்கு வருகிறதோ, அவனே உண்மையான வைஷ்ணவன்;" அதுபோல உமக்கு எக்காலமும் ராம உபாஸனை செய்யும் நிஷ்டரான ஹனுமாரை, சிவசக்தியின் உருவாய், அஹங்கார மஹத்துக்களில் பெரியாராய், மூப்பு இன்றி என்றும் சிரஞ்சீவியாக விருக்கும் ஹனுமாரை நீர் நன்ருக அறியவில்லை.)

(அண்ணு, நமக்கு பிதாவாகிற விஸ்ரவஸ் உபதேசித்த ஆத்மஞானப்படி நீர் தேகம் ஆத்மா இவைகளின் பாகுபாடுகளை நன்கு உணர்ந்தவர். நீர் பரபிரும்மத்தை உபாஸித்து உமது பத்து தலைகளை ஒவ்வொன்ருக அறுத்துக் கொடுத்தவர். பகவானை உமது அத்யந்த நியமத்திஞலும் ஸாமகானத்திஞலும் திருப்தி செய்து பரம ஐஸ்வர்யங்களை அடைந்தீர். அப்பேர்பட்ட பரபிரும்மமாகிற நாராயணரை ஸாத்விக தியாகத்துடன் பரம நம்பிக்கையுடன் ராக்ஷஸ அஹங்காரத்திஞல் ஏற்பட்ட மன உள்ளத்துடன் சிஷ்டராயிருந்தீர். உமது வரத்தின் பிரகாரம் பரமபத நாதரர் திருஉருவெடுத்து, அவருடன் ஸஹதர்மசாரிணியாகிற தமது ஸம்பந்தத்தைப்பெற விரும்பும் ஆஸ்ரிதர்களை தம்முடைய கல்யாண குணங்களைப் போல அவர்களை திருத்திப் பணி கொள்ளும் சிஷ்டக்ருத் ஸதா பரிபவம் நேரும் காலங்களில் தியானிக்கத் தகுந்தவரும், மஹா தீர்த்தகரரும், உமா மஹேஸ்வரர்கள் பிரும்மா இந்திரன் முதலானவர்களால் சரண்யம் என்று துதிக்கத் தகுந்தவரும்; ப்ருத்யர், "நான் உமக்கு அடியன், தொண்டர்க்கமுதுண்ண அண்டத்தமரர் பெருமானே, ஸ்ரீரங்க வரதா, ஸ்ரீவேங்கட ரங்கா, தாராளனே, தண்ணரங்கவாணனே, பூமேல் தனியாளன் முனியாளரேத்த நின்ற பேராளனே, ஆயிரம் பேருடைய வாளனே, உளங்கனிந்து தெளிந்து வளம் கொள்ள பேரின்பம் மன்னி நின்னருளை வணங்கி நான் வாழ்ந்தொழிந்தேனே, தொழுது மாமலர் நீர் சுடர் தூபம் கொண்டு, பாம்பணைப் பள்ளியானே, உம்மைத் தழுவுமாறறியேன் உன் தாள்களே," என்று பூஜிக்கத் தகுந்த தசரத குமாரன், பிரணத பாலன், மஹாபுருஷன் மஹா

தர்மிஷ்டரை, ஸத்யவ்ரதரூபியை, மஹத்தான ராஜ்ய லக்ஷ்மியை பிதாவின் கட்டளை மேற்கொண்டு தியாகம் செய்து துளசி மாலையை ஜடையிலும் மார்பிலும் அணிந்துகொண்டு தாஸ உள்ளம்கொண்டு ரிஷிகளையும் ஆஸ்ரிதர்களையும் அனுக்ரஹித்து பரதசத்ருக்னர்களை ராஜ்யத்தில் நிறுத்தி, பாம்பணையாகிற ராமானுஜனைக் கூட்டிக்கொண்டு வனத்தில் பதின்மூன்று வருஷங்கள் செலவிட்டு, சுக்ரீவ பட்டாபிஷேகம் செய்து, சீதை என்கிற ரங்க தயிதையின் பேச்சுக்கு கட்டுப்பட்டவராக மாயா மிருகத்தைப் பிடிப்பதற்கு தேடி ஓடிய மஹா புருஷன் சீதையின் நிமித்தமாக நம்மைத் தேடி வருகிருர். அப்பேர்பட்ட மஹாபுருஷனுடைய சரணுரவிந்தங்களை ஸ்வாமி, ஆளராய் தொழுவாரும் அமரர்கள் நாளுமென் புகழ்க்கோ உன் சீலமே, உம்முடைய சரணுரவிந்தங்களே வைகுந்தம், வேங்கடம் என்று சொல்லி ஸர்வாத்ம பாவனையினுல் 'य: शरणं शरण्यं गतो मुकुन्दं परिहृत्य कर्तुं, நாராயணுய ரிஷியே புருஷாய மஹாத்மனே, நமஸ்தே வாஸுதேவாய நம: ஸங்கர்ஷணுய ப்ரத்யும்ன அநிருத்தாய துப்யம் பகவதே நம: விஸ்வேஸ்வராய விஸ்வாய ஸர்வ பூதாத்மனே நம: என்று ஜகதீஸ்வரர்களாகிற ராமசீதா தம்பதிகளை, ஸர்வ பரிவாரங்களுடன்கூடிய சீதாராமனை திராவிட தேசத்தில் தாமிரபர்ணி, கிருதமாலா பயஸ்வினி, காவேரி, மஹாநதி, ப்ரத்சி போன்ற மஹா புண்ய நதிதீரங்களில் வசிக்கும் வைஷ்ணவர்கள், தேவரிஷிகணங்கள் வணங்குவதுபோல நமஸ் கரியுங்கள்.) (அன்று பகவத் விஷயத்தில் நமக்கு ருசியேற்பட வில்லையே என்று வருந்திய வில்லிஜீயரை நோக்கி, நஞ்சீயர் சொன்ன வார்த்தைகள் ஞாபகத்திற்கு வருகின்றதே. "உம்மைப் போல ஆசார்யவான்கள் யாரும் உளரோ? பாகவதர்களின் ஸம் ருத்திகளைக் கண்டு மிக உகக்கையன்றே பகவத் விஷயத்தில் ருசி மெய்யே பிறக்கையாவது; அது இல்லாமையைப்பற்றிச் சொன்னேன்காணும்" என்று ஆட்கொண்ட வில்லிஜீயருக்கு அருளிச் செய்ததுபோல, அண்ணு, உமக்கு அந்த ஆஞ்சநேய மஹானுபாவனிடம் பிரியம் ஏற்படவில்லையே.) (அதுபோல எக் காலமும் ராம உபாஸனை செய்யும் நிஷ்டரான ஸதாசிவனை, அவ ருடன் கூடிய அந்த அம்பிகையின் திருவுள்ளமே மும்மூர்த்தி களாக வடிவெடுத்து, அவர்களுக்கும் முதல்வனை சிவபெருமா னுக்கும் மூத்தவளாய் அஹங்காரம் மஹத்துக்களில் பெரியவளாய், ஆதி பராசக்தியாய், புருஷோத்தமனுகிய நாராயணருக்கு இளைய ஸஹோதரியாய், சியாமையாய், விஸ்வேஸ்வரியாய், காசி

புராணேஸ்வரியாய், மூப்பின்றி என்றும் இளையவளாய், நவ யௌவன மூர்த்தியாய், ஜீவராசிகளான ஸகல சேதனு சேதனங் களின் சமூஹங்களாகிற பெண்பிள்ளைகளுக்குத் தலைமை தாங்கும் உமாதேவியுடன் கூடிய சிவன் ஸ்ரீமந் நாராயண அவதாரமான ஸ்ரீராமனை, கேசவனை, மும்மூர்த்திகளில் பெரியவனை, ஞான ஆனந்தமய ஸ்வரூபனை, ஸர்வசேஷியாய், ஸர்வசரண்யனுய், ஸர்வப்ராப்யனுன, ஸ்ரீயப்பதியின் திருவடிகளை, ஆஸ்ரயிக்கிருர். அவர்கள் கருடன் மஹா உரகனைப்போல, நித்யகைங்கர்யத்தை பரம புருஷார்த்தமாக நிச்சயித்து ஸதா சீதாராமபதங்களில் அன்வயித்திருக்கிருர்கள்.) (இகலோகத்தில் உத்தமமான சாந்தி யையும், பரலோகத்தில் நாராயணரெங்க பதத்தை அடைய விரும்பும் ஸாதுக்கள், அந்த பகவானுலேயே உபதேசிக்கப் பட்ட ஸித்தி விதிகளில், விரோதம், அதனுல் ஏற்படும் பயம், இவைகளைவிட ஸத்பதாசாரத்தில் இருந்துகொண்டு அச்யுத பதாப்ஜங்களை நித்யமாக உபாஸனை செய்துகொண்டு நியஸ்த பரர்களாக வாழ்வதேமேல்; அமலனுகிற பரமபுருஷனை, அழகிய மணவாளனை, சுபேக்ஷணரை, சுபஅங்கங்களை உடைய சீதா ராமனை, க்ஷமிணும்வரர், பொறுமை உள்ளவர்களில் மிகமிகச் சிறந்தவர்; பொறுக்கும் சக்தியாகிற ஞானபலத்தை உடையவர் என்று அறிந்து, குருதேவதாத்மாவாகப் பாவித்து, ஜீவனுடைய பாரதந்திரியத்தையும், பரமாத்மாவின் நிரூபாதிக கிருபையையும் அவலம்பித்து, கர்மஸம்பந்தங்களால் ஏற்படும் சந்தேகங்களை ஒழித்து, அபயமாக, பயமின்றி, பத்மமலர்போல மலர்ந்து, அழகியதும் ஸம்சாரிகளின் தாபங்களினுல் யேற்படும் ஸ்ரமத் தைப் போக்கும் கடாக்ஷத்தை உடைய பத்மநிபேக்ஷணரான ராமனை மாதாவாகிற சீதையை முன்னிட்டு, ஆசாரியனும் பாக வத உத்தமரும், சதாசிவனுமாகிற ஆஞ்சநேயரை, உபாயமாக வைத்து, ராமனை சரணமடையுங்கள்'' என்று உபதேசிக்கிருர்.) (பட்டர் திருவரங்கம் பெரிய கோயிலில் சிறிய திருவத்யயன உத்ஸ வத்தில் கடை நாளிரவு ரங்கநாதன் நாச்சியாரோடு வீற்றிருக்கும் ஸமயம், ஊழி முதல்வன் உருவம்போல மெய்கருத்து; நாச்சியார் விழிவிழிக்க வொண்ணு தென்ருப்போல (ஆராயிரப்படி) பெரு மாளை நோக்கி, ''மனேஹரரே, நாச்சியாருடைய வேஷத்தை ஏறிட்டுக் கொண்டத்தனை யொழிய, அவள்போல விழிவிழிக்க உன்னுலாகாதே, இயலாது, முடியாது என்கிருர். ஆகவே சீதை தயிதையின் இரக்கத்தைப் பெற்று ஸ்ரீராமனிடம் சரணம் செய், இல்லாவிடில் பாழியந்தோளுடைய பத்மநாபன் கையில் இருக்கும்

சரமழை பெய்யும் சார்ங்கத்திற்கு இறையாவீர்கள். ஸ்ரேய
சையும் அடையமாட்டீர்கள்.) (அண்ணா, உமக்கும் என்னிடம்
நம்பிக்கை வருவதற்கு நான் அறிந்ததைச் சொல்கிறேன்.
தயவுசெய்து கேளும். மோக்ஷஸாதனம் பரம ரஹஸ்யமானது
என்று உமக்குத் தெரியும். ஒருவன் மனத்தை ஸ்வாதீனப்படுத்
திக்கொண்டு, க்ஷரம் என்கிற தேகத்தையும் அக்ஷரம் என்கிற
ஆத்மாவையும் தெரிந்து கொண்டவர் தவம் ஏன் செய்ய
வேண்டும்? மந்திரங்கள் ஏன் அறியவேண்டும்? எது நிலை
யுள்ளது, எது அழிவுள்ளது, எது துர்விஷயம், எது
ஆத்மாவை அறிவிக்கக்கூடியது, எது சுத்தஸத்வத்திற்கு
மேலான, ஸத்யம் ஞானம் அனந்தமயம், எது ராஜஸ
தாமஸாதி குணங்களின் விபாவங்கள் என்று தெரிந்துகொண்ட
வர்கள் ஒன்றே ஒன்றைத்தான் சொல்லுவார்கள். அது
ராமானுஜனுடன் கூடிய சீதாராமன்தான். அந்த ராஜ ராஜேஸ்
வரியாகிய சீதையின் புருஷன்தான் நிரஞ்சனன், நிருபமன்,
ராஜவதனன், தியாகராஜ துளசிதாஸ நாரத வியாஸ சுகர்
போன்ற மேதாவிகளால் சுத்த மனத்துடன் ஸதா ஆராதிக்கப்
படுபவர். இந்த தசரத பாலர்கள் இருக்கிறார்களே, அண்ணா,
அவர்கள்தான் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும், சகல சராசரங்
களுக்கும் அன்னம் கொடுக்கிறவர்கள். தீவினைகளால் மனம்
கெட்டவர்கள், ஜாதியில் பாபத்தையே ஜீவனமாகக் கொண்ட நம்
போன்ற ராக்ஷஸர்கள் ஸரியான மனத்துடன், செய்த பாவங்களை
நினைத்து, வருத்தப்பட்டு, தர்மத்தை உபதேசிக்கும் பிராம்மணர்
களிடம் பாபங்களைச் சொல்லி வருத்தப்பட்டால் பாபங்களி
லிருந்து விடுபடுகிறார்கள். அவ்விதமில்லாதவர்கள் அனைவரும்
ராமனால் கரையேற்றப்படுகிறார்கள் இல்லை.) (தவம் கல்வி ஜன்மம்
இவைகள்தான் நம் போன்றவர்களுக்கு ஆதாரம். இம் மூன்று
குணங்களும் சேர்ந்து பிரும்மாசாரி விரதஸ்நானம் செய்தவன்
பிராம்மணனாகிறான். நாமோ நல்ல புலஸ்திய விஸ்ரவசின் வம்
சத்தில் பிறந்தவர்கள். தவம் தானம் உள்ளவர்களாக விருக்
கிறோம். அதனால் கணவன் தன் மனைவியிடம் மகிழ்ந்திருப்பதும்
மனைவி தனது கணவனிடம் மகிழ்ந்திருப்பதுமான கிருஹஸ்த
தர்மம் நமக்கு சிலாக்கியம். ராஜ தர்மத்தினால் ஏற்படும் தீய
ஒழுக்கங்கள் அரசனை மிகவும் பாதிக்கும். ராஜ்யமானது
பெருந் தவப்பயன் என்று கருதப்படுகிறது. தவத்தினாலும்
தானத்தினாலும் அடையப்படும் ராஜ்ய பதமானது தர்மத்திற்கும்
ஸத்யத்திற்கும் அடங்கியிருக்கிறது. மன்னர்களின் ஒழுக்கங்

களும் இம்மையில் ஸுயசஸ்ஸையும் மறுமையில் பிரும்ம பதத்தையும் கொடுக்கக்கூடியதாக விருக்கின்றன. முதலில் அரசன் தன்னிடத்தில் குணங்களைப் பொறுத்திக் கொள்ளவேண்டும். அதன் பிறகு தன் வேலைக்காரர்களுக்கும் கடைசியில் பிரஜைகளுக்கும் குணங்களைப் பொறுத்தச் செய்யவேண்டும். இதுதான் அடக்குமுறை. இவ்வுலகில் ஜனங்கள் அரசனை உதாரணமாகக் கொண்டு அவனைப்போலிருக்க வேண்டும், என்று எண்ணித் தான் குணங்கள் உள்ளவர்களாக விருப்பார்கள். கல்வி கற்பதினுலும் பெரியோர்களைச் சேர்வதினுலும் தன்னையே பதப்படுத்திக் கொண்டு, கல்வி கேள்வியினுல் அறம் பொருள் இரண்டையும் அனுஷ்டித்து, இந்திரியங்களை அடக்கி, விஷயப் பற்றுதல்களிலிருந்து வற்றச் செய்து, காமக்ரோத லோப மோஹ மதமாத்ஸர்யங்களிலிருந்து ஒழிவு அடைந்து, ஜிதேந்திரியர்களான மந்திரிகளின் உதவியினுல், பகைவர்களிடமிருந்து தன்னையும் ராஜ்யத்தையும் காப்பாற்றிக்கொண்டு, பெரும் பொக்கிஷம், அன்புள்ள ஸேனை, தன்னைச் சேர்ந்தவர்களை ஆளும்வகை, தகுந்தகாலத்தில் மந்திராலோசனை இவைகளைக் காட்டிலும் மிக முக்கியமான உலக நன்மையைச் செய்யக் கூடியதைச் செய்யவேண்டும். இதுதான் ராஜரிஷிகள் அனுஷ்டித்த ஸத்கிர்த்தியைத் தரும் ராஜ மார்க்கம். அரசனுனவன் தன்னிஷ்டப்படி நடக்காமல், லோகஹிதமாகிற ஸத்ய விரதத்தினுல் தர்ம பராயணமாக நடந்து தன்னையும் தன் பிரஜைகளையும் வாழவைக்கவேண்டும். ஸ்வாமி, ஞானம், தானம், தவமாகிற ராஜயம் ஆகிய இவைகளில் ஞானம்தான் பெரியது என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். அந்த ஞானத்தை விட மிகப் பெரியது அனுஷ்டானம். ஸதாசார்ய ஸம்பத்தினுல் ஏற்பட்ட ஞான பக்தி வைராக்கிய விஷயங்கள் மிகப் பெரியது என்றும் அவைகளையும் விட விஷ்ணுவின் ஆராதனம்தான் பெரியது என்றும் ராஜரிஷிகள் எண்ணுகிருர்கள். தண்ணீரால் தேகத்தில் இருக்கும் அழுக்கை சுத்தப்படுத்துவது போல, தீபத்தால் இருளைப் போக்குவது போலவும், தானத்தினுலும் தவத்தினுலும் விஷ்ணுவின் ஆராதனையினுலும் பிராம்மணன் பவக்கடலாகிற ஸம்சாரத்தைத் தாண்டுகிருன். தமது கர்மங்களில் சுத்தரும், ஸத்வகுணம் நிலைக்கப்பெற்றவரும், நிர்மலமான ஆத்மாவும், மஹா தபஸ்வியும் பக்தர்களிடம் மிக்கப் பிரியமுள்ள நாராயணரை, ஸ்வாமி, அண்ணு, எக்காலமும் ப்ரீதியுடன் ஆராதனை செய்யவேண்டும். அவரை நமஸ்கரித்து, அஷ்டாக்ஷர மந்திரம் த்வயம் இவைகளை அனுஸந்தித்து பிரண

வத்தைத் தியானித்து, பரமார்த்தத்தை அடைய முயலவேண்டும். அந்த நாராயணரே ஸத்ய தர்ம பராயணர். உத்தமமான ராஜரிஷி மார்க்கமாகிற நிவ்ருத்தி தர்மத்தை பிரியத்துடன் அங்கீகரிப்பவர். இந்த சீதை ஸத்ய ஸ்வரூபி. ஸ்திரீ தர்மத்தையும் அஹிம்சையையும் விரதமாகக் கொண்டு, ராமனிடம் அனன்யார்ஹ ஸேஷத்வத்தையும் அனன்ய கதியையும் சூசிப்பித்துக்கொண்டு, தன்னை அடுத்த தேவ மாதர்களையும் ராக்ஷஸ ஸதிரீகளையும் காப்பாற்றி அவர்களின் அநிஷ்டங்களைப் போக்கும் ராஜ்ய லக்ஷ்மி; தனக்குக் கெடுதல் ஹிம்சை செய்த காகாசூரனுகிற ஜயந்தனையும் காப்பாற்றிய ஸத்யை; ரிஷிகளின் வர்ணுஸ்ரம தர்மங்களைப் பரிபாலிக்கும் பொருட்டு, அரக்கர்களை வதம் செய்வேன் என்று பிரதிக்ஞை செய்த ராமனை அடக்கி, ஹிம்சை செய்யாதவர்களிடம் உமக்கு ஏன் இந்தக் க்ரோதம்? என்று ஸாத்விக தர்மத்தை, அனுஷ்டிக்கும்படி செய்த மஹா உத்தமி. ராஜபோகங்களையும் பிறந்த வீட்டின் போகங்களையும் தியாஜ்யம் செய்துவிட்டு, "நான் பிரளய காலத்திலும் சொன்ன சொல்லைத் தவறமாட்டேன்", என்கிற ஸர்வலோக ஹிதகாமியாக வந்திருக்கும் ஜானகியிடம் அன்பு செலுத்துங்கள். தவருன மனேபாவத்துடன் அவளிடம் நெருங்கவேண்டாம்.) (இவர்களுடன் கூடவிருக்கும் லக்ஷ்மணன் ஆதிசேஷ அவதாரம். பலராமன், ஹலாயுதன் அனந்தர் என்று பலவிதமாக அழைக்கப்படுகிருன். எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரர். வைகுண்டத்தில் தனது மூச்சுக் காற்றினுல் சேதனர்களை சுத்த ஸத்வமாக ஆக்கும் பிரபு. அவருடைய பெரிய சரீரம் மஹாத்மாக்களான நாகர்களால் சூழப்பட்டிருக்கும். ஸகல ஆயுதங்களும் நினைத்த மாத்திரத்தில் அவரிடம் வந்து சேரும். அழிவில்லாத பகவானுகிய அத்த ஹரியே அனந்தர் என்று சொல்லப்படுகிருர். அவர் தேவர்களால் "பிரபுவே, உமது ரூபத்தைக் காண்பியும்" என்று சொல்லப்பட்டபோது, அந்த பிரபு தன்னுடைய அனந்தமான ரூபங்களைக் காண்பித்தார். கஸ்யபபுத்ரரான கருடர் பரமாத்மாவான அனந்த பகவானுடைய மகிமையினுல் அவருடைய எல்லையைக் காண முடியாதவராகப் போனுர். அந்த ஆதிசேஷன் பூமியைத் தழுவிக்கொண்டு பூமிக்குள் ஸநாதனமாக வசிக்கிருர். அந்த ஹலாயுதர் அனந்தர் இப்பொழுது பூமியில் அவதரித்து இன்று ராமனையும் சீதையையும் தழுவிக்கொண்டிருக்கிருர். ஆச்சரியமான பராக்ரமம் உள்ளவரும் அனந்தரூபியும் ஞான வடிவாயும் ஸத்யஸ்வரூபியாகவுமிருக்கிற லக்ஷ்மண முனியையும், ராம முனி

யையும், பதிவிரதையுமான சீதையை ஸத்ய ஸ்வரூபினியென்று தியானித்து, மனம் அடங்கி, முயற்சியோடு, தசரத பாலர்களான இவர்களை நாம் பூஜிக்கவேண்டும், ஆராதனை செய்யவேண்டும்.) (ராஜரிஷி, பிரும்மரிஷி, கர்மமும் கர்ம பலனுகிய காரணன் தன்னை திருமணிவண்ணனை செங்கண்மாலினைத் தேவபிரானை, ஒருமை மனத்தினுள் வைத்து உள்ளம் குழைந்தெழுந்தாடி, ஆஞ்சநேயர்போன்ற பக்தர்களைப் போல பெருமையும் நாணுந் தவிர்த்து, பிதற்றுமின் பேதைமை தீர்ந்தே; மொய்ம் மாம்பூப் போல விருக்கும் சீதையை, கார்முகில்போல வண்ணன் கண்ணன் ராமன்; அனந்தன் லக்ஷ்மணன் ஆகிற எம்மானைச் சொல்லிப் பாடி, ஆஞ்சநேயர் போன்ற மஹா பாகவத உத்தமர் கள் கருமங்களால் செய்யப்படும் தீவினைகளை நீக்கி, ஓதி உணர்ந்த வேதியர்கள்போல மெய்ப்பதத்தை அடைய விரும் புங்கள். அமரர்கள் புகழும் நாராயண பதத்தை அடைய விரும்புங்கள். விருத்ராசுரன் கேட்ட நாராயண அச்யுத பதத்தை அடையுங்கள். மஹிஷாசூரன், சும்பன், நிசும்பன், பண்டாசுரன், மதுகைடவர்கள் போன கதி நமக்கு வரவேண்டாம். நாம் ராம லக்ஷ்மண சீதா இவர்களை ஞான அனந்த ஸத்யம் என்று பாவித்து பணிந்து ஊழ்வினைகள் அகல, சூழ் வினைகளை ஒட்டி, கோள் வினைகளை, இராப்பகல் செய்த பாவங்களைப் போக்கி, கண்ணன் எம்பிரான் எம்மான் காலசக்கிரத்தான், கோலமா மென் சென்னிக்கு உன் கமல மன்ன குரைகழலே என்று அடி பணிவோம், உய்வோம் உய்விப்போம்'' என்று மஹாபாகவத உத்தமனுகிற வீபீஷணன், சுக்ராசாரியாரும் பிரஹ்லாதனும் தைத்யர்களுக்கு ஹித உபதேசம் செய்தது போல, ராவணனுக்கு ஹிதோபதேசம் செய்தான்.) (அப்பேர்பட்ட விபீஷணனுக்கு ஆயிர நமஸ்காரங்கள் செய்கிறேன். நெடுமால் அடியன், நாற் துழாய் மலர் காணில் நாரணன் என்று சொல்லி கண்ணீர் விடும் என்னைத் தேற்றித் தேருத என்னையும் மாயோனிடம் திறத்துடன் சேர்க்கவேண்டும். திருவே என்று ஆயிரம் தடவைகள் சொல்லி, கண்ணன் ராமன் கமலை லக்ஷ்மணன் ஆஞ்சநேயர் விபீஷணன் கழல்களை விரும்பும் என்னை அருள்பெறச் செய்யவேண்டும்.)

[தியானம்

ராம, ராம சீதா, சீதா, நாராயணு, மஹாலக்ஷ்மி, தயாபரி, ஸுமுகி, குணமயன் குணஸீமா, நாரதப்ரியன் அர்ஜுனபிரியன், திரௌபதி பிரியன், ஆநிரைமேய்த்தவன், வானரபிரியன், தர்ம

பிரியன், வெட்கத்தைவிட்டு மானத்தைவிட்டு கோக்களிடம் போய் சேர்ந்தீர்களே. உன் குழல் ஓசையாகிற நாதபிரும்மத்தைக் கேட்டு, கோவிந்தனிடம் கோபிகைகள் போனமாதிரி நான் ஓடிவந்திருக்கிறேனே, குண்டலங்கள் அணிந்த உங்கள் காதுகள் கேட்கவில்லையா ? தாமரை இதழ்போன்ற பத்மதளங்களான கண்கள் பார்க்கவில்லையா ? கோதண்டத்தைத் தரித்த உன் கைகளுக்கு என் ஸ்பரிசம் படவில்லையே. உன் கால்கள் ஏன் இவ்விதம் உதாஸீனமாக விருக்கிறதே ? உன்னை விஷ்ணு வென்றும் ருதம் ஸத்யம் பரப்பிரும்ம புருஷம் கிருஷ்ண பிங்களம், காணும் பொருள்களின் அழகாயும், ஸத்யம் என்கிற காக்ஷிக்கு ஆதாரமாகவும் எல்லாவற்றையும்விட பரபிரும்ம மாயும், பிரபஞ்சம்தோறும் காணப்படும் பொருளாகவும், என் உள்ளத்தைக் குடைந்து மூலாதாரத்திலிருந்து ஆறு அவயவங்களோடு கூடிய சக்கிரங்களான மூலாதாரம் (லிங்கம் குதம் இவைகளின் நடுவு) ; ஸ்வாதிஷ்டானம் (லிங்கத்தின் அடி) ; மணிபூரகம் (தொப்புள்) ; அனுகதம் (ஹ்ருதயம்) ; விசுத்தி (கண்டம்) ; ஆக்ஞாசக்கிரம் (புருவங்களில் நடுவில் இருப்பது) ஆகிய சக்கிரங்களில் உன்னுடன் ரமித்துக்கொண்டு உத்ஸவத்தில் எழுந்தருளியிருக்கும் ஸஹஸ்ரார பத்மநாராயணு, என் அந்தர்யாமியே, ஏனப்பா என்னிடம் இவ்வளவு உதாஸீனம் ? பத்மா, சீதே, ஆஞ்சநேயப்பிரியே, உன்னை கமலாக்ஷ நிஷேவிதா, இந்திர நீலமயீம் தேவீம் விஷ்ணு : அர்ச்சயந்நே ஸதா ; புண்டரீகாக்ஷனை ஸ்ரீமந் லக்ஷ்மிநாராயணு, உங்களைச் சேவிக்கிறேன். ஈசான தத்புருஷ அகோரவாமதேவ ஸத்யோஜாத என்கிற ஐந்து பிரும்மங்களும் தேவி, உன்னை சின்மயி என்றும் (சைதன்ய ரூபமாகவும்) பரமானந்த ரூபமாகவும் ஜீவர்களின் ஸமஷ்டி அபிமானி, ஹிரண்யகர்ப்பரின் அபிராமசுந்தரி என்றும், விக்ஞான கனரூபிணி யென்றும் சொல்லுகிருர்கள். உன்னையே தியானம் செய்யும் புருஷன் தியானம் செய்யப்படும் வஸ்து, என்றும், நாத, பிரபன்ன ஜபதபஞான அனுபவ யோகங்களால் உபாஸிக்கிருர்கள். அன்று ராஜகோபாலன் மேய்த்த கன்று பசுக்களிடமும், வாடிவதங்கிய கதிர்களிடம் மழைதாரைகள் செல்வதுபோலவும், நீ போனுயே, அம்மா, தயாபரி உமாசங்கரர் தொழும் த்யான த்யாத்யா த்ருத்யேய ரூபா, என்னிடம் வரமாட்டாயா ? நான் ராக்ஷஸ கர்மங்களுடன் உன் பொருள்களை ஹிம்சைப்படுத்தினேன் என்கிற உன் நினைவினுல் என்னிடம் வரப் பயப்படுகிருயா ? உன் புருஷன் அயோத்தியா

ராமன், ஸ்வஜன ஸாதுபிரியன் கோபித்துக்கொள்வான் என்று உன் தயக்கமா? அவன் ஸாது கர்மங்களைத்தான் பிரபோதகம் செய்பவன் என்று நினைக்காதே. நீங்கள் இருவர்களும் என் அந்தர்யாமிகளான உபாஸனை தெய்வங்கள் இல்லையா? நீங்கள் தானே என் க்ஷேத்திரத்தில் அமர்ந்திருக்கும் அத்யக்ஷர்கள். என்னைத் தூண்டிவிடும் கர்த்தா. காரயிதா; எனக்கு ஏது கர்த்ருத்வம்? குணமயனுன நான் உனக்குப் பரதந்திரன் அல்லவா? குணவிசிஷ்டர்களான நீங்கள் ஸ்வாதந்திரிய முள்ளவர்களானுலும், எனக்கு எஜமானர்கள் தானே. புருஷோத்தமர்களான நீங்கள் "யேஷஏவஸாது கர்ம காரயிதி தம்யமேப்யோ லோகேப்ய உன்னிநீஷதி (கௌஷிதீக உபந்ஷத்) பாஷ்யாந்தஃ கரணவ்யாப்தி தஸ்சக் தியாதான தாரணைஃ ஸாதாரணோபகாரைஃ ஸ்யாதிச்சதேஃ காரணம்பரஃ நஸ்வாதந்திரியம் பராதீன ஸ்வரூபாத் ப்ரச்யுதம் பவேதி, ஸ்வாதன் வ்யதாயினு பும்ஸா தத்பிரவிருத்ய நிவாரணுத் (ஸ்ருதிப் பிரகாசிகை) என்கிறபடி ஸுபர்ணர் என்னும் பரமாத்மா ஜீவனைவிட மேலானவர், நியந்தா, ஆதிபுருஷன் முனிமானஸ ஞானஜோதிஸ். "அர்ஜுனு, என்னுடைய ஒரு அம்சமும் அனுதியாயுமாக விருக்கும் ஜீவன் கர்மத்தினுல் சுற்றப்பட்டு பிரகிருதிபரிணும விசேஷமான சரீரத்தில் இருக் கின்ற மனத்தை ஆருவதாகக்கொண்ட இந்திரியங்களுடன் ஜீவலோகத்தில் கர்மானுகுணமாகவிருக்கிருன். தேக இந்திரயங் களுக்குப் பிரபுவான ஜீவன் எந்த சரீரத்தை அடைகிருனே, எந்த சரீரத்தினின்று வெளிப்படுகிருனே, அந்த சரீரத்தில் வசித்துக்கொண்டிருக்கும் பரமரத்மாவை, விஷயங்களில் மூழ்கின ஜீவாத்மா ஞானக்கண் அடையாமல் பார்ப்பதில்லை. ஸர்வாத்மாவான பரமாத்மாவை உலகனைத்தையும் பிரகாசிக்கச் செய்யும் சூரியன் சந்திரன் அக்னியாகிற பரம்ஜ்யோதிஷை அறிந்த ஞானிகள், எல்லாப் பிராணிகளிலும் வாழும் ஸர்வ அந்தர்யாமியை "பிரபோ, ராம சீதா, ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதி ஸ்ம்நிவிஷ்டோமத்தஃ ஸ்மிருதிஃ ஞான அபோஹனம்ச, வேதைஸ்ச ஸர்வைஃ அஹமேவவேத்யோ, வேதாந்த கிருத்வேத விதேவசாஹம்; த்வாபிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ் சாக்ஷர ஏவச க்ஷரஃ ஸர்வாணி பூதானி கூடஸ்தோ அக்ஷர உச்யதே; ஈஸ்வரஃ ஸர்வபூதானும் ஹ்ருத்தேஸே அர்ஜுன திஷ்டதி ப்ராமயன் ஸர்வபூதானி யந்திராரூடானி மாயயா" (கீதை) என்கிறபடி, தாயே, என் ஹ்ருதய உல்லாஸினி, உன்னுலேயே

நினைவும் அறிவும் மறத்தலும் ஏற்படுகின்றன. எந்த புத்தி தர்மத்தை அதர்மமாகவும் அதர்மத்தை தர்மமாகவும் ஸகல வஸ்துக்களையும் விபரீதங்களாவும் எண்ணுகிறதோ, அந்த புத்தியானது தாமஸமானது; மோக்ஷஸாதனமான பகவத் உபாஸனத்தின் பொருட்டு, மனம் பிராணன் இந்திரியங்கள் இவைகளைத் தியாகராஜர் விபீஷணர் போன்ற மஹான்கள் எந்த தைர்யத்தினுல் நிலைநிறுத்தினுர்களோ, அந்த தைர்யம் ஸாத்விகமானது; கர்மயோகத்தினுல் ஸாதிக்கத்தக்க தியான ஸித்தியைப் பெற்றவன் தியானுத்மகனுன ஞானத்தினுல் பரமாத்மாவை அடையலாம்; அஹங்காரம் பலம் இறுமாப்பு காமம் க்ரோதம், புத்திரமித்ராதிகளிடம் அபிமானம் இவைகளை இழந்து, அத்துடன் என் அசுப கீர்த்திகளையும் அழித்து, மரணத்தில் விருப்பமுள்ளவனுய், பிரும்ம பாவத்தை அடைவதற்கு சக்தி உள்ளவனுய் இருக்கும் நான், என் தாய் நாராயணி, சீதை, நிர்த்வைதாத்வைத வர்ஜிதா, இரண்டாவது வஸ்து இல்லாதவளான பரமகாருணிகை, அஜபா மந்திரஸ்வரூபிணி, பரமா, பாவனுக்ருதி, எனக்கு மந்திரம் ஆசாரியர் தேவதையாகிற குருமூர்த்தி, குணநிதி, புன்சிரிப்பினுல் என்னை ஆட்கொள்ளும் குணமயி, கோமாதா, கடாக்ஷ கிங்கரி பூதகமலா, யாதேவி ஸர்வபூதேஷு சேதனேத்யபிதீயதே, நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நமஃ;—யாதேவி ஸர்வ பூதேஷு ஸம்யக்த்யாயந்தி அஸ்யாம் இதிஸந்த்யா, என்கிற என்தேவியை நான் அஹங்காரம் சித்தம் என்னும் பிராகாரத்தின் நடுவில் விமர்சரூபமான ஓடையில் அதிஷ்டானமாக விருக்கும் குருகுல்லா தேவியை, எனது குலேஸ்வரியை நினைத்து, சரணமடைகிறேன். முயற்சி சுமந்து எழுந்து முந்துற்ற நெஞ்சே இயற்றுவாயெம்மோடு நீ கூடி—நயப்புடைய நாவின் தொடை கிளவி உன் பொதிவோம்; நற்பூவைப் பூவின்ற வண்ணம் புகழ்; பொன்திகழ் மேனி புரிசடையம் புண்ணியனும் நின்றுலகம் தூய நெடுமாலும், என்றும் இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன் ஒருவனங்கத்துளன் (பொய்கை ஆழ்வார்) என்கிறபடி சரணம் அடைவேன். அண்டங்களுக்கும் எல்லாம் கோதண்டபாணியாகவிருக்கும் என் பிரபு புண்டரீக நயனன், தியாகராஜ துளசிதாஸ நாரத கிங்கரன், அஜருத்ர ஸுரேஸ்வரன், என் பிரபு சீதாராமனை நிண்டு ப்ரேமையுடன் நிஷ்காம புத்தியுடன் நான் சீதையின் தாஸன் என்று சொல்லி மனதினுல் ராமா, என்று சரணமடைந்தால், அந்த கோதண்டபாணியிடம்

ஏன் நான் பயப்படவேண்டும்? அவனே ஸர்வ அந்தர்யாமியாக என்னை ஆட்கொள்ளுவானே?]

(அண்ணு, இன்னமுமா நீங்கள் கலங்குகிறீர்கள். கரதூஷ ஞுதிகளைக் கொன்ற ஏகபுருஷன் என்று தெரிந்தும்கூட அவர் களின் வரதானங்களையும் மேன்மைகளையும் நன்று அறிந்தும் கூட,) ராமனை சாதாரண ராஜபூபதியென்று நினைத்து ஏமாந்து போகாதீர்கள். (மாரீசனை ஒரு பாணத்திஞல் சமுத்திரத்தில் வீழ்த்தி, விஸ்வாமித்ரருடைய யாகத்தை ஸம்ரக்ஷணை செய்த மஹாபிரபு நாராயணரை சாதாரண மனிதஞக நினைக்காதீர்கள். யாவராலும் தூக்கப்படாத சிவதனுஷ்ஷை சீதையும் அந்த ராமனும் அனுயாஸமாகத் தூக்கி எறிந்தார்கள். அந்த உத்தம தம்பதிகளை க்ருதலக்ஷணங்களால் அடையாளம் செய்யப்பட்ட புவனேஸ்வரர்களாக அறிந்து கொள்ளுங்கள். வாலியினுடைய கர்வத்தைப் போக்கினவர்கள்.) அவர்களே ஸமஸ்த லோகங் களுக்கும் ஈஸ்வரர்களானபடியால் காலத்தையும் முழுங்கிவிடும் காலர்கள். ஸம்பூர்ண கல்யாண குணங்கள் அவர்களுக்கு ஸ்வரூப மாதலால், அவர்களே பரபிரும்மம், பகவான் என்று பூஜிக்கத் தகுந்தவர்கள். (ஸம்பூர்ணமான ஐஸ்வர்யம், தர்மம், கீர்த்தி, லக்ஷ்மி, வைராக்யம், மோக்ஷம் ஆகிற ஆறு குணங்கள் பொருந்தியவர்கள். சக்தி, பலம், ஸம்பூர்ண ஐஸ்வர்யம் யசஸ், தேஜஸ் ஞானம் வீரியம், தைர்யம், சௌர்யம், ஔதார்யம், வாத்ஸல்யம் சௌலப்ய சௌசீல்யம், அழகு, காரிய ஸாமர்த் தியம், பொறுமை, கருணையாகிற ஸமஸ்தமான கல்யாண குணங்களுக்கு யிருப்பிடம்.) சம்சாரமென்னும் பிணிக்குப் பகையாகவிருக்கும் அநாமயர். தேக மனநோய்களால் பாதிக்கப் படாதவர். வேண்டியவன் வேண்டாதவன் என்கிற பாகுபாடு யில்லாத நிராமயர். (பிறவிக்குருடஞன திருதராஷ்டிரனுக்கும் தமது அத்புதமான திருமேனியைக் கண்கொடுத்துக் காண் பித்தவர்.) அவரே விகாரமற்ற நாராயணர். அவரே அஜிதை என்னும் வைகுண்டத்திற்கு அதிபதி. அவதார காலங்களிலும் யாவராலும் ஜயிக்கப்படாதவர். பிரும்மா, திக்குக்கள், இந்திரன் முதலியவர்களால் அறியப்பட்ட அனுதியான புருஷன். ஸர்வவ்யாபகர், ஸர்வ அந்தர்யாமி, ஆதிஅந்தமில்லாத ஓங்கார மூர்த்தி; அவரே பக்தி செய்யும் யாவருக்கும் வசப்படுபவர். அவர் எல்லோருக்கும் உத்தம ஸ்தானங்களைக் கொடுப்ப தாலும், அவர் ஒன்றிலும் விரும்பாமையிஞல்தான் பகவான் என்று அறியப்படுகிருர். தேசவரை காலவரை ஸ்வரூப

வரை குணவரை ஆகிய அநேக அளவுகளுக்கும் கணக்கு களுக்கும் முடிவுபெருத அனந்தர்; அளவு பெருதவர். ஆனல் பக்தர்களுடைய விருப்பத்திற்கு ஏற்ப, அநேக ரூபங்களை எடுக்கும் அனந்த மூர்த்தி. (கூர்மாவதாரத்தில் உலகங்களுக்கு ஆதாரமாயிருந்து ஸ்தம்பம்போல நிற்கும் ஆதிசேஷருக்கும் ஆத்மா.) தமது மகிமையினுல் யாரும் காணுதபடி விளங்கும் அளவற்ற அனந்தமூர்த்தி. (222)

(அம்பிகையாகிற தாயை, சிசுஸ்தன்யபானம் செய்யும் குசசுந்தரியை, மைத்ரியாக உபாஸிக்கத் தகுந்தவளை அறிய முடியவில்லையா? தத்வம் எனப்படும் பிரளயகாலம் வரைக்கும் அதற்கும் அப்பாலுள்ள சாஸ்வதமான கருணு, முதிதா என்று சொல்லக்கூடியவர்களையும், பாவிகளிடத்தில் உபேஷா என்கிற வளாகவும், மஹாபிரளயஸாக்ஷிணியாகவுமிருக்கும் இந்த சீதையை ராமனுடைய அர்த்த (பாதி) சரீரணி என்று புரிந்து கொள்ளவில்லையா? அந்த பிரபுவே புவனேஸ்வரன், சீதையே ஹ்ரிம் என்கிற பீஜாக்ஷர மந்திரத்தின் அதிதேவதையான புவனேஸ்வரி, பிருஹ்மாத்மைக்யஸ்வரூபினி, ராஜராஜேஸ்வரி, ராஜ்யதாயினி, ராஜலக்ஷ்மி, ராஜக்ருபா, ராஜபீடநிவேஸிதா, ராஜ்யஹரிவல்லபா, கோஸநாதா, என்று பல பெயர்களால் அகைக்கப்படும் மஹாலக்ஷ்மியினுல் நாராயணனை அடையாளம் தெரிந்துகொள்ள வில்லையா!) (பிரணதார்த்திஹரன், பாபஹரன், தண்டபாணி, காலன், யமன், மிருத்யு ஆகியவர்கள் பயப்படும் சக்ரதாரியான காலாந்தகனைத் தெரிந்துகொள்ளவில்லையா? ஆத்ம வித்யையாகவும் எல்லா அனர்த்தங்களைப் போக்கும் மஹா வித்யை என்று சொல்லப்படும் புருஷோத்தம யோகமான ஸ்ரீவித்யையைப்பற்றி ஸ்வாமி, தாங்கள் அறிந்துகொள்ள வில்லையா?) (பகவானுடைய ரக்ஷகத்வம் போக்யத்வம் ஆகிற இருகைகளால் அணைக்கப்படும் மாதவனின் பத்னியாகிற புண்யை என்று சீதையைத் தாங்கள் தெரிந்துகொள்ளவில்லையா? "அம்மா, நான் உன் புத்ரன்" என்று உறவு சொல்லாமலே உன்னை, ஒரு வைஷ்ணவன் மற்ருெரு வைஷ்ணவனை பரம அபராதியாகவிருந்தாலும் உத்திரக்ஷணத்திலே, "வல்லீர்கள் நீங்களே" என்கிறபடிக்கும் "நானே தானுயிடுக" என்கிற படிக்கும், அவன் மெய்யே குற்றமற்றவன், ஸாதாரண பாலகன் என்கிற வியாஜத்திஞல், அறியாப் பிள்ளை என்கிற காரணத்தால், உமது உறவையும் அபராதத்தையும் நினைத்துப் பார்க்காமல், அந்த அம்பிகை தயாபரி, பகவானிடம் உமக்கு

கௌரவத்தை ஸாதிக்கும் எண்ணத்துடன் அந்த ஸர்வ ஸாமார்த்திய வஸுதாவை, போதரிக் கண்ணினுளை, எவ்விதம் ஸ்வாமி நீர் அறியாமல் இருக்கமுடியும்? அண்ணு, க்ஷமை கொள்ளும் முகத்தாலே ஈஸ்வரனை க்ஷமை கொள்ளும்படி பிரார்த்திக்கும் வைஷ்ணவியை நீர் அறியீரோ? ருக்ஷாக்ஷராணிச்ருண்வன்வை ததா பாகவதேரிதாந், ப்ரணம பூர்வகம் க்ஷாந்த்யா யோவதேத் வைஷ்ணவோஹிஸ:'' என்கிறபடிக்கும், வேதாந்ததேசிகர் அருளிச் செய்தபடி, ''குற்றம் சாட்டப்பட்டவர்களை நோக்கி, அஞ்சல்வேண்டாம்'' என்று அபராதியின் திருவடிகளில் தலை சாய்த்து, ''இக்குற்றம் அடியேனுடையதுதான். பொருத்தருள வேண்டும்,'' பொறுப்பித்தலே ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமாதலால் பகவத் பாகவத விஷயத்திற்கு உம்மை அருகதையாக்கும் பங்கயக் கண்ணனின் கந்தம் கமழும் குழலி பந்தார் விரலி, செந்தாமரைக் கையாற் சீரார் வளையொலிப்ப, மாதவிப் பந்தல் மேல் குயிலினங்கள் போலக் கூவும் நப்பின்னை பிராட்டியாகிற மஹாலக்ஷ்மி, கோமாதாவின் அதிதேவதையை உமக்குத் தெரியவில்லையா?) (ராமனுக்கும் ராமானுஜராகிற கண்ணனுக்கும் அடிமை செய்யப் பேறுகை கொண்ட லக்ஷ்மணனே லக்ஷ்மிஸம்பந்த: என்கிற இளையபெருமாளையும் அடையாளம் தெரிந்து கொள்ளவில்லையா!) (உண்ணுஞ் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் என்கிறபடி பர்த்தாவை முலையால் அணைக்கும் அவஸ்தையிலும் பிள்ளையை முலைப்பால் கொடுத்து வளர்க்கை போலவும் இருக்கும் கொம்பனுர்க்கெல்லாம் கொழுந்து, வஞ்சிக் கொம்புபோல, செடிக்கு தீங்கு நேர்ந்தால் கொழுந்தில் முதலில் வாட்டம் வருவதுபோல, தன் புத்ரனுக்குக் கேடு வந்தால், ''ஐயோ, கொழுந்தே நீ என் தலையிலும் திருவடியை வைத்து என்னை மன்னிக்கும்படி யாசிக்காத போனுலும், நான் உன்னை விடுவேனே?'' ஸதாபஸ்யந்திஸூர்ய: என்கிறபடி முறை கெட்டவனுக்கும், பகவானிடம் செல்லுவதற்கு பயப்பட்டவனையும், புருஷகாரத்தை கேட்பதில் ஸங்கோசமடைந்தவனையும், அஸஹ்ய அபசாரங்கள் உள்ளவனையும் காப்பாற்ற நான் கோமாதாபோல திருவுள்ளம் ததும்பி இருக்கிறேன். முகில் கருணைமழையைப் பொழிய நினைத்தால் பகவத் விஷயம் வேண்டும். அதன் பின்புதான் பொழியமுடியும் என்கிற நினைப்புடன் இவனுக்கு இவ்வித பிரவிருத்தி தற்போது இல்லை, என்று இரங்கி, கருணை நினைவு மாருமையால் திருமலையாகிற கைலாசத்தில் கங்கையாகிற அருள் அருவிகள் உமாமஹேஸ்வரர் ஜடையி

லிருந்து பால்போன்று பொங்கும் குணத்துடன் ஆவிர்பவிப்பது போல; இராமபிரான் ராவணனிடம் போர் புரியும்போது இரக்க முற்று "ராக்ஷஸாதிபா, போரில் மிகவும் வருத்தமுற்ருய். உன் இருப்பிடம் அடைந்து சிறிது களைப்பாறி வலிமையுடன் நாளை வா" என்று நியமனம் தந்தானே அந்த மனத்துக்கினியானின் கற்பகம் இருக்கிருளே, உன் நினைவாக தாய் ஆமையைப்போல, உன்னைப் பார்ப்பதாலே தாய் மீனைப்போல, உன்னை விகஸிப்ப தாலே பத்மா என்கிற தாமரையைப் போல, இளம் கன்று என்று உனக்காக இரங்கி, கன்று ஊட்டுவதாக நினைத்து முலைவழியே நின்று பால் சொரியும் உம் காமதேனுவைக் காணவில்லையா? தமோ குணத்தால் உறங்கும் உன்னை "ஈதென்ன பேறுறக்கம் என்று வருத்தப்படும் ஸ்ரீராம குண கீர்த்தனம் செய்யும் பூமேய மாதவத்தோன் தாள் பணிந்தவளும் கோதற்ற ஞானமுடைய சீதையை, உன் தாயை, புவனேஸ்வரியை, ஜகன்மாதாவை, ஸர்வ லோக சரண்யையை, பெரும்பூதூர் மாமுனிக்குத் தன்னைத்தானே உணர்த்தி ஆட்கொண்டதுபோல உனக்கு ஞானபிரபோதகமாக, ஞானதிவாகரனுக உன்னை ஆட்கொள்ளுகிருளே, அந்த ஸர்வ லோக யோகக்ஷேமத்தைச் செய்யும் மஹா உத்தமியை நீர் அறிந்து கொள்ளவில்லையா? அண்ணு, உமக்கு இன்னும் ஒரு விஷயம் சொல்லுகிறேன் கேளும். சரீர ஆத்ம பிரமம், ஸ்வதந் திர ஆத்ம பிரமம் இவைகளே விபரீத ஞானங்களை விளைவிக்கும் பகைவர்கள். இந்த வஸ்து என்னுடையது என்று நினைத்து, மமகாரத்துடன் இந்த அசேதனமான சரீரத்தை ஆத்மாவாக நினைப்பதும், ஜீவாத்மாவை எம்பெருமானுக்குச் சேஷமாக நினையாமல் தன்னை ஸ்வதந்திரனுகக் கருதுவது ஸ்வதந்திர ஆத்ம பிரமம். அப்பேற்பட்ட விரோதிகளை ஒழிப்பதற்கும் உமக்கும் ஆசார்யன் போலவும் எழுந்தருளியிருக்கும் ஆஞ்ச நேயரைக் கண்டு கூடவா, உமக்கு ராமானுஜன் கூடவிருக்கும் ராமசீதா தம்பதிகளை தெரிந்துகொள்ள முடியவில்லை. லங்கையை எரித்தாரே, அதிலிருந்து என்ன தெரிந்துகொண்டீர்கள்?)

(ஸர்வேஸ்வரன் ஸகலவஸ்துகளுக்கும் ஸ்வரூபத்தையும் வாழ்வையும் கொடுத்து தாரகத்வம் என்கிற பெயரில் ஸகல பிரபஞ்சத்தையும் தாங்குகிருன், போஷிக்கிருன்; தனது ஸங்கல்பத்தினுல் சேதனர்களை காரியங்களில் பிரவர்த்திக்கிருன். அந்த சேதனர்களை நியந்தாவாக தனது பிரயோசனத்திற்காக நிற்கும்படி செய்து சேதனு சேதனங்களை உஜ்ஜீவிக்கச் செய்து அதனுல் தானும் பெருமை அடைகிருன். இந்த

ஸர்வசேஷித்வம் எம்பெருமானிடம் நிலேபெற்றது. ஸகல வஸ்துக்களேயும் சரீரமாகக்கொண்டு நிற்கிருன். அசேதன வஸ்துக்களும் நாமும் அவனுக்குச் சரீரமாக நிற்கிருேம். அவனுக்கும் நமக்கும் உள்ள ஸம்பந்தம் சரீர ஆத்ம ஸம்பந்தம். கனகபவன சீதாராமா, நாம் பொருள் கொள்வதற்காக மெய் விரதம் பூண்டவராக புருஷார்த்தம் ஒன்றுதான் என்று பூமகள் நாதன் சொல்வதுபோல, அந்த புருஷார்த்தம் பிராட்டியுடன் சேர்ந்த எம்பெருமானுடைய, புண்டரீகாக்ஷனுடைய திருவடி களே, அஜர்ருத்ரர் வணங்கும் திவ்ய பூஷணங்களே உடைய திருவடித் தாமரைகளே, நைஷதராஜன் தமயந்தி போன்றவர் களும் திக்பாலர்களும் வணங்கும் மஹா அழகு, சிறந்த குணங்கள், சிறந்தவளுக்கு சிறந்தவனின் சேர்க்கையானது மிக்க குணமுள்ளது போலவும், தர்மம் ஸத்யம் என்கிற மெய் விரதத்துடன் சரணுகதரக்ஷகம் என்கிற அருள் கிருபையால் மருள் என்கிற அக்ஞானத்தை விலக்கி, வினேவிலங்குகள் என்று சொல்லப்படும் கர்மவினேகளின் பந்தங்களே அறுப் பதற்கு, தனக்குத் தோஷம் வரக்கூடாததென்றும், உனக்கும் அபாயமற்ற வழியை உபதேசிப்பதற்காகவும், அந்த மஹாத்மாவை), (எவ்விதம் குற்றமற்ற தமயந்தி லோகபாலர் களாலும் நளனுலும் ஸ்வயமாக பிரார்த்திக்கப்பட்டும், "தேவர் களுக்கு அப்ரியத்தைச் செய்கின்ற மனிதன் சீக்கிரமாக மரணத்தை அடைகிருன்; அதனுல் உம்மை ஏற்கனவே வரித்த காரணத்தால் அவர்கள் முன்னிலேயிலேயே, அவர்களுடைய வரபிரஸாதத்தினுல் நளனுகிற உம்மை ஸ்வயம்வர மண்டபத் தில் வரிக்கிறேன்" என்று சொல்லிய தமயந்தியைப்போல,) இந்த சீதை உமது முன்னிலேயில் சிவதனுஷ்ஷை ஒடித்து ராமனே வரித்தாளோ; (எவ்விதம் ஆத்மஞானமுள்ள அரசன் ஸ்வஜன ரக்ஷகத்துடன் நற்குணங்கள் நிறைந்த மனிதர் களேயும், குலம் பிராயம் ஸ்தானம் இவைகளின் மரியாதையைச் செய்கிறவனும், தேசதர்மத்தையும் குலதர்மத்தையும் பாது காப்பவனும், எல்லா ஆஸ்ரம (பிரும்மசர்ய கிருஹஸ்த வான பிரஸ்த, ஸன்யாஸ) பயன்களே ஸாது ஜனங்களுக்கு அடையச் செய்கிறவனும் தேசதர்மத்தில் இருப்பதுடன் எல்லா ஜனங் களின் தர்மத்தையும் கவனிப்பவரும், விசேஷமான ஆதரவுடன் தர்மத்தை நாடிச்செல்லும் மனிதர்களே ரக்ஷித்து ஆதரிப்பவனும், கிருஹஸ்த தர்மத்தை மிகச்சிறந்தது என்று நம்பி அதை கைப்பிடித்தவனும், கோபத்தை வென்று பிராணிகளிடம்

தன்னை உபமானமாகக் கொண்டு தண்டம் செலுத்தும் அரசனைப் போல விளங்குபவனும், ஸத்யம் என்னும் ஜலத்தில் தியாகம் என்னும் காற்றுல் அஹிம்சையாகிற மார்க்கத்தில் செல்லுகிற ராமலக்ஷ்மணர்கள், முனிவேடம் தரித்து தர்மம் என்கிற ஸநாதனமான சரணுகத ரக்ஷகத்வம் என்கிற கப்பலில் ஏறி யாவற்றையும் நடத்தும் புண்டரீக நயனனை சீதாராமனை ஆஸ்ரயித்துக்கொள்; காமத்தை மனத்திலிருந்து அகற்றி கசடற்ற நல்ல எண்ணத்துடன் ஆஸ்ரம தர்மங்களை பரிபாலிக்கும் புருஷ ஸ்ரேஷ்டர்களான லக்ஷ்மண ராமர்களை உத்தம பாவத்தினுல் சரணம் அடை'' என்று உனக்கு உபதேசம் செய்தாரே, அந்த மஹானுபவரான ஆஞ்சநேயர், ராமதூதன், பாஹுபல பராக்ரமன், அவர் சொன்ன வார்த்தைகளை நினைவு படுத்திக்கொள்ளும். ''ராமன் தர்மத்திலும் பிராம்மணரிடத்திலும் பிரியமுள்ளவர். அவர் ஒருபொழுதும் விளையாட்டிலும் பொய் சொன்னதில்லை. யுத்தத்தினின்று புறங்காட்டி ஓடினதுமில்லை. தன்னை அடைந்த ஆஸ்ரிதர்களை தாமரைமலர் போன்று பிரகாசிக்கின்றதும், பிரும்மருத்ராதிகளால் மிக்க சிரமத்துடன் ஆராதனை செய்யப்படுவதும் ஸத்யம், தர்மம் என்று சொல்லப்படும் ஸத்புருஷர்களுக்கு அபீஷ்டங்களை ஸாதிப்பதும், சரணுகதர்களை ரக்ஷிப்பதற்கும் சூசகமான இரு பொன்தூண்கள்போல பாதங்களை உடைய ஜனர்த்தனருடைய பாத ஸ்பர்சம் செய்; ஜீவித்துப் பிழை என்று உன்னுடன் வாதித்தவரும் பரம கிருபாளுவுமான அந்த ஸதாசிவரை, மாருதியை நினைத்துப்பார்.) (அவர் உன்னை உஜ்ஜீவிப்பதற்கு, உனது சரணுகத தர்மத்திற்கு அர்த்த பஞ்சகம்போல பரத்வத்தையும் பகவானுடைய சௌலப்ய வாத்ஸல்ய ஔதார்ய சௌசீல்ய குணங்களைச் சொன்னுரே, அதை ஞாபகப்படுத்திக் கொள்ளும்.) (பரமபுருஷரான ஸ்ரீராமன் சரணுகதர்களின் உள்ளத்திலிருந்து யமதண்டனை வராமல் காக்கும் ஸத்வஸ்தர் என்கிற ஸ்ரீமந்நாராயணர், அஜர்; அந்த இருபத்தாருவது தத்வம், உனக்கும் எனக்கும் பிரும்மாவுக்கும், முந்திப் பிறந்தவர். அவரே அண்ணு, கர்மங்களால் தொடரப்பட்டு நம்போன்றவர்களுக்கு யேற்படும் ஜன்மங்களின்றி தமது ஸங்கல்பம், மகிழ்ச்சி, லீலை, விளையாட்டு, பக்தர்களின் ஸம்ரக்ஷக்த்வம், தர்மத்தின் நிலை, ஸத்தியத்தின் பெறுமை, ஆஸ்ரிதர்களின் கோபம், சாபம், பிரார்த்தனைகளை ஏற்பது, கோ என்கிற வேதங்களையும்,

ஆஸ்ரம தர்மங்களையும், பக்தர்களின் கோரிக்கைகளையும், பூமிப் பிராட்டியையும், தேவர்களையும் ஸம்ரக்ஷிப்பது முதலியவைகளை வியாஜமாகக் கொண்டு, தமக்கே சிறப்பாயுள்ள கிருத லக்ஷணன், கோடி மன்மதர்களின் தேககாந்தியுடன் சுத்த ஸத்வ மயமான தேகத்தோடு மனிதரூபமாக அமைத்துக் கொண்டு, ஸ்வசங்கல்ப விசேஷத்தால் அவதரித்த ஸ்வயம்புக்களான சீதாராமர்களை உனக்குத் தெரியவில்லையா? வேதங்களின் ஸாரமாகவிருக்கும் காயத்திரி மந்திரத்தின் பொருளாகவுள்ள மஹாஸ்வானரான நாராயணரை உனக்குத் தெரியவில்லையா? சசி ஸூர்ய நேத்ரங்களுள்ள வேங்கடேசனை அறிந்துகொள்ளவில்லையா? ஸகல ஆஸ்ரிதர்களுக்கும் மங்களங்களைக் கொடுக்கும் சம்புவை நீர் தெரிந்துகொள்ளவில்லையா? அவருடைய திருவடிகளில் நித்ய கைங்கர்யம் செய்ய உரிமையுள்ள ஜீவனே கிருதபுண்யன். அந்த கைங்கர்ய பிராப்திக்கு தனக்கு ஏற்றதாய் கைக்கொண்ட பக்தி பிரபத்திகளே உபாயம். பகவானுக்கு பரதந்திரனுகிற ஜீவன் தனது ஸ்வரூபத்திற்கு ஏற்ப மோக்ஷ ஆனந்தமாகிற பகவானின் சாக்ஷாத்காரமே பெரும்பலன். அந்த சாக்ஷாத்காரத்திற்கு இடையூறாகிய விரோத பாவங்களை, கர்மஞான பக்திகளால் ஏற்படும் விலங்குகளை அறுத்தலே, நமது அக்ஞானம் நீங்குமாறு ஆசார்யரான ஆஞ்சநேயர் உமக்கு இவ்விடம் வந்து உபதேசித்தருளினர். நித்ய தம்பதிகளான பெருமாள் பிராட்டி உம்மைக்கண்டும் உமக்கு ஸத்பதத்தை யாவரும் உபதேசிக்கவில்லையே, வீணுக இவன் அழிந்து போகிருனே என்று வருத்தம் மேலிட்டவர்களாக விருக்கும் போது, இந்த ஆசார்யர் பகவத்தம்பதிகளின் வருத்தத்தை துடைக்கவும், உனக்கு இழிவு வராமலும் பாதுகாக்க மஹா காருண்யத்தால் உம்மால் வேண்டப்படாத போதிலும் அவரே கருணை கூர்ந்து ஜகத்காரணமாய் நிற்கும் ஸர்வேஸ்வரரின் அருள் நீர் எத்தகைய குற்றம் செய்திடினும், தண்டனையை அடைவதற்கு தகுதி உள்ள போதிலும், கருணை பொழிந்து ஆஸ்திகர்களைக் காக்கும் திருக்கண்களை உடைய புஷ்கராக்ஷரான எம்பெருமானின் கருணை உமக்கு ஸித்திப்பதற்கு, "சீதையைத் தேடுதல்" என்கிற அற்ப வியாஜத்தைக் கொண்டு உம்மை உஜ்ஜீவிக்க ஆஞ்சநேயர், எழுந்தருளினர். அவருடைய வார்த்தைகளையும் திரஸ்கரித்துவிட்டீர்.)

(இன்னும் சொல்கிறேன். பிரபு கேளும். குலம் நசிக்கும் போது, பரிக்ஷீணமாகும்பொழுது இந்த வாஸுதேவரை நமஸ்கரித்தால் குலம் வளர்ந்து செழிப்பை அடையும். அவர் அநாமயர். ஸம்சாரம் என்னும் பெரும்பிணிக்கு பகையாக விருப்பவர். கர்மங்களினுலும் ஞானங்களினுலும் பக்தியாலும் ஏற்படும் மனுேதேக நோய்களைக் கண்டிப்பவர். பூமி ஜலம் தேஜஸ் வாயு ஆகாசம் சந்திரன் சூர்யன் யஜமானன் ஆகிய எட்டு உருவங்களுள்ள காசிபதியான உமாமஹேஸ்வரருக்கு ஈஸ்வரன், அஷ்டதிசைகளிலும் செல்லக்கூடிய கதி உள்ளவர். அஷ்டதிக்பாலர்கள் வணங்கும் பெரியோன். பிரக்ருதி மஹத் அஹங்காரம் பூமி ஜலம் தேஜஸ் வாயு ஆகாசம் ஆகிய எட்டு தத்வங்களுக்கும் மேலானவர். எட்டு குலபர்வதங்களைப் படைத்த மதுகைடபஹாரி. (ஹிமவான், நிஷதம், விந்தியம், மால்யவான், பாரியாத்ரகம், மந்தரம், மலையம், மேரு). அவருடைய குணங் களும் எட்டு. கர்மத்திற்கு வசப்படாமலிருத்தல், கிழப்பருவம் இல்லாமை, சாவில்லாமை, சோகமில்லாமை, பசியில்லாமை, தாகமில்லாமை, போகத்திற்கு உரிய அழிவற்ற வஸ்துக்களை உடைமை, ஸங்கல்ப மாத்திரத்தில் முடிக்கும் காரியத்திறமை உள்ளவர். அவருடைய புத்தியின் லக்ஷணங்களும் எட்டு. விஷயத்தை மனத்தில் வாங்குதல், மனத்தில் தரித்தல், மறுபடி ஸ்மரித்தல், பிறருக்கு எளிதாய் எடுத்துக் கூறுதல், பிறுர்கூறுத விஷயங்களை அறிதல், பிறர் கூறிய விஷயங்களில் வேண்டாத வற்றை தள்ளுதல், விஷயங்களைத் தெளிவுடன் அறிதல், உண்மை யான அர்த்தங்களை அறிதல், அந்த மஹாத்மாவுக்கு அஹிம்சை இந்திரிய நிக்ரஹம் ஸகல ஜந்துக்களிடமும் அனுகம்பையாகிற கருணை, பொறுமை, க்ஞானம், தபஸ், த்யாகம், ஸத்யம் ஆகிற குணங்களாகிற அனுஷ்டானங்கள் புஷ்பங்கள். அவருக்கு வசப் பட்டன அஷ்டசித்திகள். அதாவது வேதங்களை அத்யயனம் செய்தல், அதன் அர்த்தத்தை அறிதல், ஆராய்ந்து அர்த்த நிச்ச யத்தைப் பண்ணுதல், தான் கண்ட அர்த்தத்தை உறுதி செய்து வித்வான்களுடன் ஸம்பாஷித்தல், ஸித்தாந்த அர்த்தத்தை எப்பொழுதும் மனத்தால் பர்சயம் செய்தல், தன்னைப் பற்றிய வர்கள் துன்பமில்லாமலிருத்தல், ஐந்து பூதங்களால் ஏற்படும் உபத்திரவங்கள் நேராமல் பக்தர்களைக் காத்தல், தெய்வத்தால் ஏற்படும் கடும் வினைகளை அகற்றுதல், அவருக்கு பாகவதர்களிட மும் ஆஸ்ரிதர்களிடமும் எட்டுவிதமான பக்தியை காண்பித்தல். அதாவது பக்தர்களிடம் அன்புவைத்தல், பாகவதர்களை ஆராதிப்

பதில் மகிழ்ச்சி அடைதல், பாகவதர்களுடைய சரித்திரத்தைக் கேட்பதில் ஆவல் கொள்ளல், பாகவதர்களை ஸ்மரிக்கும் போது தயையுற்று குரல் தழுதழுத்து நாம் இவனுக்கு ஒன்றும் செய்ய வில்லையே என்று கண்ணீர் பெருக்கி மயிர்கூச்சல் எடுத்தல், பக்தர்களை தானே தேடிக் கண்டுபிடித்தல், அவனுக்கு செய்யும் காரியங்களில் கிங்கரன் போல விருத்தல், அவர்களைப் பற்றி எண்ணுதல், அவர்களால் செய்யப்படும் அற்ப பூஜைகளை பெரும் மனத்துடன் ஏற்றுக் கொள்ளுதல். அந்த நாராயணரே யோகத்தின் எட்டு அங்கங்களாக விளங்குபவர். 1. யமம் (அஹிம்சை, ஸத்யம், திருடாமை, பொய் சொல்லாமை, காமத்தை அடக்குதல், பொருளைச் சேர்க்கும் ஆசையைவிடுதல்) 2. நியமம். (பரிசுத்தி, உள்ளத்தைக் கொண்டு திருப்தி அடைதல், வ்ரதம் ஜபம் தவம் முதலியவை செய்தல், வேதாந்த பரிச்சயம், ஸ்வாத்யாயம், எல்லா நற்கருமங்களையும் பகவானிடம் ஸமர்ப் பித்தல்) 3. ஆஸனம். (பத்மாஸனம், பத்ராஸனம் முதலியவை) 4. பிரணுயாமம் (ஸ்வாசத்தை அடக்குதல்) 5. ப்ரத்யாஹாரம் (இந்திரியங்களை அந்தர்முகமாக்குதல்) 6. தாரணை (பகவானின் திருமேனியைத் தரித்தல்:) 7. ஆத்மதியானம் என்கிற தியானம் 8. ஸமாதி நிலையாகிற தியானப் பொருளை நேரில் அறிதல். அந்த பரமாத்மாவே அஷ்டசித்திகளைப் பக்தர்களுக்குக் கொடுப்பவர். அதாவது அணிமா—சரீரத்தைச் சிறிதாக்கிக் கொள்ளுதல்; மஹிமா—பெரிதாக்கிக் கொள்ளுதல்; லகிமா—இலேசாகச் செய்தல்; கரிமா—கனமாக்கிக் கொள்ளுதல்; வசித்வம்—எல்லா ஸ்தாவர ஜங்கமங்களை திருமேனி அழகினுல் வசப்படுத்தல்; ஈசித்வம்—எல்லாவற்றிற்கும் ஸர்வசேஷியாக விருத்தல்; பிராப்தி—நினைத்த க்ஷணத்தில் பொருளைப் பெறுதல்; பிராகாம்யம்—நினைத்தவிடம் செல்லும் வல்லமை. அந்தப் பெருமாளே அஷ்டாக்ஷரத்தினுல் அடையத் தகுந்தவர். அவரே நாராயண பரபிரும்மம். தம்மை ஆஸ்ரியத்தவர்களின் இடையூறு களைப் போக்கும் அஜராகிய ஜனுர்த்தனர். தூணிலும் உளான், துரும்பிலும் உளன், பிருஸ்னிகர்ப்பன், விஸ்வகர்ப்பன், விஸ்வம் என்று சொல்லப்படும் அஜமூர்த்தியாகிற நரசிம்மமூர்த்தி, பிரணவத்தின் முதல் எழுத்தாகிய அகாரத்திற்குப் பொருளான ஆதி நாராயணமூர்த்தி. ஸம்பூர்ண கல்யாண குணங்கள் நிறம்பின ஸ்வரூபமாதலால் பகவான் என்று பூஜிக்கத் தகுந்தவ ஞகிருன்.) பூர்ணமான ஐஸ்வர்யம், தர்மம், கீர்த்தி, லக்ஷ்மி, வைராக்யம் மோக்ஷம் ஆகிற ஆறுகுணங்கள் பொருந்திய

பகவான் நாராயணர். சக்தி பலம் ஸம்பூர்ண ஐஸ்வரியம், யசஸ், தேஜஸ், ஞானம், வீர்யம், தைர்யம், சௌர்யம், ஔதார்யம், வாத்ஸல்யம், சௌலப்ய சௌசீல்யம், அழகு, காரிய ஸமார்த்தியம், பொறுமை கருணை, ஆகிற கல்யாண குணங்களுக்கு இருப்பிடம். வேண்டியவன் வேண்டாதவன் என்கிற பாகுபாடு இல்லாத நிராமயர்.)

[தியானம்

சராசரங்களின் நாதரே, கோஸலாதிபரே, ராமசீதா, நாராயணா, உமது திருவடிகளை அர்ஜுனன் என்ன மனோபாவத்துடன் தொழுதானோ, அதே மனோபாவத்தால் நான் உம்மை ஸதா விஷ்வக்ஸேனர் என்று ஆராதிக்கிறேன். உம்மைவிட பூஜ்யமான நபர் எனக்கு யார் இருக்கக்கூடும்? உமக்குச் சமமாகத்தான் யார் இருக்கக்கூடும்? எனக்கு குரு, என்குருவுக்கு குரு, அகில சராசரங்களுக்கு குரு, ஸகல பிரம்மண்ய தேஜஸ்ஸும் குடிகொண்ட என் ஸுப்ரஹ்மண்யரே, வர்ச்சஸ் என்று நீர்தானே சொல்லப்படுகிறீர். உம்மை ஆயிரம் தடவைகள் நமஸ்கரித்து "எனது ஸ்வாமி" என்று பராசரர் சொன்னபடிக்கும், ரிபு என்கிற ரிஷியின் சிஷ்யனுன நிதாகனுடன் ஸம்வாதித்த வசனங்களாலும், அர்ஜுனன் கண்ணனைத் தொழுத வார்த்தைகளாலும் அறிந்து, ஸ்வாமி, உமது புத்ரன் போலவும், பிரியபந்து போலவும், பெரியநாயகியாகிற பராங்குசநாயகி போலவும், திருமங்கை ஆழ்வாரின் வண்டு போலவும், குலசேகராழ்வார் சொல்லியதுபோல உன் சேவகன் போலவும், பெரியாழ்வார்போல பெற்றெடுத்த சீமாட்டியின் கோமகனுகவும், என் ஹ்ருதய உல்லாஸனுகவும், தர்மபுத்ர திரௌபதி அர்ஜுன சகாவாகவும் என் அதிருஷ்டபலனுகவும் சரணம் அடைகிறேன். கஜத்தின் மேல் ஏறியிருந்த அரசன் தான் மேலிருப்பதால் தன்னைப் பெரியவன் என்று சொன்னவுடன், அவனை சிக்ஷிக்க வந்த ரிபுமஹரிஷி மரத்தின் மேல் ஏறி, கஜத்தின்மேல் உட்கார்ந்திருந்த அரசனுக்கும் மேலே விளங்கிய சமயம், அரசன் அவரை தண்டனிட்டு சுத்தமான சிஸ்ரூஷையினுல் மரியாதை செய்ய, ஸ்நேகபாசத்தால் கட்டுண்ட கிருபாளுவாகிற ரிபு மஹரிஷி சொன்னுர் :—மஹாமதியுள்ள அரசனே, ஸமஸ்த பதார்த்தங்களையும் அத்வைத (ஒன்று என்கிற) ஆத்மபுத்தியினுல் பார்! அப்பொழுது பரமார்த்தத்தின் ஸாரம் உனக்கு விளங்கும், அதுதான் நீ ஸங்க்ஷேபமாக அறியவேண்டிய பரமார்த்த ஸார

பூதம். எந்தவிதமாக முனிஜனங்கள், ஆத்மா ராமர்கள் நாராயணபரர்களாக வாழும் உத்தம வைஷ்ணவ சீலர்கள், நாராயணபதத்தை அடைய விரும்பும் மனோபாவத்தினால், பரமாம்கதிம் என்று சொல்லக் கூடிய வைகுண்ட பதத்தை அடைய விரும்பும் முக்தர்கள், தர்மவான்கள், ஸமஸ்த பிராணிகளேயும் தன்னைப்போல பாவித்து, சத்ரு மித்ரன் ஆகிற பாவமின்றி ஸர்வபாவனையால் ஸர்வகதர்களாகி, பகவான் வாஸுதேவரை அஹங்காரமமகார கர்த்ருத்வமின்றி, அவனால் ஆட்டிவைக்கப்படும் சூத்திரப்பாவை போல தன்னை மதித்து, ஆகாசம் ஸ்வேத நீலம் என்கிற பேதத்துடன் இருப்பதுபோல, பிராந்தி திருஷ்டியோடு, அபிராமர்களாகப் பாராமல், இந்த பரமாத்மா, பலவிதங்களாகத் தோன்றினாலும், அச்யுதன் அவிநாஸி என்று சொல்லக்கூடியது ஒரே அவ்யயமான நாரா யணரே ஆத்மஸ்வரூபம். அவரே அந்தர்யாமியாகவும், பரவாஸுதேவராகவும் காணப்படும்பொருள். அந்த ஆத்மா தான் ராம கிருஷ்ண அவதாரங்களிலும், இன்னும் பல அவதார காலங்களிலும் தம்மைப்பற்றிய விசேஷ அடையாளங்களால் நிச்சய ஞானத்தை உண்டுபண்ணும் ஸ: ; அவன் ஸர்வதிருக் ஆகிற நாராயணம் அநாமயம் என்று கருதி நான் சரணமடை கிறேன்.]

(இப்போது உமது கண்ணிற்கு நாரணன் பிறந்த மன்னு அயோத்தி சிறியதாகத் தோன்றுகிறது. அதனால் கோசல ராஜனை ராமனையும் லக்ஷ்மணனையும் சீதையையும் ஸர்வ சாதாரண மானிடர்களாக மதிக்கிறீர்கள். இந்த அயோத்தி சிந்தனைகளுக்கும் பெரிய இக்ஷ்வாகு, ரவிகுல ஸ்நேகஸம்பத்தைப் பெற்றது. ஸ்ரீரங்கநாயகி ஸமேத ரங்கநாயகரை சுத்த புத்தி யினால் ஆராதித்து, ஒரு பிரயோசனத்தையும் விரும்பாமல் எம் பெருமானுடைய திருவடிகளில் தூயமலர்களை பெரும் ஆதரவுடன் ஸமர்ப்பித்து, தொழுது, சுத்தநாத மயமான ஸங்கீர்த்தன நாம தேயங்களால் பாவராக தாளங்களுடன் பாடி ஆடி சிந்தித்து மகிழ்ந்து, தூய்மையைக் கொண்டது ரகுகுல வம்சம். நாம் நெடுநாளாகப் பண்ணியுள்ள பாவங்கள் பல கிடக்க, இன்று நாம் செய்யக் கருத வேண்டிய நற்கிரிசை என்னவென்றால், அண்ணா, லங்கையில் பிறந்த நம் அனைவருக்கும் அயோத்தியில் பிறந்த கோமானுடன் கொள்ளும் குதூகலமுடைய ஸம்பந்தம், பகவத் ஸம்பந்தம், நித்யமாக விருக்க வேண்டும். ஸகல சராசரங்களுக்குக் குருவாக விருக்கும் இந்த அயோத்யா

ராமன், சரயு நாராயணன் ஸர்வசேஷியான எம்பெருமான் இந்த சீதை மஹாலக்ஷ்மியாகிற ரெங்கநாயகி; அப்பேர்பட்ட வர்கள் சேஷபூதர் இருக்குமிடத்தே வந்து அருள்புரிய கடமை உள்ளவர்களாயிருந்தும் அவர்கள் அங்ஙனே செய்யாத போனுல், நாம் நம்ஸ்வரூபத்தைக் குலேத்துக் கொண்டாகிலும் அவர்கள் இருக்குமிடத்திற்குச் சென்று சேவித்தால், இந்த பிராட்டியை ராமனிடம் ஒப்பிவித்து இருவர்களேயும் ஒன்று கூட்டி குதூகலமாய் நாம் ஆராதித்தால், அந்த ரெங்கநாயகி ஸமேத ரங்கநாதன், காவேரி மனேயான், அயோத்தி எம் பெருமான்; "யாவையும் திருமால் திருநாமங்களே கூவிஎழும், என்பாவை போயினித்தண் பழனத் திருக்கோளூர்க்கே, கோவை வாய்துடிப்ப மழைக் கண்ணெடென் செய்யுங்கோலோ" என்கிற படி, ஆ, நம் கார்யத்தைச் செய்யத் தவறினேமே, என்று வருத்தப்படுவார். அவர் நம்மை ரக்ஷிப்பார். அவர்களும் நம் மிடம் குதூகலம் கொள்வார்கள். நாமும் பயமின்றி அவனிடம் செல்லலாம். அவனும் நம்மை சந்தோஷமாக வரவேற்பான். நீ எவ்விதம் "பயமின்றி, நாம் போகலாம்" என்று சொல்லு கிறேன் என்று கேட்பீர்களா, அதற்கு நான் உத்தரம் சொல்வது இதுதான். "ஏன் பிரபு, வானரம் குரங்கு பசுபக்ஷி என்று பார பக்ஷம் பாராத கோவிந்தன், தான் கிருஹஸ் தாஸ்ரமத்தில் இருந்து கொண்டு ஸகல ஆஸ்ரமங்களுக்கு ஹிதத்தைச் செய்யும் த்விஜர்களேயும், வேதங்களேயும் தர்மங்களேயும் தாங்கும் மாதவி யாகிற பூமியையும் காக்கும் யக்ஞவராக மூர்த்தி. ஹிதகாம்யர், கருணேயையே உருவெடுத்து வந்திருக்கும் தேஜோ மூர்த்தி, சுலபர், சௌசீல்யர். திரிகூட மலேயில் உள்ள புஷ்கரணியில் கஜேந்திரனேப் பீடித்த முதலேயையும் விடுவித்த ஸம்பவர். பார்ப்பதற்கு பிரியதர்சனர். ஜனரஞ்சனர். அண்ணு, அவர் களே ஒரு தடவை பார்த்தால் போதும், கோடிக்கணக் கான சுக்ருதங்களின் பலனே ஒரு நிமிஷம் நாம் அடைந்து விடலாம்.)

அண்ணு, அப்பேர்பட்ட நாராயணர் கிருபையின் ஸமுத்திரம்; ஸ்வய இச்சையினுல் மானிட உருவைத் தாங்கி, ஸர்வ ஜந்துக்களுக்கும் ஹிதகாம்யனுக, பார்ப்பதற்குப் பிரியதர்சனராக, ஜனரஞ்சனமாகவிருக்கிருர். அப்பேற்பட்ட பகவான் பூமியின் பாரத்தைப் போக்குவதற்காகவும், பிராம்மணர்களேயும் அவர்களால் காக்கப்படும் வேதங்களேயும் ரக்ஷிப்பதற்காகவும், தேவர்களுக்கு ஹிதம் செய்பவராகவுமிருக்

கிறர். அண்ணு, அவரே கோக்களை ஸம்ரக்ஷிக்கும் கோவிந்தன். அவரை ஒருதடவை பார்த்தால் போதும். கோடிக் கணக்கான சுக்ருதங்களின் பலனை ஒரு நிமிஷத்தில் அடையவிக்கும் அந்த சுபதர்சனர். (சரணமானுல் வைகுந்தம் கொடுக்கும் எம்பிரான். மோக்ஷத்தைக் கொடுத்துத்தான் ஆனந்தம் அடைபவர். என் க்ருஷிபலித்தது என்று பேரானந்தம் பெறுபவர்.) அதுமாதிரி அபிமதம் கொண்ட துஷ்டர்களை நாசம் செய்து, வேததர்ம சாஸ்திர ஸாதுஜன பரிபாலனம் செய்யும் தர்மதுரந்தரர் அல்லவோ என்பிரபு.'' (வேத மரியாதை, உலக மரியாதை ஆகியவைகளை ஒழுங்கு படுத்தும் வ்யவஸ்தானர். பொறுமை என்னும் விரதத்துடனும் அசுரன், தேவன், மனிதன், பசு, பக்ஷி என்று பாகுபாடின்றி யாவரிடமும் பாரபக்ஷமில்லாமல் அன்பு செலுத்துபவர்.) (223)

('' ஆதலால் நாம் நன்றிக்கொன்றவர்கள் 'என்கிற பெயரை அடையாமல் ஸாதுஜனங்களால் அனுஷ்டிக்கப்படும் சரணுகதி யோகத்தை அவலம்பித்து,) வைரத்தை தியாஜ்யம் செய்து, பெரும் கிருதக்ஞதையுடன் அவர்களிடம் நாம் செல்வோம். (ஆடியாடி அகங்கரைந்து இசைபாடிப்பாடி கண்ணீர்மல்கி, நரசிங்கா, இரக்க மனத்தோடு எங்களை, அரக்கர்கள் கூடிய இலங்கை மன்னனைப் பாரும் என்று அவர் திருவடிகளில் விழுந்து ரக்ஷகத்தைப் பிரார்த்திப்போம்.) என்பிரபு ரகுநாதன் பிரணதார்த்திஹரன். சரணுகதர்களின் துக்கங்களை ஒழிக்கும் வாமனன். அப்பேற்பட்ட ஸர்வேஸ்வரரிடம், ஹே நாதரே, அண்ணு, வைதேஹியை ஒப்பிவித்து, ஒரு காரணமுமின்றி தானுகவே ஆஸ்ரிதர்களிடம் '' நீங்கள் தேடி அலையவேண்டாம், நானே இதோ வந்துகொண்டிருக்கிறேன் '' என்று சொல்லும் ஸாத்வதாம்பதியிடம் பக்தி செய்து நாம் நமது பரிஜனங்களுடன் சுகமாகவிருப்போம். வாருங்கள், அண்ணு வாருங்கள்.'' (224)

[தியானம்

ராமா சீதா, நாராயணு, தாங்கள் சராசர பிதா மாதா, வல்லவா? சுலபமான வழிகளால் பிரேமை என்கிற மெய் அன்பினுல் அடையத்தகும் தெய்வ நாயகர்கள் அல்லவா நீங்கள் இருவர்களும்? ஜலம், இலை, புஷ்பம், சந்தனம், அன்னம், தூபம், தீபம், ஸ்தோத்ரம், ஜபம், பால், தயிர், வெண்ணெய் முதலிய ஸாமானிய வழிகளால் அடையப்பெறும் பயாபஹர் அல்லவோ, நீர். கஜேந்திரனைப் பிடித்த முதலைக்கும் நற்கதி கொடுத்த

நாதன் இயற்கையாகவுள்ள அன்புப் ப்ரீதியினுல் செய்யப்படும் நற்கிரிசைகளை உடைய ஆஸ்ரிதர்களை விட்டுவிட மாட்டீர்களல்லவோ? ஆதலால் பரமபாவனன், தீனபந்து, என்று ஸர்வ ஸஹஜமாகச் சொல்லப்படும் நாரணனே, உம்மை எல்லா வறையறைகளுக்கும் ஆதாரமான வ்யவஸ்தானர், காலவரைக்கும் கட்டுப்படும் தயாளுவென்று சொல்லுகிருர்கள். உம்மிடத்திலும் உமக்கு அடியார்கள் என்று சொல்லப்படும் பாகவதர்களிடத்திலும், உம்மைச் சேர்ந்தவர்களான பிராட்டி நித்யஸூரிகள் உமது பிரபஞ்சம் சேதன சேதனங்கள் யாவற்றிற்கும் செய்யப்படும் துரோஹங்களையும் அபராதங்களையும் பொறுக்கும் சக்தி ஞானமுள்ள தாய் தந்தையர்களுமான ஸஹிஷ்ணுவல்லவோ நீங்கள். உம்மை ராவணன்போல நிஷ்டர்கள் ஸாம கானத்தினுல் பாடி ஸம்சாரம் தொலைவதற்குத் தொழவேண்டிய காரண புருஷரானவரும் கோபத்தை வென்ற ஜிதமன்யு; கஜேந்திரனைப் பீடித்த முதலைக்கும் நற்கதி கொடுத்த ரஹஸ்யத்தை, அருள்கொண்ட உமா மஹேஸ்வர தத்வத்தைப் போல எனக்கு நீர் விளக்குகிறீர். உமக்கும் உம்மை ஸம்பந்தம் கொண்டவர்களுக்கும் ஏதுப்பா காமம், க்ரோதம், லோபம், மதம், மாத்ஸர்யம் இன்னும் அநேக விதமான அசுபான மதிகள் இருக்கக்கூடும்! உன்னுடைய கிங்கரர்கள் தானே ராவணன், கும்பகர்ணன்? அவனுடைய தம்பியாகிய கும்பகர்ணனும் அவனைப்போல விஜயன் என்று சொல்லக்கூடிய வைகுண்டத்தின் த்வார பாலகன்தானே? இந்த உலகில் காமம் க்ரோதம் மதம் மாத்ஸர்யம் மமகாரம் அஹங்காரமாகிய குணங்கள், சாபக் கேடுகளாலும், அவர்களுடைய இச்சைகளாகவும், வர தானத்தாலும் உம்முடைய ஸங்கல்பத்தாலும் பிராட்டியின் கருணையினுலும் அல்லவோ அவர்களுக்கு இழிக்கேடும், அபயசஸ்ஸூம் இகத்தில் வந்தது. கர்ம பலன்களை அழித்து, முன் வாசனையால் உமது ஸம்பந்தத்தைப் பெற விரும்பிய ராவண கும்பகர்ணுதிகளின் சிரமங்களைப் போக்கிய ஸ்ரமணரே, என்னை அன்புடன் மாதா பிதாக்களின் ஸ்நேகத்தை ஒட்டி நடத்துவீர்களா? நீங்கள் எனக்கு சரீர போஷணத்தைக் கொடுத்த பசுக்கள் போலவிருக்கிறீர்கள். அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து ஜனங்கள் உமது திருமார்பில் அருள் எனும் பிருகு புத்ரியான ஸ்ரீதேவியை, "எனது லக்ஷ்ணம், எனது ஸ்ரீவிபாவனம், எனது ஸ்ரீகரத்வம் என்கிற ஸ்ரீவத்ஸ சின்னம், பிருகு பதத்வம்" என்கிற பெருமையைச் செய்துகொண்டு, அன்புடன் நின்னொடு அவதரித்தருளும்

பாக்கியத்தை வேண்டினூர்களோ, அந்த ஈண்டிய நினைவுகளுடன் அவதரித்தார்களோ, அந்த எந்த அருள் இருக்கிறதோ, அந்த நின்னுடன் சேர்ந்து நிற்கும் நின் திருவை எனக்குத் தருவாயா? அடியார்க்கு மெய்யன் என்று கூறப்படும் தெய்வநாயகா, வாஸ வானுஜா, இன்றும் அன்றும் ராமானுஜன், தர்மம் என்கிற பெய ரால், கெட்ட எண்ணத்தை விட்டு எந்த புத்தியினுல் தர்மாத்மா ராமன் என்கிற பெயர் உனக்கு ஊர்ஜிதம் ஆகும்பொருட்டு, தர் மத்தையும் பரதனையும் சேர்ந்துப் புகழ்ந்தானே, அந்தப் பெய ரையும் நான் தூப்புல் வேதாந்த தேசிகர் உன்னை மொய்த்திரு நாவின் வன்மையால் மூலமறைக்கைத்தவன் என்று உரைக்கி றேனே, என்று சொன்னதுபோல, அவர் திருவடிகள் பணிந்து அருள்தா என்று உனது மெய்ம்மலர் பதங்களை அடைகிறேனே, திருமகள் திகழ்துளத்து மணம் கமழும் மார்பா, அயோத்தி எம் மானே, நாராயணு, மஹாலக்ஷ்மி, நாராயணு, கேசவமூர்த்தி, ஸ்நேக பாசத்தால் ஊமையோ, செவிடோ, நாணுதாய், பண்டே யுன் வாயறிதும் என்று பலவாருகச் சொல்லியும் பொறுத்தருள வேண்டும்.]

பிரபு, எந்த மனிதன் ஸம்பூர்ண விஸ்வத்திற்கு அநீதியும் துரோஹ சிந்தையுடன் துஷ்டச் செய்கையைச் செய்கிருனே, அவன் மஹாபாதகத்திற்கு உள்ளாகிருன். அவன் விஸ்வதுரோஹி யாகிருன். அப்பேர்பட்ட விஸ்வ த்ரோஹி யாராலும் ரக்ஷிக்கத் தகுந்தவனல்ல. அந்த மஹா பாபியைக்கூட என்பிரபு ஸ்ரீராமன் சரணம் என்றுசொல்லி அவன் வந்துவிட்டால் அவனைத் தியாகம் செய்யாமல் அவர் அங்கீகரித்து விடுவர். அண்ணு, அவருடைய ராம நாமத்தின் பிரபாவத்தினுல் ஆதி ஆத்மிக, ஆதிதைவிக, ஆதி பௌதிக தாப த்ரயங்களை நாசமடையச் செய்யுங்கள். ஹே ராவணு, நான் சொல்வதை நன்ருக அறிந்துகொள். அந்த பிரபு மனித உருவம் எடுத்து லங்கைக்கு விஜயம் செய்ய வந்து கொண்டிருக்கிருர். இதை நன்ருகப் புரிந்துகொள். (225)

(அண்ணு, மாதா பிதாக்களான ஆதிதேவர்களை நாம் பாஞ்சராத்திர விதிப்படி புலனடக்கம், சமம் தமம் இவைகளுடன் புருஷகார பிரபத்தியாகிற எம்பெருமானிடம் பிரபத்தியை அனுஷ்டிப்பதற்கு முன் பிராட்டியை புருஷகாரமாகக் கொண்டு பங்கயத்தாள் அகலகிலேன், க்ஷணமும் அகலகிலேன் என்று சொல்லும்படி ஸ்ரீநிவாஸரான அத்திகிரி அருள்முகிலே, உலகில் எனக்கு புகல் இல்லை, பொன் அருள் கண்டு, பிராட்டியின் கிருபையையே புருஷகார பிரபத்தியாகக் கொண்டு, அந்த

காமாக்ஷியின் நிழலில் உற்றவர்க்கும், உய்யாதவர்க்கும், அன்பருக்கும் துன்பருக்கும் அன்றே அவர்கள் வேண்டிய காலத்திலே தன்னருள் கொடுக்கும் மந்திரகிரி நாதன், அம்ருத லக்ஷிமி நாராயணன், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் திருப்பாற்கடலைக் கடைவதற்கு உதவிய ஆயிரம் கரங்கள் கொண்ட வீரபாஹு, அநிர்தேஸ்யவபு, மோஹன ராமன், கல்லின்மேல் புழுவும், முனி மானஸ்ஸரோவரில் திகழும் ஹம்ஸத்திற்கும் அனுதியான காளராத்திரியை விடிவிக்கும் உயர் காயத்திரியின் தேவதையான நாராயணன் உம்மிடம் சமீபம் இருக்கும்போது ஏன் தயங்க வேண்டும்? உஷக்காலத்தில் ஹரிர்லக்ஷ்மி என்று சொல்லுவது போல, ராமகேசவனைப் பாடி இந்த சீதை களிப்பின் மிகுதியால் ஆச்சரியப்படும்படி "தாயே" என்று அழைத்து, உனது உடம்பை ராமனுக்குத் தந்தாய், உன் ஆத்மாவை ராமனுக்குக் கொடுத்தாய், உன் பேச்சையாவது எங்களுக்குத் தரலாகாதோ, அம்மனுய் உன் ஹ்ருதயவாசல் திறந்து, நம்மால் போற்றுத்தற்குரிய நாராயணனுடைய அருகலமே, என்னுல் மங்களாசாஸனம் பாடப்பெற்று, எங்களுக்குத் தெளிந்து வந்து "யஸ்த்வயா ஸஹஸஸ்வர்க்கோ நிரயோ யஸ்த்வ்யாவினு" என்கிறபடி உங்களுடன் கூடியிருத்தல் ஸ்வர்க்கம், உங்களை விட்டுப் பிரிதல் நரகம் என்கிற பாவனையுடன் இருக்கும் எங்களுக்கு, காணக் காணென விரும்பும் கண்கள், திருக் கண்டேன், பொன்தோய் வரை மார்பில் திருமார்பா, மலராள் தனத்துள்ளான் தண்டுழாய் மார்பன், எங்கள் மாதவன் பேயாழ்வாருக்கு பூதத்தாழ்வார் வாசல் திறந்ததுபோல, சீதாராமனின் திருவாசலை எழுந்திருந்து திறவாய் அம்மா என்று நாம் கேட்போம்.)

(ராவணு, நான் சொல்வதைக் கேட்காவிடில் பிராட்டியை சரண் அடைந்து ராமனிடம் சரண் செய்யாது போனுல், ஜகத்துக்கு த்ரோஹம் செய்தவன் இவன், மாதாவை அவமானப் படுத்தியவனுக ஆவாய் என்கிற பெரிய பாபம் சூழ்ந்து, கேவல ஸ்திதியை அடைவாய். ஆனுல் உனது நுண்ணறிவினுல் பாப சித்தத்தை விட்டு, பிராட்டியினுல் புருஷகாரம் செய்யப்பட்டால், நீயும் நாங்களும் உஜ்ஜீவிப்போம். ஆகையால் நாம் அனைவரும் பிராட்டியை சரண் அடைந்து, ஸ்ரீராமனை அவள் முகமாக ரக்ஷகத்வத்தைப் பிரார்த்திப்போம். அதனுல் நாம் விஸ்வத்தின் பூர்ணகிருபையை அடைவோம். விஸ்வத்ரோஹி என்கிற இழிப் பெயரை அடையாமல் ஸம்பூர்ண பாபங்களை பூர்வ வாசனைகளுடன் விலக்கி, பாஞ்சராத்திரி வழியில் சொல்லப்பட்ட

சரணுகதி சாஸ்திரத்தின் பலனை நாம் அடைவோம். அந்த தர்மாத்மாவான ராமசந்திரன் சரணுகத ரக்ஷகத்வம் என்கிற தர்மத்தின் பெயரில் நம்மை வாழவைப்பார். அவரை நாம் விரோதித்துக் கொண்டால் தக்ஷன் சதியை மஹேஸ்வரரிட மிருந்து பிரித்து, வீரபத்ரரால் எவ்விதம் தண்டிக்கப்பட்டாஞே, அதுபோல நாம் அனைவரும் தண்டிக்கப்படுவோம். இன்னெரு விஷயத்தையும் நான் சொல்லுகிறேன். சதிதன் உடலைத் தியாகம் செய்து மீண்டும் சங்கரரை நோக்கி தபஸ் செய்து, ராமதாரக மந்திரத்திஞல் பகவான் மஹேஸ்வரரை மீண்டும் பதியாக அடைந்து, அந்த தாரகமந்திரத்தின் ஆதாரத்திஞல் அந்த உமா மஹேஸ்வர தம்பதிகள், என்றும் ஆனந்த நிலையை, பிரிக்க முடியாத சிவசக்தி ஐக்கிய பாவத்தை காடோப கூடமாக அனுபவிக்கிருர்கள். நாம் சீதைக்கும் ராமனுக்கும் த்ரோஹம் விளைவிப்போமாஞல் சீதா ராமச்சந்திரனுக்கும் மாத்திரமல்ல, அண்ணு; அவர்களுடைய பக்தர்களாகிற உமா மஹேஸ்வரர் களுக்கும், நாம் தீங்கு இழைத்தவர்களாவோம். ஆகவே அண்ணு, நாம் விஸ்வத்ரோஹம் செய்தது மாத்திரமின்றி, நீங்கள் எவர்களை ஸாம கானம் செய்வித்து ஸகல பாக்யங் களையும் அடைந்தீர்களோ அந்த உமா மஹேஸ்வரர்களுக்கும் துரோஹம் செய்தவர்களாக ஆவோம். அப்பேர்பட்ட உமா மஹேஸ்வரர்களின் ஆத்ம தெய்வமாகிற சீதாராம தம்பதிகளை ஒன்பதுவித பாவங்களால் ஸ்ரவணம், கீர்த்தனம், விஷ்ணுவை ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம்; தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் என்கிற ஒன்பது வழிகளால் பெருமாள் பிராட்டி ஸம்பந்தத்தை அடையவேண்டும். அப் பேர்பட்ட பாக்யவான் பிரஹ்லாதன் மாதிரி உத்தம பக்தன் என்று கருதப்படுகிருன். இவ்விதமான விசேஷலக்ஷணங் களுடன் நாராயண மயமாகப் பக்தி செய்வதை விட்டுவிட்டு, நாம் உதாஸீனர்களாக இருந்தாகிலும் அல்லது அவர்கள் இவ்விடம் வரும்போது மதிக்காமல் கௌரவம் செய்யாமல் இருந்தோ மாகிலும், அவர்களிடம் விரோத பாவத்திஞல் அடைந்தோ மாகிலும், நாம் விஸ்வத்திற்கே நன்றிக் கொன்றவர்களாக ஆவோம். எவர்களுடைய நாம உச்சாரணையிஞல் ஆதிஆத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிக தாபத்ரயங்கள் விலகுமோ, அப்பேர் பட்ட விஸ்வமூர்த்திகளுக்கு நாம் விசேஷ மரியாதை செலுத்த வேண்டும். அப்பேர்பட்ட விபவஐஸ்வர்யங்களைக் கொண்ட தீப்த மூர்த்திகள் நம்மை அனுக்ரஹிப்பதற்காகவே மனுஷ்ய

அவதாரம் எடுத்திருக்கிறார்கள், ஹே ராவணா, இதை நன்றாகப் புரிந்துகொள். வீணாக ஏமாந்துவிடாதே. இதைக் கண்டிப்பாக உனக்குச் சொல்கிறேன். காமத்தையும் மதத்தையும் விபரீத ஞானத்தையும் விலக்கி அறியப்படவேண்டிய ஹிருத்வேதியனை அடையாமல், பெறமுடியாத வஸ்து வலுவில்தானே அதுவாக வரும் போது, அதை அடைய முயற்சி செய்யாமல் இன்றோ நாளையோ மரிக்கப் போகும் தேகத்தை வைத்துக்கொண்டு பரம புருஷனுடைய ஆராதனத்தில் உதாஸீனனாகவிருந்து அனர்த்தத்தை விளைவித்துக் கொள்ளாதே. அற்பமாயுள்ள க்ஷண காலத்தில் செய்யக்கூடிய பிரபத்தியை விட்டு விட்டு, ஈஸ்வரன் ஈஸ்வரி அதிருஷ்டம் என்று அறிந்து கொள்ளாமல், ராவணா, "இந்த உலகம் முழுவதும் எனது ஆதீனத்தில் இருக்கிறது. நானே ஈஸ்வரன்" என்கிற அசுரத்தன்மையை அடையாதே. தலை சிறந்த தார்மிகனாகவாவது, பகவத் திருஷ்டி விழும் சமயத்திலாவது, சீதையும் ராமனும் நம்மிடம் அண்டியிருக்கும் போதாவது, நம்மிடம் சீதை இருந்துகொண்டு இருக்கும்போதாவது, அச்சத்தை விலக்கிக்கொள்.)

"ஹே, தசசீசா, நான் உனக்கு அடிக்கடி அடிக்கடி மஹா வினயத்துடன் உனது கால்களைப் பற்றிக்கொண்டு மிக்க ஆற்றாமையுடன் வேண்டிக்கொள்கிறேன். என் வேண்டுகோளை நிராஹரித்துவிடாதே. ஸ்வய அபிமானம், மோஹம் மதம் ஆகியவற்றைத் தியாகம் செய்துவிட்டு, என் பிரபு கோஸலாதீஸரை ஆராதித்துவா. அவரிடம் சரணம் அடை. அவரைப் பஜி. நமக்கு இதைத்தவிர வேறு ஒன்றும் உபாயமில்லை. (226)

கருத்து:—தஸ சீசா, நான் உன்பாதங்களில் விழுந்து அடிக்கடி நமஸ்கரித்து, கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். வினயத்துடன் சொல்கிறேன். அபிமானத்தை விடு. மதத்தையும் க்ரோதத்தையும் பாம்பு சட்டையை உறித்துக்கொள்வதுபோல தியாகம் செய். கோஸாலா தீஸரர்களான சீதாராம லக்ஷ்மணர்களை மன உல்லாஸத்துடன் ஆனந்தமாக பஜனை செய். அதிருஷ்டமாக வந்த சந்தர்ப்பத்தை நீ நழுவ விடாதே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்." என்று பாகவத சிரோண்மணியான விபீஷணன் ராவணனிடம் தர்பாரில் எல்லா மந்திரிகளும் புடை சூழ்ந்து யோசனை செய்யும் ராவணேஸ்வரனைப் பார்த்து புத்திமதி சொன்னான். (பிரஹ்லாதன் சுக்ராசாரியார் போன்றவர்கள் அசுரர்களையும், தர்மத்திலிருந்து நழுவப் பார்க்கும் தேவர்களையும் எவ்விதம் பிரஹஸ்பதி ஹிதோபதேசம் செய்வித்து ஸத்பதாசாரத்தில்

நிலைக்கச் செய்வார்களோ, அதுபோல விபீஷணன் ராவணனை உபதேசித்தார்.) (அப்பேர்பட்ட பரம பாகவத சிரோண்மணியான விபீஷணரை, ரெங்கநாயகி ரெங்கநாத பக்தனை, எனக்கு ரெங்க பாதுகைகளையும் ரெங்கவிமானத்தையும் பரம உதார மனத்துடன் காட்டிக் கொடுத்த பரம க்ருபாளுவை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். "பிரஹ்லாத ஆஞ்சநேய பராசாரதியாகராஜ சுக ஸனக ஸனந்தனுதிகளால் பஹுமானிக்கப்படும் விபீஷணரே, என்னிடம் பரம க்ருபையுடன் தயாளுவாக ஸதா அனுக்ரஹ புத்தியுடன் இருக்கவேண்டுமென்று ஆயிரம் தடவைகள் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். சரணுகதி தத்வத்தின் சிகரமாக விளங்கும் விபீஷணரே, புலஸ்திய வம்சத்தினரே, தர்மாத்மாவே, என்னிடம் ஸதா அன்புடன் இருக்கவேண்டும்.")

[தியானம்

அமலனுதிப் பிரானே, ராமா சீதா, நாராயணு, நர நாராயண ரிஷிகளே, சிவசக்தியின் ஐக்ய தத்வமே, நீங்கள், பராசரர் வேதாந்த தேசிகர் சொல்லிய பிரகாரம், பாரா பாரம், அகன்ற ஆழ்ந்த ஆழியின் நீரனைத்தையும் அகஸ்தியர் குடித்ததுபோல, சம்சாரக்கடலை வற்றவைக்கும் தனுஷ்பாணி. உம்முடைய தண்டமோ காலாத் மகனுகிற சக்கிரத்தின் அனல ஜ்வாலா ஜ்வாலங்களைக் கொண்டது. ஆனல் ஸ்வாமி உம்முடைய திருவுள்ளமோ வெண்ணெயை விட மிகமிக மென்மையானது. சீதை வருடும் கைகளினுல் மென்மையை அடைந்த ஸ்ரீ வத்ஸ ஸ்ரீதர திருவுள்ளமாக விருக்கிறது. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமி சொல்லியபடி, "வேதாந்த தேசிகர் அபய ப்ரதான ஸாரத்தில்" சரணுகதன் தோஷங்கள் உள்ளவனுக விருந்தும், அவனைப் பரித்யாகம் செய்யாமல் காக்கவேண்டும்—தோஷோ யத்யபிதஸ்ய ஸ்யாத் ஸதாம் ஏதத் கர்விதம்—என்கிற பதங்களில் "தோஷோ தஸ்ய ஸ்யாத்"—தோஷம் அவனுக்கு இருந்தேயாகவேண்டும்; தோஷமில்லாதவனை ஆட்கொண்டால் நமது கருணைக்கு என்ன மதிப்பு? ராகவன் தோஷம் காணுன் என்கிற அமர கோசத்தில் சொல்லியபடி, "தோஷ ஜ்ஞ: வித்வாத்", தோஷங்களை அறிந்தவன் குணங்களையும் அறிந்தவன் வித்வான் என்கிற படிக்கும், ஸர்வாவஸ்த்த ஸக்ருத் பிரபன்ன ஜனதா ஸம்ரக்ஷணைக வ்ரதீ தர்மோ விக்ரஹவான், அதர்ம விரதிம் தந்வீஸ தந்வீதந: என்கிறபடி எந்த நிலையிலும் ராவணன் வாலி முதலியவர்கள் அடுத்த க்ஷணத்தில் மரிக்கப்போகும் நிலையிலும் ஒருமுறை சரணம்

என்று அடைந்த சேதனர்களைக் காப்பதிலேயே கண்ணும் கருத்து மென்னலாம்படி ஸத்ய விரதம் பூண்டவன் ஸ்ரீராமன். தர்மமாகிற சரணுகத தர்மமே, ஸர்வ லோக ஹிதைக்ஷணமே உருவெடுத்து எதிரில் வந்து நிற்கும் தர்ம விக்ஹவானே, ஒப்பற்ற வில்லையும் சீதையையும் ஹ்ருதயத்திலும் தாங்கிய ராம தத்வமே, பரத்வம் பாதி ஸௌலப்யம் பாதி. ஸர்வாவஸ்தை என்பது இரண்டு தட்டிலும் தான் ஆகும். எந்த நிலையிலும் அடையப் படுவதும் " நாங்கள் தான் " என்று சொல்லும்படி ஸாரதமமான அமலனுதிப் பிரானே, எனக்கு பிராப்தமான ஏக விஷயமே, கொண்டல் வண்ணு, உங்களுடைய கமல பாதங்களை எனது சுபாஸ்ரயமாக நான் வரிக்கிறேன். திருவுக்கு லீலாகமலம் போலிருக்கும் உமது பாதங்களை விமலனே, தேவாதி களின் தலைவரான பிரும்மாவுக்கும் ஸனகாதிகளான யோகி களுக்கும், திவ்ய சக்ஷுஸ்ஸுகளுக்கும் கூட தூரமாயிருக்கக் கடவையான உம்முடைய அர்ச்சாவதார ராமசீதா மூர்த்தி களை நான் சரணமடைகிறேன். என்னுடைய மாம்ஸ சக்ஷுஸ் களுக்கும் தித்திக்கும் தேனுக விருக்கும் தீப்த மூர்த்திகளே, சரணம், சரணம். நீள்மதிளரங்கத்தம்மான் திருக் கமல பாதம் எனக்கு ஸர்வ உபகார விசேஷத்தை அடையவைத்து, நித்ய நிர்தோஷத்தையும், ஸர்வஸுலபத்தையும், ஸௌசீல்ய வாத்ஸல்யாதி கைங்கர்ய ஸ்தான விசேஷங்களைக் கொடுக்கும் ஸர்வஸ்வாமித்வத்தையும் போக்யத்தையும் அனன்ய திருஷ்டிக ளாகக் கொண்டு அனுபவிக்கப் பிராப்தங்களாக அமையப் பெற்றன. ஆகையால் அந்த திருவடிகள் என்னுடைய ஸ்மரணத்திற்கு யோக்யமான ஆனவைகளன்ருே? அப்பேர் பட்ட திருவடித்தாமரைகளை பரமாத்மா ஜீவாத்மாவின் உறவை அறிந்து, அந்த ஆத்மாவாகிற அக்ஷரப் பொருளை உணர்ந்து, புலன்கள் வாயிலாகக்கிட்டும் போகங்கள் நிலையற்றன என்று சிந்தனை செய்து, ஸித்தாந்த விஷயங்களில் சந்தேகங்கள் ஆகிற பேயை விரட்டி, ஸாது ஜனங்களின் உபதேசங்களைப் பாக்யமாகக் கருதி, நம் பாண நாதன் காட்டிய "ஓரொன்றுதானே அமை யாதோ" என்கிற திருப்பாணுழ்வாரை சரணமடைந்து அமல னுதிப் பிரானுகிற ரெங்கத்தம்மானை நான் பக்தியுடன் சரண மடைகிறேன். ரெங்கநாயகி, நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.]

முனிபுலஸ்தியரிஷி உனக்கு இந்தச் செய்தியைச் சொல் வதற்கு தனது அந்தரங்க சிஷ்யனை அனுப்பியிருக்கிருர்.

அன்புள்ள அண்ணு, இதுதான் தருணம், இதுதான் நல்ல சமயம் என்று அவர் சொல்லியபடி ஸந்தேசத்தை உனக்குச் சொல்ல வேகமாக ஓடிவந்திருக்கிறேன். அவரால் சொல்லி அனுப்பப்பட்ட சமாசாரம் முழுவதையும் உனக்கு நான் தெரிவித்துவிட்டேன். அவர் சொல்படி நீ நடக்க வேண்டு மென்று நான் மிக்க வினயத்துடன் பிரார்த்தித்துக் கொள்கிறேன். (227)

(கருத்து: இந்த சமயத்தில் ஸப்தரிஷகளில் ஒருவரான புலஸ்திய மஹரிஷியின் சிஷ்யன் ஒருவன் ஓடிவந்தான். அதி வினயத்துடன் அவர் அனுப்பிய செய்தியைச் சொல்ல ஆரம்பித்தான். "அன்புள்ள பிள்ளாய், இந்த ராமன் பரபிரும்மமான நாராயணர்தான். இவரே வைகுண்டபதி. பிரும்மாவிற்கும் மேலான "பரம்தாம்" என்று சொல்லப்படும் பரஸ்வரூபம். இவரே ஹரிபகவான். இவர் ஒருவரே ஆராதிக்கத் தகுந்தவர். இவரை ஆராதிப்பதால் முக்தி போன்ற அதிதுர்லபமான பரமாம்கதி—முக்திபெற்றவர்கள் முடிவாகச் சேருமிடமாகவும், அடைந்த பின்பு தம்மை விட்டு விலகாமலிருக்கச் செய்யும் இடமாகவுமிருப்பவர். எந்த ஜனங்கள் இவர் ஒருவரையே சிந்திப்பதைத்தவிர வேறு பிரயோசனத்தைச் கருதாமல் உபாஸித்துக்கொண்டு இருக்கிருர்களோ, அந்த ஜனங்களின் யோகக்ஷேமங்களை வகிக்கும் பிரபு இவரேதான். பக்தியினுல் கொடுக்கப்பட்ட பத்ரம் புஷ்பம் ஜலத்தையும் பழம் முதலியவற்றையும் ஸ்வீகரிப்பதும் இவரேதான். இவர்தான் அந்தர்யாமியான விஷ்ணு. இவர்தான் ப்ராசீன கர்மபந்தங்களினின்று பக்தர்களை விடுவிப்பவர். இவருக்கு பகைவனுமில்லை, நண்பனுமில்லை. எல்லா பிரரணிகளிடத்திலும் ஸமமாகவிருப்பவர். புண்ணியசாலிகளும், பக்தியுள்ளவர்களுமான பிராம்மணர்களும் ராஜரிஷிகளும் இவரை ஆராதித்து உத்தம கதியை அடைகிருர்கள். விடுபட்ட ஸந்யாசிகள் அடையும் இடமும் இவரேதான். இவரிடத்தில் பக்தியுள்ளவனும் மனமுள்ளவனும் திரும்பி ஸம்சார மார்க்கத்தில் வருவது இல்லை" என்று கூறி அவன் புலஸ்தியஸந்தேசத்தை முடித்தான். அப்பொழுது, விபீஷணர் "அவரும் நான் சொன்ன வார்த்தைகளைச் சொன்னுர். அண்ணு, எனக்காகத் தோன்றிய வார்த்தைகள் இவைகள் இல்லை. அவர் சிஷ்யன் மூலம் அனுப்பிய ஸந்தேசத்தைத்தான் நான் முந்தி உங்களுக்குச் சொன்னேன். இதுதான் நல்ல தருணம் என்று நானும்

யோசித்து உனக்குச் சொன்னேன்.'' என்று கூறி விபீஷணன் சொல்லி முடித்தார்.)

ராவணனுக்கு மால்யவான் என்கிற மந்திரி இருந்தான். அவன் தீக்ஷ்ணபுத்தியுள்ளவன், அவன் விபீஷணன் சொல்லிய வசனங்களைக் கேட்டான். அதிசுகத்தை அடைந்தான். ராவணனை நோக்கி அவனும் வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். ''பிள்ளாய், உன்னுடைய தம்பி நீதி சாஸ்திரத்தை பூஷணமாக அணிந்து விளங்குபவன், மஹாபுத்திமான். எதைச் செய்யவேண்டியது, எதைத் தள்ள வேண்டியது என்கிற நிச்சய மான புத்தியினுல் விஷயங்களை நன்கு அறிந்தவன். அவன் சொல்லிய வார்த்தைகளை மனத்தில் வாங்கிக் கொள்'' என்று சொன்னுன். (228)

ராவணனுக்கு இந்த வார்த்தைகள் பிடிக்கவில்லை. க்ரோதத்தினுல் மூர்ச்சையடைந்து, ராவணன் சொல்ல ஆரம்பித்தான். ''நீங்கள் இருவர்களும் சத்ரு பக்ஷத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய மகிமைகள் எனக்கு ஒன்றும் தெரியாதவைகள் என்று அபிமானித்து, என்னை அலக்ஷ்யம் செய்கிறீர்கள். உங்கள் இருவர்களால் இந்த சபையில் நான் அவமானப்படுத்தப்பட்டேன். யாருடா—இங்கே, இந்த சபை யில் ஒருவரும் இல்லையா? இவர்கள் இருவர்களையும் வெளியில் அழைத்துச் செல். அவர்களை நான் இனி பார்க்க விரும்ப வில்லை.'' என்று ராவணன் உறுமினுன். அப்போது மால்யவான் தனது சொந்த கிரஹத்தை அடைந்தான். விபீஷணன் பிடிவாத மாக மீண்டும் அஞ்சலி பந்தத்துடன் அண்ணனை நோக்கி, வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். (229)

''என் நாதரே, சுக்ருதங்களாலும், பெரியோர்களை அனுஸரிப்பதாலும் ஏற்படும் ஸுபுத்தி (யசஸ்ஸைக் கொடுக்கக் கூடிய புத்தி), மங்காத அபயசஸ்ஸை அளிக்கக்கூடிய கெட்ட புத்தி எல்லாம் (அர்ச்சிஷ்மான் என்று சொல்லக்கூடிய) அந்தர் யாமியினுல் ஏற்படுவது. (பக்தர்களுக்கு மறைந்திருக்கும் தமது பிரபாவத்தை அறியும்படி அவர்களுடைய அகக்கண்களையும் புறக்கண்களையும் திறக்கும் திறமையுள்ள பிரபு, அப்ராகிருத மான பேரொளியை உடைய பிரபோதகர், அவ்யக்தர், மனுஷ்ய அவதாரத்தில் தமது பக்தர்களின்றி வேறு எவருக்கும் தனது மகிமைகள் தெரியாமல் வெளிப்படாமலிருக்கும்) பிரபு, உமது மனத்தில் எதைச் செய்யச் சொல்கிருனே, அதை நீர் செய்யத் தான் போகிறீர்; புராணங்கள், வேதங்கள் ஸர்வஹ்ருதயவாஸி

யான ஹ்ருஷிகேசரைத்தான் கர்த்தாவாகச் சொல்லுகிருர்கள். எந்தவிடத்தில் அவருக்குப் பணிந்த ஸுபுத்தி யிருக்குமோ, அந்தவிடத்தில்தான் தர்மமும் ஸுயஸஸ்ஸும் ஜயமும் லக்ஷ்மியும் சக்தியுமிருக்கும். விபரீத ஞானத்திஞல் ஏற்படும் கெடுதல்கள், குபுத்தியிஞல் யேற்படும் அனர்த்தங்கள் பரிணமமில்லாத துக்கங் களையையே, ஸம்பவித்து, முடிவில் மரணத்தையும் குலநாசத் தையும் ஸம்பவிக்கும்.'' (230)

'' நான் நிச்சயமாக விபரீதபுத்தியை இப்பொழுது உம்மிடம் காண்கிறேன். உமக்கு எது ஹிதம், எது அனர்த்தத்தை விளைவிக் கும் அஹிதம் என்று தெரியவில்லை. உமக்கு தற்சமயம் இவை களை எடுத்துச் சொல்பவர்களையும் நான் காணவில்லை. அதனுல் நான் சொல்லும் வார்த்தைகள் உமக்கு பிடித்தமாயில்லை. என்னை சத்ருபக்ஷத்தைச் சேர்ந்தவன் என்று மதிக்கிறீர்கள். ஸ்வாமி, காளராத்திர் ஸ்வரூபம் கொண்ட சீதையை நீர் சரியாகப் புரிந்து கொள்ளுகிறதாக நான் காணவில்லை. அவள் ராக்ஷஸ குலத்தையே அழிக்கவந்தவள். அவளிடம் நீர் பரமப்ரீதியுடன் இருக்கிறீர்.'' (231)

''பரமஸ்நேகிதரே, என்பிரபுவே, உம்மை இருசரணங்களை யும் பிடித்துக் கெஞ்சிக் கேட்கிறேன். எனக்கு வரதானமாகக் கொடுங்கள் அண்ணு. பரமவினயத்துடன் கேட்கும் என்னைப் பாருங்கள். உமது தம்பியைப் பாருங்கள் அண்ணு. (நான் உமது கையால் சோறுபோடப்பட்டு இந்த தேகத்தை வளர்த் தவன்.) உம்முடன் கூடப் பிறந்த சகோதரனுகிற என்னிடம் விரோதத்தைக் காட்டாதீர்கள். உமக்கு அடங்கின தம்பிதான் நான். உம்முடைய ஆக்ஞையின்பிரகாரம் இதுவரை நடந்தவன். நான் நீரும் மந்தோதரியும் ராக்ஷஸ குலமும் ஸந்தோஷத்துடன் இருக்கவேண்டுமென்று நம்பி வாழ்கிறவன். லோகமாதாவான சீதையை மரியாதையுடன் ராமனிடம் திருப்பிக் கொடுங்கள். இந்த காரியத்திஞல் நம் எல்லோருக்கும் நன்மை பயக்கும். பயம் தெளியும்.'' (232)

(கருத்து :—பகவானுக்கும் பிராட்டிக்கும் உள்ள ஸம்பந் தத்தை அறிந்துகொண்டு, அதேபோல ஜீவாத்மாவாகிய உமக் கும் பரமாத்மாவாகிற ராமனுக்கும் உள்ள உறவை அறியாமல் தன்னைப்போன்ற மற்றைய ஜீவர்களுக்கு உறவென மதித்து, உய்யும்வழியை அறியாமல் போகாதீர். ஆத்மாவுக்கும் சரீரத் திற்கும் யேற்பட்ட பொய்யுருவைக் கண்டு ஏமாந்துபோகாதீர். ஆத்மசரீர ஸம்பந்தம் நித்யமானது. அதைப் பொய் என்று

நினைத்து, புலன்களின்வாயிலாககிட்டும் போகங்களை நிலைஎன்று, எண்ணுதீர்கள். அண்ணு, ஸத்ஸம்பிரதாய விஷயங்களில் பழக்கப்படாத ஜீவன் எவ்விதம் தகாத வழியில் செல்லுகிருனோ, அதுபோல ராமன் சாதாரண மனிதன், இவனும் நம்மைப்போல ஒரு அரசன்தானே என்று எண்ணி, சந்தேகத்தை அடையாதீர். இந்த சீதாராமனையே பண்டிதர்கள், புராணங்கள், வேதங்கள் ஸர்வ ஸம்மதமாக ஏகோபித்து மெய்யருள் செய்திடுந்திருமால், வேழமலை மேயவன், என்கிறபடி திருத்தி நல்வழிபடுத்தும், அருள்பாலிக்கும் அத்திகிரியில் எழுந்தருளியிருக்கும் அருள் நாதன், முக்தி வரதன் வேதகிரிநாதன், வேங்கட பிரபு என்று அறியுங்கள் ஸ்வாமி. அறியுங்கள். இவரே ஜனார்த்தனர். இவரே ஜகந்நாதர், இவரே ஸர்வ பிரபிதாமஹர் என்று சொல்லிக்கொண்டு கண்களில் ஜலம் வர்ஷிக்க அருள் மழை யுடன் பிரார்த்திக்கலானார். அந்த மஹாத்மாவின் வசனங்கள் வழிதெரியாமல் விழித்து, பெரும் பாழான கிணற்றில், இந்த அனாதியான ஸம்சார சுழலில் கர்ம பிரவாஹத்தினால் பெற்ற நான்கு வகையான (தேவ, மனுஷ்ய, திர்யக், ஸ்தாவர) சரீர அமைப்புக்களைக் கொண்ட ஸர்வஜீவ ராசிகளுக்கும் முக்தி பாலிக்கும், பந்தங்களைப்போக்கும், அருள் கொடுக்கும், அமரர் தொழும், அத்திகிரியம்புயத்தாளாரமுதே, என்கிற ஸர்வ ஸம்மதமான வசனங்கள். பண்டிதர்கள், வேதங்கள் புராணங் களால் ஒப்புக்கொள்ளப்பட்டதும், என்றும் மாருத நிலையை உடையதான அருள்வாக்குக்கள். பேரருளாளன், என் பிரபு வேங்கடவரதன், தன்னை அடைந்தவர்களை, அவர்கள் ஸம்பாதித்த புண்ய பாபங்களைப் போக்கி, சிறையினின்று விடுவிப்பதுபோல விடுவித்து, காவலர்களைக் கொண்டு பிரகிருதி மண்டலத்தைத் தாண்டுவதற்காக அர்ச்சராதி மார்க்கத்தில், மோக்ஷ த்வாரத்தின் வழியாக அழைத்துச் சென்று, அவலம்பனம் செய்யும் நேயர், அங்கு வைகுண்டம் என்கிற பெரிய உலகைக் காண்பித்து ஜீவனையும் தன் ஸ்வரூபத்தை உணரச்செய்து, தன்னைப் பிரியாமல் இருக்கச் செய்யும் பிரியாமலருள் செய்யுமுரு நலங்கொண்டுறுந்திருவோடு யரத்தி கிரியானே, அயன் பணியும் பிரானே, மந்தர கிரியை மத்தாக வைத்து பாற்கடலை அம்ருதமாகிற லக்ஷ்மியை அடை வதற்கு கடைந்த வீரபாஹுவை, வேதியர்க்கு இனியானை, ஜகந் நாதரை, கைகளைத் தூக்கிக்கொண்டு அண்ணுந்து "ஸ்வாமி, புருஷோத்தமரே, ஸுதர்சனம் என்கிற சக்ரத்தை தரித்திருக்கும்

சக்ரதாரியே, ரக்ஷி'' என்று கூறி ராமானுஜரின் அனுஜரை லக்ஷ்மண பூர்வஜரை, ஆஞ்சநேயாதிகள் நம்மாழ்வார் போன்ற வைஷ்ணவ ஸாதுக்கள் ஆராதனை செய்யும் புண்டரீகாக்ஷரை, ரங்கநாயகி ஸமேத புருஷோத்தமரை, ஆஸ்ரயித்து சரணம் அடையுங்கள் அண்ணா. பிராட்டியான சீதையை பிரபுவினிடம் ஸமர்ப்பியுங்கள்.) (சேதனுஸ்வரூபமான ஆத்ம ஸம்பந்தத்தை அடையுங்கள். ஸதி சித்ஆனந்தம்போல அல்லவா ராம சீதா லக்ஷ்மணர்கள் விளங்குகிருர்கள். சிவன் சக்தியாகிற துர்க்கையுடன் சார்ங்கம் ஏந்திய நாராயணனை உங்கள் பிரபுவாக யேற்றுக்கொண்டு சரணமடையுங்கள். மார்க்கண்டேயர் கங்கை இந்திரத்யும்னன் போன்ற பரம வைஷ்ணவர்கள் ஆராதனை செய்யும் நீலமாதவனை ஆராதித்து, சரணம் அடையுங்கள். வைதரணியைத் தாண்ட வைக்கும் கோமாதா போலவிருக்கும் ஆத்ம ஸகாவை மித்ரனுகப் பாவித்து, தமஸ் ரஜ்ஸஸை விலக்கி, ஸத்வகுணத்துடன் ஆஸ்ரயிங்கள். மரண காலத்தில் ஒரு தடவை ''ராமா'' ''சீதா'', என்கிற நாம உச்சாரணையால் மோக்ஷபலனைக் கொடுக்கும் ஹேதுவாகிற பரம மங்கள சீதாராம லக்ஷ்மண சரணங்களை நினையுங்கள். நான் சொல்வதை நம்பாமல் போனால், ''ராம'' என்கிற நாமத்தை தரிக்கும் ராமபாணத்தை நீர் மரணகாலத்தில் பார்த்து, ''அன்று என் தம்பி விபீஷணன் சொன்னுன்; நான் கேட்காமல் போய்விட்டேனே; என் புத்ரமித்ர பந்து ராஜ்யம், ஸத்கீர்த்தி, எல்லாவற்றையும் பிராம்மண்யத்தையும் நான் இழந்து இன்று தேவர்கள் ரிஷிகள், சத்ருக்கள் எல்லோரும் பார்த்துப் பரிகசிக்கும் நிலையை நான் அடைந்தேனே'' என்று பச்சாதாபத்தை அடைவீர்கள்.) (உமக்குக் குல பிராதாவாகப் பிறந்து, புலஸ்தியருடைய கருணையால் உபதேசிக்கப்பட்ட உபதேசங்களையும் புறக்கணித்துவிட்டு, நான் செய்யவேண்டிய கர்த்தவ்யங்களை செய்யவேண்டியது என்கிற புத்தி தீர்மானத்தினுல் சொல்லப்பட்ட வசனங்களை உங்களுடைய திருவடிகளைப் பிடித்துக் கெஞ்சும் தம்பி விபீஷணனை கருணையுடன் பாருங்கள் அண்ணா. ராம சீதா ஸாரூப்யம் ஸர்வ ஸ்ரேஷ்டமானது என்று நம்பி உம்மைக் கெஞ்சும் தம்பியை மதியுங்கள். வார்த்தைகளைச் செவிகொடுத்துக் கேளுங்கள்.) (பூமியை தன் வசமாக்கி காஸ்யபருக்கு தானம் கொடுத்து, அவருடைய வேண்டுகோளால் கோடாரியை விட்டெறிந்து, பிராம்மணராகப் பிறந்தும் ஆததாயியாகி, க்ஷத்திரிய விரதம் கொண்

டிருந்த பரசுராமரைப் பங்கம் செய்த பகவான் ராமசந்திரனே, சந்திரனுகிற அம்ருதமய திருஷ்டிகளால், பரசுராம க்ரோதாக்னியை சமனம் செய்த பகவான் சீதாராமனை நினையுங்கள் ஸ்வாமி.) (திருவிக்ரம அவதாரத்தின் சமயம் எவருடைய திருவடி உமக்கு பிரதானமான தெய்வமான சிவபெருமானின் முடியையும் கங்கை என்கிற த்வஜத்தினுல் பவத்திரமாக்கியதோ, அந்த திருவடியை, துளசி, சந்தனம், புஷ்பம், கற்பூரம், தூபம், மணம் கமழும் தீபம் இவைகளால் ஆராதிக்கப்பட வேண்டிய உத்தம திருவடிகளை ஸ்வீகரியுங்கள்.) (நான் சொல்னதைக் கேளாவிடில் உமக்கு எது ஹிதம் என்றிருக்கிறதோ அது ஹானியாக நேரிடும், என்று அழுதுகொண்டு, அன்று பரம பாகவதரான பீஷ்மர் துரியோதனனை உபதேசித்தது போல, ராஜகோபாலனுடைய திருவடிகளை ஆஸ்ரயித்த விதுரர் போல, என் பிரபு விபீஷணன் ஸத்யரூபியாகி, ஸநாதன தர்மத்தை அவலம்பித்து ஆவேசம் வந்தவன்போல உபதேசித்தான்.) (அப்பேர்பட்ட கருணாநிதியான விபீஷணன் ஜகந்நாதருடைய ஸ்நேகத்தை விரும்பும் எனக்கு ஸர்வ பாப பயங்களிலிருந்து காப்பாற்றட்டும். புருஷோத்தமா, ராமாவதாரத்தில் தோட்டத்தில் வளர்ந்த புல், மரம் முதலிய யாவற்றையும் பரமபதம் சேரும்படி அனுக்ரஹித்த பரிக்ரஹரே, ராக்ஷஸர்களை வேட்டையாடி பூமிக்கு ஹிதம் செய்த பரமேஷ்டியே, விபீஷணன் கருடன் ஆஞ்சநேயர் ராமானுஜன் பரதன் சத்ருக்னன் இவர்களிடமும் சபரியிடமும் எவ்விதம் தெளிவாகவும் ஸ்திரமாகவும் இருந்தீரோ, அதுபோல எனக்கும் ஸுபத்ரரே, ஸதா தெளிவாக இருக்கவேண்டும். சீதா பிராட்டியே, கருணை செய் அம்மா.)

விபீஷணனுடைய ரத்தினச் சுருக்கமான உபதேசங்கள் வேதங்களாலும் பண்டிதர்களாலும் புராணங்களாலும் ஸர்வ ஸம்மதமாக ஒப்புக்கொள்ளப்பட்ட நீதிவசனங்கள். விபீஷணன் அவைகளை ஸம்பிரதாயமாகவும் சாஸ்திர ரீதியை ஒட்டியும் ஹிதமாகவும் அழகான இன்சொற்களாலும் நல்ல பாணியில் தகுந்த ராஜநீதி முறையிலும் எடுத்துச் சொன்னுன். ஆனுல் தசானனுக்கு அவைகள் பிடித்தமாயில்லை. அவனுக்குக் கோபம் மேலிட்டு க்ரோதமாக மாறியது. சிம்மாஸனத்தில் நிமிர்ந்து உட்கார்ந்தான். பயங்கரமாக கர்ஜனை செய்து விபீஷணனை அதட்டிச் சொன்னுன், "அடே மூர்க்கா, அதமனே, எனக்கா நீ புத்திமதி சொல்லுகிருய். உனக்கு மிருத்யு அருகில் வந்திருக்கிருன்." (233)

"அடே மூர்க்கா, என் கையினால் நீ வளர்ந்தவன். எனக்கு தம்பியாயும் எனது கைகளினால் வளர்க்கப்பட்டவனாகவும், இருந்துகொண்டு, சத்ருவின் பக்ஷத்தை அடைந்து எனக்கு துரோஹம் நினைக்கிறாய். துஷ்டா நீயே சொல். இந்த ஸம்சாரத்தில் எவன் என் புஜபலத்தினால் ஜயிக்கப்படாமலிருக்கிறான்? நான் யாரை வணங்கவேண்டும்?" (234)

"என் நகரத்தில் வசித்துக்கொண்டு நீ சாதாரண தபஸ்விகளினிடம் அன்பும் பிரேமையும் செலுத்துகிறாய். மூர்க்கா, நீ அவர்களைக் கண்டு அவர்களிடம் என்னைப்பற்றிய பெருமைகளை எடுத்துச் சொல்லி, அவர்களை நல்வழியில் சீர்திருத்து. என்னை யாரென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்" என்று சீறிவிழுந்து விபீஷணனை காலால் உதைத்து கீழே தள்ளினான். ஆனால் விபீஷணன் இதை லக்ஷியம் செய்யவில்லை. தம்பியாகவிருந்தபடியால் அதை மரியாதையாகவே ஏற்றுக்கொண்டான். (குலத்தின் கௌரவம், அவனுக்குப் பெரிதாகத் தோன்றியது. மீண்டும் அவன் தன் தமையனைப் பிரார்த்தித்துக்கொண்டு தீனனாக எனக்குக் காக்ஷி கொடுத்தான். ராவணனுடைய பாத சரணங்களைப் பற்றிக்கொண்டு அழுதான். அடிக்கடி பிரார்த்தித்தான். "ஐயோ, அண்ணா, மதிமோசம் போய்விடாதீர்," என்று கதறினான்.) (235)

என் பிரபு சிவன் உமையின் (முதுகைத் தட்டிச்) சொன்னார். "உமா, ஸாதுக்கள் தங்களுக்குத் தீங்கு நேர்ந்தபோதிலும் அதை லக்ஷ்யம் செய்யாமல் பிறர்களின் நன்மையையே விரும்புவார்கள். தங்களுக்குக் கெடுதல் செய்பவர்களின் ஹிதத்தையே விரும்புவார்கள்." விபீஷணன் மீண்டும் சொல்ல ஆரம்பித்தான். "அண்ணா, நீர் எனக்கு பிதாவுக்குச் ஸமமானவர். என்னைத் தாங்கள் கொன்றுவிடலாம். நான் ராமனை தாங்கள் பஜிக்கவேண்டும் என்று அடிக்கடி வற்புறுத்திச் சொல்கிறேன்." "நாதா, ராமனுடைய திருவடிகள் உமக்கு ஹிதத்தைத் தரும். அதைத் தவிர நாம் உஜ்ஜீவிப்பதற்கு வேறு வழி ஒன்றுமில்லை. நீர் அதை செய்தே தீரவேண்டும். ஸ்வாமி, நான் மிக்க, மிக்க கெஞ்சிக் கேட்கிறேன்," என்று மீண்டும் வற்புறுத்திச் சொன்னான். (236)

இந்த வார்த்தைகளைச் சொன்னதும் விபீஷணன் தனது மந்திரிகளுடன் சகிதம் ஆகாயத்தில் எழுந்தான். எல்லோரும் கேட்கும்படி விபீஷணன் மீண்டும் சொல்ல ஆரம்பித்தான். (237)

[தியானம்

நாராயணு, சீதாராமா, லக்ஷ்மண சீதாராமா, உங்களை விபீஷணன் அம்பரீஷன் பீஷ்மர் துரோணர் தியாகராஜர் துளசி தாஸர், நாரத வேத வியாஸர், தர்ம புத்திராதிகளைக் கொண்டு சரணம் அடைகிறேன். விபீஷணரே, உம்முடைய கிருத புண் யத்வம் மிக்க ஸ்லாகிக்கத் தகுந்ததாக விருக்கிறது. என்ன பாக் யத்திஞல் உமது கண்களுக்கும் மனத்திற்கும் சீதாராம அவதா ரங்கள் பரமேஷ்டியான நாராயணராகத் தோன்றியதோ, அந்த புத்தியும் தியாகமும் சீலமும், பக்தியும் யாருக்காவது கிடைக் குமா? ஜாதியில் தாழ்ந்தவர்களும் உம்மைப் பின்பற்றி ரஜஸ் தமஸ் ஸாதிகளை விலக்கி, பூர்ண ஸத்வத்துடன் பகவத் பிராப் தியை அடைகிருர்கள் அன்ருே? ஆஞ்சநேயர் தன்னை வானர மாயும், நீர் உம்மை ராக்ஷஸனுகவும் பறைசாற்றிக் கொள்ளு கிறீர்களே? நீங்கள் தானே ராமானுஜ தர்சனத்திற்கும் ஸாத் யோபாயமான பிரபத்தி யோகத்திற்கு சிகரம்பேரல விளங்கு கிறீர்கள். உங்களுடைய பக்தியானது காமம் க்ரோதம் மதம் மாத்ஸர்யங்கள் வேறு அசுபமான மதியினுல்யேற்படும் தோஷங் களைப் பூர்ணமாக விலக்கினதாகத் தோன்றுகிறது. உமது ஞானமோ அன்று குகப்பெருமாள் ஈசருடன் ஞானமொழி பேசும் முகம்போலத் தோன்றுகிறதே. உமது நினைவுகள், ராமா னுஜ சித்தாந்தத்தை விளக்கி வைக்கும் பரம வைஷ்ணவ தர்மத் தின் சிறப்பாகிய அடியார்கள் வினைகளைத் தீர்க்கும் வைத்திய நாத க்ஷேத்திரமாக விளங்குகிறதே. நான் எவ்வாறு உங்க ளுக்கு கிருதக்ஞை செலுத்துவேன்? அன்று பாற்கடலைக் கடைந்து மஹாலக்ஷ்மியுடன் எவ்விதம் அமிர்தம் தோன்றி யதோ, அதுபோல அல்லவா திருமாலுடைய அடிகளைக் காட்டிய உங்களுடைய தேசிக தர்சனம் என் நிலையை எனது பூர்வாசாரி யர்கள் காட்டிய வழியைப் பின்பற்றி, "அதில் நிலைத்து நில்" என்று ஆக்ஞை செய்வதுபோல அல்லவா விளங்குகிறது. எங்கள் பிறவித்துயர் தீர்ந்த ஞானப் பெரும் துறைவா, நீர் ஸத் ஸம்பிரதாயம் என்று சொல்லப்படும் பிரபத்தியை, உபாயம் உபேயம் ஆகிய இரண்டும் ஶ்ரீமத் நாராயணனுடைய திருவடி களே, என்று பெரும் அருளுடன் எங்களைக் காக்க வந்த ராமா னுஜனைப்போல, பகவத் சரணுகதியை எங்களுக்குப் பிறவிச் சொத்தாகக் காப்பாற்றிக் கலக்கம் யேற்படும்போதுகூட அருள் தந்தாயே; நாம் ஈஸ்வரனிடமிருந்து வேண்டியதைக் காட்டிலும் அதிகமாகவே பலனைத் தரும் இயல்புடைய எம்பெருமானுடைய

கருணு ஸ்வரூப ஸ்வபாவாதிகளை, மாதவனின் திண்மை தரும் தெளிவொன்ருல் திணியிருள் நீங்கிய நாம் தண்மை கழிந்தனம் தத்துவம் காணுந்த ரத்தினமே என்று வேதாந்த தேசிகர் ஸாதித்தபடி, அணிவிளக்காக, தீபச்சுடராக விளங்குகிறீரே. நான் உம்மை அடிக்கடி நமஸ்கரித்ததும் ஸ்துதி செய்வதும், உம் மால் பெருமை அடைந்து களிப்புற்றும், என் மனம் இன்னமும் செய்யவில்லையே என்று தயங்குகிறது. பாகவத சிரோண் மணியே, தர்மம் ஜயிக்கிறது; அதர்மம் ஜயிக்கிறதில்லை; உண்மை ஜயிக்கிறது; பொய் ஜயிக்கிறதில்லை. பொறுமை ஜயிக்கிறது, கோபம் ஜயிக்கிறதில்லை. பொறுமை உள்ளவன் பிராம்மணன் ஆவான். எந்தக் காலத்திலும் பிராணனை அடக்கி, ஸநாதனமான பிரும்மத்தைத் தியானம் செய்கிருனே, அந்தக் காலத்தில் பிராம்மணனுக அறியத்தக்கவன்—மற்றக் காலத்தில் வேறு ஒருவனுவான் என்கிற சொல்படி, சீதாராமனுக்குப் பிரிய னுகவும், ஸாத்விகனுகவும், விசுத்த ஆத்மாவுடன் கூடியவனுக வும், ஜித க்ரோதனுகவும், மனோ தைர்யமடைந்து பசி குறியை அடக்கினவனும், சஞ்சலமான மனத்தையும் வாக்கையும் அடக்கி, பயத்திலிருந்து விலகி, பகவானுடைய பாத சரணங் களை அந்த ரங்கநாத திருவடிகளை, என் சடகோபரை, இரு கண் களால் பார்த்துக்கொண்டு ஆத்ம தத்வத்துடன் விளங்குகிருனே, ஸர்வத்தையும் வாஸுதேவ மயமாக பார்க்கிருனே, அவனே வைஷ்ணவன், பக்தன் என்று கருதப்படுகிருன். அப்பேர்பட்ட பக்தனுடைய பாத ஸம்பந்தம் பெற்ற எனக்கு, அன்று என் பிரபு ராமானுஜர் உறங்கா வல்லி வில்லி தாஸருக்குச் சொல்லிய வார்த்தைகள் என் அகக் கண்களின் முன்பு நிற்கின்றன. "சரணுகதிக்கு இடையூருகவிருந்த உறவுகளை எல்லாம் அறுத்துக்கொண்டு பெருமாள் திருவடிகளே சரணம்" என்று வந்தவன் விபீஷண ஆழ்வான். மண்ணில் கால் பாவாது வான வீதியில் நின்ற வண்ணம் சரண மடைந்தான். அவனைச் சந்தேகித்த சுக்ரீவ வானராதிகளை இந்த நீசனும் உமது கோஷ்டியில் நிலைபெற்றிருக்க முடியுமோ, அடியேனும் ஆளாகிப் பேறுபெறுவேனே? என்று கலங்கி நிற்க, அதுபோல வில்லிதாஸரும் (நானும்) கலங்கி நிற்க, அதுகேட்ட ராமானுஜரின் திருமுகம் கருணை நிலவு பொழிய, "பிள்ளாய் அஞ்சாதே, நான் பெறுவேனுகில் நீரும் பெறுவீர், பெரிய நம்பி பெற்ருர் ஆகில் அடியேன் பெறுகிறேன். நம்மாழ்வார் பெற்ரு ராகில் நாதமுனி துடக்கமாக வரும் ஞானப் பரம்பரையில்

நாமும் பெறுகிறோம். "அவா அற்று வீடு பெற்ற குருகூர் சடகோபன்" என்று ஆழ்வார் தம்மைக் கூறிக்கொள்ளும் அதே வாக்கில், அவர் பெற்றது திண்ணம். இப்படி அவர் ஸம்பந்தம் உடையதும் உடைக்க முடியாததும் எனக்குப் பயம் சந்தேகம் தெளிவித்து, பயநாஸனः என்கிறபடியும், ஸமிதிஞ்சயர் என்கிற சொல்லுக்கும் ஏற்பஒரு பொற்சங்கிலித்தொடராக ஆஞ்சநேயரின் வால்போல, நீண்டு வளர்ந்திருக்கிறது, நமது பாகவத பரம்பரை, அசாதாரணமாக வளர்ந்திருக்கிறது. அதற்கு முதல் சங்கு போல "அச்சம் வேண்டாம், மாசுசः ஸர்வலோக ஸம்ரக்ஷணார்த்தம், ஸாது ஜனபரிபாலனார்த்தம், நான் பத்து அங்குல ஸ்வரூப முள்ளவனாக, வந்திருக்கிறேன். இந்த ஜகம் எவ்வளவு காலம் உள்ளதோ, அதுவரை நான் இந்த ஜகத்தில் ஜீவனாக விருக்கிறேன். நான் ஜகதாதிஜர்." என்று தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ளும் பிரபுவான நாராயணரை, ஆழ்வார் காட்டிய ஆதிபகவனை, சாதாரண வாழ்க்கை நடத்தும் பாகவதர்களும் ஒரே சங்கிலித் தொடரில் இருக்கிறார்கள் என்பதை ஏன் மறந்து விட்டீர்? கமுகுக்குப் பாய்ச்சிய தண்ணீரை அந்த தோப்பிலுள்ள வாழையும் உண்டு வாழும் என்பதை அறியீரோ; விபீஷணனோடு அன்று வந்த நால்வரும் வானரர்கள் தடுத்தபோதிலும், பெருமாள் தடுக்கவில்லையே. "ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்று அவரைச் சார்ந்தியிருப்பார் தவம்" என்கிறவாறு "உம்முடைய தவம் என் தவத்திற்கு மேலானது. ஏத்தியிருந்த பெரியாழ்வார் தவத்தைக் காட்டிலும், அவரைச் சார்ந்திருந்த ஆண்டாளின் தவம் பெரிதன்றோ? நீர் அஞ்சாது சுகமாயிரும்" என்று ராமானுஜர் பகர்ந்தாரே, இந்த இதயத்தை அல்லவோ கையில் கனியாகக் கொண்டார் வில்லிதாஸர். "உம்மைப்பற்றி நிற்பது எனக்கு சரணாகதி; உமது திருப்பெயரே எனக்கு திருமந்திரம்; உமது திருவடிகளே எனக்கு திவ்ய தேசங்கள்; உமது அடிகளில் பணி புரியும் பாக்யம் எனது பேறு" என்று சொன்னார் உறங்கா வில்லிதாஸர். இதற்கு கருணை அல்லவோ என்று சொல்லவேண்டும். ரெங்கநாச்சியாரே, ரங்கபதமே, அவ்விதம் எனக்கு புத்தி புகட்டிய விபீஷணரே, உமக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.]

விபீஷணன் சொன்னார். "என்பிரபு ஸ்ரீராமன் சொன்ன வார்த்தைகள் தவறாத ஸத்யஸங்கல்பன். என்ன தோஷம் இருந்தாலும், குணமயனாகிற அவர் குணத்தையே பிறரிடம் காண்பார், ஸர்வ ஸமர்த்தன். எவருடைய பேச்சையும் கேட்க மாட்டார்.

(ஆட்கொள்ளும் தெய்வம் அருள் குகன்போல, ஆதி அருணுசலம் போல, ஆதி ரெங்கப் பெருமாளைப்போல, என் பிரபு, என் ஊரைச் சொன்ளுய், பெயரைச் சொன்ளுய், என்று எண்ணி நம்மை வலியவந்து ஒட்டிக் கொள்ளும் ஸர்வ ஸமர்த்தன்,) கிருபாளு, அவரைச் சரணம் அடை. ஹே ராவணு, நீயும் உனது மந்திரிகளும் காலத்தின் வசம் அடைந்துவிட்டீர்கள். (இந்த ஜக மெல்லாம் அவனிடம் உண்டாகி அவனிடம் லயமடைகிறது. இந்த சீதை லலிதா தேவி. என் பிரபு ரகுவர சரணங்கள் எப் பொழுதும் பெருமுயற்சியுடன் தேடத் தக்கது. மாயையால் மோஹத்தை அடைந்தவர்கள் அவைகளை அறிகிறதில்லை. என்னுடைய கதி குருடன்போல, அவிந்த விளக்கின் கதிபோல, அறியப்படுகிறதில்லை. சென்றதும் வருவதுமாகவிருக்கும் அந்த அச்யுத) ராமசீதா, சரணங்கள் தான் எனக்கு இப்போது தஞ்சம். நான் போகிறேன். என்னை தோஷம் கற்பிக்காதே. அவருடைய அருளை நீ பெறவில்லை. (அவருடைய ஸ்வரூபத்தை, மாயையினுல் மோஹம் அடையப்பட்டவனுக, நீ அறியவில்லை.) நான் அவரிடம் போகிறேன். உத்தரவு கொடு. பிற்பாடு தோஷம் கற்பித்து, அபவாதத்திற்கு என்னை ஆளாக்காதே. (அந்த சீதாராமனே க்ரோதம், பாரபக்ஷம் முதலிய குணங்கள் அற்றவன். ஸர்வாந் தர்யாமியாக மறைந்து யாவரையும் பார்ப்பவன். மமதை அற்றவன். வெறுப்பு விருப்பாகிற த்வந்தவமற்றவன். விகார மற்றவன். மோக்ஷத்திற்குக் காரணன்.) (238)

இவ்விதம் விபீஷணன் சொல்லிக்கொண்டு நான்கு மந்திரி களுடன் ஸ்ரீராமசந்திரனிடம் புறப்பட்டுச் சென்ற சமயம், ஸகல ராக்ஷஸர்களும் பயமடைந்து, அதனுல் தங்கள் மரண நிச்ச யத்தை அடைந்தார்கள். பரமசிவன் உமையுடன் சொல்லுகிருர். "பவானி, பக்திமானுகிற ஸாதுவை எவன் அவமானம் செய் கிருனே, அவனுக்கு அதி சீக்கிரத்திலேயே அமங்களங்கள் ஏற்பட்டு, அவனுடைய ஐஸ்வர்ய கல்யாணங்கள் வேறுடன் நசித்துப் போகின்றன." (239)

ராவணன் எப்பொழுது விபீஷணனுல் தியாகம் செய்யப் பட்டு விடப்பட்டானே, அந்த க்ஷணத்திலிருந்து அவனுக்கு பயம் ஏற்பட்டது. அவனுடைய மகிமைகள் நாசமடைய ஆரம் பித்தன. விபீஷணன் நேராக ரகுநாயகரிடம் சென்ருன். அவனுக்கு சந்தோஷம் தாங்கமுடியவில்லை. (240)

(கருத்து :—அவனுடைய சரணுகதிக்கு இடையூறுகளாக விருந்த உறவுகள் எல்லாம் அறுந்துபோய், "பெருமாள்

திருவடிகளே சரணம்,'' என்று மஹாவிஸ்வாசத்துடன், அன்று கூரேசன் சொன்னதுபோல, பாகவத ஸ்வபிரவிருத்தியின் முக்கிய அம்சமாக ''சொறியத்தீரும் தினவு; அறியத்தீரும் அறிவுத்தினவு'' என்கிருப் போல, இந்த சந்தர்ப்பத்தைத் தவிர, வேறு எனக்கு பாக்யம் எவ்வளவு ஜன்மங்களுக்குப் பின்ஞல் கிடைக்குமோ; இதுவே நல்லதருணம்; எம்பெருமானின் திருமேனியே தஞ்சம்; நான் எனக்குரியவன், எனது பரமும் (பொறுப்பும்) என்னைச் சேர்ந்தது, அதனுல் விளையும் பயனும் என்னுடையது என்று நிலைகொண்டு இதுவரை அழிந்தேன். இனி இந்த க்ஷண முதல் எனது ஸ்வரூபபர பலன்களை திருமாலின் பாதங்களுக்கு அர்ப்பணம் செய்து விட்டேன். சாதனமும் பயனும் அவைகளே. அன்று ''உனக்கு இதம் என்று ஒரு தேர்ப்பாகன் கிருஷ்ணன் உரைத்தான்,'' அந்த உத்தமனை இன்று நான் கண்கூடாகப் பார்த்து, வரப்போகும் பெரிய ஆனந்தத்தை எண்ணி, இனி நாமிருவரும் (அதாவது பகவானும் சேதனனும்) ஒன்றே, நித்யஸூரிகள் போல சோகம் தீர்ந்து இன்பம் அடைவோம், என்று பெருமிதத்துடன் எண்ண ஆரம்பித்தான்.) (அடே அப்பா, எவ்வளவு காலம் இது கிடைப்பதற்கு அவன் பொறுக்கவேண்டியிருந்தது; கன்றைத் தாய்ப்பசு மறந்துவிடுமோ? வயலில் கிடக்கும் பயிரை மழைத் துளிகள் தான் மறந்துவிடுமா? பிரிய நாயகனைத் தேடிப்போகும் பாரியை அலக்ஷ்யப்பட்டு ஏமாந்துதான் போவாளா? ஒருக்காலும் இல்லை; இருக்க முடியாது. நான் இதுகாறும் திரு நாராயணன் என்னும் தெய்வமும் சித்தும் அசித்தும் ஆகிய மூன்று பொருள்களே வேதங்களில் சொல்லப்படுகின்றன. பாக்ய விசேஷத்தால் இதை அறிந்த பின்பும், அந்த ஈஸ்வரனைக் காண வாய்ப்பு, நான் உய்யும் வழி, அந்தப் பெருமாளின் எட்டுக் குணங்கள் போல அஷ்டாக்ஷரத்தின் ரஹஸ்யம், என் கண் முன்பே சரீரம் எடுத்து, கருணை பொழியும் முகில், கமலையுடன் சேர்ந்துவிருக்கும் ஸ்ரீயப்பதி, என்றும் நான் அவர்களுக்கு சரீரம் என்கிற எண்ணத்தால் நான் அவர்களிடம் செல்ல, அந்த தரணீதரன், என் முன் நின்று, எனது கைங்கர்யத்தை, என் நல் அடிமையை, ஸ்வீகரிக்கப் போகிருன் என்கிற நினைவு அவனுடைய உள்ளத்தில் எழ அவனுக்கு மட்டற்ற ஆனந்தப் பெருக்கு ஏற்பட்டது. பிரக்ருதி, காலம், சுத்தஸத்வம் ஆகியவைகளை அந்த எம்பெருமான் அசேதனதத்வமாக வல்லவா என்னிடமிருந்து ஸ்வீகரிக்கிருன். என் இருளைப்போக்கின அமலன், வேதாந்த வெளிச்சத்தைக்

கொடுத்து மனஇருளை அகற்றின சந்திரன், என் ஜீவாத்மாவைக் காக்க வந்த அன்பர், செம்பொற் கழலிணைச் செய்யாள மருந்திரு வரங்கா, சிவந்த பொற்பாதங்களை உடைய பிராட்டியை திருமார்பில் தரிக்கும் ரெங்கநாதரும், பிராட்டி அமர்வதற்கு அரங்கம் போன்றவருமான என் ரங்கேசன், ரங்கநாயகி ஸமேதன், என் ஆனந்தக் குவியல், எனக்கு முன்பே ஸுப்ரஸாதம் செய்யப்போகிருர். நான் இந்த ராவணனுல் ஞான மடைந் தேன். எனது ஸ்வரூபஸ்வபிரவிருத்தியை மீண்டும் அடைந் தேன். தர்மபூத ஞானத்திஞல் ஞான ஸ்வரூபம் கொண்டு, அசேதனத்தைக்காட்டிலும் வேறுபட்டவன் என்கிற நினைவுடன், "நான் திருமால் அடியன்" மற்றது யாவும் வேண்டேன், மற்ருேர் பற்றுமிலேன், தானமுதாமவன் தன் சரணே சரண் என்று அடைந்தேன். மானமிலா அடிமைப் பணிபூண்ட மனத்தின்னே என்கிறபடி அளவில்லாத கைங்கர்யம் செய்ய ஆசைப்பட்டு, அமுதம் போன்ற அவனுடைய திருவடி களையே அடைந்து, நிற்கின்றேன். இனி இக்கர்ம பூமியில் பிறக்கமாட்டேன்; வேலை வண்ணனை (கடல்போல நீலஸ்யாம சுந்தரனை) அடைந்துவிடுவோம். நம் நாரணன் பரதத்வமட்டு மல்ல. நான் அவனுக்கு ஸ்திர நிலையான நித்யதாஸன். என் உடம்பு, ஆத்மா, உடமைகள் யாவும் அவனுடையதே. என்னைத் திருத்திப் பணிகொள்வான். அந்த அத்திகிரி நாதனின் திருவரு ளால் இனி நான் கஷ்டப்படமாட்டேன். அவனுடைய திருவரு ளால் வருவது எல்லாம், ஸம்பவிப்பது எல்லாம் நன்றே. எனக்கு எத்தகைய பாரமுமில்லை. ஒன்றே புகல் என்று உணர்ந்தவர் காட்டித் திருவருளால் அன்றே யடைக்கலம் கொண்ட நம் அத்தி கிரி திருமால் என்கிறபடி, நான் அவனுடன் சேர்ந்து பெருமை உடைய பொருளாக ஆவேன். கருணைக்கடலான என் ராமன், என் லக்ஷ்மணன் என் சீதா நாயகன் மகிழ்ச்சியுடன் என்னை ஏற்பான், தாயார்போல என்னிடம் இரங்குவான், என் உள்ளத் தில் உறைந்து கிடக்கும் அந்தர்யாமி, என் ஸ்வபாவத்தை நன்கு அறிவான்; வெள்ளத்தில் அகப்பட்டுக்கொண்ட பசுப்போல விருக்கும் எனக்கு நிலைதருவான். கையிலே கோதண்டத்தை வைத்துக்கொண்டு என்போன்றவர்களைப் காப்பதற்காக மெய்யே அருள்பொருளாகத் தோன்றுகிருன். நான் ஸ்வதந்திரன் இல்லை. எனக்கு அஹங்கார மமகாரங்கள் இல்லை. சிறந்த தவமாகிற சரணுகதியே என் வ்ரதம். நான் அதஞல் எல்லாவற்றையும் அவருக்கு ஸமர்ப்பித்து விட்டேன். கர்மஸம்பந்தம் அற்று நித்ய

முக்தியைப் பெறுவேன். அவனே காரணன். காரிய வஸ்துக்களில் தோஷங்கள் கலவாதவன். எனக்கு துணையாகவிருந்து வினைகளைத் தவிர்த்து, தன்னை அடையக் காரணமாகி, தானே நின்று அருள்பாலிக்கிறான். இந்த ஸம்சாரக் கடலில் முத்துக்கள் போலவிருக்கும் என்போன்றவர்களைச் சேர்க்க அமைந்த பொன் நூல்போல ஆகி, உடலுக்குள் ஆத்மா; ஆத்மாவுக்குள் அந்தர்யாமி, ஆக விளங்குகிறான். பிராட்டியுடன் சேர்ந்த ஸ்ரீமந் நாராயணனுடைய அடியிணைகளை திண்சரணாகக் கொண்டு, அவற்றை அடையவைத்த அவனே நம்மீது ஆசாரியன்போல அருள் சுரந்து அந்த அருளால் வானோர்கள் புகழும் நல்வழிகளைக் காட்டித் தந்தார். த்வயமந்திரமாகிய ஸ்ரீமந் நாராயணனுடைய சரணங்களில் சேர்க்கும் திருமகள் எனக்கு ஏற்றாக் குணங்கள் இருப்பினும் பற்றுதல் என்று விரதம் பூண்டு வந்த பின்பு எனக்காக பத்து முறைகள், பத்து குணங்களுடன் களைப்பின்றி வாதாடும் பெரியநாயகி புருஷகாரம் செய்யும் அந்த அலர்மேல் மங்கையை நான் எவ்விதம் வர்ணிக்கக்கூடும்? த்வய மந்திரம் அனுஸந்தானத்தினால் யேற்படும் திருநாரணன் சரண் திண்சரணாகத் துணிந்தடைவோர் நம் ஆசாரியர்போல ஒரு நாள் எனக்கு உபதேசித்து, அதை ஒரு தடவை நான் சொல்லிய பின்பு என் மனத்தில் பழுதில்லாமல் வாழும் வகையை சேர்த்தனரே, என்ன பாக்யம் பெற்றேன். ஹே மனமே, மற்றொரு பற்றின்றி விண்ணவர்கோன் நினைவுடைத்தாய். எல்லாத் தருமமும் ஒன்றுசேர்ந்து, எல்லாத் தனமும் சேர்ந்து வருமாம் போல, அவர்கள் பாதங்களை எனக்குக் கொடுத்தார். எனக்கு பக்தி ஆசரணைகள் சுத்த மனோபாவம் யாவுமில்லை. இருந்தாலும் இப்போது இல்லை. நான் இகழப்பட்டேன், குலத்திலிருந்து தள்ளப்பட்டேன். எல்லா தருமங்களும் தவப்பயன்களும் எனக்கு இனி வேண்டாம், பாபமும் வேண்டாம், புண்யமும் வேண்டாம். என்னைச் சேர்ந்தவர்களும் இகழ்கிறார்கள். என் வினைத்திரள்கள் இருக்கட்டும். ஈஸ்வரன் மட்டும் நம்மைக் கைவிடாமல் எந்த உபாய ஸ்தானத்தில் இருக்கவேண்டுமோ அதுபோல நிற்கிறான். அர்ஜுனா, வருந்தாதே. என் சரணங்களைப் பற்று'' என்று சர்மஸ்லோகத்தில் சொன்னான். அதை நினைத்து, நான் துணிவு கொண்டேன். ஆகா, இந்த சரணாகதி உபாயம் எவ்வளவு மேன்மையானது. எனக்கு அம்ருத ரஞ்சினியாக யிருக்கிறது. பக்தி முதலிய வழிகள் விடப்பட்டாலும் பிரபத்தியை ஏற்றுக்கொண்டு நான் அவரை சரணமடைகிறேன்.)

விபீஷணன் தன் மனத்திற்குள் மீண்டும் எண்ண ஆரம்பித்தார். "நான் போவேன், பகவானுடைய அருணநிறமுள்ளதும் மிருதுவானதும் எனக்குச் சுகத்தை தருவதுமான சரணங்களை நான் தஞ்சம் செய்வேன். சேவிப்பேன். ரிஷி யோகிகளின் ஹ்ருதயத்தில் நர்த்தனமாடும் பிரபுவை நான் காண்பேன். ஸ்பர்சம் செய்வேன். எந்த பாதங்களின் ஸ்பர்சத்தால் கௌதமருடைய பத்னி அஹல்யை சாப விமோசனம் அடைந்தாளே, எந்த பவித்திரமான பாத ஸ்பர்சத்தால் கல்லும் முள்ளும் புழுக்களும் விருக்ஷங்களும் கொடிய விலங்குகளும் அடங்கிய தண்டகவனம் பரமபாவனமாக ஆக்கப்பட்டதோ அந்த இன்ப பாதசுவடிகளைக் காண்பேன்." (241)

"எந்த திவ்யபாத சரோஜங்களை (ஷடாக்ஷரி மந்திரத்தின் மகிமையால்) ஜானகிதேவி தன் ஹ்ருதய குகைக்குள் தேக்கி வைத்து, ஆனந்தமடைகிருளோ, அந்த திவ்ய பாதங்களை தர்சனம் செய்வேன். ஜானகி தேவி விரும்பி வேண்டினுள் என்கிற காரணத்தால் என் பிரபு, மாயா மிருகமான பொன் மானை, (லக்ஷ்மணன் "அண்ணு, இது ராக்ஷஸன், கபடமான மிருகம், போகாதீர்கள்" என்று தடுத்தும்கூட அதை லக்ஷ்யம் செய்யாமல்,) பிடிக்க என் பிரபு ஓடினுரே, அந்தக் கபட மானைப் பிடிப்பதற்கு, அதற்கு ஏற்ப சால்களையும் கதிகளையும் செய்து கொண்டு வெகுதூரம் நடந்து ஓடிச் சென்ருரே, (அந்த சுகர் தேடிய பிருந்தாவன சரணங்களை, பிருத்வியின்மேல் பதிந்த திவ்யபாத சரணங்களை ஆஞ்சநேயர்போல) நான் எனது கரங்களால் இறுகப் பிடிப்பேன். எந்த சரணங்கள் என் பிரபு உமா சங்கரர்களின் ஹ்ருதய ஸரோவரில் தாமரையைப் போல பிரகாசிக்கின்றதோ, அந்த திவ்யபாத சரணங்களை இன்று தெய்வ ஸங்கல்பத்தால் எனக்கு பரமபாக்யமாக அதிருஷ்டபலனுக கிடைத்திருக்கிறது. நான் செய்யும் சரணுகதியின் பலனுக அஹோபாக்யமாக, ஏகமாத்திரமாக அதிருஷ்டமாக எனக்குக் கிடைத்திருக்கிறது. அப்பேர்பட்ட ஜகந்நாதரின் பாதசரோஜங்களை நான் இன்று காணப்போகிறேன்." (242)

எந்த கமலப் பாதங்களின் பாதுகைகளை பரதன் மிக்க சிரத்தையுடன் அயோத்திக்கு எடுத்துக்கொண்டுபோய் (பிருகு மஹரிஷியின் பாதம் வக்ஷஸ்தலத்தில் பதிந்த மஹாவிஷ்ணுவைப்போல,) பரதன் அவைகளை தன் ஹ்ருதயத்தில் தரிக்கிருனே, அந்த திவ்ய பாதுகைகளின் பாத சரணங்களை நான் [யத்ருச்சையாக] அடையப்போகிறேன். பரமபாவனமான அந்த

பாத சரணங்களை நான் கண்டு என் நயனங்கள் பூர்ணமாக வழியும்படி ஆனந்தக் கண்ணீர் விடப்போகிறேன். இது வல்லவோ பாக்யம்.'' (243)

இந்த மாதிரி என் பிரபு விபீஷணன் (அக்ரூரர் கிருஷ்ண தர்சனத்திற்காக பிரேமை பூர்ணமாக ததும்ப, திருஷ்ணையுடன் இருந்தது மாதிரி) தனக்குள் எண்ணியவராக, அதிசீக்கிரத்தில் சமுத்திரக்கரையின் வடகரைக்கு வந்து சேர்ந்தார். அவருடன் கூட நான்கு மந்திரிகளும் இருந்தனர். ராம சந்திரன் வானர சைனியகளுடன் அங்கு இருந்து முகாம் போட்டுக் கொண்டிருந்தார். வானரர்கள் விபீஷணன் வருவதைப் பார்த்து விட்டார்கள். உடனே அவர்கள் சத்ருவின் ரகசிய தூதர்கள் வந்திருக்கிறார்கள் என்று நிச்சயமிட்டனர். (244)

அந்த சமயத்திலேயே அவர்கள் கபீஸ்வரனாகிய சுக்ரீவனுக்குச் செய்தி சொல்லி, அவர்களைச் சுட்டிக்காட்டிக்கொடுத்தார்கள். சுக்ரீவனும் ஸ்ரீராமனிடம் சகல விருத்தாந்தங்களையும் எடுத்துச் சொன்னான். ''ரகுராய், கேளும். ராவணனுடைய தம்பி, தங்களைக் காண விரும்புகிறார்.'' (245)

ரகுநாதன் சுக்ரீவனிடம் கேட்டார். ''சுக்ரீவா, என்மித்ர, நீ இந்த விஷயத்தில் என்ன நினைக்கிறாய்?'' சுக்ரீவன் பதில் சொன்னான். ''ஸ்வாமி. ராக்ஷஸர்களின் மாயா பலம் தங்களுக்கு நன்கு தெரிந்திருக்கும். தங்கள் இஷ்டப்படி உருவத்தைத் தரித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். அவர்களுடைய இச்சையை யார் அறிவார்கள்!'' (246)

''எனக்கு ஒன்று தோன்றுகிறது. இந்த மூர்க்கன் நம்மை பேதப்படுத்த வந்திருக்கிறதாகத் தோன்றுகிறது. ஒருவேளை நமது ரகசியங்களை அறிய வந்திருக்கலாம். எதற்கும் இவர்களை நாம் கட்டி பந்தப்படுத்திவிடலாம். நீங்கள் என்ன உத்தரவு கொடுக்கிறீர்கள்?'' ஸ்ரீ ரகுராமன் சொன்னார். ''மித்ரா, நீ ராஜ நீதியாக விசாரித்துச் சொல்லுகிறாய். ஆனால் என் வ்ரதம் உனக்குத்தான் தெரியுமே. சரணாகதனாக வரும் யாவரையும் ரக்ஷித்து, பயத்தைப் போக்கி, இயற்கையாகவுள்ள அன்பினால் நாதனில்லை என்கிற பயத்தை ஒழித்து ரக்ஷிப்பேன்.'' (247)

பிரபுவின் இந்த வசனங்களைக் கேட்டு, ஹனுமான் மிக்க சந்தோஷமடைந்தார். தனக்குள் அவர் சொல்லிக்கொண்டார். ''என் பிரபு, சரணாகவத்ஸலன் அல்லவா?'' தகப்பனைப்போல ப்ரேமை செய்பவர் அல்லவா! (248)

ஸ்ரீராமன் சொன்னர், "எந்த மனுஷ்யன் தேடிவந்த சரணுகதனை ரஷிக்காமல் தள்ளிவிடுகிருனே, அவனல் தனக்கு ஹானி வரும் என்று சந்தேகித்து சரணுகத ரக்ஷக தர்மத்திலிருந்து நழுவி விடுகிருனே, அவனுக்குப் பெரும்பாபம் ஸம்பவிக்கிறது அப்பா. அப்பேற்பட்டவனைப் பார்த்தாலே மஹா பாபம்." (249)

"கோடி விப்ரர்களை வதம் செய்வதால் என்ன பாபம் ஸம்பவிக்குமோ, சரணம் என்று வந்த தீனனை ரக்ஷிக்காமல் விட்டு விடுவது அவ்வளவு பாபத்தை நேரவைக்கும். நானே கோடி விப்ரர்களை வதம் செய்த பாபி என்னை "சரணம்" என்று சொல்லி வந்ததனைக்கூட ரக்ஷிப்பேன். எந்த ஜீவன் என்னை நோக்கி, ஸன்முகத்தோடு பார்க்கிருனே, அந்த ஜீவனுடைய கோடிக்கணக்கான ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட பாபக் கூட்டங்கள் அந்த க்ஷணத்திலேயே நாசமடைகின்றன." (250)

[தியானம்

நாராயணு, க்ஷீராப்திநாதா, க்ஷீராப்திஸுதா ஸேவித நாராயணு, உமது திருவடிகளை ராமானுஜர், ஆளவந்தார் வேத வியாசர் நாரத மார்க்கண்டேயாதிகள், காமங்களை ஒழித்த ஸனக ஸனந்தனதிகளை முன்னிட்டு சரணம் அடைகிறேன். என் நாதர் ராமானுஜர் உன்னுடைய உத்தம திருமேனி விக்ரஹத்தை வர்ணித்து, அதன் பிறகு கல்யாண குணங்களை வர்ணிக்கிருர். பரிகர விபாகம் என்கிற அதிகாரத்தில் புருஷகாரம் முதலிய ஐந்து அம்சங்களையும் அனுஸந்தித்து மஹாவிஸ்வாசம் நன்கு வரப்பெற்ருல் அஸஹ்ய அபசாரங்களிலிருந்து விடுபட்டு, சங்கைகள் தீர்ந்து பூர்ணமாக பிரபத்தி, பூர்ணமான சுபாஸ்ரயம், நல்ல புத்தியினல் பரிமளித்து, பெருமையை உடைய எம்பெருமான் நிச்சயம் நம்மைக் காப்பான் என்கிற நம்பிக்கை வாயிலாக ஸாத்யோபாயமாகிற பிரபத்தியோகத்தை, சரணுகதி தத்வத்தை, பிரபத்யே, நமః என்கிற சொற்களால் விளங்க வைக்கிருர். பிரபன்னனுக்குச் செய்யவேண்டிய பிராயசித்தங்கள் இருவிதம். பகவத் கட்டளை மீறுவதால் பாபமும், பகவானுடைய கட்டளையை பரிபாலிப்பதால் ஏற்படும் அஹங்காரம் தோஷங்களும் நீக்கப் பெற்றவனுகி, ஸ்வாமியின் ப்ரீதியையே தனக்கு உண்டாகும் ப்ரீதி லாபமும், தோஷ பரிஹாரங்களும் ஏற்படுகின்றது இந்த சரணுகத தத்வத்தில். குண விபாகத்தில். அவாப்த ஸமஸ்த காமனுகிற பகவான் ஸர்வ அந்தர்யாமியாக நின்று, சேதனின் மனே

பாவத்தைப் பார்ப்பவனே ஒழிய, அவன் ஸமர்ப்பிக்கும் உயர்வு, தாழ்வு, மிகுதி, குறைவு முதலிய தாரதம்யங்களைப் பார்க்க மாட்டாத பரிபூர்ணன் ஆஸுதோஷி அல்லவோ என் பிரபு. அது மாத்திரமில்லை. பரம உதாரஹ்ருதயன், ததிபாண்டனுக்குக் கொடுத்த மோக்ஷம் தயிர் பானைக்கும் அளித்த வள்ளல் அல்லவா? அது மாத்திரமா. காளியன் விஷபலத்தினால் கருடனை அலக்ஷயம் செய்து பகவானையும் இருக்கக் கட்டினனே. அவனுடைய பிரார்த்தனையையும் ஏற்று அவனையும் காகாஸுரனைப் போல ஸ்வீகரித்தானே. என் குருகூ ர்சடகோபன் "இங்கு மங்கும் திருமால் அன்றியின்மை கண்டு" என்று சொன்னபடிக்கும், பெரியாழ்வார் "தன்னடியார் திறந்தகத்துத் தாமரை யாளா கிலுஞ் சிதகுரைக்குமேல், என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பார் போலும்; மன்னுடைய விபீடணற்கா மதினிலங்கைத் திசைநோக்கி, மலர்க்கண் வைத்த ரங்கநாதா, என்னுடைய திருவரங்கமே, திருவரங்கற் கன்றியும் மற்றொருவர்க் காளாவரே," என்று ஸாதித்தாரே, எப்பெருமானுடைய அடியார்கள் விஷயத்தில் என் அடியார் கெடுதல் செய்யமாட்டார்; செய்தாலும் நல்லதையே செய்வார்; என்று சொல்லுவாரே, அதைப் போலவும், நிகரில் புகழாய் ஒப்பற்ற வாத்ஸல்யாதி குணங்களினால் எங்களிடமுள்ள நட்பினல் வானரர்கள் என்று பாராமல் எங்கள் கருத்தைக் கேட்கிறுயே, உன்னுடைய பெருமையை எவ்விதம் உரைப்பேன்? நீர்தானே ஸ்ரீவத்ஸவக்ஷன், ஸ்ரீவாஸன், ஸ்ரீதரன், ஸ்ரீகரன் ஸ்ரேயஃ ஸ்ரீமான்லோகத்ராயாஸ்ரயஃ என்கிறபடி எல்லா பலனுக்காகவும் அடையப்படுகிற பிராட்டியை, உலகுக்குத் தாயான என் சீதையுடன் தந்தையாய் நின்று ஆஸ்ரயித்தவர்களை அனுக்ரஹிக்கும் மங்கள நரசிம்ம மூர்த்தி, ஆளவந்தார் சொன்னபடி "நதர்ம நிஷ்டோஸ்மி நசஆத்மவேதி" புகல் ஒன்றில்லா வடியேன், உன் "ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்கிறபடி உன்னுடைய "தவ" என்கிற பதத்தைச் சேர்த்து, ஸ்ரீமானை நாராயணு உன் திருவடிகளையே சரணமடைகிறேன். தத்ப்ராப்தயே ச தத் பாதாம்புஜத்வய ப்ரபத்தேரன்யத்ரமே கல்பகோடி ஸஹஸ்ரேணுபி ஸாதனமஸ்தீதிமன்வானஃ (வைகுண்ட கத்யம்), அஹம் ரஸ்வ பராதாஞமாலயோ அகிஞ்சனோஅகதிஃ (யான் அபராதங்களுக்கு இருப்பிடமாகவும் வேறு உபாயம் அற்ற அனன்யகதியாகவும்) அஹிர்புத்ன்ய ஸம்ஹிதையில் சொல்லியபடியும், எம்பெருமான் அவஸ்யம் நம்மை ரக்ஷிப்பவன், ரக்ஷிக்கவேண்டும் என்கிற பிரார்த்தனை,

ஆத்மாவை ஸமர்ப்பித்தல், கார்ப்பண்யமும் சரணுகதியாகும். "ஸம்பத்யாவிர்பாவஃ ஸ்வேனசப்தாத் (பிரும்ம ஸூத்ரம் 4–4–1) ஜீவன் வைகுண்டத்தில் நாராயணனை அடையும் போது அவனுக்கு இயற்கையாகவுள்ளதும் அதுவரை மறைந்திருந்த குணங்கள் "ஸ்வேன" என்கிற சொல்லால் வெளியாகின்றன. அநிஷ்ட நிவிருத்தியும் இஷ்ட பிராப்தியும் அபேக்ஷிக்க வேணுமோ; ஸநத்குமா ஸம்ஹிதையில் மனிதர்களுக்கும் பிரபத்தியில் நம்பிக்கை குறைந்தால் பிரபத்தி பயனற்றதாகிவிடுகிறது; ஆனுல் பிரபத்தி நம்பிக்கை உடையவருக்கு விரைவில் மோக்ஷத்தைத் தரும். வீணுகாத பிரும்மாஸ்திரமும் அரக்கர்களுக்கு நம்பிக்கை குறைவால், அனுமார் உடலில் கட்டப்பட்ட இருந்த போது, நழுவிவிட்ட தன்ருே? அதுபோல மன உறுதியில்லாமல் சரணுகதியை அவலம்பனம் செய்ய முடியாது. இப்பேற்பட்ட கருத்துக்களுடன் சரணுகதி உபாய'த்தை அவலம்பித்து, அதன் கொடிகள் போல விளங்கும் கஜேந்திரன், திரௌபதி, காகாசுரன், காளியன், அம்பரீஷன், சுக்ரீவன், ஸுமுகன், விபீஷணன், ராக்ஷஸிகள், தேவர்கள். ஆகியவர்களை நான் நமஸ்கரித்து, த்வய மந்திரத்தை அனுஸந்திக்கிறேன்.]

"பாபியர்களின் ஸ்வபாவம் என்னவென்ருல் என்னை அவர்கள் ஸர்வலோக ரக்ஷகன் என்று தெரிந்து கொள்ளாமல் நான் ஒரு சாதாரண மானிடன் என்று நினைத்து விடுகிருர்கள். அவர்கள் என்னைப் பார்ப்பதற்கே பயந்து என்னிடம் வரமாட்டார்கள். ராவணனுடைய தம்பி துஷ்ட ஹ்ருதயத்துடன் இருப்பானுகில் என்னிடம் ஸன்முகனுக வருவதற்கு பயப்படுவான். (என்னைக் கோபிக்கும் அசுரர்களை, ராக்ஷஸர்களை தண்டிக்கும் க்ரோதிகிருத் என்று நினைப்பார்கள்.) (251)

"எந்த மனிதன் நிர்மலமான மனத்துடன் (சரணுகதி உபாயத்தின் மர்மத்தை அறிந்தவனுக) இருக்கிருனே, அவன் என்னை வந்து அடைகிருன். எனக்கு கபடபுத்தியுள்ளவனையும் குயுக்தி உள்ளவனையும் பிடிப்பதில்லை. (அபராதியாக விருந்த போதிலும், என்னிடம் விரோத புத்தியில்லாமல், ஆஸ்திகத் தன்மை சற்றுக் குறைவாயிருந்தாலும், அர்த்த ஞானம் இல்லாத போதிலும், கபடத்துடன் கருத்தில் வேறு ஒன்றை எண்ணி, பகவன் நாமம் பகவத் க்ஷேத்ரம் போலச் சொற்களைச் சொன்னுலும், இன்னும் அநேக குற்றங்கள் இருப்பினும், அவன் பச்சாதாபப்பட்டு, என்னிடம் வருவானுகில், ஏதாவது ஒரு சிறிய செயலைக் கொண்டு, என் பெயரைச் சொன்னுய், என் ஊரைச்

சொன்னாய், என் பக்தனுக்கு இடம் தந்தாய் என்கிற அவனுடைய ஸர்வ சாமான்யச் செயலைக் கொண்டே நான் அவனை ஸர்வ காருண்யத்தால் உத்தாரணம் செய்து விடுவேன். அதுமாத்திர மில்லை நானே மஹாகிருதக்ஞன். ஒருக்காலே சரணம் என்று சொன்னவர்க்கு ஒரு சிறிய நமஸ்காரம் செய்தவனுக்கு, "ஐயோ, நான் இவனுக்கு கடமைப்பட்டுவிட்டேனே," என்று சொல்லி (அனாலோசித விசேஷா சேஷலோக சரண்ய, உயர்ந்தவன் தாழ்ந்தவன் தோஷமுள்ளவன், தோஷமில்லாதவன், என்கிற வித்யாஸத்தைப் பார்க்காமல், உலகத்திலுள்ள ஸர்வ ரக்ஷகன், ஸர்வ ஸ்வாமி, அவன் செய்திருக்கும் நற்செயலை அவனை மீட்டு வதற்கு பரம உபகாரமாக கருதும், உறுதியுடன் இருக்கும், அந்த ரங்கராயுள்ளவர்), யாவர் சொல்லியும் ஸ்திரபுத்தியடன் கைவிட மாட்டேன். இவன் விபிஷணனே, ராவணனே யாராயினும் என்னால் அபயம் கொடுக்கப்பட்டது. அதிலும் என்னை மித்ரபாவத்தினால் ஆஸ்ரயம் செய்பவனை, அவனிடம் அநேக தோஷங்களிருப்பினும், நான் ஒருக்காலும் கைவிட மாட்டேன். (தோஷோ யத்யபி தஸ்யஸ்யாத் ஸத்தாமேத தர்ஹிதம், யதிவா ராவணஃ ஸ்வயம்; அஹம் ஸ்தவ பராதா நாமாலயோ அகிஞ்சனோ அகதிஃ என்று அஹிர்புதன்ய ஸம்ஹிதையில் சொல்லப்பட்டபடி கார்ப்பண்யமும் அனன்ய சரணஃ என்கிற நான் அவனை பரிகிரஹம் செய்வேன்). (சுக்ரீவ, இன்னும் சொல்கிறேன் கேள். அவன் கபடவேடத்துடன் பசுத்தோலைப் போத்திக் கொண்டு வந்த புலியாகவிருக்கட்டும்; என்னிடம் நம்பிக்கையின்றி பிறர்களுக்காக நாமம் போட்டுக் கொண்டு வைஷ்ணவன் மாதிரி நடித்து வாழட்டும்; மனது சுத்தமின்றி வெறும் டம்பத்துடன் ஆசார அனுஷ்டானம் செய்யட்டும். இன்னும் அநேக தோஷங்கள் இருக்கட்டுமே.) ராவணனே ஸ்வயம் இவனை அனுப்பி நமது ரஹஸ்யங்களைப் பார்த்து வருவதற்கு, வேவு பார்ப்பதற்காக அனுப்பி யிருக்கட்டுமே. கபீஸா, நமக்கு அவனால் ஹானியோ, அல்லது பயமோ இருக்க அவசியமில்லை. (252)

ஏன் தெரியுமா சகா, உனக்கு நான் சொல்லுகிறேன். கேள். இந்த ஜகத்தில் எத்தனை ராக்ஷஸர்கள் இருக்கிறார்களோ, அவர்கள் எல்லோரையும் லக்ஷ்மணன் ஒரு நிமிஷத்தில் வதம் செய்திடுவான். நீ ஒன்றுக்கும் கவலைப்படவேண்டாம். ஒரு வேளை இவன் பயபீதிகொண்டு (சரணம் உபகம்ய தத் ப்ரஸாதோப்பரும்ஹித மனோவ்ருத்திஃ என்கிறபடிக்கும் ப்ரஸாதயஸ்வத்வம் சைநம் சரணாகத வத்ஸலம் ப்ராஸதயே த்வாம்

அஹமீசமீட்யம் கிருபாவிசிஷ்டனுகவும் ப்ரஸாத விசிஷ்டனுகவும், செய்யக்கூடாதவைகளை செய்திருக்கிறேன்; செய்யவேண்டிய வைகளை விட்டு இருக்கிறேன். இவைகளைப் பொறுத்துக் கொண்டு "நீ தேவன், ஆர்த்திகளின் துயரங்களை நீக்கும் ஸமர்த்தனுன பிரணதார்த்திஹரன் பிரபு வல்லவோ தாங்கள். நீர் க்ஷமித்தால் உம்மைக் ஏன் என்று கேட்பவர் யாருமில்லை. ஆகவே மறுப்பாரில்லாமை அல்லது ஸர்வஸ்வாமித்வம், ஸர்வஸமர்த் தத்வம் கொண்ட நீர், அஞ்சலி செய்த எனக்கு, அஞ்சலி பரமாமுத்ரஃ க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநி, ஒரு முறை வணங்கினு லும் எல்லாவற்றையும் அளித்துவிட்டும் இன்னும் போதாதே என்று வருந்தும் உதாரகுணமுடையவன்; அதுபோல அனஃன்ய ஸாத்யம் என்று என்னை) சரணமடைந்தவனை, நான் என் பிராணனைப்போல ரக்ஷித்து அருளுவேன். ஒருக்காலும் கைவிடமாட்டேன்." (253)

என்பிரபு ஸ்ரீமத்ராமசந்திரன் சிரித்துக்கொண்டு மேலும் சொன்னுர். "விரோதியாக விருந்தாலும் சரணம் என்று வந்தாலும் சரி; அல்லது பயத்தினுல் என்னைக் காப்பாற்று என்று சரண்யனுக வந்தாலும் சரி இருவிதங்களிலும் எதுவாகி லும் சரி பரவாயில்லை. அவனை அழைத்துக்கொண்டு வா." என்று பரம கிருபையுடன் உதார ஹ்ருதயத்துடன், ஸர்வ ரக்ஷகத்வம் வாய்ந்தவரும் (அமிதபல பராக்ரமரும், தயையாகிற அலர்மேல் மங்கையைத் தரித்த என் வேங்கட பிரபு, கரிவரதன், நீலலோஹிதன் ரங்கதாமன், காவேரிரங்கன், நாரதபிரியன்,) அருளிச் செய்தார்; (ஹே பிரபோ, நீர் மனது நிறைவுடன் இருக் கும்போது, ஸ்வாமி, ரங்கேசா, ஒருக்கால் நினைத்து, பயம் த்யஜத பத்ர மித்யபி ததத்ஸவஃ கேசவஃ, ஸ்வயம் கனகருணுநிதிர்குண கணேந கோபாயதி, அடர்த்தியான கருணை என்னும் நிதியை உடையவன், தனது திருக்கல்யாண குணங்களால் காத்தருள் வான் என்கிற நம்பிக்கையுடன் நாங்கள் சரணமடைகிருேம். லக்ஷ்மனை சீதாநாயகா, நீங்கள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும். ஆயிரம் தடவைகள் நமஸ்கரித்து நான் பிரார்த்திக் கிறேன். தன்னைப் பெறுகைக்கு தானே உபாயமாக நின்று, எல்லா வாக்கிய ரத்னங்களும் கோப்புண்ட ஏகவாக்யத்தாலே ஸித்தஸாத்யோபயங்களும், ஸித்தஸாத்ய பிராப்யங்களும் ஒன்றையொன்று விடாமல் பிரதானமாய் நின்று, இன்று ஸர்வ ஸங்க்ரஹம் என்கிருப்போல, இன்றென்னை பொருளாக்கி, நாராயணரஸத்தாலே ஜராமரணுதி கழிந்து நித்ய சிரஞ்சீவியாக,

அனந்தமான ஆராவமுதக் கடலிலே நித்யஸூரிக்கு ஒப்ப அனுபவி'' என்ருன். நின்னருளாங்கதியின்றி மற்ரென்றில்லேன் நெடுங்காலம் பிழை செய்து நிலைகழிந்தேன், உன்னருளுக்கு இனிதான நிலையுணர்ந்தேன் உன் சரணே சரண் என்றும் துணிபு பூண்டேன், மன்னிருளாய் நின்றநிலை யெமக்குத் தீர்ந்து வானவர்தம் வாழ்ச்சித்ர வரித்தேனுன்னை இன்னருளாலினி யெமக்கோர் பரமேற்ருமல் என் திருமால் அடைக்கலம் கொள் என்னை நீயே.'' அனுதியாக ஞான ஸங்கோசமில்லாத அயர்வறுமமரர்களுடைய ஆனந்தஸாகரத்தில் நிலைக்கப்பெற்று, அழுந்தப்பெற்று, ஆத்மாவுக்கு ஸ்வதஃ பிராப்தம் அடையச் செய்த தேசிகஸம்பந்தமுடைய லக்ஷ்மணு, சீதாராமா, நாராயணு, சரணம், சரணம்.) இந்த வார்த்தைகளைக் கேட்டது தான் தாமதம். ஸகல வானரர்களும் '' ஜய விஜயீபவ, ஜய சீதா நாயகாபவ, ஜயராமலக்ஷமண சீதா ஜயவிஜயீபவ என்று கோஷித்தார்கள். அங்கதனும் ஹனுமானும் சுக்ரீவ ஸகிதம் ஜயகிருபாளு ஸ்ரீராமசந்திரனுக்கு ஜயம் ஏற்படட்டும்; ''சீதா ஜயஹோ, ஜயமஹாலக்ஷ்மி ஜயஹோ,'' என்று சொல்லிக் கொண்டு உத்கோஷம் செய்துகொண்டு, விபீஷணனை கரா வலம்பம் செய்ய, ஸ்ரீராமலக்ஷ்மண ஸந்நிதிக்குக் கூட்டிவரச் சென்ருர்கள். (அப்பேற்பட்ட மஹானுபாவர்களுக்கு நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். கிருதக்ஞையுடன் நான் நமஸ்கரிக்கிறேன். வேதாந்ததேசிகனை முன்னிட்டு ஆயிரம் தடவைகள் நான் நமஸ்கரிக்கிறேன், பிரார்த்திக்கிறேன் கிருபாளு.) (254)

[தியானம்

ராமா சீதா, மஹாலக்ஷ்மி சமேத ரங்க நாராயணு, ராமானுஜ வந்தித ரங்கபதே, என்னிடம் கருணை செய்யமாட்டாயா ! உன் ஸ்வரூபத்தை என்னிடம் மறைக்கிருயே. உனக்கு ஸ்வாமித்வத்தைக் காட்டிலும் கிருபையாகிய காருண்யத்வம் மிக சிலாக்கியமானது என்று வேதவியாஸர், ஹரிதர், நாரதர், என் பூர்வாசாரியர்கள் அடிக்கடி சொல்லுகிருர்களே. நாரதர் பராசரர், சுகர் தியாகராஜர், துளசிதாஸர், சங்கரபகவான், உமை, தேவர்களுக்குத் தலைவரானவரும் சாவித்திரியின் பதியுமாகிற பிரும்மதேவர் சொல்லுகிருர்களே. நீர்தானே கிருஷ்ணனுக அர்ஜுனனுக்கு உபதேசித்த அக்ஷரவித்யை, நீர்தானே அவ்யக்தம். நீர்தானே உத்தராயண தக்ஷிணய மார்க்கம். நீர்தானே பிரகிருதியிலிருந்து விடுபட்ட பிரும்மம். உம்மைத்

தானே சதாசிந்தியவன் நித்யயோகியாகி, அனுவ்ருத்தி சப்தாத் அனுவ்ருத்தி சப்தாத் என்கிற புனர்ஜன்மமில்லாத நிலையை அடைகிறுன். பிரும்மலோக பரியந்தமுள்ள எல்லா உலகங்களும் அடிக்கடி தோன்றுவதும், அழிவதாகவும் இருக்கின்றன. "அர்ஜுனு, என்னை அடைந்தவர்களுக்கோ, மீண்டும் பிறப்பு கிடையாது. நான்தான் அழியாத அவ்யக்தம். நான்தான் நித்யமான அக்ஷரம். நான்தான் வாஸுதேவன். ஸர்வம் என்று பார்க்கும் ஞானியினுல் அடையப்படுகிறேன். நான்தான் பிரக்ருதியின் அத்யக்ஷன். நான்தான் துருவன் என்கிற சாஸ்வதமான சிம்சுமார சக்ரம். நான்தான் மயக்கத்தை உண்டுபண்ணும் ஆசுரமும் ராக்ஷஸமும்; நான்தான் தேவர்களையும் தண்டிக்கும் பயக்ருத் என்று மஹா விபூதியைப் பறைசாற்றினுயே." அதெல்லாம் எனக்கு எதற்கு? அர்ஜுனன் ஆஞ்சநேயர் போன்ற மஹாத்மாக்களுக்கு அவைகளைச் சொல். என் சம்பந்தப்பட்டவரையில் உனது நித்ய ஸம்பந்தத்தை விரும்பும் விஷ்வக்ஸேனரைப் போல, என்னை ஏற்றுக்கொள். நீதானே ஓங்காரமும் தாயும் தந்தையும் குருவும், சகியும் பந்துவும் சரணுகதி என்கிற தாரக பிரும்ம யோகமும், போஷகனும், பிரபுவும் ஸாக்ஷியும் ரக்ஷகனும் ஹிதத்தைச் செய்யும் ஸுஹ்ருத்தும், பிரபஞ்சகர்த்தாவாகிற ஹிரண்ய கர்ப்பரும், நரசிம்மமூர்த்தியுமான அம்ருத்யுவும், அழிவற்ற ஸ்தான மாகிற பரமபதமும், ஸ்திரீகளும் ராஜரிக்ஷிகளும் பிரும்ம ரிஷிகளும் வேண்டும் உத்தமகதியும், இந்திராதி தேவர்களும் நமஸ்கரிக்கும் அந்தர்யாமியும், ஸர்வயக்ஞங்களைப் புஜிக்கும் யக்ஞபதியும், சுக்ரர் பிரஹஸ்பதி அகஸ்தியர், பரத்வாஜர், ரிசீக புத்ரரான பரசுராமர் வணங்கும் ஹோதாவும், பொன்நிறமுள்ள ஸுபர்ணரும், ஹேமாங்கராக எனக்கு காக்ஷி அளிக்கிறீர். நான் உமது திருவடிகளைத் தவிர வேறு ஒன்றையும் அபேக்ஷிக்க வில்லை. உம்மைச் சிந்திப்பதைத் தவிர வேறு பிரயோசனத்தை கருதாதவனுகி, உம்மையே திருமாமகளுடன் கூடியவராக உபாஸிக்கிறேன். நீ விட்ட வழி நான் செல்லுகிறேன். நீ அழைத்துச் செல்லும் மார்க்கத்தில் நான் செல்லுகிறேன். நான் கொடுக்கும் பத்ரம் புஷ்பாதிகளை நீ ஸ்வீகரிப்பது போல, எனது ஆத்மாவை உனக்கு ஆஹுதி செய்து அர்ப்பணம் செய்து விட்டேன் பிரபோ. எனக்கு நீ ஸமதர்சி என்று தெரியும். உன்னை அடைந்தவன் கெட்டுப் போகிறதில்லை. உன்னிடமிருக்கும் பக்தி விஸ்வாசம் உத்தம கதியை அடையவைக்கிறது.

உமது பரத்வ நிலை எவ்விதமிருந்தாலும், பலவகைப்படினும், நான் உன்னை அகலாத அலர்மேல்மங்கை மார்பன் என்று அறிந்து மானிடப் பிறப்பிலும் ராமகிருஷ்ண அவதாரங்களிலும் ஆராத செல்வம் உடையவராகவும், தேராவிஜயனுக்கு திருநாரணன் என்றும், "அஹம்" "மாம்" என்கிற பதங்களால் என்ன கருணையோடு பெருமிதத்துடன் தன்னையே சுட்டிக்காண்பித்தாயே, அந்த பரத்வ சௌலப்யத்தை எனக்கு, சீதை ஸந்நிதியிலிருந்து பேசும் எனக்கு, கொடு. உன்னையே கொடு, உன் தஞ்சத்தையே கொடு. நம்மாழ்வார் நின்ற நிலையைக் கொடு. தாமரை போன்ற கழல்களைக் கொடு. கண்ணா, ராமா, நாகணைமேல் வீற்றிருக்கும் யோகியே, நன்முடிவீரனாகிற பார்த்தனுக்கு என்ன முக்யத்வம் கொடுத்தாய். அது உனது ஸ்வரூபமா, பரத்வமா, ஸ்வபாவமா, இயற்கையான ஸ்வ பிரவிருத்தியா, அல்லது காருண்ய வாத்ஸல்ய ஔதார்யமா? சீதா ராமானுஜா, நீங்கள்தான் எனக்குச் சொல்லவேண்டும். வாஸவன் மைந்தனாகிற அர்ஜுனனும் வஸிஷ்ட ஸ்ம்ருதியின்படி நடந்த திரௌபதியும் சொல்லட்டும். சத்யமூர்த்தி, மஹாதபஸ், தர்மமே, போக்தாவே, சொல், சொல்.)

(என்ன கிருதக்ஞதை, உதாரவாத்ஸல்யம், ஸர்வ சேஷித்வம் நம் பெருமாளுக்கு இப்போது இருக்கிறது என்று வியந்தார்கள். ஆஞ்சநேயர், சுக்ரீவ அங்கதஜாம்பவாதிகள் பகவானுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்து அவரை ஸ்துதி செய்தார்கள். இதுவல்லவோ பரமபுருஷார்த்தம். தனக்கேயாக எவனைக் கொள்ளுமிதே எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பே, என்கிறபடி தன்னோடுதான் பண்ணுகிற உத்தாரண கைங்கர்யத்தில் எங்களைக்கொண்டு துவக்கம் செய்கிறாரே, நிரதிசயமான போக்யத்தை, நித்ய ஸித்தபிராப்யத்தை, பரிபூர்ண ஆனந்தத்தை, அனாவ்ருத்தி சப்தாத் அனாவ்ருத்தி சப்தாத் என்கிற நபுனராவிர்த்த பதத்தை என்ன சுலபமாக அளிக்கிறாரே பிரபு. ஸ்ரீமத்ராமாயணத்தில் ஸப்ராதுః சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தனః சீதாம் உவாசாதியசா ராகவம் ச மஹாவ்ரதம்; அஹம் ஸர்வம், பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா கிரிஸானுஷுரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யமி, ஜாக்ரதః ஸ்வப்நஸ்ச; இவற்றில் தோன்றின பரம ஹிதத்தையும் அவருக்கே விலக்ஷணமாக ஏற்பட்டதான அதிகாரி க்ருத்யமும், விபீஷணனைப் போன்ற சரண்ய கிருத்யத்தையும், அதைச் சொல்லிய எங்களது போன்ற க்ருதகிருத்யத்தையும் நாம் என்ன

விதமாகச் சொல்லப்போகிறோம்? ஸ்வாமி, நாராயணா, அனன்ய சரணனே, ஸ்ரீரங்கேசாய, அஹம் ஹரிः ஸர்வமிதம் ஜனார்தனः நான்யத்தः காரண கார்யஜாதம் என்று பராசரர் சொல்லியபடி ராஜகோபாலனை வத்ஸங்களை முன்னிட்டு ஸ்ரீரங்க பாதுகைகளையும், ஓங்கார விமானத்தையும் பரவாஸுதேவ ஸந்நிதியில் சரணமடைகிறேன்'' என்கிற மனோபாவத்துடன் விபீஷணனை ராமலக்ஷ்மண ஸந்நிதியில் அழைத்துவரச் சென்றார்கள். ரகுபதி கருணாநிதி, எங்களிடமும் இவ்விதம் இருப்பாரா, ஸதா இருப்பாரா என்று அந்த வானரர்கள் நினைத்தார்கள்.) விபீஷணனையும் அவனுடைய சகாக்களையும் முன்வைத்து (ஸ்ரீரங்க க்ஷேத்ரமாகிய) ரகுநந்தனின் ஸந்நிதிக்கு மரியாதையுடன் அழைத்து வந்தார்கள். அவர்கள் வரும்போது எல்லோருடைய கண்களிலும் ஆனந்தப்பெருக்கு ஏற்பட்டது. (திருமாமணி மண்டபத்தில் நித்யஸுரிகளுக்கு ஏற்படும் ஆனந்தம் போலவிருந்தது. ரஹஸ்யநவநீதம் என்கிருப் போலே எல்லோருக்கும் தோன்றியது.) தூரத்திலேயே விபீஷணன் ராம லக்ஷ்மண சஹோதரர்களைப் பார்த்து சாக்ஷாத்காரமாக சுக்ருதபிரணாமம் செய்தான், அடிக்கடி அடிக்கடி செய்தான். (பிரதக்ஷிணம் செய்துகொண்டு நமஸ்கரிக்கும் விபீஷணன் ஸ்ரீராமானுஜன் காட்டிய சரணாகதன் போல, அர்ஜுனன் பயத்துடனும் ஆச்சர்யத்துடனும் ஸஹஜ ஸ்நேகத்துடனும் மஹாவிஸ்வாசத்துடனும் காட்டிய ''த்வமேவ மாதாபிதா சத்வமேவ, த்வமேவ ஸர்வம், மமதேவ தேவ'' என்று சொல்லி நமஸ்கரித்தான்.) (255)

பகவானுடைய திருமேனியின் மங்கள விக்ரஹ அழகைப் பார்த்தான் விபீஷணன். (அகில லோக ப்ரத்யநீக கல்யாண குண ஸம்பன்னன். பரமயோகிகளின் வாக்கு மனத்திற்கு எட்டாத ஸ்வரூபம் உள்ளவன். நித்யநிரவத்ய நிரதிசய அழகு அத்புத சௌந்தர்ய ரூபம் ஸௌகந்திக ஸௌகுமார்ய லாவண்ய யௌவன திவ்யரூபம். மாதுர்ய காம்பீர்ய கல்யாண குணங்கள் நிரம்பிய மஹார்ணவம் போல பிரபு நீலமேக ஸ்யாமளன், நீல மரகதமணி மாமலைபோல குளிர்ந்த செந்தாமரைக் கண்களுடன் வீற்றிருந்தான். அவருடைய நிரதிசய அழகு திருவுக்கும் திருவாகிய செல்வன் என்று விமர்சனம் செய்வதுபோல விருந்தது. நேயமுடன் திருப்பாவை பாமாலை பாடியவளும் தூய திருமகளாய் வந்து அரங்கனார்க்குத் துழாய் மாலைமுடி சூடக்கொடுத்த மாதாவாகிற ஆண்டாள் கண்டுமயங்கும் அம்ருதவபுः,) பார்த்துப் பார்த்து அந்த விபீஷணனுடைய தாகம், பார்க்கும் ஆசை, கண்களின் ஈர்ஷை தணியவில்லை. இமைகூட

கொட்டுவதற்கு அவனுடைய கண்கள் தயங்கின. (ராமா, எனக்கு எப்போது உன் சுபதரிசனத்தைக் கொடுக்கப்போகிருய்?) விபீஷணன் பார்த்தவன் பிரபுவைப் பார்த்துக்கொண்டே யிருந்தான். பகவானுடைய விசாலமான புஜங்கள். சிகப்பு கமலபுஷ்பம் போல நேத்ரங்கள். சரணுகதர்களின் பயத்தை அடியோடு நாசம்செய்யும் ஸ்யாமளகாத்ரம். பிரணதபால் என்கிறபடி பயத்தைப் போக்கி அருள்சுரக்கும் நேத்ரங்கள். (256)

சிம்மத்தைப் போல தோள்கள், விசாலவக்ஷ ஸ்தலம் அத்யந்த சோபையுடன் காமதேவனைப் பழிக்கும் அத்புத ரூபம். மன்மதனை மயக்கி திகைக்கவைக்கும் மோஹன ராமன். அவருடைய வதனம் அமிதமான ஐஸ்வர்ய விபவங்களால் அதி சோபையுடன் மந்தஹாஸத்துடன் அலைகள்போல கேசபாசங்களின் வரிசைகள் ஜடையாக அலங்கரித்திருந்தபடித் தோன்றும் (சிங்கார வேலனுடைய) அருள்முகம் போலவிருந்தது. பகவானுடைய அத்யந்த புருஷோத்தம ரூபத்தை, (அந்த ரங்கசாயியை) பிரபுல்ல லோசனங்களால் பார்த்தான் விபீஷணன். நயனங்களிலிருந்து ஸ்வானுபவத்திஞல் யேற்பட்ட ஆனந்தக் கண்ணீர்கள் உதிர்ந்துகொண்டிருந்தன. (க்ருபயாநாத, அனன்யகதியில்லாத எனக்கா இவ்வளவு க்ருபை. புண்டரீகாக்ஷனுடைய விபவம் இதுவா என்று மெய்சிலிர்த்துக் கொண்டு,) பிரபுவை சிலாகித்துக்கொண்டே விபீஷணன் அத்யந்த புளகாங்கிதமடைந்தான். பேச நாவெழவில்லை. நாஞவித புஷ்பங்கள் ஜடையிலும், மார்பிலும் இருந்தன). (அனந்தபோகினி, அனந்த ஸௌகுமார்யம்.) தைரியப்படுத்திக் கொண்டு கோமளவசனங்களால் விபீஷணன் வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். (257)

"ஸ்வாமி, நான் தசானனன் ராவணனுடைய தம்பி. பிறப்பில் ராக்ஷஸன். தேவதைகளின் ரக்ஷகனே, எனது ஜன்மம் புலஸ்திய வம்சத்தில் ராக்ஷஷனுக யேற்பட்டிருக்கிறது. தாமஸ குணங்களால் ஆக்ரமிக்கப்பட்டவனுக ஸதா ஹிம்சையைத் தொழிலாக உடைய சரீரம்; ஸ்வபாவமாய் பாபம்செய்வதில் பிரியமுள்ள மனம்; காளராத்திரியின் இருட்டுப்போல ஞானமில்லாத ஆத்மா; ஜீவன் அஹங்காரம் நிறைந்தது; சரீர ஆத்மஸம்பந்தம், ராத்திரிக்கும் ஆந்தைக்கும் உள்ள ஸஹஜ ஸ்நேகிதம் போல, ஞானமில்லாத பாப சித்தமுள்ள ஆத்மா." (258)

"ஸ்வாமி, தாங்கள் அவதரித்திருக்கிறீர்கள் என்று கேள்விபட்டேன். தங்களுடைய சுபமான கீர்த்தி பிரபாவங்களையும்



பிரபு, சரணாகதவத்ஸலா, என்னை ரக்ஷிக்க வேண்டும் என்று தண்டம் செய்யும் விபீஷணனை பிரபு அதிக அன்புடன் எழுப்பி, ஆஸ்வாசப் படுத்தினார். விபீஷணனுடைய தீனமான வசனங்களைக் கேட்ட பிரபு, மனத்தில் ஆற்றாமை கொண்டு, விபீஷணனை தன் ஹ்ருதயத்துடன் இறுகத் தழுவிக்கொண்டார்.

கேள்விப்பட்டேன். சுபாஸ்ரயமான தங்கள் திருவடிகளின் மகிமைகளையும் கேள்விப்பட்டேன். எனது ஜனனமரணப் பிணியைத் தீர்த்துவைக்கும் வைத்யநாத நாராயணா, என்னைக் காப்பாற்றும், என்னைக் காப்பாற்றும் ஸ்வாமி. (நான் அசரண்ய சரண்ய அனன்ய சரணஃ த்வத்பாதாரவிந்தயுகளம் சரணமஹம் பிரபத்யே ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் பிரபத்யே ஸ்ரீமதே நாராயண நமஃ என்று த்வயத்தை அநுஸந்தித்துக் கொண்டு ஒழிவில் காலமெல்லாம் முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம், தெழிகுரவருவி திருவேங்கடத்து எழில்கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கே என்று சரணம் புகுந்தான் விபீஷணன்.) சுபாஸ்ரயமான ஸ்ரீராமனுடைய திருவடிகளைச் சரணமடைந்தான். "சரணாகதர்களுக்கு ரக்ஷணம் தரும் ரகுவீரா, என்னுடைய துக்கங்களைப் போக்கி, எனக்கு உமது ஸம்பந்தத்தால் ஏற்படும் ஆனந்த சுகத்தைத் தாரும் ஸ்வாமி, பிரணதார்த்தி ஹரா." (259)

இவ்விதம் சொல்லிக்கொண்டு மீண்டும் தண்டம்செய்யும் விபீஷணனை பிரபு பார்த்தார். வாரி எழுந்து அவனைத் தனது திருக்கைகளால் தூக்கினார். விசேஷமான பரபரப்புடன் அவனை அணைத்துக்கொண்டார் தீனபந்து. (தீனவசனங்களால் சொல்லப்படும் விபீஷண வசனங்களைக் கேட்டுப் பொறுக்கமுடியாமல் "வேகவான்," என்று சொல்லும்படி பிரபு பரபரப்பினால் மனத்தில் தேய்ந்துபோனார். சீதையைப் பிரிந்து நினைத்து வாடும் ஸ்ரீராமன் தனது துக்கத்திலும் பிறர் துக்கத்தை பெரிதாகக் கருதும் அரௌத்ரராக கடுமை தணிக்கப்பட்ட ஸௌம்யரூபி, அரவிந்தாக்ஷர், மஹார்த்தர்), (தவாஸ்மி தாஸஃ என்று சொல்லும்) விபீஷணனை வாரி ஹ்ருதயத்துடன் இறுகக் கட்டி அணைத்துக் கொண்டார். (260)

[தியானம்

பரமேஸ்வரி, நாராயணா, உன்னிடம் அடைக்கலம் கொண்ட சீதையை, ஹரிவக்ஷஸ்தலையாகிற மஹாலக்ஷ்மியை, ஆஸ்ரயித்து உன்னை சரணமடைகிறேன். தேவி, உன்னுடைய பிரேரணையின்றி, நான் எம்பெருமானுடைய ஸம்பந்தத்தை அடைய முடியுமா? பகவதி, உன்முகத்தைப் பார்த்துக்கொண்டுதானே, அதைத் துணையாகக் கொண்டுதானே பெருமாள் லீலைசெய்கிறான். துர்க்கே, அப்பேற்பட்ட நீ எனக்கு ஸ்வஸ்தி வசனம் செய்ய வேண்டும். எனக்கு நீ க்ஷேமத்தை நினைத்தால்தான் பகவான்

என்னிடம் அனுக்ரஹமுள்ளவராவார். ஏனென்று கேட்பாயோ? உன்முகம் தர்மத்திலும், உள்ளம் பகவானுடைய ஹிருதயத்திலும், என் உள்ளம் உங்கள் பாதங்களிலும் பதிந்திருக்கிறது. தேவி, என் அஞ்சலி பந்தத்தை நீ எவ்விதம் கருதுகிருயோ, அதுதான் பகவானுக்கும் தோன்றுகிறது. எனக்கு ஐஸ்வரியம் வேண்டுமா, ஜீவாத்ம அனுபவம் வேண்டுமா, பரமபதம் வேண்டுமா, இல்லை இதுவும் போதாது நாம் ஒன்றும் இவனுக்கு செய்யவில்லையே, என்று நினைத்து லஜ்ஜைப்பட்டு, எனது ஆகாசத் தாமரையை மலரவைக்கிருயே. அதுமாத்திரம் இல்லை தேவி. உனது மகிமை பெருமாளுக்குக்கூட தெரியாது. உனக்குக் கூடப் புரியாது. ஏன் என்று கேட்பாயா? நான் படைப்பிற்கு முன் பிறந்ததில்லை. படைத்த பின்பும் உங்களது பெருமைகளை அறியமுடிகிறதில்லை. உங்களுடைய மாயையில் அமிழ்ந்துபோய் மயங்கிக் கிடக்கிறேன். ஆனுல் நீ உன் இச்சையினுலேயே உனது ஸ்வதந்தரத்தினுலும் பகவானுக்கு பரவசமடைகிருய். சேஷபூதையாக ஆகிருய் அம்மா. அந்த பகவானும் உனது ஆதீனத்தில் இருப்பதால் உன்னுடைய மோஹன உல்லாஸ பார்வைகளுக்கு அடங்கியிருப்பதால், இயற்கையாகவுள்ள காந்தியினுல் ரத்னம் பிரகாசிப்பதுபோல, உனது சேர்க்கையினுல் பெருமாள் ஸ்ரீவிபாவனராக விளங்குகிருர். ஸுர்யனுடைய பிரபையைப்போலவிருக்கும் நீ பெருமாளுடைய கல்யான குணங்களைப் பிரகாசப்படுத்துகிருய். அப்பேற்பட்ட லக்ஷ்மி, சீதே, இன்று ராமனைவிட்டு லங்கையில் தேவமாதர்களிடம் புகுந்து, தேவசத்ருவை அழிக்கவும், தேவமித்ரனுகிற விபீஷணனை ராமனிடமும், அந்த விபீஷணனை என்னிடமும் சேர்க்க உதவியிருக்கிருய். பிராட்டியும் எம்பெருமானும் சேர்ந்தே, நீங்கள் எனக்கும் விபீஷணனுக்கும் சேஷியாக இருக்கிறீர்கள். எம்பெருமானிடம் சத்ருக்களை அழிக்கும் சக்தியிருக்கிறது. அந்த சக்தி அனுகிரஹமாக மாறும் சக்தி பிராட்டி, உன் கையில், உனது சங்கல்பத்தில், பதிந்து இருக்கிறது. தயை, கருணை, பொறுமை, பகவானுக்கு ஸ்வசங்கல்பத்தால் அடங்குதல், பகவானின் கோபத்தை அடக்குதல், புருஷகாரம் செய்தல், ஆசார்ய ஸம்பந்தம் பெறுதல், ஆகிய எல்லாம் தேவி உன்னிடத்தில் இருக்கிறது. உன்னை அலக்ஷ்யம் செய்தால் கருடன் சாண்டில்யையை அலக்ஷ்யம் செய்தபோது இறக்கைகளை இழந்து தவித்தானே; பிள்ளை பிள்ளையாழ்வாரிடம் கூரத்தாழ்வான் தயைகொண்டு, "மனுேவாக்கு காயம் மூன்ருலும் பாகவத அபசாரம்

ஏற்படாமல் இருக்கக்கடவீர், எனக்கு உதகதானம் செய்வீர்,'' என்று கேட்டு அதை ஸ்வீகரித்துக்கொண்டதுபோல, நானும் பாகவத அபசாரப்படாமல் விபீஷணனுல் அனுக்ரஹிக்கப்பட வேண்டும். அந்த விபீஷணன் உன்னை ராமனிடம் சேர்ப்ப தற்காக ராமனிடம் வந்தான். நீ அவன்பால் கிருதக்ஞை கொண்டாய். அவனும் அதனுல் உன் பிரஸாதத்தை அடைந் தவன். அவனுல் நானும் உன்னை அடைகிறேன் அல்லவா? என் கிருதக்ஞை விபீஷணனுக்கும், அவனுக்கு என்பால் கருணை கொள்வதற்கு, கருடன் காலவருக்குப் போலவும், பிள்ளை பிள்ளை யாழ்வாருக்கு கூர்த்தாழ்வான் போலவும், விபீஷணன் அல்லவா காரணம். அந்த விபீஷணனை நமஸ்கரித்து ரெங்கநாயகி ஸமேத ரங்கராஜனை, நான் இருவர்களையும் சேர்த்து ராமானுஜர் ஸேவித்ததுபோல, விபீஷணன் ஆஸ்ரயித்ததுபோல, ஒரே தத்வமாக ஸ்வீகரித்து நான் சரணம் அடைகிறேன்.]

அதன் பிறகு தம்பி லக்ஷ்மணனைக் கண்டான் விபீஷணன். அவனையும் நமஸ்கரித்தான். அதன் பிறகு லக்ஷ்மணனுடன் கூடிய ராமன் விபீஷணனை தனது பக்கத்தில் அமரச்செய்தான். (பயநாஸரான) பகவான் (பாகவத ஸம்பந்தம் பெற்ற) விபீஷணனை பயம் தெளிவிக்கும் மிருதுவான வசனங்களைக் கூறினர். ''ஹே லங்கேசா, உன்னுடைய மித்ரர்களை அழைத்துக்கொள். உங்களுடைய க்ஷேமவிலாஸங்களைப் பற்றிச் சொல். உன்னைச் சேர்ந்த பந்து மனைவி புத்ரர் ஸுஹ்ருத் யாவரும் சௌக்கியமா?'' (261)

''உன்னைப்பார்த்தால் ஸாது ஸம்பந்தம் பெற்ற பரம வைஷ்ணவன் மாதிரியிருக்கிருய். ஆனுல் உன் சூழ்நிலையோ, நீ வசிப்பதோ, தினமும் ராத்ரியும் துஷ்டர்களுடைய மண்டலத் தில் நித்ய ஜீவனம் செய்கிருய். என் பிரியசகா, நீ ராக்ஷஸ தர்மத்தை எவ்விதம் அனுஷ்டிக்கிருய்? எனக்கு உன் போக்கு, ரீதி எல்லாம் தெரியும். ராவணனிடம் நீ சொல்லிய நீதிபோதனை களையும் நான் அறிவேன். உனது சூழ்நிலை மிக மோசமாக விருந்தும், எவ்விதம் நீ தர்மத்தில் பற்றுதல் உள்ளவனுகவும், அநீதியில் ருசியில்லாதவனுகவும் எவ்விதம் நீ விளங்குகிருய்?'' (262)

''என் பிள்ளாய், ஒரு வசனம் உண்டு. அதை நீயும் கேட்டிருக்கலாம். நரகலோக வாழ்க்கை ஸாது ஜனங்களின் சங்கமத்தை அடையாதவர்களுடைய வாழ்க்கையைவிட மிக சிலாக்யமானது என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

("ஹே பகவான், எதைக் கொடுக்காவிட்டாலும் எனக்கு வருத்தம் இருக்காது. துஷ்டர்களின் ஸங்கத்தை மாத்திரம் எனக்கு கொடுத்துவிடாதே. நான் கேட்கும் வரம் இதுதான்" என்று பெரியோர்களாகிற ஸாதுக்கள் வேண்டுவார்கள்). அதற்கு விதிவிலக்காக நீ எவ்விதம் இருக்கிறாய்? எவ்விதம் வாழ்கிறாய்? (சேறிலும் சகதியிலும் வாழும் தாமரை மலர் போலப் பிறந்து என்னை மலர வைக்கிறாயே), விபீஷணா! உன் ஆத்ம கதையை முழுவதும் உன் வாயால் சொல்" என்று கருணாநிதி, (ஸர்வ அந்தர்யாமி, ஸ்ரீவிபாவனராகிய) ஜானகி நாதன் பிரேமையுடன் கேட்டார். விபீஷணன் பதில் சொன்னான். "ரகுராய், உமது பாதசரணங்களைப்பற்றிய எனக்கு, (பிராட்டி அனவரதமும் தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் "குற்றமற்ற தேஜஸ்ஸை உடைய விஷ்ணுவினிடத்தில் அவனுக்கு விபூதியாய் அவனிடம் ஈடுபட்ட மனத்தினளாய் வேறுபயனில் பற்றற்ற வளாய் ஸ்திரமாக நின்று தனது ஆத்மாவை "பிரபு, தத்விஷ்ணோ:" என்னும் மந்திரத்தால் ஆஹுதி செய்யும் தங்களுடைய பார்யையான ஜானகியை நினைத்து) அவள் தொழும் தங்களது பாததர்சனங்களை அடைந்த பிறகு என்னுடைய யோகக்ஷேமங்களுக்கு என்ன குறைவு இருக்கக் கூடும்? நீங்கள் (இருவர்களும்) என்னை தங்கள் தாஸன் என்று கருதி, தயைசெய்து, (ஸ்ரீவத்ஸதாமா), ஆட்கொண்டிருக் கிறீர்கள்." (263)

"ஸ்வாமி, (பாஞ்சராத்திரத்தில் மிக ரஹஸ்யமான பெரிய பிராட்டியின் புருஷகாரம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது லக்ஷ்மி தனது நாதனிடம், "என்ன இது, இவ்வுலகில் குற்றம் செய்யாதவன் யாராவது இருக்கிறானா?" என்று வாதாடி மாதாவைப்போல அந்த மனிதனுடைய குற்றங்களை பகவானை விட்டு மறக்கச் செய்கிறாள், ஸாபாரதிகளிடம் ஸ்வயம் ஹிதைஷியாக, தண்டகரனான சேதனனை உம்முடைய சீற்றத்தி லிருந்து காப்பாற்றி உங்கள் இருவர்களுடைய ஸஹஜ காருண்யத்தைக் கொடுத்து அவனை உஜ்ஜீவிக்கச் செய்து, உங்களை அவிக்ஞாதா, என்கிற பெயருக்கு ஏற்ப, காப்பாற்று கிறாளே. அந்த அல்லிமலர் மகள் போகமயக்குகளால் மயங்க உம்மை வைக்கிறாளே ஸ்வாமி, அந்த பெரிய நாச்சியாரின் அபிமானத்தை ஒட்டி நான் தங்களைச் சரணமடைந்திருக்கிறேன். அந்தப் பெரும்பேறை என் பிராதா ராவணன் அடையவில்லை. ஸ்வாமி, தாங்களே சொல்லும்.) உங்கள் இருவர்களுடைய

கிருபாகடாக்ஷமின்றி, ஜீவன் ஸ்வப்னத்திலும் மனத்தில் சாந்தியையும் சௌபாக்யங்களையும் அடைய முடியுமா? (முகில் வண்ணனடியை யடைந்தருள் சூடி யுய்ந்தவன் என்றும், அகிலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா, என்னை யாள்வானே, திருவேங்கடத்தானே, புகல் ஒன்றில்லா அடியேன் உங்கள் கீழமர்ந்து புகுந்தேனே, என்கிறபடி ஸ்ரீமந் நாராயணு,) உங்கள் இருவர்களுடைய திருவடிகளை ஆஸ்ரயிக் காமல், விஷய போகங்களில் ஆத்மேஸ்வரர்களாக திகழும் அகங்கார மமகார புருஷர்கள் கடைசியில் அழியாத சோகத்தை யும் அமங்கள கிர்த்திகளையும் அல்லவோ அடைகிருர்கள். (இந்த விஷயத்தில் ஸ்வாமி, ஸர்வக்ஞராகிய தாங்கள் என்னைச் சோதிக்க லாமா? லங்கையில் தங்கள் பிராட்டி செய்யும் வ்ரத தபஸ்ஸை அறிந்துகொண்டும் ராவணனுடைய குற்றமுள்ள செய்கைகளை அறிந்துகொண்டும், ராவணனுக்கு இதுவரை அடிமை செய்த என்னுடைய குற்றங்களையும் தெரிந்துகொண்டும், க்ஷமிணும்வரர், பதைபதைக்காமல் தண்டிப்பதை விட்டுவிட்டு, பொறுமையை வ்ரதமாக ஏற்று பிராட்டியும் தாங்களும் அக்ரூரராக கோதண்டத்தை எடுத்தும் லங்கையை முழுவதும் அழிக்காமல், பிரபு, கொல்ல மனமில்லாமல் பொறுத்திருந்தீர்களே, உங்களுடைய கருணை அல்லவா என்னைத் தங்களிடம் சேர்த்தது. நான் எவ்விதம் "பேசலராகவிருக்கும்" தங்களை, பக்தர்களைக் காப்பாற்றும் அவஸ்தையில் நிரதிசய அழகுடன், பொறுமை யுடன், செய்கையிலும் மனத்திலும் வாக்கிலும், வடிவத்திலும், மஹா அழகுடன் பொலியும் உங்கள் இருவர்களுடைய வடிவங் கள்), என்னை ஸ்வாமி, ஸர்வஸங்கத் தியாகம் செய்யச் சொல்லி, பிதரம் மாதரம் தாரான் புத்ரான் பந்தூன் ஸகீன் குருன், ரத்னனி, தனதான்யானி க்ஷேத்ராணி ச க்ருஹானிச ஸர்வ தர்மாம்ஸ்ச ஸமித்யஞ்ய ஸர்வகாமாம்ஸ்ச ஸாக்ஷரான், லோக விக்ராந்த சரணௌ ஶரண் தே5அவ்ரஜம் விபோ, என்று ஸகல பந்தங்களாகிற பகவத் பிராப்தியின் விரோதிகளை அறுத்து, தங்களுடைய கிருபையினல் லோபமோஹமத்ஸர மதஅபிமானம் அவித்யைகளை நாசம் செய்து உங்களை ஏகமாக பஜித்து பஜித்து வருகிறேன்.) (264)

அதனுல் ஏன் ஹ்ருதயத்தில் தாங்கள் எப்பொழும் வசிக்கிறீர்கள். எனக்கு லோபம் மோஹம் மாத்ஸர்யம் மதம் அபிமானம், க்ரோதம், அசுபமானமதியால் ஏற்படும் யாவும், தங்கள் கிருபையால் கிடையாது. எனது ஹ்ருதயக்

கோயிலில் சரசாப கோதண்டதரனுக, வில்லும் கையுமாக, அம்பும் கையுமாக, (அம்பராத்தூணியுடன் கூடியவராக என் ஹ்ருதய குஹையில் வீற்றிருக்கும் ஹ்ருஷிகேசா, தக்ஷராகவும், இன்சொல்லால் என்னைத் தேற்றிய தக்ஷிணராகவும், ரக்ஷண ராகவும், ஸ்வாமி, எனக்கு அன்று கஜேந்திரனுக்கும் முதலேக்கும் வாழ்க்கை அளிவித்த மாதிரி, ஜீவனராகவும், அன்பிஞல் பர்யவஸ்திதராகவும், தர்ம நிலேயராகவும், என் துன்பத்தை நீக்க மார்க்கம் தெரிந்த வித்வத்தமராகவும், ஸம்சாரபந்தத்தை அறுப்பதிலும் கருணேகாட்டுவதில் நிகரற்ற பரபரப்பை உடையாவீதபயராகவும்,) தாங்கள் விளங்குகிறீர்கள். அதனுல் அல்லவோ நான் குற்றமுள்ள வழியில் போகாதபடி ரக்ஷிக்கப் பட்டு தங்களிடம் தங்கள் கிருபையினுல் உந்தி தள்ளப்பட்டிருக் கிறேன். (விராமரே, என்னேயும் தயவு செய்து தாங்கள் ஸ்வீகரிக்கவேண்டும்.) (265)

(அது மாத்திரமில்லே ஸ்வாமி, ஒரு தடவை தாங்கள் என்னே ஸ்வீகரித்த பின்பு மீண்டும் என் குற்றங்களால் தங்களுக்கோ, தங்களுடைய பக்தர்களுக்கோ, என்னுல் ஏதேனும் அபசாரம் நேராமல் மஹா விரதம் உள்ளவராக என்னேக் காப்பாற்றி, தங்க ளிடம் நான் அனந்த விஷ்வக்ஸேன கருடாதிகளேப் போல நித்ய ஸம்பந்தம் பெற அருளவேண்டும். அதற்கும் விரோதிகளான எனது ஸ்வரூப ஸ்வபாவங்களே மாற்றி அமைத்து, என்னேப் பணி கொள்ளவேண்டும்) பிரபோ, ஜீவர்களுடைய மமதை தங்கள் மாயையினுல் ஏற்படும் பரிபூர்ண அவாப்த ஸமஸ்த காமனுகிற தங்கள் ஸம்பந்தத்தை விட்டு விலகும்படி செய்து விடுகிறது. காளராத்திரி போல அக்ஞானத்தையும் ஞான அனுஷ்டானங்கள் பரிபூர்ணமாக விருந்தாலும் பாகவத அபசாரத்தை உண்டாக்கும் படி ராகத்வேஷாதிகளேயும் உண்டாக்கிவிடுகிறது. அதனுல் அவன் மோசம் போய், விஷயபோகங்களில் அமிழ்ந்து, தங்களுடைய திருவடி ஸம்பந்தம் பெருதபடி போய் விடுகிருன். அப்பேற்பட்ட மமதை ராகத்வேஷங்கள் நிறைந்த காளராத்திரி, விஷய போகிகளான ஆந்தைகளுக்கு ஸர்வ சம்மதமாகவிருக்கும். எப்பொழுது தங்களுடைய திருவுள்ள ஸம்மதத்தினுல் ஏற்படும் கிருபா பிரதாபங்கள் உதையமாக வில்லேயோ, அந்த சூர்யன் அவனுடைய ஹ்ருதயத்தில் பிரகாசிக்கவில்லேயோ, அதுவரை, பிரபோ, அவன் அந்த ஜீவன், நித்ய ஸம்சாரியாகி விடுகிருன். (அவனுக்கு ஆசார்ய ஸம்பந்தமும், பிராட்டியின் கருணேயும், பகவத் பிராப்தியும் கிடைக்கிறதில்லே. அல்லது அவைகள்

கிடைத்தாலும் பகவத் ப்ராப்திக்குப் பின்பு ஏற்படும் ஸ்வரூப விரோதிகளும் நசிக்காமல், முளைத்துக் கொண்டு, அவனுடைய விநாசத்திற்கு ஹேதுவாகின்றன. ஆதலால் தங்களுடைய கிருபை தான் பிரபத்திக்கு முன்பும், பிரபத்திக்குப் பின்பும் மிக முக்யமாக விருக்கிறது. பக்த வத்ஸலா, நீர்தான் எனக்கு கிருபை செய்யவேண்டும்.) (265)

(கமலையின் புருஷரான) ஸ்ரீராமா, (இன்று மஹாதுவாதசி போல), நான் தங்களுடைய சிறந்த சரணாரவிந்த பாதங்களை தர்சனம் செய்தேன். இப்பொழுது நான் இருக்க வேண்டிய இடத்தில் இருக்கிறேன். என் யோகக்ஷேமம் தங்கள் கிருபா கடாக்ஷத்திலிருக்கிறது. என்னுடைய பயம் என்னைக் காப்பாற்றும் பொறுப்பு இன்றுடன் தீர்ந்துவிட்டது. (என் நிக்ருஷ்ட ஜன்மத்தில் வந்த தோஷம், மஹாபாகவத விலக்ஷண வைஷ்ணவர்களான ஆஞ்சநேய, ராமானுஜ, சுக்ரீவ வானராதிகளைக் கண்டு தணிந்து போய்விட்டது. இந்த வைஷ்ணவ ஸம்பந்தம் என்னைக் காப்பாற்றிவிட்டது. ராமபதமாகிற சீதா லக்ஷ்மணராம ஸந்நிதியை நான் அடைந்துவிட்டேன்.) கிருபாளு, உம்முடைய தயையினுல் நான் அடையப் பெற்றேன். நீர் மனம் உவந்து அனுகூலராகவிருந்தால், அந்தக் கிருபையினுல் அல்லவா மூன்றுவித தாபங்கள் மனிதனைத் தாக்குகிறதில்லை. ("த்வம் கேவலம் மதீயயைவதயயா நிஸ்ஸேஷ வினஷ்டஸ ஹேது கமச் சரணார விந்தயுகளை காந்திகாத்யந்திக பரபக்தி பரஞான பரமபக்தி விக்ன: மதிபிரஸாதலப்த மச்சரணார விந்தயுகளை காந்தி காதியந்திக பரபக்தி பரஞான பரமபக்திஃ மதிப்ரஸாதா தேவ ஸாக்ஷாத் கிருதயதா வஸ்தித மத்ஸ்வரூப ரூபகுண விபூதி லீலோப கரண விஸ்தாரஃ" என்கிறபடி மீண்டும் பிராட்டியுடன் கூடிய உமது கிருபையை நான் வரதானமாகக் கேட்கிறேன்.) கிருபாளு தாங்கள் இருவர்களும் எவ்விதம் சங்கல்பிக்கிறீர்களோ, எந்த மாதிரி அனுகூல ஸம்பன்னர்களாக விருக்கிறீர்களோ, அது மாதிரி தான் எல்லாம் நடக்கும். என்னிடம் தாங்கள் அருள் பாலித்தால் நான் ஆதி ஆத்மிக ஆதிதைவிக, ஆதிபௌதிகம் என்று சொல்லப்படும் மூன்று வித பிரக்ருதி தோஷங்கள், தாபங்கள் விலக்கப்பட்டு, தங்கள் ஸம்பந்தத்தைப் நித்யமாக பெறுவதற்கு யோக்யதை உண்டாகும். (ஜன்மக் கொத்தைப் போக்கி, "பழுதிலா வொழுகலாற்றுப் பசைதுப்பேதிமார்கள் இழி குலத்தவர்களேனும் எம்மடியார்களாகில், தொழுமினர் கொடுமின் கொண்மின் என்று நின்னேடு மொக்க, வழிபட

வருளினுய் போல் மதில் திருவரங்கத்தானே (தொண்டரடி பொடி யாழ்வார்—திருமாலை 42) என்கிறபடி ஜன்ம கொத்தாவது. ஆபிஜாத்யம் முதலியவற்ருல் உண்டாகும் அஹங்காரம்; அந்த அஹங்காரமில்லாத விலக்ஷண வைஷ்ணவர்களின் விஷயத்தில் அனுவர்த்தன விசேஷம் என்கிற பரிகாரம் பொருந்தும், அது போல என்னை ஸ்வாமி, உம்முடைய பக்தர்களின் சேர்க்கை ஸம்பந்தம் நித்யம் பெற்று வாழ்பவனுக அருளவேண்டும்.) (267)

(ஏன் என்று கேட்பீரா? ஸ்வாமி, அதையும் சொல்லி விடுகிறேன்.) நான் இரவில் நடமாடும் ராக்ஷஸ ஜாதியைச் சேர்ந்தவன். ஸ்வபாவமாகவே க்ரூரமான கர்மத் தொழிலை உடையவன். நீச ஸ்வபாவமுள்ளவன். சுபாஸ்ரயம் என்று சொல்லப்படும் தங்களுடைய திவ்யமங்கள விக்ரஹம், திவ்ய ஆத்ம ஸ்வரூபம், ஆகிய இரண்டும் நிலைப்பதற்குச் சிறந்த ஆசார்யரையோ, நியம நிஷ்டங்களையோ நான் அறியவில்லை. (பாகவதர்களையும் இதுவரை நான் உபசரித்ததில்லை.) உயர்ந்தவர்களான (பிரும்மாதி தேவர்களும் மற்ற) பக்தியுள்ள முனிசேதனர் களும் எளிதில் தங்களுடைய மனத்தில் தரிக்கமுடியாத உம்முடைய திவ்யமங்கள விக்ரஹத்தை, ஸ்வாமி, உம்முடைய திருவடிகளை என் மனதில் ஸதா பதிந்திருக்கும்படி அனுக்ரஹிக்க வேண்டும். இதைத் தாங்கள் வலுவில் என்னைக் கட்டி தழுவும் போதே, (என்னிடம் முத்ரை திருச்சின்னம் செய்த மாதிரி,) கிருத லக்ஷ்ணன் மாதிரி செய்துவிட்டீர்கள். (அந்த தழுவதலான தங்கள் கிருபை என்னுடைய திருமேனிக்கு பரிபூர்ண ஆனந்தத்தைக் கொடுத்தது மன்றி, ஸ்வரூப லாபமாகிற தங்களுடைய சேர்க்கை ஸம்பந்தத்தை, ஸ்வரூப யோக்யதையை; பரதந்திர சேதனுக விருத்தலை, ஸம்சாரத்தின் பாபங்களை நசிக்கச் செய்வதும், முமுக்ஷுக்களான யோகிகள் அனவரதமும் மனத்தில் தரிக்கும் தங்களுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை எனக்கு ஸதா தோன்றும்படி அருள்புரிய வேண்டும். பிரபு, என் விஷயத்தில் பிரஹ்லாதனைப் போல அனுக்ரஹம் செய்து, ஸதா சந்தோஷத்துடன் என்னைத் தழுவிக் கொள்ளவேண்டும்.) (சற்று முன் என்னைத் தழுவிக் கொண்டீர்களே அதுபோல பிரபு, மருபூமியில் வர்ஷிக்கும் உதங்க புஷ்கல மேகம் போல என்னைக் கருணை மழையினுல் அம்ருதத்தினுல் ஸதா நனைக்கவேண்டும்.) (267)

"கிருபாளு, சீதாராமா, லக்ஷ்மணு நீங்கள் தான் எனக்கு அனந்த போக்யம். அமிதமான சுகத்தின் கொத்துக்கு ஹேது. (திருமார்பில் திருமகளின் திருமுலை திருவடி பதிப்புக்களாகிய

அடையாளங்களால் ஸர்வ லக்ஷண லக்ஷண்யராகச் சொல்லப் படும் ஸ்ரீமந் நாராயணு,) சீதாராமா, ராமகிருபா நாராயண கிருபா என்கிற அத்யந்த சௌபாக்ய கவசத்தை நான் பெற்று விட்டேன். (என்னைப் பாரும், என் ஹ்ருதயத்தைப் பாரும். என் பாவத்தைப் பாரும். என் வார்த்தைகளைக் கேளும், எனது தாஸ உள்ளத்தைக் கண்டு அனுக்ரஹியும்). உம்முடைய கிருபை மிகமிக அரிது. நான் பிரும்மா (வருண இந்திர) ருத்ர (மருத்கணங்கள்) திவ்யம், திவ்யம் என்று ஸ்துதி செய்து, வேத உபநிஷத்துக்களில் சொல்லியபடியும் ஸாமகானத்தாலும், பாவ ஸ்வரராக தாள ஸாஹித்யத்தாலும் தியானம் செய்து ஆனந்த கீர்த்தனம் செய்கிருர்களோ, (நாத முனிகள் நாரததியாகராஜ ஆஞ்சநேயாதிகளால் ஸதா கானம் செய்யப்பட்டு, ஸுர அஸுரகண தேவாய தஸ்மை நம: என்று ஸதா ராக மூர்ச்சனைகளால் பாடி ஆனந்திக்கிருர்களோ,) அந்த மதுர பாவத்துடன் தங்களுடைய மென்மையான சரணகமலங்களைப் பார்த்து, அவைகளை இறுகப்பற்றி ஆனந்த இன்பம் அடை கிறேன் ஸ்வாமி. (வெங்கடேசா, பிரஸித பிரஸீத ப்ரஸீத, ப்ரயச்ச ப்ரயச்ச, விஞ வெங்கடேசம் நான் எவ்விதம் வாழ்வேன்? என் அக்ஞான தோஷங்கள் எப்படி எவ்விதம் விலகும்? ஸ்வாமி, என்னை காத்தருளவேண்டும். லக்ஷ்மி நாதா, சீதா பிரபோ, ஸ்ரீராமா, லக்ஷ்மண பூர்வஜா, பரதாக்ரஜா, சத்ருக்னவந்தித ராமா, என்று சொல்லிக்கொண்டு) நேத்ரங்களில் கிருக்ஞதை யிஞல் ஏற்பட்ட கண்ணீர்களை உதிர்த்துக்கொண்டு, விபீஷணர் (அன்று பிரக்ஷலாதன், ராமானுஜர், ஹனுமார், நம்மாழ்வார் முதலிய பக்தர்கள் சாஷ்டாங்க நமஸ்காரங்களால் பகவானைச் சேவித்தது போல) சேவித்து நின்ருன். (அவனுடைய இன்ப உத்ஸாஹங்களை, போக்ய போக்த்ரு போகோபகரண ஆனந்தங் களை யாரால் வர்ணிக்க முடியும்? ஆத்மானம் பகவதே நிவேதயத் ஐகாந்திகாத்யந்திக பரிசர்யகரணய பரிக்ருஷ்ணீஷ்வ என்று யாசித்து தன்னை ஸமர்ப்பித்துக் கொண்டான் பரம பாகவதஞன விபீஷணன். ஸ்வாமி பார்த்தார். தானே அவனுக்கு ஆத்ம ஸஞ்சீவினியாக விருந்த பிரபு, அதிப்ரேமையுடன் அவனைப் பார்த்தார். ஸர்வதேசஸர்வ கால ஸர்வ அவஸ்தைகளிலும் அசேஷமான பாவத்துடன் அவன் என்னிடமும் சீதையினிடமும் விளங்கவேண்டும். அத்யந்த ஸாத்வஞக, வினயஸம்பன்னஞக, கிருதாஞ்சலியுடன் பகவானையும் பிராட்டியையும் அவர்களுடைய ஸமஸ்த பரிவாரங்களையும், பாகவத வைஷ்ணவ அடியார்களையும்

வணங்கும் பரம பாகவதனுக அவனை ஸ்வீகரிக்க வேண்டும். நிரதிசய ப்ரிதியுடன் அவன் போஷிக்கப் படவேண்டும். மீண்டும் என்னையோ, பிராட்டியையோ, யாசிக்க வேண்டாதபடி, அவனுடைய மனக்குறைகளை நீக்கவேண்டும். அவனுக்கு ஸமஸ்த க்லேசங்களை நாசம் செய்வதும், நிரதிசய சுகத்தைத் தருவதும், ஆத்ம புத்தியில் நிலைத்து நிற்கக் கூடியதும், என்னுடையதும் பெரிய நாச்சியாரின் ஸ்ரீபாதங்களை தலையில் தாங்கும்படி, அந்த பலிச்சக்ரவர்த்தியைப் போல, இவனை நாம் அனுக்ரஹிக்கவேண்டும். இவனுக்கு ரங்கதாம் என்று சொல்லப் படும் நம்பதத்தை, அம்ருத ஸாகரம் என்று சொல்லப்படும் சுகங் களை, எனது வெங்கடேச நயனங்களால், கரிவரத முத்ரையால், அருள்புரியவேண்டும் என்று பெருமாள் திருவுள்ளமிட்டார். சீதையின் மனமும் ஒத்தது போல, அவளுடைய இடது கண்ணும், இடது புஜமும், இடது தொடையும், இடது பாத பங்கஜமும் ஜலத்தில் மத்ஸயம் துள்ளுவது போல துடித்தன. பிராட்டி அனுக்ரஹம் பெற்ற பெருமாள் அவனை சாதாரண முறையில் ப்ரீதியுடன் அருள் பாலித்து ஆனந்தம் கொடுக்கும் வார்த்தைகளால் தேற்றினர்.) (சீதாராமா, லக்ஷ்மணு, சுக்ரீவா, ஆஞ்சநேயா, வானரங்களே, உங்களை விபீஷணனை முன்னிட்டு ஆயிரம் தடவைகள் நமஸ்காரம் செய்து, உங்கள் கிருபையை நான்வேண்டுகிறேன். பாகவத ஸம்பந்தம் பெற்ற என்னை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டும்.) (269)

[தியானம்

ராமா, கிருஷ்ணு, சீதா மனோஹரா, ராமானுஜா, நாராயணு, உன்னை புருஷன் என்றும் புருஷோத்தமன் என்றும் எதற்காகச் சொல்லுகிறுர்கள்? அதே மாதிரி விபீஷணனை பரமபாகவதன் என்றும், கிருஷ்ணர் நரனுகிற அர்ஜுனனைவிட தர்மபுத்திரரிடம் காண்பித்த விஸ்வாசம், மரியாதை எதற்கு என்றும் காரணம் சொல்லப்படுமோ? இந்த கேள்விகளுக்கு முதலில் புருஷ சப்தத்தை நாம் ஆராய்ந்து பார்த்தால், மிகுதியாகக் கொடுப் பவர், புரம் என்கிற சரீரத்தில் இருப்பவர், முக்தர்களுக்கு தம் ஸ்வரூபஸ்வபாப குணங்களில் ஈடுபாடு அடையச் செய்பவர்; உலகம் எல்லாவற்றிற்கும் அத்யக்ஷர்; பாபங்களை எரிப்பவர்; விருப்பங்களை நிறை வேற்றுபவர்; எல்லோருக்கும் முன் நிற்பவர்; எல்லாவற்றிலும் நிரம்பியிருப்பவர்; பிரளய காலத்திலும் மார்க்கண்டேயர் பார்த்தபடி அநேக லோகங்களை

ஸம்ஹரிப்பவர் என்று பலவித அர்த்தங்கள் சொல்லியும் முடிவடையுமோ? எதுவரையில் ஒருவன் நல்வினையால் உண்டாகும் புகழ் சொல் இகத்திலும் ஸ்வர்க்கத்திலும் பரவுகிறதோ அதுவரை அவன் புருஷன் என்று சொல்லப்படுகிறுன். எந்த மனிதன் விருப்பு வெறுப்புக்கள், ஸுகதுக்கங்கள், சென்றது வருவது ஆகிய இரட்டைகளில் ஸமமாக விருக்கிருனே, அவனும் புருஷன் என்று சொல்லப்படுகிறுன். எந்த மனிதன் எல்லா வஸ்துக்களிலும் ஸமபுத்தியுள்ளவனுக, ஆசையற்றவனும் சாந்தமான மனமுள்ளவனும் மிக்கத் தெளிந்த ஞானமுள்ளவனும் எப்பொழுதும் பரபிரும்மத்தை நினைவு செய்துகொண்டு ஸதா தியானிக்கிருனே, அந்த மனிதனே எல்லா பொருள்களில் உள்ளவன் என்று அறியவேண்டும். அவனே ஜீவித்திருப்பவன், புகழுடன் இருப்பவன், அவனே அஜர்; அனுதியும் அவனே. அவனே நிஷ்காம்யமாக. பயினில் பற்றுதல் இல்லாதவனுக, பூர்வ வாஸனைக்குத் தக்கபடி கர்மாக்களைச் செய்கிறுன். அவனே திவிஸ்ப்ருக். அவனே பக்தர்களுடன் வாஸனையினுல் கட்டப்படுகிறுன். அவனே புருஷோத்தமன் என்கிறபடி எல்லா ஜீவர்களையும் விடப்பெரியவன். அவனே தர்மம் என்கிற பெரிய ஆசரணையை உடையவன். அவன் அனுஷ்டிக்கும் தர்மமானது வேற்றுமையைப் பாராததும், பாரபக்ஷமில்லாததாயும், ஸத்யத்தைக் காட்டிலும் பெரியதாக தர்மபுத்ராதிகளால் எண்ணப்பட்டு, மதிக்கப்பட்டு, ஆசரணையும் செய்யப்பட்டது. யக்ஷன் தர்மபுத்திரரை அவருடைய மரித்த சகோதரர்களில் ஒருவரை எழுப்பச் சொன்னப் போது, யுதிஷ்டிரர் பீமன் அர்ஜுனன் ஆகியவர்களை வர்ஜித்து, நகுலன் ஜீவிக்கட்டும் என்று யக்ஷனைப் பிரார்த்தித்துக்கொண்டார். "எனக்குக் குந்திமாதிரி, மாத்ரியும் தாயார், இருவரையும் ஸமமாயிருத்தலை நான் விரும்புகிறேன்" என்று சொன்னுர். அதிலிருந்து அர்த்தத்தையும் காமத்தையும் காட்டிலும், பக்ஷபாதமில்லாமலிருத்தல் என்கிற தர்மம் சிறந்ததென்று எண்ணப்பட்டது. அதனுல் தர்மருடைய சகல தம்பிமார்களும் ஜீவித்து எழுந்தார்கள். அப்பேற்பட்ட புருஷோத்தமகதியாகிற பக்ஷபாதமின்மை ராமனிடத்திலும் இன்று காணப்பட்டதன்றே? விபீஷணனும், அன்று விஸ்வாமித்திரர் ஆஞ்சநேயர் கண்ட சீதாராமனே, அவிந்தியன் மாரீசன் திரிஜடை கண்ட சீதாராமர்களை, இருவர்களையும் காடோபகூட ஐக்யதத்வமாகப் பார்த்த படியால் அந்த ராம சீதா தம்பதிகளுக்கு அனுகூலன் ஆனுன். நளினதள அக்ஷனுகிற என் பிரபு

பரதனை மிக்கக் கருணையுடன் "சாமரத்தை நிறுத்து, என் தியாகராஜன் என்னைப்பர்க்க விரும்புகிருன், அவனை என்னிடம் கூட்டிவா," என்று பரதனுடைய கைங்கர்யத்துடன் வாதாடினனே, அதே ராமன் இன்று சுக்ரீவ கைங்கர்யத்துடன் விபீஷணனுடைய ராஜகைங்கர்யத்தையும் ஏற்ருன் அல்லவா! என்பிரபு ராமனுக விருக்கட்டும், கிருஷ்ணனுக விருக்கட்டும், சமுத்திரக்கரையில் இருக்கட்டும் பவனபுரியாகிற குருவாயூரில் இருக்கட்டும், சரணம் அடைந்த மனிதன் ஒரு தடவை அவன் நாமத்தைச் சொல்லி, வேங்கடவா, மாதவா, வாமனு, நாராயணு, அச்யுதா, புருஷா, புருஷோத்தமா, நிகரில் புகழாயுலக மூன் றுடையாய் என்னை யாள்வானே, அகிலகில்லேன் இறையு மென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா திருவேங்கடத்தானே, புகல் ஒன்றுமில்லேன், உன் அடி கீழமர்ந்து புகுந்தேனே, என்று நாராயண சப்தத்தால் அடைந்தால் என்பிரபு எதைச் செய்ய மாட்டார்? "தோஷோபி யத்யபி தஸ்யஸ்யாது ஸதாமேதத் கர்ஹிதம்" என்கிறபடி ஆஸ்ரிதனுடைய அபரா தங்களைப் பார்ப்பானு, தனது ஸ்வாமித்வத்தைக் காண்பிப் பானே? அல்லது வாத்ஸல்ய சௌசீல்ய சௌலப்ய ஸர்வக்ஞத்வ ஸர்வசக்தித்வத்தையாவது பார்ப்பானு? ஸத்ய சங்கல்பத்தைத் தான் காண்பிப்பானு? "சீதே உன்னையும் தியாகம் செய்து விடுவேன். ஆனல் என் சரணுகர்த்தர்களான முனிவர்களை நான் விடமாட்டேன்" என்று சொன்ன தர்ம (ஆஸ்ரம தர்மத்தை ஊர்ஜிதம் செய்யவிரும்பிய) பிரபு. பரமகாருணிகன். கிருதக்ஞன். பெருந்தன்மை உள்ளவனுனபடியால் ஏதாவது நல்லது ஒன்றையே சேதனனிடம் கவனிப்பவன். நெடும் தூரத்திலிருந்தாலும் திரௌபதி, "கோவிந்தா அச்யுதா, ரக்ஷமாம் சரணுகதாம்" என்று கூவி அழைத்த போதும்; "ஆதிமூலமே" என்று கஜேந்திரன் கதறியது போலவும், வட்டி அதிகமாகிக் கொண்டிருந்த கடனைப்போல என் மனத்தை விட்டு அவன் கதறியழைத்தது அகலவில்லை என்று சொன்ன பிரபு, கண்ணன் ராமய், புருஷன், பரன், புருஷோத்தமன் அல்லவா? ஸ்திரத்வம் உள்ளவன். ஆஸ்ரித ரக்ஷணத்தில் பாரபக்ஷமில்லாமையால் "ந த்யஜேயம் கதாசன" என்று சொன்னவன். புருஷஃ ஸஃ பரஃ பார்த்த பக்த்யா லப்யஸ்த்வ தந்ன்யயா, பக்த்யா த்வ நன்யயா ஸக்யஃ என்கிறபடி மத்பக்திம் லபதேபராம் இதிஸ்தானத்ரயோதித பரபக்தி யுக்தம் மாம் குருஷ்வ, பரபக்தி பரஞான பரமபக்தி யேகஸ்வாபவம் மாம்

குருஷ்வ '' என்கிறபடி அல்லவோ விபீஷணனும் தர்மபுத்திரரும் கேட்டார்கள். பர்பூர்ணரும் பரம உதார ஸ்வபாவ முள்ள ராமனும் கிருஷ்ணனும் அன்றும், இன்றும் நம்பூத்ரிபட்டார் சொன்னபடி, விஷ்ணு பகவான் இந்திரனுக்கு ப்ருத்யன் (கிங்கரன்) போலவும், பிரியமுள்ள தோழன் போலவும், க்ஷேமத்தைச் செய்கிறவராய் பிரவிருத்திகளைச் செய்தார் ; யோக சித்தி பெற்றவர்கள் பரபதமநிசம் யஸ்ய ஸம்யக் ப்ரகாசம் விப்ரேந்திரா ஜாகரூகாః கிருதபஹுனதயோ யஸ்ச நிர்பாஸ யந்தே என்கிறபடி விஷ்ணு பகவானின் பிரவிருத்திகளை நான் எப்பொழுதும் மனத்தில் தியானிக்கிறேன்.]

புருஷோத்தமரான என்பிரபு ஸ்ரீராமன் சொல்ல ஆரம்பித்தார். '' சகா கேள். என்னுடைய நிஜஸ்வபாவத்தை (அன்று கிருஷ்ணன் அர்ஜுனனுக்குத் தேர்தட்டில் உபதேசித்தபடி) உனக்குச் சொல்லுகிறேன். ஏகமனத்துடன் கேள். இந்தஸ்வ பாவத்திற்கும், என் வசனங்களுக்கும் பிரமாணமாக விருப்பவர் கள் உமையுடன்கூடய மஹேஸ்வரர், காகபுசுண்டி (தர்மர்) போன்ற மஹாத்மாக்கள். எந்த மனிதன் ஸம்பூர்ண ஜகத்திற்கும் ஸ்வபாவமாகவே விரோத உள்ளம் படைத்து ஹிம்சையைத் தொழிலாகக் கொண்டவன்கூட, மஹா விஸ்வத்ரோஹிகூட (யத்ருச்சையால் பூர்வவாசனையின் பிரகாரம்,) என்னிடம் மனதிருப்பம் கொண்டவனாக, தான் செய்த பிழைகளையும் அபராதங்களையும் நினைத்து வருந்தி பச்சாதாபப்பட்டு, பகவத் சரணங்களே என் பாபங்களைப் போக்கும் என்று அறிந்து, என்னிடம் சரண்புகுந்தால், (270)

தன்னபிமானம் என்கிற அக்ஞானம், '' நாம் '' என்னும் மமகாரம் அஹங்காரம், (தர்மம் ஒன்று இருக்கிறது என்று) அறியாமையால் ஏற்படும் மோஹம், (தர்மத்தை நான் அனுஷ்டிக்கிறேன் என்று எல்லோருக்கும் தெரிவித்தலாகிற) டம்பம், கபட உள்ளம், இவைகளை எவன் தியாகம் செய்கிறானோ அவனே பரம தியாகியான புருஷன் எனப்படுகிறான். பெரியோர்களால் ஸாது என்று ஒப்புக்கொள்ளப்படுகிறான். அவனை நானே சீக்கிரம் அழைத்து ஸ்வீகரித்துக் கொள்கிறேன். மாதா பிதா சஹோதரன் பந்து புத்ரன் புதிரி, பத்னி, சரீரம் தனங்கள், வீடுவாசல்கள், ரத்னங்கள், தனதான்யங்கள் மித்ரர்கள், பரிவாரங்கள், (271)

இவைகள் எல்லாவற்றிலும் மனிதன் பாசம்கொண்டு ஆசை மமதை என்னும் கயிற்றால் அவைகளை இறுக

ஒன்ருகக்கட்டி, அவைகள் எல்லாவற்றையும், என் கர்மங்களில் அர்ப்பிக்கிருனே, அவனே ஸம்சாரத்தில் இருந்தும்கூட முயற்சியால், ஸாமார்த்தியத்தால், வைஷம்யமில்லாமல், ஸத்பாவத்துடன் எனக்கு அர்ப்பணம் செய்பவன், என் கிருபையிஞல் ஸமதர்சியாகிவிடுகிருன். அவனுக்கு தனக்கு என்று வேண்டிக்கொள்ளும் இச்சை ஒன்றுமில்லே. அவன் மனத்தில் கர்வம் கிடையாது. அக்ஞானமாகிற சோகம் கிடையாது. உறுதியுள்ள நிலேமை என்று கூறப்படும் ஸ்வதர்ம ரக்ஷணத்தில் பற்று உண்டு. பொறிகளே அடக்குவதால் பயம் இல்லே. (மனத்திலுள்ள ஆசை என்னும் அழுக்கை அகற்றுவதால் நித்யசுசி உள்ளவன். பிராணிகளே ரக்ஷிப்பது தானம் என்று அவன் கருதுகிருன். எல்லோருக்கும் சுகத்தை விரும்புவதால் அவனே தயையுள்ள வைஷ்ணவன் என்கிற ஸமதர்சி என்று கருதப்படுகிருன். பரமபாகவத உத்தமன் அவனே. அவனே ஸனக நாரதாதிகளால் மிக்கப் பிரயாசையுடன் தேடப்படுவன்). (272)

அப்பேற்பட்ட பரம பாகவதர்களே நான் மிகவும் சிலாகிக்கிறேன். அவர்களே விட்டு நான் (பிராட்டியைப் பிரியாதது போல,) ஒருக்காலும் நான் பிரிவதில்லே. லோபியினுடைய ஹ்ருதயத்தில் எவ்விதம் தன ஆசையிருக்குமோ, அதுபோல நான் அவர்களிடம் ஒட்டிக்கொள்கிறேன். (அவர்கள் அனன்ய பிரயோசனராய் பிரபத்தி பண்ணியிருப்பவர்கள் மட்டும் அல்ல; பிரயோசனுர்த்தம் பிரபத்திபண்ணி ஐஸ்வர்ய காம்யர்களாகவிருக்கட்டுமே. பகவத் அனுபவம் என்கிற கைவல்ய சரணுகதர்களாக விருக்கட்டுமே. பத்தர் முக்தர் நித்யர் ஆகிற மூவகை பிரபன்னர்களுக்கும் தங்கள் தங்கள் இஷ்டம் நிறைவேறுவதற்காக, ஈஸ்வரனுகிய என்னே உபாயமாக ஸ்வீகரிக்குமளவில் நான் இவர்களது குற்றங்களேப் பொறுத்து ஸ்வீகரிப்பேன்.) நீயோ என்னே அனன்ய பிரயோசனமாக வரித்திருக்கிருய். (உனக்கு நான் பிரியம் செய்யாதபோனுல் எனக்கு அல்லவோ ஹானி ஏற்படும்? என்னேயே பலனுகக் கேட்கும் உனக்கு, அனன்ய பக்தியுடன் என்னேவந்து அடைந்த உனக்கு, நான் அல்லவோ ப்ரியார்ஹராகவும், ப்ரீதிவர்த்தனராகவும், விளங்க வேண்டும். ஆகையால் விபீஷணு, உனக்கு சமம் பிரஹ்லாதனேப்போல பக்தர்கள்தான் இருக்கக்கூடும். நீ பரம ஞானி. வாஸுதேவம் ஸர்வம் என்று பார்க்கும் ஸமதர்சி. உன்னேப் போன்ற பக்தர்களேப் பார்க்கக் கருதி நான் அவதாரம்

செய்திருக்கிறேன். லங்கைக்குப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறேன்.'' என்று என்னை நீ அறிந்துகொள். ''புகழும், ஸத்யமும், பொறிகளின் அடக்கமும், தூய்மையும், கபடமின்மையும், அகார்யத்தில் லஜ்ஜையும், சபலமில்லாமையும், கொடையும், தவமும், பிரும்மசர்யமும் என்னுடைய சரீரங்கள். அஹிம்சையும், ஸயத்வமும், சாந்தியும், தவமும், சுத்தியும், மத்ஸரமில்லாமையும் எனக்கு வாயில்கள். என்று தெரிந்து கொள். நான்தான் தருமம். நீதான் எனக்கு புத்ரன்'' என்று தர்மபுத்ரரை நோக்கி தர்மதேவதையாகிற யக்ஷன் அன்று சொன்னரே, அதுபோல பிரபு) இன்று விபீஷணனை நோக்கிச் சொன்னர். (''பாக்கிய விசேஷத்தால் ஆத்மாவை அறிய சாதனமாகிற சமம், தவம், ஒழிவு, பொறுமை, மனஅமைதி ஆகிய ஐந்தும் பெற்ருய். அவற்றுள் இளம் பிராயத்தில் வரும் பசிதாகமும், நடுவயதில் வரும் சோகமும் மோஹமும், மரணத்தை அடையச்செய்கின்ற ஜரைமரணமும், ஆகிற ஷட் ஊர்ம்களை சம்சாரத்திலிருந்துகொண்டும் ராக்ஷஸர்களின் மத்தியில் வசித்துக்கொண்டும், நீ வென்றுவிட்டாய் விபீஷணு. நீ வென்று விட்டாய். உனக்கு ஸர்வமங்களங்களும் ஏற்படட்டும்.) உன் ஸ்வபாவத்தை அறியக்கருதி நான் அவதாரம் செய்திருக்கிறேன். (உன்னுடைய ஸமத்வ புத்தியினுல் தர்ம ஆசரணையினுல், ராவணனுடைய தம்பியாகவிருந்தாலும் பாரபக்ஷமின்றி என்னை சாஸ்வதமான தர்மம் என்று நினைத்து; அன்றுபிரஹ்லாதன் வந்ததுபோல, நீ என்னை சரணமடைந்திருக்கிருய். உன்னுடைய ஸாத்வத புத்தியில் நான் சந்தோஷமடைகிறேன். குற்றமற்றவனே, உனக்கு வரங்களைக் கொடுப்பேன். எந்த மனிதர்கள் என் பக்தர்களோ, அவர்களுக்கு கெட்டகதி கிடையாது. நீ தேறுதல் அடை.) உன் ஸ்வபாவத்தை நான் நேரில் அறிந்துகொண்டேன். புருஷஸ்ரேஷ்டனே, நான் உன் விஷயத்தில் போதும் என்று திருப்தி அடையவில்லை. (என்னுல் நேரில் பார்க்கப்பட்ட நீ எப்பொழுதும் கோபத்தையும் லோபத்தையும் மோஹத்தையும் ஜயித்தவன் ஆவாய். தானத்திலும் தவத்திலும் ஸத்யத்திலும் பற்றுதல் உள்ளவனுவாய். நீ தர்மஸ்வரூபி. உன்னை நானும் ராமானுஜனும் மீண்டும் அணைத்துக்கொள்ளோம்.'' என்று என்பிரபு அவனை அணைத்துக் கொண்டு முத்தமிட்டார். உச்சிமோந்தார். திருக்கரங்களை அவன் தலையில் சூட்டினுர்.) (அந்த மனுேபாவத்துடன் என் பிரபு ரங்கநாயகி ஸமேத ரங்கதாமன் அன்றும் இன்றும்

என்றும் குடதிசை முடியைவைத்து குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கி, கடல் நிறக் கடவுளெந்தை அரவணைத் துயிலுமாக்கண்டு உடலெனக் குருகுமாலோ என் செய்கேனுலகத்தீரே, ஆபாதசூடமனுபூய ஹரிம்சயாநம், மத்யேகபேர துஹிதுர்முதாந்தராத்மா, அத்ருஷ்ட தாம் நயனயோர் விஷயாந்தராணும், யோநிச்சிகாயமநவை முனிவாஹனமிதம்'' என்று சொல்லியபடி பிரமாணமாக சேஷபதி ரங்கசாயி, பிருகு நாரத மார்க்கண்டேய ஸப்தரிஷிகள் நம்மாழ்வார் நாதமுனி ஆகியவர்களின் ப்ரியரங்கதீர்த்தன் படுத்திருக்கிருனே. என் மனத்திலும் திருஷ்டிபதத்திலும் படுத்திருக்கிருனே. பிரணவாகாரரூபி, அப்பா அம்மா, உங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். உலகங்களைப் பாதுகாக்கும் விஸ்வநாதன், ஜகந்நாதர், ஜனுர்த்தனர், முராரி, கராரி அன்று இவ்விதம் விபீஷணனிடம் ராமானுஜசுக்ரீவ ஆஞ்சநேயஜாம்பவான் வானராதிகளின் முன்பு வார்த்தை ஆடினுர். அப்பேற்பட்ட மஹா உதாரமனமுள்ள ஸ்ரீ சீதாராம னுக்கு, லக்ஷ்மண அக்ரஜனுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய் கிறேன்.) (273)

''விபீஷணு, இவ்வுலகில் என்னை உபாஸிப்பவர்களில் ஸகுண உபாஸிகள் நிர்குண உபாஸகர்கள் என்று இருவித மாகச் சொல்லப்படுகின்றனர்'' (ஞானம் சிரத்தை கர்த்தா, வாசஸ்தலம், சுகம், கர்மா, ஆகாரபேதங்கள் ஆகிய எல்லாம் ஸத்வம் ரஜஸ்தமஸ்ஸாதிகளால் ஏற்படுத்தப்பட்ட பேதங்கள். அப்பேற்பட்டவர்களில் என் பவித்ரமான க்ஷேத்திரங்களையும், (ஸ்ரீரங்கம் ஸ்ரீவேங்கடம், ஸ்ரீ அத்திகிரி, அயோத்தி முதலிய 108 வைஷ்ணவஸ்தலங்கள் இருக்கின்றன) என்னை தரிசிப்பது என் நாமத்தை பஜிப்பது, எனக்கு விஷயமான பக்தர்களிடம் அன்பு செலுத்துவது, ஆகியவைகள் நிர்குண விஷயாகும். இவைகளின் அனுபவத்தால் ஏற்படும் பலன் முக்திக்கு ஹேதுவாகிறது. (ஏனென்ருல் இவர்கள் திருடனிடத்திலும் பிராம்மணனிடத்திலும் மிருகம் முதலியவற்றிலும் ஸமபுத்தி உள்ளவர்கள்; அவமானம், அசூயை, விரோதம் ஆகியவைகளை விட்டவர்கள். ஸமஸ்த பிராணிகளிலும் என்னைப் பூஜிப்பவர்கள்) ஆனுல் இன்னெரு வகையிருக்கிருர்களே ஸகுண உபாஸகர்கள். என்னுடைய அவ்யக்த ரூபமாகிற நிர்குணஸ்வரூபத்தை பிரயத் னப்பட்டு சுத்தைகஸத்வம்தத் என்கிற ஒரே சுத்தஸத்வ ரூபமான ஸகுண கல்யாண குணங்களாக (அகில ஹேய ப்ரத்ய

நிக கல்யாணகதான ஸ்வேத ரஸமஸ்த தஸ்து விலக்ஷணுநந்த ஞானுனந்தைக ஸ்வரூபமாக, பிரஸன்னவதனம் சாருபத்ம பத்ரோமேக்ஷணம், ஸுகபோலம் ஸுவிஸ்தீர்ண லலாட பலகோஜ்ஜவலம், ஸமகர்ணுந்த வின்யஸ்த சாருகுண்டல பூஷணம், கம்புக்ரீவம், ஸுவிஸ்தீர்ண ஸ்ரீவத்ஸாங்கிதவக்ஷஸம், வலித்ரிபங்கினுமக்ன நாபினு ஹ்யுதரேணச, பிரலம்பாஷ்ட புஜம் விஷ்ணுமதவாபி சதுர்புஜம், சிந்தயேத் ப்ருஹ்மபூதம் தம்பீத நிர்மல வாஸஸம், க்ரீடஹாரகேயூரகடகாதி விபூஷிதம், சார்ங்க சங்ககதாகட்க சக்ராக்ஷ வலயான் விதம், வரதாபய ஹஸ்தம்ச முத்ரிகாரத்ன பூஷிதம், சிந்தயே தன்மயீ யோகி ஸமாதாயாத்ம மானஸம், தாவத்யாவத் திருடபூதா தத்ரைவ தாரணு, அனந்தபோகினி ஸ்ரீமதி வைகுண்டைஸ் வர்யாதி திவ்யலோக மாத்மகாந்தியா, விஸ்வமாத்யாயந்த்யா சேஷ சேஷாஸநாதிகம் ஸர்வபரிஜனம் பகவதః தத்தத்வஸ் தோசித பரிசர்யாயாமாஞாபயந்தயா சீலரூபகுண விலாஸாதிபி: ஆத்மாநுரூபயா श्रिया ஸ்ரீயா ஸஹாஸீனம், ஆதிசீதள கோமள மயமாகப் பார்க்கும் எங்கள் திருவுருவங்களை யோகி ஜனங்கள் ஸதாபஸ்யந்தி தேவாः என்கிறபடி) தங்கள் ஹ்ருதயகுகையில் பார்த்த வண்ணம் தியானித்த வண்ணமிருக்கிறுர்கள். அப்பேற் பட்ட ஸகுண மூர்த்தியை (உன் போன்ற) பாகவதர்கள் உபாஸித்து பிறர்களுடைய ஹிதத்தை நாடுபவர்களாக, ஸதா நீதி நியமம், (சரணுகத ரக்ஷணம், ஆஸ்ரிதர்களிடம் பிரியம்) ஆகியவைகளில் திருடவ்ருதர்களாகவும் பிரும்மத்தை உபா ஸிக்கும் அந்தணர்களிடம் அதிக பிரியமுள்ளவர்களாகவுமிருக் கிறுர்கள். அப்பேற்பட்ட ஸகுண உபாஸிகள் எனக்குப் பிராணனுக்குச் சமமானவர்கள். நானும் அவர்களிடம் நிலைத்து நிற்கிறேன்.'' (274)

''லங்காபதி கேள். நான் உன்னை நேரில் கண்ட பின்பு, என்னுல் மேலே சொல்லப்பட்ட சகல குணங்களும் உன்னிடத் தில் காணப்படுகின்றன. உன்னுடைய கல்யாண குணங்கள் பரிமளித்து, என்னை பரவசப் படுத்துகின்றன. நான் உன் விஷயத்தில் திருப்தி அடைந்தேன். இப்பொழுது உன்னை நான் நேரில் கண்டு அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். (எனக்கு நீ மிகுந்த ஆப்தனுகி விட்டாய். நிரதிசயமான பிரியத்தை உனக்கு நான் கொடுக்கிறேன். இந்தா, என் வக்ஷஸ்தலத்தைப் பார்.'' என்று என் பிரபு கிருபாளு தனது நிஜ ஸ்வரூபத்தை மஹா கருணையுடன் விபீஷணனுக்கு, அன்று அர்ஜுனனுக்குக்

கண்ணன் காட்டியது போல, காட்டினர்.) ஸ்ரீராமஸ்வரூபத்தையும் திருமேனி விக்ரஹத்தையும், ஸ்வபாவ குணங்களையும் நேரில் பார்த்த வானர வீரர்கள் ஜயகோஷம் செய்தார்கள். "எங்கள் பிரபு, ஸகல லோக நாயகன், அபாரகருணும்புதி, (அனுலோசித விசேஷா சேஷ லோக சரண்யன், பிரணதார்த்திஹரன், ஆஸ்ரிதவாத்ஸல்யஜலதே, அனவரத விதித நிகில பூத ஜாதயாதாத்ம்ய, ஸத்யகாம ஸத்யஸங்கல்ப, ஆபத்ஸக, காகுத்ஸ, ஸ்ரீமந் நாராயண, புருஷோத்தம, ஸ்ரீவேங்கடநாத மமநாத, ஸ்ரீரங்கநாத, மமநாத) நமோஸ்துதே" என்று ஜயகோஷம் செய்தார்கள். (அப்பேறற்பட்ட ரங்க வேங்கடேசனை நான் சீதா பிராட்டியை முன்னிட்டு, ராமானுஜரை புறம் வைத்து, விபீஷணன் ஆஸ்ரயித்ததுபோல, ஆஸ்ரயிக்கிறேன். ஸ்வாமி, ஜகந்நாதரே, என்னையும் ரக்ஷிக்க வேண்டும், என்று நான் பிரார்த்திக்கிறேன். ஆயிரம் தடவைகள் பிரார்த்திக்கிறேன். நமஸ்கரிக்கிறேன். கிருபாளு என்று சொல்லுகிறேன். ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணய நமஃ, நாராயண, அசரண்ய சரண்ய அனன்ய சரண்ய த்வத் பாதாரவிந்தயுகளம் சரணமஹம் பிரபத்யே. த்வயம், ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே, ஸ்ரீமதே நாராயணயநமஃ என்று அனுஸந்திக்கிறேன்.) (275)

[தியானம்

சீதாராமா, நாராயணு, மஹாபிரபோ, மஹாவிபூதே. உங்கள் இருவர்களையும் மரியாதா புருஷோத்தமர்கள் என்று என் ஆசார்யர் துளசிதாஸர் சொல்லுகிருரே? அதற்கு காரணம் என்ன? கஞ்சலோசனம், ஆஜானுபாஹு, பிராம்மண பக்த ஜனபிரியன், சீதாமனோஹரன், தர்மவிக்ரஹவான், க்ஷத்திரிய தேஜஸ்ஸும் பிரும்மதேஜஸ்ஸும் சேர்ந்துகொண்டு, இரண்டும் நெருப்பும் காற்றும்போல பகைவர்களின் காடுகளை எரிப்பதாகவிருக்கிறது. தர்மத்தை நிலநாட்டுகிறவன். பிரஜைகளுக்குப் பதி, ரக்ஷகன், நீதியை அறிந்தவன். அதனுலேயே ஜனகன் (தந்தை) என்று அறியப்படுபவன்; ஹிதத்தை அறிந்து ஹிதத்தைச் செய்பவன். உபேதசிப்பவன். அவனே விராட். அவனே ஸம்ராட். க்ஷத்திரியனுனபடியால் பூமிக்கு அரசன். அவனே மனிதர்களையும் மனிதர்களின் தர்மங்களையும் காப்பாற்றுகிறவன். அவன் தர்மத்தை அனுஷ்டிப்பதால், உலகத்திற்கு முதன்மையான காரணம் என்றும், ஹிதத்தில் ஜயத்தை அடைந்து துன்பங்களை ஒழிப்பவன் என்றும் ஜனங்களுடைய க்ஷேமத்தின்

பொருட்டு எல்லா திக்குக்களிலும் செல்லுவதாலும், ஈஸ்வரன் என்றும், புருஷோத்தமன் என்றும், தன்னை நம்பின பிரஜைகளை ஸ்வர்க்கத்தை அடைவிப்பவன் என்றும், பகைவரை எதிர்த்த வுடனே வெல்பவன் என்றும், விஷ்ணுவென்றும், ஸத்யத்திற்கு பிறப்பிடமானவரும், ஸநாதன தர்மங்களாகிற சரணாகதி ரக்ஷகத்வம் முதலியவைகளை அறிந்து நடத்திக்காட்டுபவன் என்றும், பாரபக்ஷமின்றி தர்மத்தை அனுஷ்டித்து நடத்துகிற வனாகவும், அதர்மத்திற்கு பயந்தவராகவும், கருதப்படுகின்றான். தேவர்களுள் ஸூரியன் எவ்விதம் தேஜஸ்ஸினால் இருளைப் போக்குகிறானோ, அதுபோல அரசன் அதர்மங்கள் முழுவற்றை யும் போக்குகிறான். ஆகையால் சாஸ்திர பிரமாணமாக நல்ல அரசன் புருஷோத்தமனாகி, தர்மத்தோடு அர்த்த காமங்களைப் பஜிக்கிறான். அதுபோல என் தாய் சீதை பொருளும் ராஜ்யமும் வஸ்திரங்களும், மஹிமையும் அபகரிக்கப்பட்டும், ஸ்திரிபோகங்கள் கணவன் சேர்க்கை எல்லாவற்றையும் இழந்தும்கூட, தர்ம மென்னும் கயிற்றினால் கட்டப்பட்டு, பராக்ரம சக்தி இல்லாதது போல, ராமனுக்கு அனன்யார்ஹசேஷத்வம் என்கிற விரதம் பூண்டு, தன்னையும், கணவனான ராமனையும், தன் சந்ததிகளை யும், பிறந்த புகுந்த குலங்களையும், கரையேற்றி, எல்லா தர்மங் களையும்விட கோபத்தை அடக்குதல், பொறுமை என்கிற விரதம் பூண்டு இருக்கிறாள். திருதராஷ்டிரன் திரௌபதியை "வரத்தைப் பெற்றுக் கொள்" என்று சொல்லியபோது, முதலில் "எல்லா தர்மங்களையும் அனுஸரிப்பவரும் மேன்மை பொருந்தியவரான யுதிஷ்டிரர் தாஸர் ஆகாமலிருக்கவேண்டும்; அவருக்குப் பிறக்கும் குழந்தை தாஸபுத்ரனாகவிருக்காமல், இருக்க வேண்டும்;" பிறகு "என்னுடைய மற்ற கணவன்மார்களும் அடிமைகளாக இல்லா மல் ஸ்வதந்திரர்களாக இருக்கவேண்டும்" என்று கேட்டாள். மூன்றாவது வரம் தருவேன் என்று திருதராஷ்டிரன் சொல்லிய போது, திரௌபதி "ஆசையானது தர்மத்தைக் கெடுக்கும்; ஆதலால் நான் ஆசைப்பட வில்லை" என்று சொல்லிவிட்டாள். அதேமாதிரி சாவித்திரியும் தன்னையும், தனது தகப்பனையும் தாயையும், மாமியார் மாமனார் ஆகியவர்களையும், பர்த்தாவையும் பர்த்தாவினுடைய குலம் ஆகிய அனைத்தையும், சீலத்தினாலும் விரதங்களாலும் யமனிடமிருந்து பெற்ற வரங்களால் கரையேற்றி விட்டாள். இவ்விதம் மஹாத்மாக்களான ராமனையும் சீதையை யும் அவர்கள் ஆஸ்ரயித்த தர்மங்களையும் உலகத்தரால் எந்தக் காலமும் ஸர்வஸம்மதமாக ஒப்புக்கொள்ளப்படும் ஆசார சீல

நடத்தைகளையும், அவர்களுடைய சாஸ்திர ஞானத்தையும், புண்ய கர்மங்களையும் நினைத்து நினைத்து நான் சந்தோஷமடைகிறேன். சிவந்த கண்கள் உள்ளவரும் நீண்ட புஜங்கள் உள்ளவரும், மதயானைபோல நடக்கும் சீதாராமனை, அகன்ற மார்பில் பதிந்த லக்ஷ்மியின் அடையாளங்களை உள்ள ஶ்ரீராமனை, ஶ்ரீமானை, கருத்து சுருண்டு அலைகள்போல படிந்திருக்கும் கேசபாசங்களை உடைய கேசவரை, மும்மூர்த்திகளின் ஸ்வரூபமாகிற சீதாராமனை, நாராயணனை, பகைவர்களின் கண்களையும் மனத்தையும் அபகரிக்கும் கஞ்சலோசனனை, தைர்யத்துடன் பொறுமை விரதம் பூண்டிய என் பிராட்டி ஆஸ்ரயித்தாள். பிரஹஸ்பதியைப் போல புத்தியும், சுக்ரரைப்போல அனுஷ்டானமும், இந்திரியங்களையும் கோபத்தையும் வென்ற மரியாத புருஷோத்தம சீதாராமனை, ஸ்வத்ருதஃ அத்ருதஃ ஸ்வாஸ்யஃ ப்ராக்வம்சோ வம்சவர்த்தனஃ என்கிற வசனங்களால் புகழ்கிறேன். துஷ்டர்களைச் சிக்ஷிப்பவரும் தர்மசாரிகளைப் பாதுகாப்பவரும், ஒருவராலும் மீறப்படமுடியாதபடி சத்ருக்களை ஜயிப்பவரும், என்னையும், கௌஸல்யையும், சீதையையும், என் குரு துளசிதாஸரையும் ஆனந்திப்பவரும், ரகுகுலத்தை ஸந்தோஷிக்கச் செய்தமரியாதா புருஷோத்தம சீதாராம தம்பதிகளை, நமஸ்கரிக்கிறேன். இவர்களே லக்ஷ்மி நாராயணன், இவர்களுக்கு மேற்பட்டவர்கள் இல்லை, தெய்வத்தினுல் எனக்கு, என் ஆனந்தத்திற்கு விதிக்கப்பட்டவர்களாக ஆனந்தமடைகிறேன். சீதாராமா, நீங்கள்தான் ஆதிதம்பதிகள். என்னை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு உங்களிடமிருக்கிறது. ஆயிரம் தடவைகள் நான் உங்களை நமஸ்கரிக்கிறேன்.]

பிரபு ஶ்ரீ ராமசந்திரனுடைய அன்புமிக்கச் சொற்களைக் கேட்டான் விபீஷணன். அவைகளை ஸ்ரவணம் செய்வதே அம்ருதமயமாக விருந்தது. அவைகளை பிரபு செய்து காண்பித்தால் அவனுக்கு ஆனந்தம் எவ்விதமிருக்கும்! அடிக்கடி அடிக்கடி பகவானுடைய பாதாப்ஜங்களைச் சரணம் செய்து நமஸ்கரித்தான். அபாரமான ப்ரேமை. அவனுடைய உள்ளம் அடங்கினபாடில்லை. மேன்மேலும் பொங்கிக்கொண்டிருந்தது. (276)

விபீஷணன் சொல்ல ஆரம்பித்தான். "தேவதேவா, ஸ்வாமி, சராசரங்களனைத்துக்கும் ஈஸ்வரரே, ஜகந்நாதரே, சரணுகதர்களைக் காப்பாற்றும் பிரணதபால், என் மனதில் சதாவாசம் செய்து கொண்டிருக்கும் அந்தர்யாமியாகிற ஸர்வ

ஸாக்ஷி, தயவு செய்து கேளும். (உமது அனுக்ரஹத்தினால் பூர்வ வாசனையால், உமது கிருபையால் உம்முடைய சேர்க்கையாகிற ஸம்பந்தம் யேற்பட்டது.) அது நாளடைவில் தங்கள் பதாப்ஜங்களில் ஏற்பட்ட பக்தியாக வளர்ந்து, அந்த நதி வெள்ளத்தினால் நான் உம்முடைய பாதாரவிந்தங்களில் உந்தி தள்ளப்பட்டு, இப்போது எனது ஸேதுவாக தங்களை அடைந்திருக்கிறேன். தங்களுடைய பிரீதியுள்ள சலணகமலங்களின் வெள்ளத்தில் மிதந்து கொண்டிருக்கிறேன்.'' (277)

''அன்றும் இன்றும் ஸ்வாமி, தாங்கள் எனக்கு பரம உபகாரம் செய்யும் கிருபாளுவாகவுமிருக்கிறீர். என்னுடைய எல்லா மனோரதங்களும் நிறைவேறிவிட்டன. (தங்களைப் பார்க்கவேண்டும், தங்களிடம் நேரில் எனது ஆத்மாவை நிவேதனம் செய்யவேண்டும் என்கிற காரியங்கள் ஸ்வாமி, உம்முடைய கிருபையால் பூர்த்தி செய்யப்பட்டன. பரபக்தி பரஞானம் ஏற்பட்டும் இன்றும் எனக்கு ஆகவேண்டியது ஒன்றிருக்கிறது. அதாவது தங்களுடைய பரமபக்தி ஸதா என்னிடம் பரிமளித்துக்கொண்டு ஏற்படவேண்டும். உம்முடைய அடியார்களிடம், உமக்கு ஏற்பட்ட பக்தியைப்போல, அதே பக்தி எனக்கு ஸித்திக்க வேண்டும்,) அப்பேற்பட்ட பரமபக்தியினால் நான், ''ஹே பிரபோ, ஸதா பவானியின் கணவரான சம்புவை ஆனந்தப்படுத்த வேண்டும்,'' அப்பேற்பட்ட ஸுபக்தியை எனக்கு அருளவேண்டும். (பெருமாளுடைய அடியார்களிடம் ஏற்படவேண்டிய பரம பக்தியைப் பரிபூர்ணமாக (ப்ராப்யக விரோதிகளை ஒழிக்கும் சஞ்சீவினியை) வரமாக விபீஷணன் கேட்டான்.) என் பிரபு ரணதீரன் ரகுவீரன் ''அவ்விதமே தந்தேன். கவலைப்படாதே'' என்று சொல்லி, அவனை ஆசீர்வதித்து, அதன் பிறகு சமுரத்திர ஜலத்தைக் கொண்டுவரும்படி வானரர்களுக்கு உத்தரவிட்டார். (278)

''சகா, உனக்கு இச்சை இல்லாத போனாலும், என்னைத் தரிசனம் செய்துவிட்டு, நீ வீணாகப் போய்விடக் கூடாது. துர்லபமான எனது தர்சனம் உடனேயே அமோகமான பலனை அளிக்கக் கூடியது. அது வீண்போகாதது.'' இவ்விதம் பிரபு சொல்லிவிட்டு, ராஜதிலகத்தை விபீஷணனுக்கு, லங்கா பட்டாபிஷேகத்திற்கு முதலடியாக ராஜதிலகத்தைச் சூட்டினார். அப்பொழுது ஆகாசத்திலிருந்து அபாரமாக புஷ்ப விருஷ்டி ஏற்பட்டது. (279)

ஸ்ரீ ராமசந்திரன், தயாளு, (உதார மனத்தை உடையவர்,) ராவணனுடைய க்ரோத ரூபியாகிற அக்னியிலிருந்து, அதற்கு விபீஷணனுடைய வசனங்களாகிற காற்றினால் வேகமாக பிரசண்டமாக எரியும் தணலிலிருந்து, அதன் ஜ்வாலைகளால் தகிக்கப்பட்டு, தீனஸ்திதியில் உதவியை நாடி வந்திருக்கும் விபீஷணனை, பிரபு காப்பாற்றினார். அவனுக்கு அகண்டமான லங்கா ராஜ்யத்தையும் (அன்று துருவனுக்குக் கொடுத்தது மாதிரி) பிரபு அளித்தார். (280)

பகவான் சம்புவால் எந்த அனுத்தமமான ஸம்பத் விசேஷங்கள் ராவணனுடைய பத்து தலைகளை ஹோமம் செய்ததால், அதன் பலனாக அளிக்கப்பட்டதோ, அந்த மஹா ஸம்பத்துக்களை, என் பிரபு, என் ஆத்மேஸ்வரரான விபீஷணனுக்கு, என்றும் மாறாதபடி அசஞ்சலமான ஐஸ்வர்யங்களைக் கொடுத்தார். (281)

[தியானம்

ராமா சீதா, லக்ஷ்மி நாராயணா, கிருஷ்ணா, கோவிந்தா, முகுந்தா, மாதவா, விபீஷணனைக்கட்டித் தழுவிக்கொண்ட சமுத்திரக்கரை ராமா, உன்னை துருவனையும் தைத்யேந்திரனாகிற பிரஹ்லாதன், பலி இவர்களை முன்னிட்டு சரணமடைகிறேன். சரி, அப்பா, நீ தர்மத்வஜனாக விளங்குகிறாய். உன்னுடைய திருமேனியின் அழகும், ஸ்வபாவமான செளலப்ய காருண்ய கிருதக்ஞத கல்யாண குணங்களின் அழகையும், ஹே ஸ்வாமி, சரணாகததர்மஸம்ரக்ஷணம் போன்ற தர்ம அழகுகளையும் நான் பார்த்தேன். ஆனால் எனக்கு இன்னொரு சம்ஸய மிருக்கிறது. அதையும் கேளு அப்பா. விபீஷணன் உன்னிடம் வந்தான் என்று தோன்றும்படியிருக்க, நீ தன்னை வைகுண்டத்திலிருந்து எழுந்தருளி விபீஷணனைப் பார்ப்பதற்காக அயோத்தியில் அவதாரம் செய்து, அதன் பின்பு கால் நடையாக சமுத்திரம் வரை விபீஷணனைப் பார்க்கச் சென்றதாகச் சொல்கிறாயே, இதில் தான் எனக்கு மர்மம் புரியவில்லை. நீ போய் அவனைப் பார்த்தாயா அல்லது அவன் உன்னைப் பார்க்கவந்தானா? சரி, உன்னிஷ்டப்படி சென்றாயானால், என் குருநாதரான தியாகராஜரின் வசனங்கள் பொய்யாகுமா? பயிர்களைத் தேடி மழை போகுமா? அல்லது மழையைத் தேடி பயிர்கள் போகுமா? பதில் சொல் இந்த கேள்விக்கு? அர்ஜுனனாகிற கன்றைத்தேடி கிருஷ்ணன் போய், கீதை என்கிற ஸுதாவைத்தானாக ஊட்டினான்

என்று வேதவியாஸரின் வசனம் பொய்யோ? உன்னைச் ஜோர நாயகன் என்று சொல்லும்படி, நீதானே ராதையையும் பாவம்— அந்த கோபிகைகளையும் என்ன பாடுபடுத்தி, அவர்களிடம் போய்ச் சேர்ந்தாய்? திரிபதகாவாகிற கங்கை கீழ் நோக்கித் தானே பாய்கிருள்.? உன்னை யோகேஸ்வரர், யோகவிதாம்நேதா, ஆத்மேஸ்வர் என்று பல விதங்களாகப் உன்னைப் புகழ்கின்ருரே வேதவியாஸர். உன்னுடைய கம்பீரமான சிரிப்பும், முல்லை மலர் போன்ற பற்களின் அழகும், அச்சுதன் என்கிற பெயரும், உம்மையே பர்த்தாவாக நினைத்து முகமலர்ச்சி கொண்ட கோபஸ்திரிகளின் பக்தி யாருக்கு, அதுவும் என்போன்ற சாமான்யருக்கு கிடைக்குமா? அந்தப் பெண்கள் காளிந்தி நதியின் மணற்கரையில் சென்று அந்த ஆற்றில் ஆசைகிற தாமரை ஆம்பல் பூக்களின் வாசனையைக்கொண்டு வீசுகிற மந்த மாருதத்துடன் உன்னைப் பூஜைசெய்து, ரமித்தார்களாமே? அந்த பாக்யம் எனக்கு கிடைக்குமா? ஆனல் ஒன்று மட்டும் என் புத்திக்குப்படுகிறது. அதையும் நான்சொல்லி விடுகிறேன். என்னிடம் கோபித்துக்கொள்ளாதே. உன் சீதை இருக்கிருளே, அவள் உன்னையும் பிரிந்து ராக்ஷஸிகளையும் தேவமாதர்களையும் உனது திருஷ்டிபதத்திற்கு கொண்டுவருவதற்கு லங்கைக்குச் சென்ருள். அவள் உன்னை லங்கைக்கு வரவழைத்தாள். ஆஞ்சநேயரும் அவளைப் பற்றிச் சொல்லும் போது நீயும் அவளுக்காக அழுதாய். விபீஷண சரணுகதியோடு ராமாயணம் முடியவில்லையே, அந்த பகவதியின் பேச்சையாவது நீ கேட்பாயா? அல்லது அவளுக்காக பாடுபட்ட ஆஞ்சநேயர், சுக்ரீவ வானராதிகள் இவர்களின் பேச்சுக்களைக் கேட்டாயா? என்னைப்பற்றி யாராவது உன்னிடமாவது, உன் பிராட்டியிடமாவது அல்லது ஆஞ்சநேயரிடமாவது யாராவது சிபார்சு பண்ணுவார்களா? அதற்காகத்தானே உன்னை பயக்ருத் என்றும் ஸர்வஸ்வதந்திரர் என்றும் சொல்லுகிருர்கள். தர்மார்த்த காமங்கள் மூன்றும் எவ்விதம் இன்பமுள்ள மனைவி புருஷன் இவர்களிடம் பரஸ்பரம் ஒன்ருக ஒட்டிக்கொண்டு சேர்ந்து பிணைக்கப்பட்டிருக்கின்றனவோ, அதுபோல அல்லவா என் ஸம்பந்தம், முதல் ஆசார்யை என்று சொல்லப்படும் பிராட்டியை ஒட்டியிருக்கிறது. அந்த பிராட்டியும் ஆஞ்சநேயரை நம்பியதால் என் ஸம்பந்தமும் ஆசாரிய ஸம்பந்தத்தை நம்பியது. உமாமஹேஸ்வர ஸம்வாதத்தில், என் மஹேர்வரி ஒரு கேள்வியை சம்புவினிடம் கேட்டாள். "பகவானே, ஈஸ்வரரே, தேவதேவரே,

உமது தலையில் சந்திரனது பிறைவிளங்குகிறதே. அது எதற்காக? அதன் காரணத்தை எனக்கும், இங்கே கூடியிருக்கும் தேவரிஷி யக்ஷகின்னர சகல சராசரங்களுக்கும் சொல்லக் கடவீர்,'' என்று விக்ஞாபிக்க, அந்த பிரபு தர்மத்வஜர், விருக்ஷபக் கொடியுடைய சங்கரர், லோகசங்கரர், மஹேஸ்வர் பதில் சொன்னர். ''தேவி, வெளுத்த புன்னகை உள்ளவளே, முன்பு நான் தக்ஷ யாகத்தைக் கெடுப்பதற்காக நான் பூதங்களால் சூழப்பட்டு, கோபமுற்று, ஹவிர் பாகத்தின் காரணமாக, தேவர்கள் என்னுல் அடித்துத் துரத்தப்பட்டார்கள். குற்ற மில்லாதவனும் நன்மையைச் செய்கிறவனுமான சந்திரன் என்னுல் உதைக்கப்பட்டும் மிகுந்த தீங்கு செய்யப்பட்டவனுனவன் ஆனுன். அவன் என்னே வேண்டினுன். அன்போடு பிரார்த்தித்தான். பின்னிட்டு நான் நினைக்கும்போது, வருத்தமுற்றேன். (கிருஷ்ணன் தர்மபுத்திராதிகளிடமும், சீதையிடமும் ராமன் பிற்பாடு வருந்தியது போலவும்), நான் அப்போது முதல் சந்திரனை தலையில் வைத்துக்கொண்டிருக்கிறேன். இப்படிச் செய்வதால் என் பாபம் போகும் என்று பகிரங்கமாகத் தரித்தேன்'' என்ருர். அதே தர்ம உணர்ச்சியால் என் பரதேவதை உமா மஹேஸ்வரி ஸஹதர்மசாரிணியாக, தானும் சந்திரகலையை தனது முகுடத்தில் தரித்தாள். ''இதில் யாருக்குச் சிறந்த ஸம்மானம் கொடுப்பது? நீரே சொல்லும். சீதையின் லங்கா பிரவேசம், உமை சந்திரனை அணிந்திருப்பதுபோல அல்லவா விளங்குகிறது. சந்திரனைக் காப்பதுபோல என்னை நீங்கள் இருவர்களும் காப்பீர்களா? ராமா சீதா, உங்களுடைய மகிமை உமா மஹேஸ்வரர்களின் கிருபையைப்போல மிகமிக ஆச்சர்யம்! இவ்விதம் ஸாதுக்களின் ரக்ஷணத்தை முதல் தர்மமாக தாங்கள் வைத்துக் கொண்டிருப்பதாலும், சங்கர பார்வதி, தேவர்களுக்கும் தேவரான உங்களுக்கே தகும். அதனுல், அந்த ரிஷிகள் ஸ்துதி செய்ததுமாதிரி, நான் உமையைப்போல, உம்மை அனுஸரித்து ஒற்றுமையாக ''சீதை தர்மத்தை கடைப்பிடிப்பவள், ராமனிடம் பக்தியுள்ளவள் உலகங்களின் ஹிதத்திற்காக நடக்கிறவள் என்று எனக்குப் படித்துப் படித்துக் காட்டிய சீதையை, என் தாயை, என் பகவதியை, மஹாலக்ஷ்மியை மறக்க முடியுமா? அவளைத் தேடிப்போகும் ஸ்வாமி, நீலமேக பர்வதம்போலவிருக்கும் உமது கருணு ஸ்வரூபத்தையும் மறக்க முடியுமா? என் பிரபு ஆஞ்சநேயர், ராமானுஜன் தொழுதவைகளும், ''பத்ரம் புஷ்பம்'' என்கிற கீதா வார்த்தைகளின்படிக்கும், அந்யத்பூர்ணுதபாம்

கும்பாத் அந்யத் பாதாவரே ஜநாத், அந்யத் குசல ஸம்ப்ரச்சநாத்: நசேச்சதி ஜனர்த்தன, மஹாபாரதம்—ஸஞ்சயன் சொல்லுகிறன். "அப்பா, திருதிராஷ்டிரா, பாண்டவர்களுக்காக தூது வரும் இந்த கிருஷ்ணன் உன் வெகுமதிகளுக்கு வசப்பட்டவன் ஆகான். அவனுக்கு வேண்டியது இவ்வளவே—அதாவது ஒருவன் அவன் வருகிற வழியில் தான் குடிக்கும் குடத்துத் தண்ணீரை, வாசலில் வைத்தால் போதும். நெடுந்தூரம் வந்த அதிதியை எவ்விதம் குசலம் பண்ணுவாயோ அதுவே போதும். அவனுடைய திரு வடிகளை விளக்கினல் போதுமானது. அவனை இன்சொல்லால் க்ஷேமம் விசாரித்தால் போதும். பூர்வாசார்யர்கள் சொன்னபடி அஞ்சலிபந்தம் ஒன்று செய்தால் போதும். ஏற்றமாக ஒன்றை யும் அவன் எதிர்பார்க்கிறவனல்லன். "நீ கொடுக்க எண்ணும் நாடும் பொன்னும் அவனுக்கு ஒரு சரக்காக இருக்காது" என்று மணவாளமாமுனிகள் ஸ்ரீவசனபூஷணத்தில் அருளிச்செய்தபடி, "உன் ஆபிமுக்ய ஸூசகமாக, இவைகளைச் செய்யப்பார்" என்று சொல்லி, பரிவதிலீசனைப்பாடி விரிவது மேவலுறுவீர், பிரிவகை யின்றி நன்னீர்தூய்ப் புரிவதும் புனகபூவே, புல்லைக்காட்டி யழைத்தும் புல்லையிடுவாரைப்போல, பல ஸாதானங்களும் பேத மில்லை; ஆகையாலே ஸுகரூபமாயிருக்கும் இவன் அவனை நினைக்கும்போது, இந்த பிரபத்தியும் உபாயமன்று; அவன் இவனை நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று. இவை யிரண்டையும் ஸ்ரீ பரதாழ்வான், குஹப்பெருமாள் விஷயத்தில் நாம் காணலாம். பரதாழ்வான் செய்த பிரபத்திக்கும் அவன் காலதாமதம் செய்தான்; குஹப்பெருமாள் விஷயத்தில் தானே நேரில் போய் என் பிரபு அவனை ராமன் அங்கீகரித்தான். எம் பெருமானின் திருவுள்ளத்துக்கு உகப்பானது புண்யம்; வெறுப் பானது பாபம் என்கிற புண்ய பாப லக்ஷணம் கிடையாது. அவன் திருவுள்ளமே ஸித்தி. அவனுடைய சீதையே அந்த ஸித்தி ஏற்படுவதற்கு ஹேதுவான திருவுள்ளம். அவனுடைய மனத்தை ப்ரேரணை செய்யும் தயை என்று சூசிக்கப்படுகிற தல்லவா? அப்பேற்பட்ட சீதாராம தம்பதிகளை உமா மஹேஸ்வரர் ராமானுஜன் குஹன் பரதன் கோபிகைகள் தியாகராஜர் வேத வியாஸர் நம்மாழ்வார் மணவாளமாமுனிகளை முன்னிட்டு நான் சரணமடைகிறேன்.]

"இப்பேற்பட்ட பரம உதார வள்ளலாகிற என் பிரபு ஸ்ரீ ராம சந்திரனை விட்டுவிட்டு, மனிதர்கள் யாரையோ பஜிக்கிறர்களே, அவர்களின் அறியாமையை யார் சொல்லக்கூடும்? அந்த சாதா

ரண தெய்வங்கள் எல்லாம் கொம்பில்லாதவர்களும் வாலில்லாத பசுக்கள்போல அல்லவா இருக்கின்றனர். (மயில்தோகையை வைத்திருக்கும் கிருஷ்ணனையும், கோதண்டத்தைத் தரித்திருக்கும் ராமனையும் ஏன் ஸ்ருங்கி என்று கூப்பிடுகிறுர்கள்? இந்த ஒரு காரணத்திற்குத்தானே அவர்களிடம் மகிமையிருக்கிறது.) (என் பிரபு ஸ்வயமாக விபீஷணனைத் தன்னைச் சேர்ந்த சேவகன் என்று தீர்மானித்து, ஸ்வீகரித்துக் கொண்டார். பிரபுவின் ஸ்வபாவம் எனக்கும் விளங்கிற்று. பிராட்டியின் தயைதான் எனக்கு விளங்கவேண்டும்.) இப்பேற்பட்ட மகிமைபெற்ற அபார காருண்யம் சகல வானரங்களுக்கும் நேரில் திருஷ்டாந்த பூர்வமாகக் காண்பிக்கப்பட்டது. அவர்கள் எல்லோரும் ஆச்சர்யப்பட்டு பிரபுவைப் புகழ்ந்தார்கள். (சீதாராம லக்ஷ்மண விபீஷண சுக்ரீவ ஜயஹோ, ஜயஹோ என்று உத்கோஷித்தார்கள்.) (282)

என் பிரபு ஸர்வக்ஞர். அவருக்கு ஒன்றும் யாரும் சொல்ல வேண்டாம். (ஆனுல் எளியவரிடமும் தீனரிடமும் பூர்வபாஷி, ம்ருதுபாஷியாக விருப்பதால்,) ஸர்வ அந்தர்யாமியாக விருப்பதால், பிராணிகளின் ஸர்வ சேஷ்டைகளையும் பார்ப்பதால், ஸர்வ ரூபமய பிரபஞ்சத்தில் தன்னைச் சுலபமாகப் பிரகடனப்படுத்திக் கொள்வதால், அவருடைய மகிமைகள் அநிர்வசனீயமானது. கர்மபந்த சேஷ்டைகளிலும், பலன்களிலும் பற்றப்படாத மஹா உதாஸினர். (ஸுபர்ணர், நியந்தாவாகிற அத்யக்ஷகர், ஸர்வஸ்வதந்திரர். அவரிடம் போய் நாம் ஏன் இதைச் செய்தீர், ஏன் இதைச் செய்யவில்லை என்று கேட்கக் கூடுமோ? அதனுல் தான் என் ஆசார்யர் நம்மாழ்வார் அவரை நெடியன், கொடியன், கடியன், மாயன், அணிகொள் செந்தாமரைக் கண்ணன், செங்கனிவாய் கருமாணிக்கம், ஈசன் வானவர்க்கென்பன் என்ருல், அது தேசமோ காலமோ யாவற்றையும்பாராதவன் திருவேங்கடத்தானுக்கு, நீசனேன் நிறையொன்றுமில்லென், என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர் சோதிக்கே, என்கிறபடி நாம் தாழ்ந்து இறைந்து கேட்டால் அருள் புரிபவன்; காரணமின்றி நிர்ஹேதுக கிருபையால் பக்தர்களின் நன்மையை நினைப்பவன்; இவன் ஸ்வாமியாகவிருப்பதால், எதிர்த்து பேசுபவன் யாரும் கிடையாது. அவன் ராக்ஷஸர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்துவிட்டால், தேவர்களிலும் அவனை ஏன் இவ்விதம் செய்கிறீர் என்று சொல்பவர்கள் கிடையாது. பரதனை பதினுன்கு வருஷங்கள் அவன் காக்கவைத்தானே? எதற்காக? தர்மசீலர்கள் என்று தங்களை பறையடித்துக்கொண்ட

அந்த அயோத்தி மஹாஜனங்களை விட்டுப் பிரிவதற்காக அவன் அயோத்தியை விட்டு வனம் சென்றான். பரதனால் அல்லவோ அவர்கள் மீண்டும் மீட்கப்பட்டு, தங்களுடைய ஸ்வரூப ஞானத்தையும் ஸ்திர நிலையையும் அடைந்தார்கள். அதற்கு அவனும் அவர்களும் பதினான்கு வருஷங்கள் தவம் செய்ய நேர்ந்தது. ஆனால் இந்த ராக்ஷஸர்களின் விஷயத்திலோ ராமனுக்கும் சீதைக்கும் ஏற்பட்ட ஸங்கல்பம் விபீஷணனால் ஏற்பட்டது. அன்று பிரஹ்லாதனால் ஏற்பட்ட தயை தைத்ய சமூஹங்களுக்குப் போய் சேர்ந்தது அல்லவா? அதுபோல என் பிரபு ஒரு காரணமுமின்றி பிறப்பின் தோஷத்தை அடைந்த ராக்ஷஸ ராக்ஷஸிகளிடமும் மஹா சங்கல்பமாகிற கருணையை அடைந்தார்.) அந்த கருணைகவசத்தினால், என் பிரபு வார்த்தைகளை ராஜநீதியை ஒட்டிப் பேசலானார். (283)

"கேளுங்கள், கபிகளுக்குத் தலைவரான சுக்ரீவா, ராக்ஷஸாதிபதியான விபீஷணா, நீங்கள் மஹா வீரர்கள். இந்த ஆழமான மஹோததியை நாம் எவ்விதம் கடப்பது? ஏதாவது உபாயம் சொல்லுங்கள். இங்கே அநேக முதலைகள், மீன், ஜலஜந்துக்கள், சர்ப்பங்கள் நித்யவாசம் செய்கின்றன. இந்த ஸமுத்திரமோ ஆழமுள்ளதாகவும் பரந்ததாகவும், கம்பீரமான அலைகளுடன் கூடியதாகக் காணப்படுகிறது. இதனைக் கடந்து செல்வது மஹா கடினமாகத் தோன்றுகிறது. (284)

ரகு நாயகனுடைய வார்த்தைகளைக் கேட்ட லங்கேசரான விபீஷணன் சொன்னான். "ரகு நாதரே, ஸர்வ ஸ்வாமித்வம் கொண்ட தங்களுக்கு இது பிரமாதமா? ஒரே பாணத்தால் இந்த சமுத்திரமல்ல; பல கோடி ஸமுத்திரங்களை வற்றச் செய்யும் ஆற்றல் படைத்த ராமா, எங்களைத் தாங்கள் சோதிக்கலாமா? (எங்களிடம் சௌலப்யத்தின் காரணமாக எங்களுக்கு முக்யத்வம் கொடுப்பதாகவும், உன் சீதையிடம் பிற்பாடு இவர்கள் உனக்காக உதவி புரிந்தவர்கள் என்று சொல்லி பறையடிப்பதற்காகவும், எங்களுடைய யோசனையை விரும்புகிறீர்கள்.) உங்களுடைய வாத்ஸல்யமும் தர்ம வியவஸ்தையாகிற ராஜதர்மத்தையும் தழுவி நிற்கிறது. அதற்கேற்ப, நாம் முதலில் சமுத்திரத்தை அஞ்சலி செய்து, பிரார்த்தித்துக் கொண்டு, விண்ணப்பம் செய்வோம்." (285)

"பிரபு, தங்கள் முன்னோர்களால் இந்த ஸமுத்திரம் வெட்டப்பட்டு கங்கை பிரவாஹத்தால் பெரிதாகி, மகிமையை அடைந்திருக்கிறது. அதனால் இந்த மஹோததி தங்களுக்கு

அனுகூலமாக விருக்கக்கூடும். ஸமுத்திரராஜனே தன்னைக் கடப்பதற்கு யோசனை சொல்லுவான். அந்த உபாயத்தால் இந்த வானர கரடி சைன்யங்கள் ஒருவித பரிஸ்ரமமின்றி நாம் அக்கரை தாண்டிவிடலாம்.'' (286)

ஸ்ரீராமன் சொன்னார். ''ஸகா, சரியான உபாயம் சொன்னாய், இந்த விஷயத்தில் தெய்வசகாயம் மிகவும் அவசியம் தான். நாம் சமுத்திரராஜனை உபாஸிப்போம்,'' என்றார். இந்த வார்த்தைகள் லக்ஷ்மணனுக்கு உசிதமாக படவில்லை. அதனால் அவன் மன வருத்த மடைந்தான். (287)

லக்ஷ்மணன் சொன்னார். ''நாதரே, தெய்வத்தையே நம்பி, பிரயத்னம் செய்யாமல் வாழ்பவன் எவன் சுகத்தை அடைந்திருக்கிறான்? க்ரோதத்தையும் கோபத்தையும் காட்டி, ஸ்வாமி, நாம் இந்த சமுத்திர ராஜனை பயமுறுத்தவேண்டும். கோழை அல்லவா காரிய சாமர்த்தியமின்றி இந்த உபாஸனை வழியை அடைபவன். கோழைத் தனத்தை விட்டு, வீரனுடைய வழியில் நாம் செல்வோம், மிக்க சோம்பேறிகள் அல்லவா தெய்வம், தெய்வம் என்று நம்பிக்கை வைப்பவர்கள். (288)

ரகுவீரன் இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்துக் கொண்டார், ''சரி, உன் இஷ்டப்படியே நாம் செய்வோம்'' என்றார். தம்பியிடம் இவ்விதம் சொல்லிவிட்டு, பிரபு ரகுராய் சமுத்திரத்தினிடம் சென்றார். (289)

முதலில் ராமன் ஸமுத்திர ராஜனை பிரணாமம் செய்தார். ஆசமனம் செய்துவிட்டு, தர்ப்பசயனத்தில் புனிதமான எண்ணத்துடன் உட்கார்ந்தார். பக்கத்தில் கோதண்டம் வைக்கப் பட்டிருந்தது. (கோதண்டராமன் ஹ்ருஷிகேசனாக எனக்கும் ஸமுத்திர ராஜனுக்கும் காக்ஷி கொடுத்தார்.) இந்த சமயத்தில் விபீஷணன் பிரபுவினிடம் வந்து சேர்ந்துவிட்டான் என்பதை அறிந்த ராவணன் சில தூதர்களை அனுப்பி, மேற்கொண்டு நடக்கும் ரஹஸ்யங்களை அறிந்து வர அனுப்பினான். (290)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மிஸமேத வேங்கட பிரபு, உன்னுடைய ஸங்கல்பம் எது வேண்டுமானாலும் இருந்துவிடட்டும். உம்முடைய வீர்யம் மஹத்தானது. இந்திரனை அவமதித்த கிருஷ்ணரான நீர் கோவிந்த பட்டாபிஷேகம் பெற்றீர். பாரிஜாதத்தை அபஹரித்து தர்ப்பஹா என்கிற நாம தேயத்தை அடைந்தீர். அதுபோல வருணனைப் பிரார்த்தித்து

ஸேதுவை அணை கட்டிய நீர் தர்ப்பதர் என்கிற பெயரையும் அடைந்தீர். நீர் யாவரும் அடங்கி நடக்கக் கூடிய அபராஜிதர். திருப்தர் என்றும் சொல்லக்கூடிய தர்ப்பசயன கோதண்டராமா, யாரை நோக்கி இலங்கை சமுத்திரத்தை அடைக்கலம் புகுந்தாய்? ஜயம் என்கிற சீதையை நோக்கி அல்லவா செய்திருக்கிருய். ஜயம் என்கிற லக்ஷ்மி உன்னை நோக்கி வருவதாளுல், நீ பரம தர்மவாளுக விருக்கவேண்டும். நீ தர்மவாளுக விருக்கவேண்டு மாளுல், உம்மிடம் வீர்யம், அதிஸாமர்த்தியம், ஸர்வ ஸ்வாமி த்வமும் இருக்கவேண்டும். அந்த ஸர்வ ஸ்வாமித்வம் நிலைக்க வேண்டுமாளுல் ஆதிஎளிமைத்வம் வேண்டும். தான் ஸர்வ ஸ்வதந்திரளுகயிருந்த போதிலும், பக்தர்களின் பராதீனன் என்றும் நிரூபணம் செய்யவேண்டும். அன்று திருதிராஷ்டிரன் சொன்னபடி, "ஜயத்தின் அறிகுறிகள் தெய்வசகாயம், மனுஷ சகாயம், சக்தியாகிற வீர்யம் ஆகிய எல்லாம் பாண்டவர்களிட மிருந்தது. அதளுல் அவர்கள் ஜயமடைந்தார்கள்; என் புத்ரர் களுக்கு அவைகள் யில்லாதபடியால் அவர்கள் மரணத்தை யடைந்தார்கள்;" என்று சொன்ளுன். அதுபோல அல்லவா ராவணனும் மடிந்தான். ஆகையால் ஜயலக்ஷ்மியான சீதே, நீ எவ்விதம் நினைக்கிருயோ, அதன்படி காரியங்கள் நடக்கும். அப்பேற்பட்ட சீதையை நினைத்துக் கொண்டு, தீக்ஷை பண்ணிக் கொண்டு, மஹாவிரதத்துடனிருக்கும் தர்ப்பசயளுன ராமனை என் கோதண்ட ராமனை, தர்ம வ்ரத ரூபியை, பராசக்தி அன்பனை, ஜயலக்ஷ்மியை ஆராதனம் செய்தவனை, வியாஸர் மூலமாக நான் ஆராதனை செய்கிறேன்.]

ராவணளுல் அனுப்பப்பட்ட இந்த ரஹஸ்ய ஒற்றர்கள் கபடமாக வானர வேஷத்தைத் தரித்துக் கொண்டு, அங்கு நடந்த ஸம்வாதங்களை எல்லாம் கேட்டார்கள். ஸ்ரீராமருடைய லீலைகளை நேரில் பார்த்தார்கள். பிரபுவாகிய ஸ்ரீராமனுடைய உதார ஹ்ருதயத்தை தங்கள் ஹ்ருதயத்தில் புகழ்ந்து கொண்டு, சரணுகதர்களை ரக்ஷிக்கும் தீக்ஷையுடன் கூடிய பரமவ்ரதத்தின் மகிமையை நேரில் பார்த்து, வாய்விட்டுப் புகழ்ந்தார்கள். (291)

அவ்விதம் வாய்விட்டு புகழும் போது, அவர்கள் தங்களுடைய கபட வேஷத்தை மறந்தார்கள். ராமனுடைய ஸ்வபாவ கருணை அவர்களை வென்றுவிட்டது. (இதுவல்லவோ தாய் தந்தையரின் பிரேமை. இதுவல்லவோ புனிதமான ஸம்பந்தம். இதுவல்லவோ நாம் தேடவேண்டிய ஸ்நேகம் என்று புகழ்ந்தார்கள்.) இவ்விதம் அவர்கள் சொல்லிக் கொண்டிருக்கும்

போதே, அவர்களுடைய கபட வேஷம் வெளிப்பட்டுவிட்டது. உடனே வானரர்களே அவர்கள் சத்ருக்களின் தூதர்கள் என்று அறிந்து கொண்டு, அவர்களைக் கட்டி சுக்ரீவ மஹாராஜாவிடம் கொண்டு வந்தார்கள். (292)

சுக்ரீவன் உடனே ஆக்ஞைவிட்டான், "இவர்களுடைய அங்கங்களை வெட்டி அனுப்பிவிடுங்கள்." சுக்ரீவனுடைய வசனங்களைக் கேட்ட வானரர்கள் சந்தோஷத்துடன் அந்த ராக்ஷஸர்களை இழுத்துக் கொண்டு சென்றார்கள். அவர்கள் தங்கள் மித்ரர்களை தயார் செய்து கொண்டு, ஒரே உத்ஸாஹத்துடன் படை நடுவிலே சென்றார்கள். (293)

[தியானம்

ராமா, சீதா பிரபு, நாராயணு, மஹாலக்ஷ்மி விரதா சரணம் சரணம். என் பிரபு தர்ப்பசயனன் சீதா பரணக விருந்தான். வாக்குக்கும் சொல்லுக்குமுள்ள இணைபிரியாத ஸம்பந்தத்தையுடைய சீதாராமன் இன்று எப்படி நான் வாழவேண்டும்? எவர் மெச்சவும் காணவேண்டும் என்று சொல்லிக் கொள்ளும்படி அற்ப ஆசையைக் கொண்ட ஜீவன் புலன் வழிகளால் வரும் இன்பத்தை பூர்ண ஸ்வர்க்கம் என்று அறிந்து, ஆசைக்கடலில் அகப்பட்ட துரும்பு போலவா, சாதாரண ஜீவனைப் போலவா அந்த தர்ப்பசயன ராமன் விளங்கினன்? இல்லை, இல்லை, அப்பேற்பட்டவனுக்கு கண்ணுக்கும் எட்டும் வரை அதற்கும் மேலும் உள்ள ஒரே தண்ணீர்மய காக்ஷியாகிற ஆசைக்கடல் அலைபுரண்டு வந்தாலும், பரவாயில்லை. ஏன்? அவன் தான் அருள்புரியும் அபயாம்பிகையாகிற சீதையின் அருளை வேண்டியல்லவோ நினைத்துப்படுத்தான். ஆசை உள்ளம் கொண்டு, சேதனனுக்கு என்ன நேருமோ, எது நிகழ்மோ, என்கிற அச்சம் இருக்கும். ஆனல் இந்த ராமன் பயப்படவில்லை. அவனுக்கு உள்ளும் புறமும், சிந்தையும் செயலும், சொல்லும் அதன் பொருளைப் போல, புல்லும் பரிமளப் பூங்கொடி போலவும், புதுமை மலர் அத்துடன் திகழும் மணமும் போலவும், பகலும் இரவும் போலவும், தவநெறியும் வைகுண்டமாப் போலே இந்த கோதண்ட ராமன் விளங்கினன். சீதா பரமாகவிருக்கும் ராமன், திவ்யகந்தாட்யா ஸர்வ கந்த ஸ்வரூபியாக பரிமளம் என்னும் சொல்லுக்கு அர்த்தமாக மேனிமணம், ஞானமணம், சிந்தையின் மணம், செயலின் மணம், பரிமளப் பைங்கிளிபோல, ராம பிரானே, அதன் கொழுகொம்பு என்று சொல்லும்படி பரஸ்பர

காதல் சிந்தனையில் நினைவாடி வதங்கும் பரிமள சீதாராமனை, பரிமள ரங்கநாயகியுடன் கூடிய ரங்கனை நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன் எனக்கு அடைக்கலம் வேண்டுகிறேன்.]

சுக்ரீவனுடைய ஆணையைப்பெற்ற அந்த வானரர்கள் அந்த ராக்ஷஸர்களை அடித்து, பலவிதமாக துன்புறுத்தினார்கள். அந்த தீனர்களான ராக்ஷஸர்கள் உபத்ரவம் தாங்கமுடியாமல் பலவிதமாக அழுதுகொண்டு, உதவியை வேண்டினார்கள். ஆனால் வானரர்களா அவர்களை விடுவார்கள்? இல்லை, சுக்ரீவனுடைய உத்தரவாச்சுதே; ஒருக்காலும் மாட்டார்கள். அப்பொழுது அந்த தூதர்கள் சொன்னார்கள், "எங்களுடைய மூக்கையும் காதுகளையும் அறுத்து, கோஸலாதிபரான ஸ்ரீராமனிடம் ஸமர்ப்பியுங்கள். எங்களுக்கு அது ஹிதமாகத் தோன்றுகிறது." (294)

இதைக்கேட்ட லக்ஷ்மணன் எங்கிருந்து இந்த கிலகில சப்தம் வந்தது என்று பார்த்து வானரர்களிடம் வந்து சேர்ந்தான். அவர்களுடைய கஷ்டத்தைப்பார்த்து, இரக்கம் கொண்டு, லக்ஷ்மணன் அவர்களை விடுவித்தான். அத்துடன் ஒரு கடிதத்தையும் கொடுத்து அவர்களை ராவணனிடம் சொல்லச் சொன்னான். "இந்த கடிதத்தை லக்ஷ்மணன் கொடுத்தான். ராவணா, குலத்தைக் கெடுக்கவந்தவனே, இந்தக் கடிதத்தை படிக்கச் சொன்னான், லக்ஷ்மணன்," என்று சொல்லுங்கள். (295)

அந்த முட்டாளிடம் சொல்லுங்கள். "நான் மிக்க கிருபையுடன் அனுப்பியிருக்கும் விஷயத்தை நன்றாகப் புரிந்து கொள். சீதையை ராமனிடம் ஒப்பிவித்துவிடு. ஸ்ரீராமனிடம் சமாதானம் செய்துகொள். இல்லாவிடில், நீ மரணத்தை அடைவாய்." இவ்விதம் லக்ஷ்மணன் அவர்களுக்கு உத்திரவிட்டான். (296)

அந்த ராக்ஷஸர்கள் லக்ஷ்மணனை வந்தனம் செய்துவிட்டு, ஸ்ரீராமனுடைய கருணையைப் புகழ்ந்துகொண்டு சென்றார்கள். லங்கையில் வந்து தங்கள் அரசரான ராவணனைக் கண்டு, வணக்கம் தெரிவித்து, வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தார்கள். (297)

தசமுகனான ராவணன் அவர்களிடமிருந்து விருத்தாந்தங்களைக் கேட்டான். அவனுக்கு இந்த விஷயம் வேடிக்கையாக விருந்தது. ராவணன் கேட்டான். "சுகனே, உண்மையைச் சொல். உங்களுடைய சௌக்யம் எவ்விதமிருக்கிறது? ஏன்

பேசாமலிருக்கிறீர்கள்? விபீஷணனுடைய சமாசாரம் ஏதாவது தெரியுமா? அவனுக்கு நிச்சயமாக ம்ருத்யு நெருங்கிவிட்டபடியால் அவன் என்னை லக்ஷியம் பண்ணவில்லை.'' (298)

''அந்த மூர்க்கன் லங்கையைத் தியாகம் செய்துவிட்டு, வானரர்களிடம் போய் சேர்ந்துவிட்டான். அபாக்யமுள்ளவன், எவ்விதம் ஜவஹர் தான்யத்துடன் புழு பூச்சி அறைக்கப்படுகிறதோ, அதுபோல அந்த வானரர்களுடன் அவனும் என்னால் நசுக்கப்படுவான். சரி, அந்த வானர கரடி சைன்யங்களைப் பற்றிச் சொல். அவர்களுக்கு விபரீத காலம் இருக்கத்தான் இருக்கிறது. அதன் பிரேரணையினால் அவர்கள் மதியிழந்து என்னுடன் சண்டை செய்ய வந்திருக்கிறார்கள்.'' (299)

''இந்த தயைநிறைந்த ஸமுத்திரம் மாத்திரம் நடுவில் இல்லாத போனால் அவர்களை இத்தனை நேரத்திற்குள் ராக்ஷஸர்கள் அழித்திருப்பார்கள். ஏதோ அவர்களின் நல்லகாலத்திற்கு ஏற்ப, அவர்களுக்கு ரக்ஷை ம்ருதுஸ்வபாவமான சமுத்திரத்தால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சரி, அந்த தபஸ்விகளைப்பற்றிச் சொல். அவர்கள் என் பெயர், என் புகழ், கீர்த்திகள் யாவற்றையும் கேட்டமாத்திரத்திலே ஹ்ருதயத்தில் பயத்துடன் நடுநடுங்கிப் போய்விடுவார்கள்.'' (300)

''நீங்கள் அவர்களை சந்தித்தீர்களா? இல்லையா? அவர்களே என் பெயர் புகழைக்கேட்டு, பயம்கொண்டு வாபஸ் பெற்றுவிட்டார்களா? ஓடி ஒளிந்துகொண்டார்களா? சத்ருக்களின் பலம், தேஜஸ் இவைகளைப்பற்றி என்ன தகவல் கொண்டு வந்திருக்கிறார்கள்? பயந்துபோனவர்கள் மாதிரி நீங்கள் ஏன் பேசாமலிருக்கிறீர்கள்?'' (301)

தூதர்கள் ராவணனுடைய கேள்விகளுக்கு பதில் சொன்னார்கள். ''நாதரே, எவ்விதம் கிருபை கூர்ந்து எங்களைப் பல கேள்விகளைக் கேட்டீர்களோ, அவ்விதம் அதே கிருபையுடன் கூடிய மனத்தால் க்ரோதத்தைவிட்டுவிட்டு நாங்கள் சொல்வதை தயவுசெய்து கேட்கவேண்டும். எங்களுடைய வசனங்களில் தாங்கள் பரிபூர்ண விஸ்வாசம் கொள்ளவேண்டும். ஸ்வாமி, எப்போது தங்களுடைய இளைய தம்பி விபீஷணன் ஸ்ரீராமசந்திரனைச் சந்தித்துச் சரணம் அடைந்தானே, அப்போதே, ஸ்வாமி, ஸ்ரீராமன் அவனுக்கு லங்கா ராஜ திலகத்தைச் சூட்டிவிட்டான்.'' (302)

''அதன் பிறகு எங்களை ராவணனுடைய தூதர்கள் என்று வானரர்கள் அறிந்துகொண்டு, எங்களுக்குப் பல கஷ்டங்களைக் கொடுத்தார்கள். எங்களுடைய மூக்கையும், காதுகளையும்

வெட்ட முயற்சி செய்தார்கள். அதன் பிறகு நாங்கள் ராமனின் பெயரைச் சொல்லி, எங்களுக்கு உபத்ரவம் ஒன்றும் செய்யக் கூடாது என்று சொன்னவுடன், அவர்கள் எங்களை விட்டுவிட்டார்கள்.'' (303)

''நாதரே, ஸ்ரீராமனுடைய சைன்ய பலத்தை நாங்கள் சொல்லுகிறோம். ஸ்வாமி கேளுங்கள், அவைகளை நூறு கோடி முகங்களால் கூட வர்ணிக்க முடியாது. நானு வர்ணங்களுடன் கூடிய கரடிகள், வானரங்கள், பயங்கரமான முகங்களை உடையதும், பெரிய சரீரங்களைக் கொண்டதாகவும், பார்ப்பதற்குப் பயத்தைக் கொடுக்கும் ரூபங்களுடன் விளங்குகின்றன.'' (304)

''நம் ஊருக்கு வந்ததே ஒரு வானரம். அந்த வானரத்தினுல் லங்கை கொளுத்தப்பட்டு, தங்கள் புத்ரனை அக்ஷயகுமாரன் வதம் செய்யப்பட்டதும் தங்களுக்கு ஞாபகமிருக்கும். அந்தக் குரங்கையும் பாரத்தோம். அதுதான் இருக்கிற குரங்குகளுக்குள் (மிகமிகச்) சிறியது. அவர்களின் பெயர்களும் பலவிதங்களாக இருக்கின்றன. அவர்களுடைய சரீரங்கள் கடினமாகவும் பயங்கரமாக யுத்தம் செய்வதற்குத் தகுதியுள்ளவைபோல விருக்கின்றன. அவர்களுடைய பலம் கணக்கற்ற யானைகளின் பலத்தைப்போல விருக்கின்றது. அவர்கள் விசாலமான மார்பு பிரதேசங்களுடன் விளங்கும் வீரர்களாகக் காணப்பட்டார்கள்.'' (305)

''த்விவிதன், மயிந்தன், நீலன், நளன், அங்கதன், கதன், விகடாஸ்யன், ததிமுகன், கேசரி, நிசதன், ஸட், ஜாம்பவான் இவர்கள்தான் அவர்களில் மிக முக்கிய பலசாலிகள்.'' (306)

''இந்த வானரங்கள் அனைவரும் சுக்ரீவனுக்குச் ஸமமான பலமுடைய வீரர்கள். அவர்களைப்போல கோடிக்கணக்கான வானரர்கள் ஸமமான பலம் உள்ளவர்கள். அவர்களின் எண்ணிக்கையை யார் அறிய முடியும்? பிரபு ஸ்ரீராமச்சந்திரனின் மஹா கிருபையினுல் அவர்கள் அதுலிதமான பலம் கொண்டவர்கள். அவர்கள் மூன்று லோகங்களையும் சாதாரண திருணம் (புல்) மாதிரி அலக்ஷ்யமாகக் கருதுபவர்கள்.'' (306)

''தசகந்தரனே, நாங்கள் தெளிவாகக் கேட்டோம். பதினெட்டு பத்மங்கள் (பத்துக் கோடி) வானரர்களின் சேனுதிபதிகள். அவர்களுடைய சேனுதிபதிகளின் கூட்டத்தில், தாங்கள் சுலபமாக யுத்தத்தில் ஜயிக்கக்கூடும் என்று சொல்லும்படி வானரர்கள் ஒருவரும் இல்லவேயில்லை, இருக்க முடியாது, என்று எங்களுக்குத் தோன்றுகிறது.'' (307)

"அவைகள் பரமக்ரோதத்துடன் கைகளைப் பிசிந்து கொண்டு யுத்த ஸந்நாதம் செய்தவர்களாக ஸதா காணப்படு கிறார்கள். ஆனால் பரம கிருபாளுவாகிற ஸ்ரீராமச்சந்திரன் அவர் களுக்கு ஆக்ஞை தருவதாக இல்லை." "நாம் அனைவரும் சேர்ந்து, இந்த ஸமுத்திர ஜலத்தை வற்றச் செய்து, அதில் வாழ்ந்துவரும் மீன் கூட்டங்களையும், ஸர்ப்பங்களையும் சேர்த்து, வற்ற அடித்துவிடுவோம். இல்லாதுபோனால் மஹா பர்வதங்களை நாம் இந்த ஸமுத்திரத்தில் போட்டு, ஜலத்தை நிரப்பி மூடிவிடு வோம்." (308)

"அதன் பிறகு நாம் ராவணனை சந்தித்து இருகப் பிசிந்து, தூசியைப்போல ஆக்கிவிடுவோம்," என்று பலவிதமாக அவர்கள் கடூரமான வசனங்களுடன் கர்ஜனை செய்துகொண் டிருந்தார்கள். அவர்களுக்குப் பயமே கிடையாது. அதேபோல கணக்கற்ற வீரர்கள், வீர முழக்கங்கள் செய்துகொண்டு லங்கையையே முழுங்கிவிடுவார்கள் போலத் தோன்றுகிறார்கள்." (309)

"எல்லா வானரங்களும், கரடிகளும் யுத்தப் பயிற்சியில் நன்றாக பழக்கப்பட்ட சூரர்கள். அவர்களின் லக்ஷணப் பொறுப் பைப் பிரபு ஸ்ரீராமர் தானே ஸ்வயமாக ஏற்றுக் கொண்டிருக் கிறார். ஹே ராவணா, அவர்கள் யுத்தத்தில் கோடிக் கணக்கான காலர்களைக் கொல்லுவதற்குச் சாமர்த்தியம் வாய்ந்தவர்கள் என்று நாங்கள் நினைக்கிறோம்." (310)

[தியானம்

ஹே கோதே, சீதே, மஹாலக்ஷ்மியே, க்ஷீராப்தி தனயே, ஸ்ரீதேவியே, நீ யாரிடம் பள்ளி கொண்டிருக்கிறாய்? இந்த தர்ப்ப சயன ராமனாகிற பாற்கடலுள் பையத் துயின்ற பரமனிடமா அல்லது, ஆண்டாள் போன்ற விரதங்கள் கொண்ட பெண்க ளிடமா, நீ யாரிடம் சயனித்துக்கொண்டிருக்கிறாய்? அம்மா உனக்குத் தெரியுமா? இந்தப் பெண்கள் நெய் உண்ணார்கள், பால் உண்ணார்கள், காலையில் எழுந்து நீராடி மலர்கூட இட்டு முடியாமல், செய்யத்தகாத காரியங்களைச் செய்யாமல் எம் பெருமான் பிராட்டி ஆகிய இருவர்களின் பாதங்களையே நம்பி, அந்தத் திருவடிகளின் ஸம்பந்தத்தை அடைய வேண்டி தீக்ஷைகொண்டு, விரதம் செய்த தேவஸ்திரி களுடன் கூடிய பூமிப் பிராட்டியை அடைந்திருக்கிறாயோ. ஹே சீதே, உன்னை நானும் அடைவதற்கு விரதம் கொண்டு,

தர்ப்பையின்மேல் படுத்து இருக்கிறேன். ஸ்ரீ ராமன் நினைக்கிறுர் க்ஷீராப்தி நாதனுகிற சமுத்திரராஜனை, உனது தகப்பனை, (பெரியாழ்வாரை, சூடிக்கொடுத்த ஆண்டாளின் கருணைக்கடலை,) எதிர் பார்த்து சயனம் கொண்டிருக்கிறேன். தர்ப்பசயனுன ஸ்ரீராமனை கோதண்ட ஹஸ்தனுகவும் ராமானுஜபூர்வனுகவும் பார்க்க மாட்டாயா! உனக்காக அம்மா, விரத தீக்ஷை கொண்டு நிறைந்த நீர் என்று சொல்லுமாப்போல, இந்த அலைபாயும் கடலில், வானளாவி வீசும் நதிகள்கொண்ட நீலக்கடலில் அமைதியுடன் உன் பிச்சையை ஏந்திப்பார்க்குமாப்போலே, உனது அருளையே உய்யும் ஆறு என்று படுத்துக்கிடக்கும் யோகபூதனை, அவன் செய்யும் பிரார்த்தனைகளைக் காதுகொடுத்துக்கேள் என்று சொல்லுமாப்போலே ஸ்ரீராமன் லக்ஷ்மணபூர்வஜன் விரதம் பூண்டுகிடந்தான். அதைப்பார்த்தால் நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கு என்கிற அனன்ய உபாயத்தை அவலம்பித்த நோன்புகொண்ட ஆண்டாளின் சகிகளுக்கு அனுஷ்டானம் என்கிற புண்ய உபாயத்தால், ஸத்தைப்பெறுவதற்கு கிருஷ்ணனும், கிருஷ்ண விபூதியையும் பெறவிரும்பும் பரதந்திர சேதனர்களைப்போல, உபாயபலமான விரதங்களால், உபாயாந்திர பூதமாயிருக்கும் பிராட்டியை, உபாயபிரதிபந்தகமான அக்ஞானம் முதலியவற்றை யொழித்து, "நாம் உண்ணுஞ் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்கிறபடி, ஸகலபோக்ய மயனுன எம்பெருமானடி பணியும் பக்தர்களைப்போல அல்லவா, அன்று கடற்கரையில் பிரபு தனது மாமனுராகிய ஸமுத்திரராஜனை எதிர்நோக்கி, ஆவலுடன் எதிர்பார்க்கும் ஸ்ரீதசரதராமன் சீதாபிராட்டியின் விரதத்தில் இருந்தான். சீதையின் வைபவம் அதனுடன் சேர்ந்திருக்கும் க்ஷீராப்தியின் வைபவம், அவைகளுடன் சேர்ந்திருக்கும் பூமிப் பிராட்டியின் வைபவம் யாவையும், தலைக்கட்டினுர்போல ஸ்ரீராமன் (ஸ்ரீரங்கநாதன் விஷ்ணு சித்தரை ஆண்டாளுக்காக அனுஸரிப்பது போல,) ஸமுத்திரராஜனை இன்று ராமன் அன்வயித்தான். அப்பேற்பட்ட க்ஷீராப்தி மகளான லக்ஷ்மிக்கும் சீதைக்கும் அவளைத் தேடிப்போகும் பரமனுக்கும் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். ராமானுஜா சரணம்.]

"ஸ்வாமி, இந்த ராமன் சீதையின் தீக்ஷையாக விருக்கிறுன். அவனுடைய தேஜஸ், பலம் எனப்படும் தியுதி, ஞானவெள்ளம், கருணைக்கடல், நற்பயனை அளிக்கும் நிறைந்த நீர்தேக்கம் போல காணப்படுகிறுன். அவனுடைய மென்மையையும்,

மஹறத்வத்தையும் ஸஹஸ்ர சேஷர்களாலும் விவரிக்க முடியாது. ஒரே பாணத்தால் இந்த சமுத்திரமல்ல; சகல சமுத்திரங்களையும் வற்றச்செய்வான்; (அன்று அகஸ்திய மாமுனிவர் ஒரே ஆசமனத்தால் சமுத்திரத்தின் ஜலத்தைப் பருகினரே, அதைப் போல இந்த ஜலங்களை வற்றச்செய்யும் அமிததேஜஸ் வாய்ந்தவன். கார்முகில் என்கிற கருணையால் நிரம்பப்பட்டு, கடலில் உயிர்வாழும் ஜந்துக்களுக்கு தீங்கு வரக்கூடாது என்கிற மெய்விரதத்துடன் அடிபணிந்து நிற்கிற ராமனுடைய பொறுமையை, நாங்கள் எவ்விதம் வர்ணிப்போம்) (பிரபு ஸ்ரீராமன் ''ஸ்வாமியாக'' விருந்தபோதிலும் எளியவனுக்கு தாஸன் என்கிறுப்போல, உம்மை சீதையுடன் வருவானு, நம்மை மன்னிக்கும்படி ஸ்வரூப ஞானத்தினுல் பிச்சை கேட்பானு, இனி இவ்விதம் செய்யேன்'' என்று விரத அனுஷ்டானத்துடன் நம்மைப்போல இந்த ராவணன் இருப்பானு என்று, ஸ்வாமி, தங்களை கருணையுடன் எதிர்பார்க்கிறுன். தான் ஸர்வசக்தனுகவிருந்தும், வேதவியாஸசரைப்போல நீரத நெறியில், வாவி நிறைந்த நீர் என்ன நின்றுன் என்று வேத வியாஸரை வில்லிபுத்தூரார் வர்ணித்ததுபோல, கருணைக்கடலை முகந்து சுருக்கி மாமேகம் பொழியும் ஞானவெள்ளம்போல, அவர் உம்மை எதிர்நோக்கி, பார்க்கிறபடியால், அவசர புத்தியை உதறித்தள்ளி,) நீதியைக் காக்க வேண்டுமென்கிற அபிப்ராயத்தில் உமது தம்பியான விபீஷணனை ''நாம் என்ன உபாயம் செய்யலாம்''? என்று கேட்டார். ஸ்வாமி, இதைப் புரிந்துகொள்ளும்,'' என்று சுகன் என்கிற சாரணன் சொன்னுன். (311)

''உமது தம்பியின் யோசனையினுல் (கருணை என்கிற மேகத்தைப்போல இந்த ராமன் சமுத்திரராஜனை அண்டி, பிச்சைகேட்குமாப்போலே, மழைபொழியுமாப்போலே,) தனக்கு மார்க்கத்தை அவனிடமிருந்து பிச்சை கேட்கிறுன். கிருபையை வேண்டி நிற்கும் தீனனைப்போலவிருக்கிறுன். (அதனுல் சமுத்திரராஜனையே பெருமையை அடையவிக்க அவன் அவ்விதம் விரும்புகிறுன்.) ஸ்வாமி, அதனுல் அவன் கிருபா பூர்ணனுகவிருக்கிறுன். தாங்கள் அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அவனுடைய மனம் அபராதம் செய்யப்பட்ட போதிலும் உம்மைப் போல க்ரோதவசத்தை அடையவில்லை. கிருபாஸமுத்திரம் போலவிருக்கிறுர், ஸ்வாமி'' என்கிற சாரணர்களின் வசனங்களைக் கேட்டான் ராவணன். அவனுக்குச் சிரிப்பும்

பரிஹாஸமும் தாங்கமுடியவில்லை. உடனே வார்த்தைகளைச் சொன்னான். "மூடர்களே, இந்த புத்தி வானரர்களை சகாயமாகக்கொண்ட ராமனுக்கேதான் உசிதம்." (312)

"என் தம்பி விபீஷணன் ஸ்வபாவமாகவேக் கோழை; யுத்தத்திற்குப் பயந்தவன். அவனுடைய வசனங்களை வேத பிரமாணமாகக் கொண்டு கிடைக்கக்கூடாத பொருளைப்போல மார்க்கத்தை சமுத்திர மத்தியில் கேட்கிறானே. இந்த சமுத்திர ராஜன் அவனுடைய செல்லக்குழந்தையா? ராமன் கேட்டுவிட்டால், அவன் கொடுத்துவிடுவானா? வேடிக்கையாகவிருக்கிறதே. அடே மூர்க்கனே, ஏன் நீங்கள் வீணாக எதிரியைப் புகழ்ந்து வாதம் செய்கிறீர்கள்? அவர்களுடைய பலம், புத்தி, காரிய ஸாமர்த்தியத்தின் ஆழத்தை நான் அறியமாட்டேனா?" (313)

"சுகா, கேள். எவனுக்குப் பயமே ஸ்வபாவமாகவுள்ள விபீஷணன் மந்திரியோ, அவனுக்கு எப்படி விஜய விபூதிகள் ஐஸ்வர்ய ப்ராப்திகள் கிடைக்கும்? நீங்களே பதில் சொல்லுங்கள். தர்மத்திற்குப் பயந்த ஸ்வபாவர்களிடத்தில் வீரத்தனம் எவ்விதமிருக்கும்? இந்த வார்த்தைகளைக் கேட்ட சுகசாரணன் ராவணனுடைய முகத்தைப் பார்த்தான். அவனுக்கு க்ரோதம் அதிகரித்திருந்தது. இதுதான் சமயம் என்று அறிந்து சுகன் லக்ஷ்மணன் கொடுத்த லிகிதத்தை ராவணனிடம் ஸமர்ப்பித்தான். (314)

தூதன் மேலே சொன்னான், "ஸ்வாமி, ராமானுஜனாகிற லக்ஷ்மணன் இந்த லிகிதத்தை தங்களிடம் கொடுக்க உத்திரவிட்டான். இதை வாசித்து, தங்களுடைய மனத்தை குளிரப் படுத்திக் கொள்ளுங்கள்." ராவணன் பரிகசித்துக் கொண்டு தனது இடதுகையால் அந்த பத்ரிகையை ஸ்வீகரித்துக் கொண்டு, தன்னுடைய மந்திரியை அழைத்து வாசிக்கச் சொன்னான். (315)

பத்திரிகையில் எழுதப்பட்ட விஷயம் இதுதான், "அடே மூர்க்க ஸ்வபாவமுள்ள ராவணா, நீ உன் நிஜஸ்வரூபத்தை உணரவில்லை. வெறும் வார்த்தைகளால் பேசிக்கொண்டு, மனத்தை ஜயித்துக் கொள்ளவில்லை. அதனால் உனக்கும் உன் குலத்திற்கும் நாசம் ஏற்படப் போவதை அறிகிறாயில்லை. (நீ ஸர்வலோக நியந்தாவாகிற ராமனின் நிஜஸ்ரூபத்தை அறியவில்லை. அவரிடம் நீ விரோதம் செய்துகொள்ளலாமோ!) அவரே பரமாத்மாவானபடியால், மும்மூர்த்திகளும் உனக்கு உதவிக்கு வரமாட்டார்கள். நீ அவர்களில் எவரையும் சரணமடைந்து,

உன்னைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என்று நினைத்து விடாதே. அவரை அலக்ஷ்யம் செய்தால், கடுமையான தண்டனை உனக்குக் கிடைக்கும். உன்னையும் உன் குலத்தையும் யாவரும் காப்பாற்ற முடியாது. (316)

"ஆனால் நான் சொல்லும் வழியை அனுசரிப்பாயாக. அதனால் நீயும் உன்குலமும் ஸர்வநாசத்திலிருந்தும் ஆபத்திலிருந்தும் தப்பிவிடலாம். உன்னுடைய அபிமானத்தைத் தியாகம் செய்துவிட்டு, பிரபுவின் பாதபங்கஜத்தை வண்டுபோல இறுகப் பிடித்துக்கொள். அவர் உன்னிடம் கருணைகாட்டுவார். "சரணாகதர்களை ரக்ஷிப்பதே என் விரதம்," என்று தர்ப்பசயனத்தில் விரத தீக்ஷையுடன் உன் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறார். அவ்விதம் செய்யாவிடில், துராத்மாவே, ஸ்ரீராமருடைய சரமழையாகிற அக்னியில் பந்து பரிவாரங்களுடன் அழிந்து போவாய். விட்டில் பூச்சி அக்னியில் நாசமடைவது போல நாசமடைந்துவிடுவாய், ஜாக்ரதை. உனக்கு எது தோன்றுகிறதோ, அதைச்செய்." (317)

[தியானம்

ராமா, சீதா, நாராயணா, சீதாராமா, நீங்கள் இருவர்களும் எங்கிருக்கிறீர்கள்? தயவு செய்து உங்களை வெளிப்படுத்திக் கொள்ளுங்கள். நானும் தியாகராஜரும் உங்கள் இருவர்களையும் தேடிவிட்டோம். ஆனால் நீங்கள் எங்கள் திருஷ்டிக்கு புலப்படுகிறவர்களாகத் தோன்றவில்லை. சீதே, நீதான் கௌரியா? லக்ஷ்மியா? வாகீஸ்வரியாகிற பெண் உருவமா? ராமா, நீதானே ஸ்ரீகரன், மாதவன், பிரும்மாதி தேவர்களும் வந்தனை செய்யும் சிவமாதவனா, அல்லது ஆதிநாராயணனா, அல்லது பஞ்சபூதமா, காரண ஜலமா, அல்லது மும்மூர்த்திகளா அல்லது பலலோகங்களா அல்லது ஆணா, பெண்ணா, அலியா? நீங்கள் வசிப்பது எந்த இடம்? சொல்லுங்கள். அங்கேபோய் நான் தேடுகிறேன். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நான் எவ்விதம் உங்களைக் காண்பேன்?]

பத்திரிகையின் ஸந்தேசத்தைக்கேட்ட ராவணன் மனத்தில் பீதியை அடைந்தான். ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்வானா? மாட்டான். அதனால் கபடமாக தனது பயத்தை மறைத்துக்கொண்டு, முகத்தில் சிரமத்துடன் சிரித்துக்கொண்டு, எல்லோரும் கேட்கும்படி வார்த்தைகளை கர்ஜித்துக்கொண்டு சொல்ல ஆரம்பித்தான். (318)

"பூமியில் படுத்துக்கொண்டு கரங்களை நீட்டிக்கொண்டு ஆகாசத்தைப்பற்ற முயற்சிக்கும் மனிதனைப்போல இந்த பாலதபஸ்வி லக்ஷ்மணனின் வார்த்தைகளால் என்னைப் பீடிக்கப் பார்க்கிறான். வேடிக்கையாக விருக்கிறது." (319)

சுகன் இதைக் கேட்டதும், பதில் சொன்னான் "ஸ்வாமி, அவன் சொல்வது எல்லாம் ஸத்யம்தான். நீங்கள் ஸ்வ அபிமானத்தைத் தியாகம் செய்து விடுங்கள். அப்பொழுதுதான் உங்களுக்கு உண்மை நிலைமை புரியும். க்ரோதத்தை விட்டு என் வார்த்தைகளைக் கேளும். யாரிடம் ஸ்வாமி, பகைக்கிறீர்கள்? ஸ்ரீராமனிடமா? இது மஹா தப்பான காரியம். விரோத பாவத்தை ஒழித்துக்கட்டிவிடுங்கள். ஸ்ரீராமனை விரோதிக்காதீர்கள்." (320)

"ஸ்வாமி, ஸ்ரீராமனைப்பற்றி உமக்குத் தெரியாது. அதனால் தான் தாங்கள் அவரைச் சரியாக உணர்ந்துகொள்ளவில்லை. அவருடைய ஸ்வபாவம் அதிகோமளமானது. வெகு மென்மை யானது, அதுமாத்திரமல்ல. ரகுவீரன் அகிலலோகங்களுக்கும் ஸ்வாமி. அவருடைய ஸ்வபாவம் நல்லதையே பார்ப்பதால், அவர் அபராதங்களைக் கவனிக்கமாட்டார். உம்மிடம் அவர் அத்யந்த கிருபையைக் காண்பிப்பார்." (321)

"ஸ்வாமி, ஜனகரின் பெண்ணாகிற சீதையை ஸ்ரீராமனிடம் சேர்த்துவிடுங்கள். பிரபு, நான் சொல்வதைத் தயவு செய்து ஏற்றுக்கொள்ளுங்கள். பிடிவாதம் செய்யவேண்டாம் ஸ்வாமி," என்றான் தூதன். எப்பொழுது வைதேஹியை ராமனிடம் ஒப்பிவித்து, சரணமடையுங்கள் என்று தூதன் சொன்னானோ, ராவணனுக்கு கோபம் அதிகரித்தது. (322)

அத்தூதனும் விபீஷணனைப்போல ராவணனுடைய சரணங்களை வந்தனம் செய்துவிட்டுப் போய்விட்டான். அவன் போன இடம், விபீஷணனால் அடையப்பெற்ற கிருபாஸிந்துவாகிற ஸ்ரீரகுநாயகரின் ஸந்நிதானம். ராம கிருபையை அடைவதற்குச் சென்றான். அவரை பிரணாமம் செய்துவிட்டு, தன்னுடைய ஸகல விருத்தாந்தங்களையும் முழுவதும் சொன்னான். ராம கிருபையினால் அவனுடைய பழைய ஸ்வரூபமாகிற முனிவரின் வேஷத்தை அடைந்தான். அத்துடன் ஸ்வரூபத்தையும் அவன் அடைந்துவிட்டான். (323)

பகவான் சம்பு பார்வதியிடம் சொன்னார். "பவானி, அந்த தூதன் முன் ஜன்மத்தில் ஒரு ஞானியாகவிருந்தான். அகஸ்திய முனிவரின் சாபத்தினால் ராக்ஷஸ ஜன்மத்தை அடைந்

தான். இப்போது அவன் ராமக்ருபையினுல் பழைய உருவத்தைப் பெற்றுவிட்டான். அடிக்கடி அடிக்கடி ஸ்ரீராம சரணங்களை நமஸ்கரித்துவிட்டு, அந்த முனிவர் தமது ஆஸ்ரமத்திற்கு திரும்பி வந்துவிட்டார்.'' (324)

[தியானம்

சீதே, என்பவாம்பிகே, ஸூரஹிதே, பரதேவதே, உன்னையும் ருக்மிணியையும் நினைத்துப் பார்க்குங்கால், பரம சாந்தனுகிற பத்மநாபனுடைய சேஷ்டிதங்களைக் கண்டு நான் பயப்படுகிறேன் அம்மா. நானே பயப்பட்டால், நீயும் ருக்மிணியும் எவ்வளவு தூரம் ஆத்ம நிலையை அடைவதற்கு முன்பு மஹா சங்கடங்களுக்குட்பட்டிருக்கவேண்டும். ஸனகர், ஸநந்தனுதிகளால் சேவிக்கப்படும் நாராயணன் உங்களைக் கடுமையாகச் சோதித்துவிட்டு, 'சுந்தரி, என்னிடம் கோபத்தை அடையாதே. ஹேவைதர்ப்பி, வைதேஹி, நீ என்னையே நம்பினவள் என்று நான் அறிவேன். உனது வார்த்தைகளையும், செய்கைகளையும் பார்க்கவேண்டுமென்றும் கேட்கவேண்டுமென்கிற ஆசையாலும், உனது சிவந்த உதடுகளையும், சிவந்த கடைக்கண்களையும், அழகிய புருவங்களின் நெரிப்பையும் கோபத்தில் ஏற்படும் உனது முக அழகையும் பார்ப்பதற்கே நான் இவ்விதம் விளையாட்டுச் செய்தேன்'' என்று வெட்கமின்றி உன் நாயகன் சொன்னுரே ; அந்த வார்த்தைகளையும் கேட்டு, நீங்கள் இருவர்களும் ஸத்பதமாகிற பகவானுடைய பாதாரவிந்தங்களை விட்டு விலகாதவர்களாக விருந்தீர்கள். நாணம், நகைப்பு இவைகளோடு புருஷஸ்ரேஷ்டரான பகவானைப் பார்த்து, லக்ஷ்மியாகிற நீ என்ன சொன்னுய் தெரியுமா? ''தாமரைப் பூப்போன்ற கண்களை உடைய அரவிந்தாக்ஷா ; உம்முடைய பரம ஐஸ்வரியத்திற்கும் உம்முடைய பக்தகோடிகளான ஸனக ஸநந்தனுதிகளுக்கும் நாரதாதிகளுக்கும் சமம் இல்லை. உமது மகிமையினுலே, நீர் ஆனந்தமடைகிறீர். என்னையும் பக்த கோடிகளையும் ஆனந்தத்தில் மிதக்கச் செய்கிறீர். குணங்களை ஸ்வபாவமாக உடைய நான் எங்கே? மூன்று லோகங்களுக்கும் ஈஸ்வரராகிய நீர் எங்கே? அதனுல் அல்லவோ மிக சூக்ஷமமான உம்முடைய பாத பங்கஜங்களின் மதுவை முனிவர்கள் குடிக்க விரும்பி, உம்மை வண்டுகளைப்போல ஆஸ்ரயிக்கிறுர்கள். ஸர்வ ஸாதாரணமான அந்த முனிவர்களின் காரியங்களுக்கே மிகமிக மேன்மை உண்டென்றுல், ஸர்வலோகேஸ்வரராகிய உம்முடைய காரிய விசேஷங்களின் மகிமைகளை யாராவது அறிய

முடியுமா?'' ''ஆதலால் உம்மை வணங்குவதே, அனந்த சயனரே, அனந்தபத்மநாபரே, ஸ்ரீகர்ப்பரே, முரளிதரரே, கோதண்டஹஸ்தரே, சம்புபார்வதி ஸேவித முதித மனோஹரா, பெரும் பாக்யம்'' என்று சொல்லுகிறார்கள். ''நீரே எனக்கு ஆத்மா என்றும் ஆத்மாவைக் கொடுக்கக்கூடியவரென்றும், நான் அறிந்து உம்மை ஆஸ்ரயிக்கிறேன். நீர் அரசர்களுக்குப் பயந்து ஸமுத்திரத்தை சரணமாக அடைந்தீர் (த்வாரகையை நிர்ணயித்து சத்ருக்களிடமிருந்து கண்ணன் யாதவர்களைக் காப்பாற்ற நினைத்தது) என்று சொல்லும் வார்த்தையும், சமுத்திர ராஜனைச் சரணமடைந்து லங்கைக்கு வழி மார்க்கம் வேண்டினீர் என்கிற பேச்சு வார்த்தைகளும் எவ்வளவு பொருந்தாத வார்த்தைகளாகத் தோன்றுகின்றன. அதனால் உங்களை அடைய விரும்பிய ப்ருது, பரதன், நஹுஷன் பிள்ளையான யயாதி, முதலிய ராஜ ரிஷிகள், உம்முடைய ஏகாதிபத்யமான ராமகிருஷ்ண ஸாம்ராஜ்யத்தை அடைந்து, சங்கீத ஞானமுள்ள தியாகராஜர், ஆஞ்சநேயர், சீதை, உமா மஹேஸ்வரர்கள் போன்ற ஸத்பக்தர்கள் வனமே கதியென்று வந்து அடைந்து, அதற்குப் பின் இப்பொழுதும் எப்பொழுதும் வருந்தி பச்சதாபப் படவில்லையே. ஹேசாக்ஷாத்கார ஸத்பக்தியே, சங்கீத ஞானமே, பிராணன் அக்னி ஆகியவர்களின் ஸம்யோக பலமும், பிரணவ நாதமும், ஸப்தஸ்வரங்களும் தம்புராவின் மீட்டுதலும் சேர்ந்து தானே அந்த தியாகராஜர் ஏகாம்பரேஸ்வரரை, உமாகாந்தனை சங்கீத லோலனாகவும் நாராயணமனாகவும், உம்மைப் பாஹி, ''பாஹி'' என்று கேட்ட வண்ணமாக இருக்கிறார். அப்பேற்பட்ட பரிஜன்யரே, என்னிடம் வாராய். உம்முடைய ஔதார்யத்தை ஒளிக்காதீர். கடலினுள் புகுந்து வராஹவதனத்தினால் நீரையும் பூமியையும் முற்றும் முகர்ந்து கொண்டு, பெருமுழக்கம் செய்த யக்ஞவராஹரே, ஸ்ரீசார்ங்கம் சரமழை பொழியுமாறு நாடு எங்கும் பெய்யும் உமது கருணை மழையை என்மீது பொழிய மாட்டீரோ? ஆழிபோல் மின்னி வலம்புரி போல நின்று அதிர்ந்து சார்ங்கம் உதைத்த சரமழையைப் போல, எங்களை வாழமகிழ்விக்க உமது கொடையில் ஒன்றும் வஞ்சிக்க எண்ணம் இல்லாமல் உமது திருமேனி ஸ்வரூபம் ஸ்வபாவத்தை அன்று ராமானுஜருக்குக் காண்பித்தது போல, எனக்குக் காண்பிக்க மாட்டீரா? அஜராகிய நீர்தான் எனது இடையூறுகளைப் போக்க வேண்டும். கடல்விளங்கு கருமேனி அம்மானே, உன்னைக் கண்ணாரக் கண்டு உவக்கின்றேன். வாயார வாழ்த்துகின்றேன். பாம்பணை பணிகொள்ளும் அனந்த பத்மநாபரே, அப்பனே உன்னுடைய ''துயர் அறு சுடரடி''களில் அடியேன் விண்ணப்பம் செய்து கொள்ளுவதெல்லாம் ''அந்த அடி நிழலில் உலகில் வாழவேண்டும்; துயரற்றுத் தழைக்கவேண்டும்;'' உம்முடைய உலகத்தையும் உம்மையும் கவனித்துக்கொள்வது நம் கடன்; நீர் நம்முடைய இந்த வீட்டுக் காரியத்தை எல்லாம் ஆராய்ந்து, நடத்தும்'' என்று பிராட்டிபெருமாள் மௌன வாக்

குக்களை ராவணன் ராக்ஷஸிகள் பால் உரைத்த சீதையின் வார்த்தைகளையும் தேவர்களின் காரியத்தை ஸாதிக்க விரும்பும் தர்ப்பசயன ஸ்ரீரங்கராமனின் வார்த்தைகளும், என்னைப் போன்றவர்களை வியக்கவைக்கும் "உங்களது கருணையாகிற பர்ஜன்யத்தை, உங்களுக்கு ஆளாகிவிட்டால், எந்தப் பேறும் பெறக்கூடும்," என்கிற வீணுகாத நம்பிக்கையையும் பலமாக்குகின்றது. அப்பேறபட்ட ஸுரஹிதர்களான ராமசீதாவை நான் நமஸ்கரிக்கிறேன். அம்மா அப்பா, ஸநாத், ரக்ஷிக்கவேண்டும். மானினி ரக்ஷிக்கவேண்டும்.]

மூன்றுதினங்கள் சென்றுவிட்டன. தர்ப்பசயன ராமன் வ்ரதத்தைக்கொண்டு ஸமுத்திர ராஜனைப் பார்க்கவிரும்பி ஆவலுடன் படுத்துக்கிடந்து மூன்றுநாட்கள் மூன்று யுகங்களாகத் தோன்றின. ஆனால் இதை ஸமுத்திரராஜன் அறிவானே? ஜடஸமுத்திரம் போல, வினயஸம்பத் இல்லாதவன் போல, அவன் தோற்றம் அளித்தான். (ஏன் அவனுக்குத்தான் தெரியுமே, சீதையின் உள்ளத்தை. "நான் பிரும்மதேவருக்கும், பிறப்பிடமான காலரூபமான கமலத்தை உமது நாபியிலிருந்து தரிக்கிறேன். உமது சிரமங்களைப் போக்குவதற்கு பதமம் போன்ற கடாக்ஷ வீக்ஷண்யத்தை நான் வீசுகிறேன்; பர்ஜன்யராகிய ராமா, நீர் உம்முடைய ஸ்வரூபத்தைத் தெரிவித்து மூன்றுவித தாபங்களாகிற ஆதிஆத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக தாபங்களைப் போக்கும் மேகமாக உருவெடுத்து, இந்த குருடன் போலவிருக்கும் ராவணனுடைய கண்களைத் திறந்துவையும்; உம்மைச் சாதாரண மனிதன் என்று நினைத்திருக்கும் ராவணனுக்கு பரமஸ்பஷ்டமாக உமது மகிமைகளைக் கண்டு காணும்படி அவதரித்திருக்கும் நாராயணனுக பரமாத்மாவாக காண்பியும்" என்று சீதை சொல்வதுபோல ஸமுத்திரராஜன் நினைத்தான்.) இந்த மௌன இங்கிதங்களைக் கண்ட ராமன் கோபத்துடன் கதறினுர், "நான் ஸாதுவாகவிருந்தால் என்னை தீனனுக எல்லோரும் கருதுகிறுர்கள்; பயத்தை உண்டு பண்ணினுல்தான் எனது பரத்வம், ஸர்வஸ்வாமித்வம் ஆகியவை விளங்கும். பயமில்லாமல் ப்ரீதி வளருமா?" (325)

"லக்ஷ்மணு, கோதண்டத்தையும் பாணத்தையும் எடுத்துக் கொண்டுவா. இந்த சமுத்திர ஜலங்களை அக்னி பாணத்தினுல் அரைக்ஷணத்தில் வற்றச் செய்கிறேன். மூர்க்கனிடம் வினயம் காண்பித்தால் அவன் கேட்பானே? குடிலபுத்தி உள்ளவனிடம் ப்ரீதி அன்புடன் பேசும் பேச்சுக்கள் பலனைத்தருமா? ஸஹஜ கிருபணனுகவிருக்கும் மனிதனிடம் அழகான உதாரஸ்வபாவத்தை நீதியுடன் போதித்தால் அவன்தான் திருந்துவானே?" (326)

"தனக்கெல்லாம் தெரியும்", என்று மமதையுடன் இருப்பவனிடம் "இதைச் செய்" என்கிற ஞான மொழிகள் மனத்தில் பதியுமோ? அதிலோபியாகவிருப்பவனிடம் வைராக்கிய ஞானம்

உடனேயே ஏற்படுமோ? அதிக்ரோதம் உள்ளவனிடம் சமம் என்கிற ஸத்வ குணத்தை எதிர்பார்க்கலாமோ? அதுபோல ஸ்திரிபுருஷ காமங்களில் ஈடுபட்ட காமிகளுக்கு ஹரி கதைகளில் ருசியேற்படுமோ? பாலைவனத்தில் விதைக்கப்பட்ட பீஜம் முளைக்குமோ?'' (327)

இவ்விதம் சொல்லிக் கொண்டு ரகுவீரன் தனது வில்லில் பாணத்தைப் பூட்டினர். ''இந்த க்ரோதம் விஸ்வத்திற்கு நல்ல தற்கல்ல; பரம கெடுதல்களைக் கொடுக்கும்,'' என்று லஷ்மணன் நினைத்துப் பகவானிடம் ''கோபத்தை சமனம் செய்ய வேண்டும்,'' என்று பிரார்த்தித்த வண்ணமிருந்தார். எப்பொழுது பிரபு மஹா பயங்கரமான அக்னி பாணங்களை வில்லில் பொறுத்தினரோ, அப்பொழுது ஸமுத்திரத்தின் நடுவில் அமர்ந்திருக்கும் வடவாக்னி ஜ்வாலையுடன் கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது. (328)

மகரம், ஸர்ப்பம், மீன்கள் ஆகிய ஜல ஜந்துக்களின் ஸமுதாயங்கள் வியாகுலமடைந்தன. ஜலநிதியின் ராஜனுகிற வருணன் பகவானுடைய பிரதாபத்தை அறிந்தவன். அவன் தாபத்துடன் ஓடி வந்தான். அவனுடைய கைகளில் ஒரு பொற் தாம்பாளம் இருந்தது. பிராம்மண வேஷத்துடன் வெளிவந்த வருணன் அந்த பொற் தாம்பாளம் முழுவதும் ரத்னகுவியல்களை பகவானுக்கு காணிக்கையாக எடுத்துக் கொண்டு ஓடிவந்தான். (329)

காகபுசுண்டி கருடனிடம் சொன்னர், ''கருடரே, பூர்ணமாகக் கேளும். வாழமரத்தை பல விதங்களால் முயற்சித்தும், தண்ணீர் விட்டு வளர்த்தும் அநேக பிரயத்னங்கள் செய்த போதிலும், அதை வெட்டாமல் பழம் அதில் காய்க்கிறதில்லை. அதுபோல நீசபுத்தி உள்ளவனிடம் வினதையுடன் சொல்லப் படும் வசனங்கள் பயன் அளிக்கிறதில்லை. வழியில் போகும் யாராவது ஒருவன் அவனை வசவுகளுடன் திட்டின பிறகு அவன் திருந்திவிடுகிருனன்ருே!'' (320)

ஸமுத்திரராஜன் பயபீதியுடன் பிரபுவின் சரணங்களைப் பிடித்துக் கொண்டு விண்ணப்பம் செய்தார். ''ஸ்வாமி, உமக்கு என்னுடைய அவகுணங்களையும் தோஷங்களையும் ஸகலத்தையும் பற்றித் தெரியாதா? (பர்ஜன்யரே, உம்மால் அல்லவோ நான் பூர்த்தி செய்யப்படுகிறேன்.) க்ஷமை செய்யவேண்டும். பகவான், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம் ப்ருத்வி ஆகிற பஞ்ச பூதங்களுக்கும் ஆத்மாக விருப்பவரே, (பூகர்ப்பரே, பூதாத்மா, ஸ்ரீகர்ப்பரே,) உம்மால் அல்லவோ நாங்கள் நடத்தப்படுகிருேம். எங்களுக்கு என்று ஒரு விதமான சேஷ்டிதங்கள் கிடையாதே. நாங்கள் ஸ்வபாவமாகவே ஜடமல்லவோ.'' (331)

''ஸ்வாமி, உம்முடைய ப்ரேரணையினுல் அல்லவோ நாங்கள் நடத்தப்படுகிருேம். எங்களை நடத்திவைக்கும் அந்தர்யாமியே,

உமது ஆக்ஞையின்படி நடக்கும் மாயை, (காரண ஜலத்தை உதரத்தில் தாங்கும் வர பத்மநாபரே, நாராயணு, உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்டு,) உமது ஆக்ஞையின் பிரகாரம் எங்களை ஸ்ருஷ்டித்துப் போஷித்து, நியந்தாவாக அவள் நடத்து கிருள். அப்பேற்பட்ட மாயை உமக்கு அடங்கினவள் அன்ருே? ஸ்ருஷ்டியின் சிரமும் ரீதியும் உமது ஸங்கல்பத்தால் அல்லவோ ஏற்படுகிறது என்று வேதங்கள் கோஷிக்கின்றன. விஸ்வாத் மாவே, (நீர் எங்களிடம் தயை செய்யாத போனல் நாங்கள் எவ்விதம் வாழமுடியும்! தாமரைக் கண்ணரே, உம்மிடத்தில் சுகித்துக் கொண்டிருக்கும் ஆத்மவான்கள் ஸமத்ருஷ்டியினுல், உமது கிருபையினல் உமது சரணர விந்தங்களில் மனத்தைப் பறி கொடுத்து அந்த ஒரே ஒருவித பற்றுதலுடன் இருக் கிருர்கள். இந்த உலகத்தின் விருத்திக்காக நீர் மிகுந்த ரஜோ குணத்தை அடைவீராகில் உம்மிடமிருந்து தயையாகிற அனுக்ரஹம் ஒன்றே பிரார்த்திக்கப்படவேண்டிய விஷயம். ஆகையினுல் ஸ்வாமி, நாங்கள் உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட போதிலும், எங்களுடைய மனது புதிது புதிதான செய்கை களில் பிரவேசிக்கின்றது;) எங்களைப் போஷிக்கும் பிரபோ, நீர்தான் அனுக்ரஹ உள்ளம் கொண்டு, தயை பூர்ணராக எதை ஆக்ஞையிடுகிறீரோ, அதை நான் பூர்ணமாக அங்கீ கரித்து சுகத்தை பரிவாரசகிதம் அடைவேன்.'' (332)

''பிரபுவாகிற தாங்கள் என்னைச் சரியாகப் புரிந்து கொண்டு சிக்ஷித்தீர்கள். இது எனக்கு மிகவும் பிடித்தமானது தான். உலக நடத்தை, தர்மத்தில் நம்பிக்கை, அதை நடத்தி ஆசரணை செய் வதில் வியவஸ்தை, மரியாதை என்கிற லஜ்ஜையுடன் அகார்யத் தைச் செய்யாமல் இருப்பதுஎல்லாம் புருஷோத்தமராகிற உமக்கே உரித்ததன்ருே? உம்மை நம்பி வாழும் ஜீவனுடைய ஸ்வபாவமும் இது தானே (பிரிக்க வொண்ணுத நித்யஸம்பந்தம். ஜீவன் பரமாத்மாவுக்காக, நாராயண ப்ரீதிக்காக, நாராயண கைங்கர்யத்துக்காக எப்பொழுதும் வாழ்கிருன் அன்ருே?) மிரு தங்கம் பேரிகை போன்ற வாத்யங்கள், கிராமத்து நாடோடி, தேக பலமுள்ள சூத்ரன், பசு, ஸ்திரி, ஆகியவர்கள் தண்டனை பயத்தால் அல்லவோ அவர்கள் தங்கள் தங்கள் காரியங்களில் ஈடுபடுகிருர்கள்.'' (333)

''உமது பிரதாப வீர்யங்களால் நான் உலர்ந்துபோய்விடு வேன். வாஸ்தவம் ஸ்வாமி. உமது சேனைகளும் அக்கரையை சுலபமாக அடைந்துவிடும். இந்த ஏற்பாட்டினுல் எனக்கு பரம நஷ்டம் நேரிடும். வாஸ்தவம் தான் ஸ்வாமி, ஆனல் உமக்கு மகிமைகள் ஏற்படாதே. நானும் உமக்குச் சேரவேண்டிய மரியா தைக் கிரமத்தை அனுஸரித்துச்செய்தவனுக மாட்டேன். ஸ்வாமி, என் பிதாவாகிற உம்முடைய சாஸனங்களை நான் உல்லங்கனம் செய்யக்கூடுமா? (உமக்கும் எனக்குமுள்ள ஸம்பந்தம் ஸநாதன

மன்றோ?) இந்த ஸம்பந்தத்தை வேதங்கள் புகழ்கின்றனவே. இதைத் தாங்கள் அறியீரோ? ஸ்வாமி, தாஸ உள்ளம் படைத்த என்னிடம் கருணை கொண்டு, என்ன ஆக்ஞையிடுகிறீர்களோ, அதை நான் சீக்கிரமே முடித்து வைப்பேன். உம்முடைய திருப்திக்காகவும், உமது பிரியத்துக்காகவும், நான் வாழ விரும்புகிறேன் என்று ஸ்வாமியாகிய தாங்கள் அறிந்துகொண்டு, உத்திரவு இடுங்கள்,'' என்று வருணன் சொன்னான், (கிருபாளு, தைத்ரீயத்தை ப்ருகு மஹரிஷிக்கும் எனக்கும் உபதேசித்த மஹா ஆசார்யர், மஹா நாராயணத்வத்தை அறிந்த ஜிக்ஞாஸு, என்னிடம் ஸதா கருணையுடன் இருக்கவேண்டும்.) (334)

ஜலராஜனுன வருணனுடைய அறிவு, பூர்ண பக்தியுடன் சொல்லப்பட்ட வார்த்தைகளையும், வினயஸம்பத்தால் மெருகு கொடுக்கப்பட்ட ஜிக்ஞாஸுகளையும், அடிக்கடி அடிக்கடி சுக்ருத நமஸ்காரங்கள் செய்யும் தாஸ உள்ளமுடைய வினய நம்ரதிகளையும், ரீதிகளையும், தாமரைப் பூப்போல மென்மையான உள்ளம் படைத்த என் கிருபாளு, ஶ்ரீராமன் (அனந்தபத்மநாபர், ரங்கசயனர், நாராயணன்) ராமர் சிரித்துக்கொண்டு கேட்டார். அதன் பிறகு வார்த்தைகளை அருளிச் செய்தார். '' சமுத்திர ராஜனே, (விஷ்ணு சித்தரே, க்ஷீராப்தி நாதனே, ஜனகரே,) உம்மை நான் நன்கு அறிவேன். எனது படைகளான வானர சீலர்கள் சீதையைக் காண்பதற்கு அக்கரை போக விரும்புகிறார்கள். எந்த உபாயத்தினால் அவர்களை அக்கரை சேர்ப்பாயோ, அந்த உபாயத்தைச் சொல்.'' என்று சொன்னார். (335)

[தியானம்

ராமா சீதா, லக்ஷ்மி நாராயணா, உங்களை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். நாரத பிரியரே, தியாகராஜ யோக ஹ்ருதயமே, உங்களிடம் நான் வர முடியாதபடி, உன்னை ஸர்வ சேஷி என்று அங்கீகாரம் செய்யாமல், என் பாபங்கள் குறுக்கே நிற்கின்றனவே. உம்முடைய ஸௌலப்யங்களையும் வாத்ஸல்ய குண பிரபாவங்களையும் அறிய முடியாமல் என் புண்ய கர்மங்களும் குறுக்கே நிற்கின்றனவே. எனக்குப் பாபமும் வேண்டாம், புண்யமும் வேண்டாம். நீ சொன்னபடி '' நான் எல்லா தர்மங்களையும் பரித்தியாகம் செய்துவிட்டேன். எனக்கு வேண்டுவது உங்களுடைய பாத பத்மங்களே.'' '' சீதே, உன்னை நான் தர்ம ஸம்வர்த்தினி, என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.'' எனது தாமஸ ராஜஸ குணங்களை ஸம்ஹரிக்கமாட்டாயா? தியாகராஜரே, நீர் எந்த பக்தியினால் க்ஷீரஸாகர சயனனைப் பற்றிப் பாடினீர்? கஜேந்திரனும் திரௌபதியும் என்ன விஸ்வாசத்தினால் நாராயணனே அகில லோக காரணன் என்று கைகளை உயரத் தூக்கி, தங்களது ஸ்வரக்ஷணத்தைத் தாங்களே ஏற்றுக் கொள்ளாமல், உங்களிடம் ஸமர்ப்பித்தார்கள். சுமிந்தரரே, நீர் எந்த வியோகத்தினால் உமது அறிவு, விவேகம்,

பட்டம் பதவி, எல்லாவற்றையும் நிந்தித்து ராம சீதா லக்ஷ்மண சங்கல்பத்திற்கு அடிமையாக வாழ்ந்தீர் ? ராமா, நீதான் சொல்ல வேண்டும். எந்தக் காரணத்தினுல் சமுத்திரத்தை அணைகட்டி, அந்த ஸேதுவை என்போன்ற, நிலைதப்பின ஸம்சாரிகளை அக்கரையில் சேர்ப்பதற்கு, தர்ம ஸேதுவைக்கட்டி அதை அடைய விரும்பினீர். இது பக்தியா, ஞானமா, பராதீனமா, கைங்கர்ய ருசியா, கைங்கர்ய பராதீனத்தில் யேற்படும் ஆனந்தமா ? அல்லது மோக்ஷம் தானு ? ஸ்வாமி, உன்னைத்தான் தாரக நாமம், தயையின் ஸமுத்திரம், என்கிருர்களே, என்னிடம் மாத்திரம் இவ்வளவு பராங்முகம் ஏனப்பா ? தேவாதி தேவா, என்னிடம் வரமாட்டாயா ? மஹானுபாவா, மஹாராஜா, " வா " என்று அழைக்கிறேன். அப்போதும் வரமாட்டாயா ? ராஜீவ நேத்ரா, ரகுவர புத்ரா, தசரதகுமாரா, ஸகலஸ்ருதி ஸாரா, என்று அன்புடன் கூப்பிடுகிறேனே. அப்போதும் கூட உன் காது குண்டலங்கள், தலைமயிர்களின் நுணி கேசபாகங்கள்; என்னுடைய சப்தத்தைத் தடுக்கின்றதா ? ராஜாதி ராஜா, முனிபூஜிதபாதா, ராஜதரனுதா, யாகரக்ஷக, ஸாது ஜனப்ரியா, லக்ஷ்மணுக்ரஜா, ராகத்வேஷாதிகள் ரஹிதா, ஸனகாதிகள் வந்தித ராஜஸேகரா, ரவி ராஜலோசனு, என்று உங்களை அழைத்து, சீதையைத் தனியாக " ச்ரேயதாம் தர்ம ஸர்வஸ்வம்," ராம சரணங்களைத் தவிர மற்ற எதிலும் நிஷித்த வர்ஜனம் என்று எனக்குக் காண்பித்தாளே, அந்த மஹானுபாவை, எவனுடைய பாதங்களைத் தனியாக ஸேவித்து, கைகளைத் தூக்கி, கஜேந்திரன் திரௌபதி மாதிரியும், வானரர்கள் ஸேதுவின் மீது நடந்து போகும் சமயம் கிருஷ்ணு, ராமா, கோவிந்தா, நந்த முகுந்தா, கோவிந்த, ராமா நாராயணு சீதாபதி என்று கோஷித்து வாக்கோவிதர்களாகச் சென்ருர்களே, அதுமாதிரி ராகஸ்வரலய ஸாஹித்ய பாவங்களால் ஆனந்த கீர்த்தனம் செய்கிறேன். தியாகராஜா, க்ஷீரஸாகர சயனு, சீதா எனக்கு கிருபை செய்.)

வருணன் சொல்ல ஆரம்பித்தான். " நாதரே, நீலன் நளன் என்று இருவானரங்கள் உமது சேனையில் இருக்கிருர்கள். அவர்கள் சிறுவயதில் ஒரு ரிஷியினிடமிருந்து வரம் பெற்றிருக்கிருர்கள். அவர்களால் ஏறியப்பட்ட கற்கள் ஸமுத்திரத்தில் மிதந்துவிடும் சக்தியை உடையன. அந்த வரபிரபாவம் ஸ்வாமி, உம்முடைய காரியத்திற்காக உம்முடைய அனுக்ரஹத்தாலே அவர்களுக்கு யேற்பட்டது. அந்த கற்கள் சமுத்திரத்தில் மிதப்பதால், தங்களுடைய பிரதாபமும் ராவணுதிகளுக்குக்கூட வெளிப்படும்." (336)

" பிரபு, (நான் நினைத்தால் போதுமா ? தாங்களும் சங்கல்பம் செய்யவேண்டும். ஏனெனில் நீர்தான் ஆதிகூர்ம வராஹ க்ஷீராப்தி நாதன். அந்த சுத்த ஸங்கல்பத்தால் நானும் தங்களுடைய பாதச் சுவடுகளை எனது முதுகின்மேல் தாங்கிடுவேன்.) உம்முடைய சங்கல்ப பலத்தினுல் உம்மைத் தரித்துக்

கொண்டு உம்மால் கொடுக்கப்பட்ட வரதானத்திஞல், நான் என்ஞல் முடிந்த கைங்கர்யத்தைத் தங்களுக்குச் செய்வேன். இந்தப் பிரகாரம் ஸ்வாமி, இந்த பயோநிதியை அணைகட்டி அதைப் பார்த்த மாத்திரத்திரத்தாலே, ஸகலபாவங்களும், ஸம்சார தாபங்களும், விலகும்படி ஸர்வ சாமர்த்தியமுள்ள தர்ம ஸேதுவைக் கட்டி, (என்னுடைய பாரதந்திரியத்தையும் கைங்கர்ய ருசியையும்) தங்களுடைய (ஸர்வசேஷித்வத்தையும்) பிரபாவங்களையும் பிரகடனப் படுத்துவேன். (பிரபோ, இந்த தர்ம ஸேதுவை நானும் உலகத்தாரும் நினைத்து மகிழ்ந்து, கோடி கோடிக்கணக்கான தீர்த்த பாவனங்களை அடைந்து, உமது திருவடி ஸம்பந்தத்தால் யேற்பட்ட கங்கையைப் போல நாங்கள் பரிசுத்தமாக விளங்குவோம்.) தங்களுடைய கீர்த்தி பிரதாபங்களையும், (சீதையின் மஹத்வமாகிற யசோதனத்தையும்) ஸகல லோகங்களும் சதா கீர்த்தனம் செய்து, அவர்களும் நற்கதியைப் பெறுவார்கள்.'' (337)

''தங்களால் தொடுக்கப்பட்டப் பாணத்தை என்னுடைய வடக்குக்கரையில் வசிக்கும் பாபிகளின் கூட்டங்களாகிற துஷ்ட ஜனங்களின்மீது வீசி எறியப்படட்டும். கிருபாளு, ரணதீரரே, உம்மால் நாங்கள் ஸுரக்ஷிக்கப்படுவோமாக. நாதரே, என் வேண்டுகோளை தயவுசெய்து பூர்த்தி செய்யவேண்டும்'' என்று வருணன் சொன்னதின் பேரில் பகவான் ராமசந்திரன் அந்த துஷ்டர்களைப் பாணபிரயோகத்திஞல் சம்ஹரித்தார். (338)

ஸ்ரீராமனுடைய தேகபலம், பௌருஷம், சமுத்திரராஜனிடம் காட்டிய கருணை, எல்லாவற்றையும் கண்ட வானரர்கள் சந்தோஷித்தார்கள். வருணனும் அத்யந்தப் ப்ரீதியை அடைந்தான். பதிவிரதையின் சீமந்தனி மாதிரி தலையில் விளங்கும் சிகப்புக்கோடுபோல, சமுத்திரராஜனின் தலையில் ஸ்ரீராம சரணங்கள் பதிக்கப்பெற்ருன். மஹாபாக்யசாலி; மஹா பாக்யவான். சமுத்திரராஜனின் பயமும் பீடைகளும் தாபங்களும் ஒழிந்தன. பரமசுக ஆனந்தத்தை அடைந்தான் வருணன். அந்த துஷ்டர்களின் முழு சரித்திரத்தையும் அவன் பிரபுவுக்கு எடுத்து உரைத்தான். பிரபுவின் சரணங்களை அடிக்கடி நமஸ்கரித்து, பிரதக்ஷிணம் செய்துவிட்டு, தனது இருப்பிடத்தை அடைந்தான். (அப்பேற்பட்ட மஹாபாக்யவாஞகிற வருணனையும் ஸ்ரீராம பாதங்களால் அடையாளம் செய்யப்பட்ட அந்த மஹாஸேதுவையும் நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். பலி அடைந்த பெரும்பாக்கியத்தை இன்று வருணன் அடைந்தான். அத்துடன் நானும் அவனை ஸ்மரித்து, ஸ்ரீராம சரணங்களை நமஸ்கரிக்கிறேன். பலிச்சக்கிரவர்த்திக்கு பெருமாள் கிருபை கிடைத்தது. இந்த வருணனுக்கோ பிராட்டியைத் தேடிப்போன ராமக்ருபையுடன் பிராட்டியின் கிருபையும் அனுக்ரஹமும் கிடைத்தது. பலியைவிட வருணன்

அல்லவோ சிறந்தவன். அவனை நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (339)

ஸமுத்திரராஜன் தனது மாளிகையை அடைந்தான். ஸமுத்திரத்தின்மீது பாலம் கட்டுவது என்கிற யோசனை ஸ்ரீரகுபதியின் மனதுக்குப் பிடித்தமாயிருந்தது. ஸமுத்திரத்தில் அணைகட்டுவது என்கிற ராமஸேதுவின் புனிதமான சரித்திரத்தை துளசிதாஸர் இதுவரை பாடினுர். கலியுக பாவங்களைப் போக்கக்கூடிய மஹா உத்தமமான கதை அல்லவா இது; அவருடைய இனிய வாக்குக்களால் மஹாகீர்த்திப் புகழ்வாய்ந்த இந்த சரித்திரம் அவருடைய மதிக்கு ஏற்ப சொல்லப்பட்டது. என்பிரபு ஸ்ரீராமசந்திரனுடைய சரித்திரமே சுகத்தை வாரிக்கொடுப்பது. சந்தேகங்களை அறுத்து துக்கங்களைப்போக்கும் ஔஷதம். ஹே மூர்க்க மனஸே, ரகுபதியின் கதாம்ருதமே உனக்கு கதி. இன்னமுமா உனக்கு தயக்கம்? இனிமேலாவது தாமதிக்காதே. நம்பிக்கையை இழக்காதே. உலக விஷயங்களில் ஆசையைத் தியாஜ்யம் செய்துவிட்டு, மஹா விஸ்வாஸத்துடன் ஸ்ரீராமனுடைய குணும்ருதமே உனக்கும் ஸாது ஜனங்களுக்கும் நிரந்தரமான சுகத்தைக் கொடுக்கும் வழி, என்று நம்பி இனிமேலாவது அவரைப் பஜி. அவைகளைப் பிறர் புகழும்போது, நீ சிரத்தையுடன் கேள். (340)

என்பிரபு ரகுநாயகன் பரமமங்களமான மூர்த்தி. சகல சுபங்களைக் கொடுக்கும் வள்ளல். அவருடைய குணங்களையும் கீர்த்திகளையும் கானம் செய்வதும், புண்யஸ்ரவணம் செய்வதும் அநேக மங்களங்களைக் கொடுக்கும். இந்த வார்த்தைகளை ஆதரவுடன் கேட்பவர்கள் ஒருவித பரிஸ்ரமமுமின்றி இந்த பவஸாகரத்தை ஒரு ஓடத்தின் உதவியின்றி எளிதில் தாண்டிவிடுகிருர்கள். அவர்களுக்கு வேறு உபாயமே வேண்டாம். (341)

மாஸபாராயணம் 24வது கட்டம். ஸ்ரீராமசரிதமானஸ்ஸின் ஸகலகலிகல்மஷங்களை நாசம்செய்யும் ஐந்தாவது சோபானம் முற்றிற்று.

சுந்தரகாண்டம் ஸமாப்தம்

சுபம்

[தியானமும், 341 சுலோகங்களும்]

# பிழைத்திருத்தம்

## கிஷ்கிந்தா காண்டம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 35 | — | " கண்டுகொண்ட " என்பதற்குப் பின்பு ) போடவும் |
| 22 | 10 | — | ச்(லக்ஷ்மணனுக்குச்) |
| 25 | 12 | ஏங்கிக்கொண்டிருக் கிறேன் | ஏங்கிங்கொண்டிருக் கிறான். |
| 25 | 34 | புத்தியினும் | புத்தியிலும் |
| 29 | 11 | — | அடைந்திருக்கிறாய் ?" |
| 30 | 14 | — | எங்களைச் |
| 39 | 34 | குருதப்பக | குறிதப்பக |
| 39 | 37 | சந்தேகங்களை | சந்தேகங்கள் |
| 43 | 18 | விதவிதமாக | விதவிதமாகச் |
| 46 | 9 | உம்மை | உம்மைப் |
| 49 | 6 | அறியப்படுகிறது. (68) | அறியப்படுகிறது." (68) |
| 51 | 7 | — | அங்கீகரிக்கப்பட வேண்டும்." |
| 56 | 4 | லீலையான | லீலையினால் |
| 60 | 11 | கேட்டுபயந்து | கேட்டுப் பயந்து |
| 60 | 11 | என்னை | என்னைத் |
| 60 | 25 | தங்களை | தங்களைப் |
| 65 | 19 | அனுஷ்டானங்கள் | அனுஷ்டானங்களை |
| 68 | 15 | பூத்து | பூத்துச் |
| 72 | 26 | என்னை | என்னைக் |
| 72 | 35 | என்னை | என்னைப் |
| 73 | 13 | (அவர்கள் | அவர்கள் (பிராக்கெட் எடுக்கவும்) |
| 73 | 24 | இங்கிதத்தை | இங்கிதத்தைத் |
| 76 | 36 | அழித்து | அழித்துப் |
| 82 | 20 | இவைகளை | இவைகளைத் |
| 86 | 28 | அவரை | அவரைச் |
| 92 | 13 | சரியாக | சரியாகக் |
| 93 | 19 | நினைக்கக் | நிலைக்கக் |
| 108 | 2 | குணவிலாசங்களையும் | குணவிலாஸங்களும் |
| 108 | 3 | லீலாசமூஹங்கள் | லீலாசமூஹங்களும் |
| 108 | 4 | ஸ்மரிக்கவேண்டியவை | ஸ்மரிக்கப்பட வேண்டியவை. |

## சுந்தர காண்டம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 113 | 23 | அடைகிருர்கள். | அடைகிருர்கள்). |
| 133 | 24 | கொண்டவரரக | கொண்டவராக |
| 134 | 18 | கஷ்டத்தை | கஷ்டத்தைக் |
| 137 | 31 | வர்ணிக்க முடியும்? | வர்ணிக்க முடியும்?" |
| 141 | 35 | கொள்ளாதே | கொள்ளாதே). |
| 145 | 21 | நின்று | என்று |
| 152 | 7 | நரராயணு | நாராயணு |
| 167 | 23 | கும்பங்கள் | கும்பல்கள் |
| 168 | 2 | கவலையாக விருக்கிறது | கவலையாக விருக்கிறது" |
| 192 | 7 | பிரஸித்தமானது | பிரஸித்தமானது" |
| 244 | 18 | இருக்கிருர்ரளே | இருக்கிருர்களே |
| 263 | 16 | வைரத்தை | வைரத்தைத் |
| 273 | 12 | உமக்கு | உமக்குப் |
| 275 | 7 | ஸதி | ஸத் |
| 286 | 36 | சரணுகவத்ஸலன் | சரணுகதவத்ஸலன் |
| 311 | 2 | அறிந்துகொள் | அறிந்துகொள்.) |
| 311 | 2 | " புகழும், | (" புகழும், |
| 311 | 13 | சொன்னுர் | சொன்னுர்.) |
| 315 | 3 | பாலதபஸ்வி | பாலதபஸ்வியான |

---